த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—835

# வரலாறு வரைவியல்

ஆசிரியர்
டாக்டர் ந. சுப்பிரமணியன், எம்.ஏ., பிஎச்.டி.,
பேராசிரியர், வரலாற்றுத் துறை,
வடகிழக்குக் குன்றுப் பல்கலைக்கழகம்,
சில்லாங், மேகாலயா.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition — January, 1979
NUMBER OF COPIES — 1000

T.N.T.B.S. (C.P.) No. 835

© Government of Tamilnadu

# HISTORIOGRAPHY

DR. N. SUBRAMANIAN

**Price Rs. 11-10**

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of production of books and literature in regional languages at the university level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

This book has been printed on concessional paper made available by the Government of India.

*Printed by*
BHAGAT PRINTERS,
55, Railway Station Road,
Alandur, Madas-600 016.

# அணிந்துரை

(திரு. செ. அரங்கநாயகம், தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினெட்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் இளங்கலை வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்துள்ள நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில் கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகமும் சென்னைப் பல்கலைக்கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாற்றியல், அரசியல், உளவியல், பொருளியல், மெய்ப்பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதவியல், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டவியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூலநூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்று இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றுன வரலாறு வரைவியல் என்னும் இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 835ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 870 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூகநல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்ட'த்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் கலையியற் பாடங்களையும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயிலவேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளரவேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ்; எங்கும் தமிழ்' என்னும் குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு தமிழக ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரித்தாகுக!

செ. அரங்கநாயகம்

# பொருளடக்கம்

பக்கம்

## பகுதி II : வரலாறு வரைவியலின் வரலாறு



## பகுதி III : பெருவரலாற்றுளர்களும் அவர்கள் சாதனைகளும்



## பகுதி IV : முறையியல் : வரலாற்று ஆய்வுரை வரையுமாறு

# 1. வரலாற்றின் இலக்கணம்
## (பொருள் வரையறை)

வரலாறு வரைதலின் இயல்பினைச் செவ்வனே அறிந்து கொள்ள விரும்புவோர் யாவரும் அதன் இலக்கணம் யாது என்பதை முதற்கண் தெரிந்துகொள்ளவேண்டும். இலக்கணம் எப் பொருளின் எல்லையையும் நிறுவி, தன்மையையும் விளக்கும்; அதனை யாவற்றினின்றும் பிரித்துக்காட்டும். இவ்வாறு அறிவியற் பகுதிகளைப் பகுத்து அறியாவிடின் தவறுகளும் குழப்பங்களும் மிகும். இவற்றை நீக்கிக்கொள்ளுதற்கு இலக்கண வரையறை தேவைப்படுகின்றது. வரலாற்றின் இலக்கணத்தை வகுக்க முற் பட்டோர் சிலர் எவ்வாறு முயன்றுள்ளனர் என்று காண்போம்.

வரலாற்று ஆசிரியர்கள் மட்டுமே வரலாற்றின் தன்மையை வரையறுத்துள்ளனர் என்பதில்லை; வெவ்வேறு நிலைகளிலுள்ள பல அறிஞர்களும் (அறியாதோரும்) இம் முயற்சியை மேற் கொண்டுள்ளனர். இதற்குக் காரணம் வரலாறு அதனைக் கற்றுணர்ந்தோர்க்கே அன்றி யாவர்க்கும் பொதுவுடைமை என்னும் நம்பிக்கையேயாம். சில வரலாற்றிலக்கணங்கள் வரலாறு கற்றோராலும், பிறராலும் வரையறுக்கப்பட்டிருத்தலின் அவை எவ்வாறு வேறுபடுகின்றன என்பதைக் கீழே காண்போம்.

கிரேக்க நாட்டைச் சேர்ந்த ஹலிகார்னசஸ் நகரத்து டயனீசியஸ் (Dionysius—ஏ. கி. மு. 40-8) வரலாற்றைப்பற்றித் தொடக்ககாலத்திலேயே இலக்கணம் கூறிய பெரியார் ஆவார். அவர் 'வரலாறு என்பது உதாரணமுகத்தான் அமைந்த தத்துவம்' என்பார். ஈண்டு உதாரணம் எனப்படுவது கற்பனைக் கதையோ, புராண உரையோ அன்று; உண்மையான வாழ்க்கையினின்றும் தேர்ந்துகொள்ளப்பட்ட நிகழ்ச்சி, நிலையம் அல்லது ஆள். இது வரலாற்றாளனால் ஆக்கப்படுவதன்று, உண்மையை உணர்ந்து அறியப்படுவது. இதனின்றும் வரலாறு கற்பதன் பயன் புலப்படும். அரிஸ்டாட்டில் (Aristotle) என்னும் கிரேக்கத் தத்துவர் 'வரலாறு மாறுபடாத பழைமையை விளக்குவது' என்றார். இதனால் வரலாறு என்பது ஒரு விளக்கம், பழைமை என்பது மாறுபடாதது என்பன அவரது கொள்கைகள் எனலாம்.

'பழைமையை இறைவனாலும் மாற்ற முடியாது' என்றார் அவர். ஃபிரான்ஸிஸ் பேக்கன் (Francis Bacon) என்னும் ஆங்கிலேய அறிஞர் 'வரலாறு என்பது மக்களை அறிஞராக்கும்' என்று கூறி வரலாற்றின் பெருமையை உரைத்தார். அறிவு என்பது புத்திக் கூர்மை மட்டுமன்று; பலதரப்பட்ட விவரங்களைச் சேர்த்து வைத்துக் கொள்ளுதல் என்பது கருத்து. பேக்கன் கூறியவாறு வரலாற்றுணர்ச்சி உள்ளத்திலே ஒரு சமநிலையைத் தோற்றுவிக் கிறது; அதுவே அறிவெனப்படுவது. டயனீசியஸ், பேக்கன் என்னும் மேற்கூறிய இரண்டு அறிஞர்களின் கோட்பாடுகளையும் உள்ளடக்கி வரலாற்றிற்கு ஓர் இலக்கணம் வகுத்தவர் ஆங்கிலேய ரான ஸர் வால்ட்டர் ராலே (Sir Walter Raleigh) என்பவர். அவர் கூறுவது 'வரலாற்றின் தத்துவம், நோக்கம் என்பவை பண்டைக் காலத்து நிகழ்ச்சிகளின் படிப்பினையே யாகும்; இவற்றை உணர்வதால் ஏற்படும் அறிவு நமது விருப்பங்கள், செயற்பாடுகள் என்பனவற்றை உருவாக்குவனவாம்'. ஜெர்மானி யத் தத்துவரான ஹேகல் (Hegel) என்பார், 'அனுபவமும் வரலாறும் நமக்கு அறிவுறுத்துவது, மக்களும் ஆட்சிகளும் வர லாற்றினின்றும் யாதொன்றும் கற்றுக் கொள்வதில்லை, வர லாற்றினின்றும் பெறப்பட்ட கொள்கைகளை மேற்கொள்ளுவது மில்லை என்னும் ஓர் உண்மைதான்' என்றார். இக் கோட் பாடுடையராயினும், ஹேகல் வரலாற்றின் தன்மையைப்பற்றிப் பெரிதும் ஆராய்ந்துள்ளார். இவர் இங்ஙனம் கூறுதற்கு முன்பே வரலாற்றைப்பற்றிக் கசப்பான கருத்துகளைக் கூறியவர் களும் உண்டு. வால்ட்டேர் (Voltaire) என்னும் ஃபிரெஞ்சுப் பேரறிஞர் 'வரலாறு என்பது மனிதன் இழைக்கும் குற்றங்கள், அவன் அனுபவிக்கும் துன்பங்கள் என்பனவற்றின் விவரமேயாம்' என்றார். இதனை அடியொற்றி வால்ட்டேரின் சீடரான கிப்பன் (Gibbon), 'வரலாறாவது மக்களினத்தின் குற்றங்கள், தவறுகள், துயரங்கள் என்பனவற்றின் பட்டியலேயன்றி வேறன்று' என்று விளக்கினார். இங்ஙனம் கூறுவது வரலாற்றிற்கு ஒருதலைப்பட்ட விளக்கம் தருவதாகவே முடியும். மனித வர லாற்றில் அவனது குற்றங்களும், குறைபாடுகளும், தவறுகளும், துயரங்களும் மிகுந்துள்ளன என்பதில் ஐயமில்லை; ஆயினும் இவற்றைத் தவிர வேறொன்றும் இல்லை என்று கூறுவதும் தவறேயாம்.

சில அறிஞர்கள் வரலாறு சமயத்தோடு தொடர்புடையது என்று கூறுவர். லெக்கி (Lecky) என்னும் ஆங்கிலேய ஆசிரியர், 'வரலாறாவது அறநெறியில் தோன்றும் மாறுதல்களை விளக்கி எழுதிவைக்கும் குறிப்பேயாம்' என்றார்; ஆகவே, மனிதன்

பரிணமம் அடைவது கொள்கை வாயிலாகவே என்றும், அது வெற்று நிகழ்ச்சிகளைப் பொறுத்ததன்று என்றும் கூறிச்சென்றார். இக் கருத்திற்கு இணங்க லீப்னிஸ் (Leibniz) என்னும் ஜெர்மானிய அறிஞர் 'வரலாறு சமயத்தை உள்ளவாறு தோற்றுவிக்கும் சாதனம்' என்றார். சமயம் என்பதும் ஒரு கொள்கையேயாம்; ஆதலால் பொதுவாகக் கொள்கை நிலையில் நின்று வரலாற்றை விளக்க முற்பட்டாரும் உண்டு. உதாரணமாக, கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் நவீன கால வரலாற்றுப் பேராசிரியராகத் திகழ்ந்த ஆக்டன் பிரபு (Lord Acton) 'வரலாறு என்பது மனித சுதந்திரத்தின் தன்மையை வெளிப்படுத்தும் சரித்திரம்' என்று விவரித்தார்; பாசே (Bossuet) என்னும் ஃபிரெஞ்சுக்காரர் கிறிஸ்து தரிசனத்திற்கு இட்டுச் செல்வதே பிரபஞ்ச வரலாறு' என்று கூறிய கருத்து, சமயத் தொடர்புடைய கூற்றாகும். இதனையே சற்று மாற்றி உலகியலில் வைத்துக் கூறியதே மேற்கண்ட ஆக்டன் பிரபுவின் கருத்தாகும்.

இக் கருத்தினின்றும் சிறிது வேறுபட்டதொரு கோட்பாட்டினை எட்மண்ட் பர்க் (Edmund Burke) என்னும் ஆங்கிலேய பேரறிஞர் கூறினார். 'வரலாறு என்பது கொள்கை அளவிற்று அன்று; துப்புர வறியுந் தன்மை அளவினதே.' இவ்வாறு கூறுவாரெல்லாம் ஒருபாலாக, வரலாற்றை இகழ்ந்து கூறுவாரும் சிலர் உளர். வால்டேர், 'நமது பண்டைய வரலாறு முற்றிலும், பலராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட பொய்ம்மையேயாம்' என்றார். ஃபிரெஞ்சுப் பேரரசராகத் திகழ்ந்த முதலாம் நெப்போலியன் வால்டேர் கருத்தைப் பின்பற்றி, 'வரலாறு என்பது யாவரும் ஏற்றுக்கொண்ட பொய்க்கதை என்றார். அறிவும் அனுபவமும் நிரம்பியிருந்த அப் பேரரசரும் இக் கருத்தில் தவறு செய்து விட்டார் என்றே தோன்றுகிறது. ஏனெனில் வரலாறு பொய்யுமன்று, அதனை (மெய்யாயிருப்பினும்) எல்லோரும் ஒரே கருத்தோடு ஏற்றுக்கொள்ளவேண்டு மென்பதுமில்லை. வரலாறு எழுதும் ஆசிரியர்களுக்கு வரலாற்றின் உண்மைகளைப் பற்றித் தங்கள் கருத்தினை அச்சம், விருப்பு, வெறுப்பு என்பன இன்றி எடுத்துரைக்கும் உரிமை உண்டு. அவ் வுரிமையைப் பயன்படுத்துவாரும் உண்டு. ஆதலால், இக் கூற்றுப் பொருந்தாது எனலாம்.

இனி வரலாறு என்பதே பொய் என்னும் கருத்துடையாரும் உளர். ஸர் இராபர்ட் வால்ப்போல் (Sir Robert Walpole—இவர் இங்கிலாந்தில் 18ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் முதலமைச்சராகத் திகழ்ந்தவர்,) தம் மகனிடம் ஒரு முறை, பொய்க்கதையான வரலாற்றைத் தவிர வேறு எதை வேண்டுமாயினும் நீ எனக்

குப் படித்துக் காட்டலாம்' என்று கூறினர். இவர் கூற்றிற்கும் வால்ட்டேர், நெப்போலியன் போன்ஞேர் கருத்துக்கும் மிகுந்த வேறுபாடு இல்லை. யுலிஸிஸ் (Ulyssis) என்னும் அரிய நவீனத்தை இயற்றிய ஜேம்ஸ் ஜாய்ஸ் (James Joyce) என்பவர், 'வரலாறு என்னும் தீக் கனவினின்றும் விழித்து உண்மை காண முயலு கின்றேன்' என்று கூறுகின்ருர்.

இவர்கள் கூற்றுகள் வரலாற்றின் குறைபாடுகளைக் குறிப்பன வாயுள்ளன. ஆனல், வேறு சிலர் காரணம் கூருமலே வரலாற் றினை இகழ்ந்துரைப்பர். கார்லைல் (Carlyle) என்னும் ஆங்கிலேய வரலாற்ருளரைப்பற்றிக் குறிப்பிடும் நிலையில் அகஸ்டின் பிர்ரல் (Augustine Birrell) என்னும் அறிஞர், 'வரலாருவது ஒரு பெரிய குப்பைக் குவியல்' என்ருர். ஹென்றி ஃபோர்டு (Henry Ford) என்பார், 'வரலாறு ஒரு பெரிய மோசடி' என்ருர். இவ்வா றெல்லாம் வரலாற்றைப்பற்றிக் கூறுவது வெறுப்புக் கலந்த அறியாமையால்தான் இயலும் என்று கொள்ளலாம்.

இனி வரலாற்றைப்பற்றிச் சற்றுப் பொறுப்புணர்ச்சியோடு கருத்துரைத்தவர்கள் கூறுவதைக் காண்போம் :

ஸீலி (Seeley) என்னும் ஆங்கிலேய வரலாற்ருளர், வரலாற் றிற்கு ஓர் இலக்கணம் வகுக்கப் புகுந்து, அதனை அரசியற்கலை யோடு ஒப்பிட்டுக் கூறினர்: 'வரலாறு என்பது பண்டைய அரசியல்; அரசியல் என்பது இன்றைய வரலாறு'. இது முற்றிலும் பொருந்துவதோர் உண்மையன்று. ஏனெனில், இறந்ததையும் நிகழ்வதையும் அத்துணைக் கூர்மையாகப் பிரித்துக் காண முடியாது. வரலாறு, அரசியல் என்னும் இரண்டும் அறிவியற் பகுதிகளையும் ஒரு நிகழ்ச்சித் தொகுதியின் இரு அமிசங்களாகக் காண்டலே நேரிது எனலாம்.

கார்லைல் என்னும் தத்துவர், 'வரலாற்றில், அதாவது பிரபஞ்ச வரலாற்றில் மனிதன் சாதித்துள்ளவை யாவையும் மனித குலம் பிறப்பித்த சான்ஞேராலேயே சாதிக்கப்பட்டுள்ளன. ஆதலின் வரலாற்றையே சான்ஞேரின் வாழ்க்கை வரலாற்றுத் தொகுதி என்று கூறலாம்' என்ருர். இக் கொள்கை பலரால் மறுக்கப்பட்டுள்ளது. 'வரலாற்றில் மனிதன் செயற்பாட்டையும் விஞ்சி நிகழற்பாலவாய சில ஊழ்வினைகள் செயற்படுகின்றன; அவற்றிற்கு உட்பட்டே, அவற்ருல் உந்தப்பட்டே மனிதன் செய லாற்றுகின்ருன்' என்னும் நிருணயக் கோட்பாட்டாளர்கள் (Determinists) கார்லைலின் கருத்துகளை மறுத்துள்ளனர். ஆயினும், சான்ஞேர் என்போர் வரலாற்றைத் திசைதிருப்பும்

வகையில் (நல்லதற்கோ கெட்டதற்கோ) செயற்பட்டுள்ள வல்லோர் என்று கொண்டு காண்போமாயின், கார்லைலின் கருத்தில் உண்மையுண்டு என்பது புலப்படும். கார்லைலின் தத்துவக் கோட்பாடுகளில் பெருமளவு ஈடுபட்டிருந்த எமர்ஸன் (Emerson) என்னும் அமெரிக்க அறிஞர் அவர் கொள்கையையே மேற்கொண்டு 'வரலாறு சான்ருேர் வாழ்க்கைச் சரித்திரங்களின் தொகுதியே' என்ருர்.

ஜே. பி. பியூரி (J. B. Bury) என்னும் ஆங்கிலேய வரலாற்ருளர், 'வரலாறு விஞ்ஞானக் கலையின்பாற்பட்டது, வரலாறு என்பதே விஞ்ஞானம், மிகுதியும் அன்று, குறைவும் அன்று' என்று அறுதியிட்டுக் கூறினர். பியூரியின் அறுதியான கூற்று இப் பொருள்பற்றிப் பெரியதொரு விவாதத்தைக் கிளப்பிவிட்டுள்ளது. அவ் விவாதம் இன்றுவரை நடக்கிறது; தொடர்ந்து நடக்கும் என்றும் உறுதியாகக் கூறலாம். ஏனெனில், இருதரத்தார் கூற்றிலும் ஓரளவு உண்மை உண்டு.

ஆக்டன் பிரபுவின் கருத்து ஒன்றை மேலே கண்டோம்; அவர் வரலாற்றைப்பற்றி இன்ஞெரு கருத்தையும் கூறியுள்ளார். அதாவது, 'வரலாறு என்பது மலர்ந்து விரிந்துவரும் மனித சுதந்திரத்தின் கதை' என்பது. இக் கூற்று, வரலாறு என்பது மனிதன் தன் அடிப்படை உரிமைகளுக்காகவும் சுதந்திரங்களுக்காகவும் போராடி வரும் கதையே என்று பொருள்படும். கருத்துச் சுதந்திரம் என்னும் ஒரு சுதந்திரத்திற்காக வரலாற்றில், எங்ஙனம் பலர் மன்ருடியுள்ளனர் என்பதைப் பியூரி தாமியற்றிய 'கருத்துச் சுதந்திர வரலாறு' என்னும் அரிய சிறிய நூலில் விவரித்துள்ளார். இத்தாலிய வரலாற்றுத் தத்துவரான பெனடெட்டோ குரோச்சே (B. Croce) என்பவர் 'வரலாறு என்பது சுதந்திரத்தின் கதை' என்று கூறிய கூற்ருேடு இவை ஒக்கும்.

குரோச்சே சற்றுக் கடினமான கருத்து ஒன்றையும் கூறியுள்ளார். 'எல்லா வரலாறும் உடன்கால (contemporary) வரலாறே' என்ருர் அவர். வரலாறு நிகழ்ந்தது பழைமையிலாயினும், அதனை நாம் உணரும்வகையில் தனது அறிவைக்கொண்டு ஆய்ந்து உணர்ந்து உருவாக்கியது வரலாற்ருளனது அறிவே; ஆகவே நாம் அறியும் வரலாறு வரலாற்ருளனது உடன்கால நிகழ்ச்சியேயாம். இக் கருத்தையே வேருெரு விதமாக ஒக்ஷாட் (Oakeshott) என்னும் அறிஞர் கூறினர்: 'வரலாறு என்பது வரலாற்ருளனின் அனுபவம்' என்ருர் அவர், அவ் வனுபவத்தால்தான் வரலாற்றிற்குப் பொருள் பிறக்கின்றது என்றவாறு.

காலிங்வுட் (Colling wood) என்னும் ஆங்கிலேய வரலாற்றுத் தத்துவர் குரோச்சேயைப் பெரிதும் பின்பற்றுபவர். அவர் 'வரலாறு என்பது முற்றிலும் பழைமையின்பாற்பட்டதுமன்று; அதைப்பற்றி வரலாற்றுளன் என்ன கருதுகிறான் என்பதுமன்று; அது இவ் விரண்டின் தொடர்பால் ஏற்படுவது' என்கிறார். வரலாற்றில், பழைமைக்கொரு பொருள் காண்பது என்னும் செயற்பாடும் உண்டு; அச் செயலை ஒரு வரலாற்றுளன் எங்ஙனம் மேற்கொள்கிறான் என்னும் முறையியலும் உண்டு. இவ் விரண்டின் உடனிகழ்ச்சியால் பிறப்பதே வரலாறு என்பது. ஹோமர், வால்மீகி போன்ற பண்டைய காப்பியக் கருத்தாக்களின் பாடல்களிலும் கதைகளிலும் வரலாற்றிற்கு ஒரு பொருண்மை காண்பதென்பதொன்று; மற்று இந்துக்களும் பௌத்தர்களும் செய்தது போல, மனிதன் செயற்பாடுகளில் ஓர் அறப்பொருண்மையைக் காணவும் முற்படலாம். இவ்வாறு பொருள் காண்பதும் வரலாற்றுளனின் செயற்பாடுகளில் ஒன்று. பழைமைக்குப் பொருள் கூறாத வரலாறு வெற்றுச் செய்திப்பட்டியலாக முடியும்.

ஸர் சார்லஸ் ஃபிர்த் (Sir Charles Firth) என்னும் அறிஞர் வரலாற்றைப்பற்றிக் கீழ்க்காணுமாறு குறிப்பிடுகின்றார்: 'வரலாற்றைக் கற்பதால் அன்றாட வாழ்க்கையில் மனிதர் பயன் எய்துவர் என்பதே யல்லாமல், அதைக் கற்பதால் உண்டாகும் இன்பம் கருதி அக் கல்வியை மேற்கொள்ளலும் ஆகும்' 'மனிதன் சமுதாயத்தின் ஓர் உறுப்பாயிருந்து ஆற்றும் செயல்கள், அச் சமுதாயத்தில் அவ்வப்போது நிகழும் மாறுதல்கள், அவற்றின் தன்மை, அச் சமுதாய வளர்ச்சியை முன்னியக்குதற்குக் காரணமாயிருந்த கருத்துகள், அம் முன்னேற்றத்தை ஊக்குவிக்கவோ அன்றித் தடுத்துநிறுத்தவோ உதவிய சூழ்நிலையின் தன்மை என்பனவற்றையெல்லாம் எடுத்துக்கூறுவதே வரலாறு' என்பதும் அவர் கருத்து.

ஏ. எல். ரவுஸ் (A. L. Rowse) என்னும் வரலாற்றுளர், 'வரலாறு என்பது மக்களினம் புவியியற் சூழ்நிலையில் வாழும் வாழ்க்கையின் தன்மையை எடுத்துக்கூறும் விவரணம்; சமூகமும், புவியியற் சூழ்நிலையும் ஒன்றையொன்று பாதித்தலால், எழும் இயக்கங்களே வரலாற்றின் உயிர் நாடி' என்றார். புவியியல், வரலாற்றின் போக்கினைப் பெரிதும் பாதிக்கும்; மாற்றும்; திசை திருப்பும் என்று நம்புபவர்களுள் ரவுஸும் ஒருவர்.

ஸின்போ (Seignobos) என்னும் ஃபிரெஞ்சு அறிஞர், 'வரலாறு தருக்க சாத்திரத் தொடர்புடையது; அனுமானம், காட்சி, ஆகமம்

முதலிய அறிவியல் அளவைகளால் நிருணயிக்கப்படுவது வரலாறு' என்றார். அவர் கூற்றில் பெரிதும் உண்மையுண்டு. இது வரலாற்று ஆய்வு முறையியலைப் பொறுத்த கூற்றாகும். விஞ்ஞானிகள் மேற்கொள்ளும் ஆய்வுகள் முறைகளான : (1) காட்சிக் குறிப்பு, (2) அவற்றினின்று முடிவு காணல் என்னும் வரன்முறை, வரலாற்றிற்கு ஒத்து வரா என்பது அவர் கோட்பாடு. ஆதலால் ஸின்போ, அகஸ்ட் காம்ட் (Auguste Comte) கூறிய தருக்க-மெய்விளக்கக் கோட்பாட்டினை மறுத்தாராயிற்று.

இனி, 'வரலாற்று முறையியலில் அதனை வரையுங்கால் வரலாற்றில் உண்மையும், பொருளும், விவாதப் பொருத்தமும் முக்கியமே யன்றி அதனை எழுதும் நடை முக்கியமானதன்று; உண்மையை உணர்தற்குக் கற்கப்படுவதே வரலாறு; நடை வாயிலாக இலக்கிய இன்பம் பெறுதற்கன்று' என்றார் யார்க் பௌவல் (York Powell) என்னும் அறிஞர். இக் கருத்துப் பல காலும் பலராலும் கூறப்படுவதைக் காணலாம். ஆனால், விஞ்ஞானக் கட்டுரைகளைப் போலல்லாமல், வரலாறு வரைதலில் செவ்விய இலக்கிய நடைக்கும் ஓரிடமுண்டு என்பதை மறந்து விடலாகாது.

ஈ. எச். கார் (E. H. Carr) என்னும் ஆங்கிலேய அறிஞர், 'வரலாறு என்பது ஒருவகைப் பொருள் விளக்கம்' என்றார். அவர் கூற்று முற்றிலும் பொருந்துவதே. வரலாற்றின் நோக்கமே நிகழ்ச்சிகளின் காரணகாரியத் தொடர்பைக் காட்டி, அதன் வாயிலாக எழும் பொருளை எடுத்துக்கூறுவதேயாம். இதனால்தான் ஒரு நிகழ்ச்சியைப்பற்றிப் பலர் வரலாறு வரைய முடிகின்றது; பல கருத்துகள் ஏற்பட இடனுண்டாகின்றது. இன்றேல் அது வெற்றுப் பட்டியலாகவே முடியும். வரலாற்று நிகழ்ச்சிநிரல்களுக்கும் உண்மையான வரலாற்றிற்கும் உள்ள வேறுபாடு அதுவே.

நாம் இதுவரை மேனாட்டு அறிஞர்களில் முக்கியமான பலரது கருத்துகளை ஆய்ந்தோம். மேனாடுகளிலும் எல்லாக் காலத்திலும் யாவராலும் வரலாறுபற்றிய ஒரே கருத்துக் கொள்ளப்படவில்லை. பண்டைய கிரேக்கர்கள் மிகப் பழைமையைப்பற்றிக் கவலையுறாமல் அண்மைக்கால அல்லது உடன்கால வரலாறுகளில் ஈடுபட்டனர். பண்டைக்கால நிகழ்ச்சிகளைப்பற்றிய சான்றுகள் பல இன்மையும் அக் காலத்தில் இதற்கு ஒரு முக்கியக் காரணமாக இருந்திருக்கலாம். ஹெரடோடஸ் (Heredotus) அவர் காலத்திற்குச் சற்று முன்பு நிகழ்ந்த பாரசீகப் போரைப்பற்றியும், தூஸிடைடிஸ் (Thucydides) அவர் காலத்தே நிகழ்ந்த பெலபொ

னீசியப் போரைப்பற்றியும் வரலாறு எழுதியமையை யாவரு மறிவர். 17ஆம் நூற்றூண்டிலிருந்த கிளாரண்டன் பிரபு (Lord Clarendon) அவர் கலந்துகொண்ட ஆங்கிலேய உள் நாட்டுப் போரைப்பற்றிய வரலாறு எழுதினூராயினும், அவருக்கு முன்பு இத்தாலியில் வாழ்ந்த மாக்கியவல்லி (Machiavelli) ஃபிளாரன்ஸ் நகரத்து வரலாற்றினை முற்றிலுமே எழுதினூர் என்பது காண்க. ஆனூல், அன்று அவர்கள் வரலாற்றைப்பற்றிக் கொண்டிருந்த கருத்துகளுக்கும் 19ஆம் நூற்றூண்டில் ராங்கே கூறிய வரலாற்றிற் கும் அண்மையில் டாயின்பீ கூறிய வரலாற்றிற்கும் எவ்வளவோ வேறுபாடு உண்டு.

கீழை நாட்டார் அவ்வக் காலத்தில் வரலாற்றிற்கு வெவ்வேறு பொருள் தந்துள்ளனர். சீனர்கள் வரலாற்று நிகழ்ச்சிப்பட்டியல் களைப் பல ஆயிரம் ஆண்டுகளாகத் தொகுத்து வைத்தவர்கள். இடைக் காலத்தில் முஸ்லிம்கள் வரலாற்றுணர்ச்சிக்குப் பலவகை நூல்களை இயற்றினர். சீனர், முஸ்லிம்கள் என்போரில் பிற நாடு களுக்குச் சென்றுவந்த பயணிகளின் குறிப்புகளே வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தவை. இந்தியர்கள் (முக்கியமாக இந்துக் களும் பௌத்தர்களும்) வரலாற்றைப் புராணக்கதைகளாகவும், ஜாதகக் கதைகளாகவும் மாற்றித் தம் விருப்பத்திற்கேற்ற தத்து வங்களைக் குடிபுகுத்துவதற்கு ஏற்ற குடில்களாவும் கொள்கலங் களாகவும் அவற்றை அமைத்தனர். அன்றியும் புராணங்களில் இந்துக்கள் இறந்தகால நிகழ்ச்சிகளை வருங்கால வாய்பாட்டால் கூறும் ஒரு முறையையும் கையாண்டனர்.

இனி வரலாறு என்பது யாது? என்னும் வினூவிற்கும் நாம் ஒரு விடை காண்டல் வேண்டும். பண்டைக்கால நிகழ்ச்சிகளில் சமுதாய முக்கியத்துவமுள்ளவற்றின் தொகுதி வரலாறு. இது வரலாற்றிற்கு ஒரு பொருள். அதற்கு இன்னொரு பொருளும் உண்டு. அதாவது அந் நிகழ்ச்சிகளைக் கோவைப்படுத்தி அவற்றிற் குப் பொருள் விளக்கம் கூறி, காரணகாரியத் தொடர்பு காட்டி வரலாற்றுளன் எழுதிவைக்கும் இலக்கியமும் வரலாறும். ஆதலால் நிகழ்ச்சித் தொகுதி, பொருள் விளக்கம் தந்து எழுதி வைக்கப்படும் இலக்கியம் என்று வரலாற்றிற்கு இரு பொருள் காண்க. வட இந்தியாவில் ஆரியர் படையெடுப்பு என்பது முப்பது நூற்றூண்டுகளுக்கு முந்திய வரலாறு என்னும்போது இச் சொல் முதல் பொருளில் ஆளப்பெறுகின்றது; மெக்காலே பிரபு (Lord Macaulay) இயற்றிய இங்கிலாந்து வரலாறு என்னும்போது வரலாறு என்னும் சொல் இரண்டாவது பொருளில் ஆளப்பெறு கின்றது.

இனி, வரலாறு என்பதற்கும் வரலாறு வரைவியல் என்பதற்கும் உள்ள வேறுபாடுங் காண்டல்வேண்டும். வரலாறு வரைவியல் என்பது வரலாற்றினை வரைதல்பற்றிய இயல் (அல்லது கலை) என விரியும். இதில் வரலாற்றுத் தத்துவங்கள், வரலாற்றுளரின் வாழ்க்கைக் குறிப்புகள், அவர்கள் இயற்றிய சிறந்த நூல்கள், அவற்றின் ஆய்வு, காலப்போக்கில் வரலாறு வரையும் கலையும் அக் கலையைப்பற்றி அவ்வக்காலச் சான்றோர் கொண்டிருந்த கருத்துப் பரிணாமமும், வரலாற்றாராய்ச்சிசெய்யப் புகுபவன் மேற்கொள்ள வேண்டிய ஆய்வு முறைகளைப்பற்றிய விவரங்களும் அடங்கும். வரலாற்றினை வரையும் கலையே ஒரு புதிய பெரிய அறிவுத்துறையாக வளர்ந்துவிட்டது. வரலாறு கற்பார் வரலாறு வரைவியலையும் திரிபறக் கற்றல் இன்றியமையாதது.

# 2. வரலாற்றின் தன்மையும் பயன்பாடும்

## (i) தன்மை

எந்த அறிவுத் துறையை ஒருவன் ஆராய்வதாயிருப்பினும் அவன் அதன் தன்மையைப் புரிந்து கொள்ளுதல் நல்லது. வரலாற்றிற்கு இருவகைத் தன்மைகள் உள. ஒன்று, என்றுமே மாருத சில தனித் தன்மைகள்; இரண்டாவது, அவ்வப்போது மாறக்கூடிய தன்மைகள்.

மாறக்கூடிய தன்மைகள் என்பவை: (1) காலத்திற்குக் காலம் ஒரு நாட்டின் வரலாற்றைப்பற்றிய புது மதிப்பீடுகள் மேற் கொள்ளப்படுதல், (2) ஒவ்வொரு வரலாற்ருளனும் தனது ஆதாரத் தத்துவம், குறிக்கோள் என்பனவற்றைக் கொண்டும் அரசியல் நிர்ப்பந்தங்களைத் தவிர்க்க முடியாமலும் மேற் கொள்ளும் வரலாற்று மறு-வரைவியல். வரலாற்றின் தன்மையைப்பற்றிய பொதுப்படைக் கருத்துகள் அரசியல் நிலைமை மாறுதலால் மாறுகின்றன. உதாரணமாக ஆக்டன்பிரபு பத்தொன்பதாம் நூற்ருண்டிறுதியில் வரலாற்றைப்பற்றித் தெம்போடும் நம்பிக்கையோடும் எழுதினர்; இருபதாம் நூற்ருண்டு வரலாற்ருளர்கள், உதாரணமாக ஜி. என். கிளார்க் (Clark) என்பார் அத்துணை நம்பிக்கையோடு பேச முடியவில்லை. இதற்குக் காரணம் 15ஆம் நூற்ருண்டில் ஆங்கிலேயர் அனுபவித்த சுபிட்சமும், விஞ்ஞான வளர்ச்சியால் ஏற்பட்ட மனப்பான்மையும் 20ஆம் நூற்ருண்டில் மறைந்துவிட்டமையேயாம் என்று கார் (Carr) கூறுவார். ஜேம்ஸ் மில், வின்ஸன்ட் ஸ்மித் என்னும் ஆசிரியர்கள் இந்திய வரலாற்றை வரையும்போது பேரரசு கோணத்திலிருந்து வரைந்துள்ளனர் என்பர். சிலர் அவ்வாசிரியர்கள் இந்தியக் கலாசாரத்தைப் புரிந்துகொள்ளாமல் அல்லது அதில் ஈடுபாடோ ஆர்வமோ இன்றிக் கண்டித்துள்ளனர் என்றும் கூறுவர். இது அவர்கள் காலத்து அரசியல்நிலை, அன்றி அவர்களுக்கும் இந் நாட்டிற்கும் இருந்த உறவு என்பனவற்றைப் பொறுத்து அமைந்தது எனலாம். இங்ஙனமே அதே வரலாற்றை

வேறு கோணங்களிலிருந்து வரைவாரும் உளர்; அவர்கள் வேறு வித உந்தல்களுக்கு ஆளாயிருப்பர். இக் காரணங்களால் வரலாற்றின் தன்மை மாறுகின்றது. எழுதப்படும் வரலாற்றின் தன்மை மாறுவதன்றி, வரலாற்றைப்பற்றிய பொது நோக்கங்களுமே மாறுபடுகின்றன.

வேறொரு காரணத்திற்காகவும் வரலாற்றின் தன்மை மாறுபட்டுக்கொண்டே வரும். நாளடைவில் வரலாற்றுச் செய்திகள் மிகுகின்றன; பழைய பிரச்சினைகளைப் புதுமுறையில் அணுகுதற்குப் புது ஆதாரக் கொள்கைகள் உருவாகின்றன. முன்பு கிடைக்காத சான்றுகள் பிறகு கிடைப்பதால் முன்பு எழுதிய வரலாற்றினை மாற்றியமைக்கவேண்டிய தேவை ஏற்படுகின்றது. இத் தேவை விவரங்களைப் பொறுத்துமட்டுமல்லாமல், தத்துவக் கொள்கை மதிப்பீடுகள் மாறுதலாலும் எழக்கூடும். இங்குக் கூறிய காரணங்களால் எழுதிவைக்கப்படும் வரலாறு மாறுகின்றது. ஆனால், வரலாறு என்பது நிகழ்ச்சித் தொகுதி என்று கொண்டால், அது மாறுதற்கு வழியில்லை. அத்தகைய வரலாற்றிற்கு நிரந்தரமான தன்மைகள் உள. அவையே முக்கியமானவையுமாம்.

வரலாற்றின் மாறுபடாத் தன்மைகளைக் கருதுங்கால், முதற்கண் அதன் உலகியல் தன்மையைக் கூறவேண்டும். அதாவது வரலாறு தெய்வீகங்கள், இயற்கைக்குப் புறம்பான நிகழ்ச்சிகள் முதலியவற்றில் ஈடுபடாது ஐம்புலன்களின் உணர்ச்சிக்கு உட்பட்டவையும் மூளையில் பதிகின்ற பதிவுத்தொகுதியின் அறிவின் உதவியால் உணரப்பட்டவையும் மட்டும் வரலாற்றுளர் அறிவு என்று கொள்வர். அறிவுநிலையில் உள்ள மூளையின் உதவியில்லாமல் நாம் அறிந்துகொள்ளக்கூடிய நிகழ்ச்சிகளும் உண்டு. அவை வரலாற்றிற்கு உதவா. ஓர் அடியார் கடவுளைத் தரிசித்ததாகக் கூறினால் அது உண்மையாக இருக்கலாம், ஆனால் வரலாற்று விவகாரங்களுக்குப் பயன்படாது. ஆனால் ஒரு குடிமகன் தனது அரசனைக் கண்டதாகக் கூறினால் அக் கூற்று வரலாற்றால் ஏற்றுக் கொள்ளப்படும். இதற்குக் காரணம் யாதெனில், முந்திய கூற்றின் உண்மையைப் பரிசோதித்துக் காண முடியாது; பிந்திய தன் கூற்றைச் சோதித்துக் காணமுடியும். சோதனை முறைக்கு அகப்படுவன வரலாற்றிற்குரியன; பிற வரலாற்றால் புறக்கணிக்கப்படுவன; ஆனால் அவற்றை வரலாறு 'பொய்' என்று ஒதுக்குவதில்லை என்பதையும் நினைவுகூர வேண்டும். பண்டைக் காலச் செய்திகளை வரலாற்றுளர் ஆராயும்போது அச் செய்திகள்தாம் உலகியல் முறையில் சோதித்துக் காணக் கூடியவை (அதாவது

அவற்றின் விளைவுகளைக் கொண்டு). அல்லது, அவற்றைத் தருக்க முறையில் நிருபித்தற்குத் தேவையான சான்றுகள் (கல்வெட்டு கள், செப்பேடுகள், நூல்கள், கடிதங்கள், குறிப்புகள், காசுகள் முதலியவை) உளவா என்று ஆராய்வர். இன்றேல் அவற்றைப் புறக்கணித்துவிடுவர்.

வரலாறு காலம், இடம் என்னும் இரண்டால் நிருணயிக்கப் படும். ஆதலால்தான் அது உலகியல் அறிவுத் துறையாகின்றது. காலமும் இடமும் வரலாற்றில் எவ்வாறு பொருந்துகின்றன, அவை இன்றி ஏன் வரலாறு இயங்காது என்னும் கருத்துகளை 'முன் னியக்கம்' 'வரலாற்றின் இரு கண்கள்' என்னும் அத்தியாயங்களில் விரிவாகக் கூறுவோம். காலமும் இடமும் இரு உடனிகழ்ச்சிகளாக நின்று ஓரிடத்தில் ஒரு காலத்தில் நிகழ்வது வரலாறு என்றாகிறது. இடம் என்றால் இப் புவியில் உள்ள இடம்; காலம் என்றால் ஆண்டு, திங்கள், நாள் என்னும் கணக்கில் கணிக்கப்படும் காலம். அதாவது, இப் புவி நீங்கலாகப் பிற கோணங்களில் உள்ள நிகழ்ச்சி களைப்பற்றி (அத்தகைய நிகழ்ச்சிகள் இருப்பினும்) வரலாறு கவலைப்படுவதில்லை. மற்று, காலத்திற்குப் புறம்பான (காலங் கடந்த அதாவது காலத்தின் எல்லையைக் கடந்த. காலாதீதமான) செய்திகள் புராணங்கள் முதலியவற்றிற் கூறப்படும்; தெய்வீகக் காப்பியங்களிற் கூறப்படும். இவையும் வரலாற்றிற்கு உதவா. வரலாறு இடம், காலம் ஆகிய இரண்டிற்கும் உட்பட்ட நிகழ்ச்சிகளையே ஆயும்.

வரலாறு பெரும்பான்மையும் பழைமையையும் பழங் காலத்து நிகழ்ச்சிகளையும் ஆராய்வது. நிகழ்காலச் செயற்பாடுகளில் அதற்குச் சிறிது அக்கறை உண்டு. ஆனால், அந் நிகழ்ச்சிகள் வரலாற்றிற் படிந்து ஓர் உருவமும் அமைப்பும் தன்மையும் பெற்ற பிறகுதான் அவற்றை வரலாற்றாளர் ஆய்விற்குரிய பொருள் களாகக் கருதுவர். ஆகவே, பொதுவாக வரலாற்றாளர் இறந்த கால நிகழ்ச்சிகளையே ஆய்வர் என்பதாயிற்று. அதாவது எதிர் காலத்தில் நிகழக்கூடியவற்றை முன்கூட்டி எதிர்நோக்கிக் கூறுதல் வரலாற்றின் தொழிலன்று.

வரலாறு மனிதவரலாறு என்ற அளவில் அடங்கும் என்று கூறினோம். அதிலும் எல்லா மனிதர்களுடைய எல்லாச் செய்கை களையும் வரலாற்றாளர் தேவையான விவரமாகக் கருத மாட் டார்கள். முக்கியமான மனிதர்களுடைய முக்கியமான செயற் பாடுகள் மட்டும் வரலாற்றாளர்களால் விவரங்களாகக் கருதப் படும். ஏனெனில், இவையே வரலாற்றில் உந்து சக்திகளாக இயங்குகின்றன.

வரலாறு பழைமையை ஆராயும்போது முற்காலத்தவர்கள் எழுதியிட்ட குறிப்புகளைக் கொண்டு நிகழ்ச்சிகளின் பரிமாணத்தையும் (dimension) காலவரையறையையும் (chronology) கணிக்க வேண்டும். இவை நம்பத்தக்கவை யாயின் வரலாற்று முடிவுகளும் நம்பத்தக்கவையாம்; இன்றேல் அவை ஐயத்திற்கு இடனும். ஆதலால் வரலாறு எப் பொருளைப் பற்றியதாயினும், எக் காலத்தைப் பொறுத்ததாயினும், தற்கால முடிவுகளையே மேற்கொள்ளும் என்பதாயிற்று. வரலாறு அறுதியாகவும் உறுதியாகவும் மிகப் பண்டைக்காலச் செய்திகளைப்பற்றிக் கூற முடியாதாயினும், புராணச் செய்திகள், கட்டுக்கதைகள், சமுதாய நினைவுகள் என்பவை சேர்ந்து சில சமயங்களில் வரலாறு போலவே வேடம்புனைந்து நடிக்கும். இவற்றை இனங்கண்டு நீக்க வேண்டும். இவை பழங்காலத்தவையாகவே இருத்தல் வேண்டும் என்பதன்று. எக் காலத்திலும் இவை அல்லது இவை போன்றவை வரலாற்றிற் புகுந்துவிடக்கூடும். இவற்றை ஆளும் போதும் வரலாற்றுளர் விழிப்பாக இருத்தல்வேண்டும்.

கட்டுக் கதைகளை நீக்குதல் மட்டும் போதாது; வரலாற்றினைக் கட்டுக்கதை மரபில் எழுதவும் கூடாது. மானுடத்தையும் தெய்வீகத்தையும் ஒன்றாக்கிக் குழப்பக்கூடாது என்பது எத்துணை தேவையோ அத்துணை இறந்தகால நிகழ்ச்சிகளையும் எதிர்கால நம்பிக்கைகளையும் சேர்த்துக் குழப்பக்கூடாது என்பதையும் கடைப்பிடித்தல் வேண்டும். பழைமை நிகழ்ச்சிகளை எடுத்துரைக்கும்போது அவை எதிர்கால நிகழ்ச்சிகள் போலவும் அவற்றைப்பற்றிச் சோதிடம் கூறுவது போலவும் எதிர்கால வாய்பாட்டால் வரலாறு வரைதல் கூடாது. இம்முறையினைப் பௌராணிகர்கள் கையாண்டுள்ளனர்.

வரலாறு இறந்தது, நிகழ்வு, எதிர்வு என்னும் முக் காலத்து நிகழ்ச்சிகளையும் ஒரே மாதிரியாகக் கருதவேண்டும். அதாவது இன்று எத்தகைய அளவைகளைக் கொண்டு நிகழ்ச்சிகளின் தன்மையை நிருணயிக்கின்றோமோ அதே அளவைகளைக் கொண்டு பண்டைக்கால நிகழ்ச்சிகளையும் அளத்தல் வேண்டும். அதாவது, இன்று எதாவது ஒரு நாட்டில் அரக்கர்கள் ஆளுகின்றனர் என்றால் நம்பமாட்டார்கள்; ஆதலால் முன்பொரு காலத்தில் அது நிகழ்ந்தது என்று கூறினல் அதையும் நம்பமாட்டார்கள். சுருங்கக் கூறின் வரலாற்றியல்பு, சாத்தியம் என்பவை எல்லாக் காலத்துக்கும் ஒரே மாதிரியாக அமைவன என்பது கருதப்படும்.

வரலாற்றில் நிகழும் நிகழ்ச்சிகள் காரண காரியத் தொடர்பால் பிணைந்தவையா அன்றி எக் காரணமுமின்றித் தன்னிச்சை

யாகத் தோன்றி மறைவனவா என்னும் வினவும் வரலாற்றின் தன்மையைப் பற்றியதே. இவ் வினவிற்கு மூன்று விதமான விடைகள் காணலாம் :

(1) எல்லா நிகழ்ச்சிகளும் காரணங்களால் உந்தப்படாமல் தாமே நிகழ்கின்றன. காரணம் தேடப் போனால் ஆதிகாரணப் பிரச்சினையில் கொண்டுபோய்விடும்; அது வரலாற்றிற்குப் புறம் பான அறிவுத் (அல்லது அறிவுக்கும் புறம்பான) துறை.

(2) காரணமின்றிக் காரியம் நிகழ முடியா தாதலின் காரணங் கள் இருந்தே தீரும்; காரணங்கள் நமக்குப் புலனாகவில்லை என்ப தற்காகக் காரணங்களேயில்லை எனல் பொருந்தாது.

(3) காரணங்களால் உந்தப்படும் காரியங்களும் உண்டு; தாமே புதியனவாக நிகழும் காரியங்களும் உண்டு; இவற்றிடையே வேறுபாடு காணவேண்டும். ஓரிடத்திற்குச் செல்லுதற்கு இரண்டு வழிகள் இருந்தால் அவ்விரண்டில் ஒன்றைப் பொறுக்கிக் கொள்ளுதல் மனித இச்சையால், பிற கட்டாயங் களுக்கு உட்படாமல் செய்யப்படுவது. வாழ்க்கையில், அதாவது வரலாற்றில், இருவகை நிலைகளும் உண்டு என்பர். தத்தம் கருத் திற்கேற்ப வரலாற்றின் தன்மையை ஒவ்வொருவரும் ஏற்றுக் கொள்வர். ஆயினும் வரலாற்று நிகழ்ச்சிகள் யாவையுமே ஏதோ ஒரு விதத்தில் தனித்தன்மை படைத்தவை என்பதை மறுக்க முடியாது. காரணங்கள் இருப்பினும் அக் காரணங்களால் நிகழ்வது இவ் வொரு நிகழ்ச்சியேயன்றிப் பிற வல்ல என்பதே அந் நிகழ்ச்சியின் தனித்தன்மையைக் காட்டுதற்குப் போதுமானது. காரணங்களின்றி நிகழ்ச்சிகள் நிகழா என்னும் பிரச்சினை யொரு புறமிருக்க, வரலாற்றில் ஒரு முன்வரைவு, ஒரு முன்மாதிரி, யாரோ வகுத்த ஆதாரத் திட்டம் ஒன்று இருப்பதாகக் கருது வோரும், அவ்வாறு ஒன்று இல்லை என்பாருமாக இரு கட்சியினர் வரலாற்றின் தன்மையைப்பற்றி வாதிடுவர். இதனை 'வர லாற்றின் நிருணயத்தன்மை' என்னும் அத்தியாயத்தில் (அத். 7) விரிவாகக் காண்போம்.

வரலாற்றின் இன்னொரு தன்மையோ எனில், அது எப் போதும் ஒரு நிலைப்பட்டு அசைவின்றி நில்லாது மாறுபட்டுக் கொண்டேயும் காலத்தில் நகர்ந்துகொண்டேயும் இருக்கும். இவ்வாறு அது மாற மாற, வளர வளர அதன் தன்மையும் மாறும். இவ்வாறு மாறுவதை வெறும் மாற்றமாகச் சிலரும், அதனை விரும் பத்தக்க ஒரு முன்னியக்கமாகப் பிறரும் கருதுவர். இதன் விரிவை 'முன்னியக்கம்' என்னும் அத்தியாயத்தில் (அத். 9) காண்போம்.

ஸீலி என்னும் ஆங்கிலேய வரலாற்றுளர், வரலாறு, அரசியல் கலை, இலக்கியம் என்பவை நெருங்கிய தொடர்புடையவை; இவற்றின் தொடர்பினைப் போற்ற வேண்டும் என்று கூறி வரலாற்றினை வெறும் இலக்கியமாகவும், அன்றுட அரசியலை வரலாருகவும் கருதிவிடக் கூடாது என்று வற்புறுத்தினுர்.

வரலாறு மனித வாழ்க்கையோடு இணைபிரியாதது. அண்மைக்கால வரலாற்று நிகழ்ச்சிகள் இன்றைய வாழ்க்கையைப் பெரிதும் பாதிப்பனவாதலின் அத்தகைய வரலாற்றில் மக்கள் மிகுந்த அக்கறை காட்டுவதும், மிகமிகப் பண்டைய வரலாற்றுப் பிரச்சினைகளில் பொதுமக்கள் அதிக அக்கறை கொள்ளாமல் இருப்பதும் இயற்கையே. ஆயினும், பண்டைய வரலாற்றுக் காலத்தில் தோன்றிய முக்கியமான நிகழ்ச்சிகள், மாறுதல்கள், கண்டுபிடிப்புகள் என்பவையும் மனித வாழ்க்கையின் தன்மையை எக்காலத்திலும் பாதிக்கக் கூடியவை யாதலால் வரலாற்றின் ஒன்றியத்தன்மையைப் புறக்கணித்தலாகாது.

வரலாறு ஒரு தொடர் கதை. அது இறந்த காலத்தில் தொடங்கி, நிகழ்காலத்தின் வாயிலாக எதிர்காலத்திற் புகுந்து முடிவின்றி, இடையீடின்றி, பல்வேறு வழிகளில் செல்லும். வரலாற்றின் தொடர்ச்சித் தன்மையை உணர்ந்தால் அது நமக்கு எங்ஙனம் பயன்படுகின்றது? அது நமது வாழ்க்கையை எவ்வாறு பாதிக்கிறது? என்பவை எளிதிற் புலனும். ஒரு வீதியின் நடுவில் நிற்பவன், அவ் வீதி அவனுக்கு முன்னும் பின்னும் முடிவின்றி நெடிது செல்வதைக் காண்பது போல, வரலாற்றின் நிகழ்காலத்தில் இருப்பவன் வரலாறு தனக்கு முன்பும் பின்பும் எல்லையின்றி நெடிதுநிற்றலை அறிந்து அவ் வரலாற்றில் தான் ஒரு சிறு பகுதியே என்பதையும் உணர்வான்.

இனி வரலாற்றின் தன்மையை ஆராய்வார், அது விஞ்ஞானம், தத்துவம் என்னும் இருவகை அறிவுத்துறைகளின் தன்மைகளினின்றும் எவ்வாறு வேறுபடுகின்றது என்பதைக் காணவேண்டும். இம் மூன்று அறிவுத்துறைகளும் வெவ்வேறு ஆய்வு முறைகளுக்கு உட்பட்டவை. காட்சியறிவிற்கு உட்பட்ட பொருள்களைப் பற்றிய ஆய்வு விஞ்ஞானத்திற்குரியது; காட்சியறிவிற்கு என்றுமே உட்படமுடியாத தனிக் கருத்துலகில் ஆய்வு நடத்துவது தத்துவத்தின் தன்மை. சமயம் சார்ந்த தத்துவம் (Religious Philosophy) ஆயின் கருத்துகள், கடவுள் தத்துவம் போன்ற பிரத்தியட்சப் பிரமாணத்திற்குப் புறம்பானவை என்பவற்றை ஆய்தல் அதன் தொழிலாகும். ஆனுல், வரலாறு உலகியல் வரையறைக்

குட்பட்டு நிகழ்ந்தவற்றைச் சோதனைக்கூடத்தில் நடத்தப் பெறும் சோதனை முறையிலல்லாமல் தருக்க முறைகளைக்கொண்டு பண்டைய நிகழ்ச்சிகளைப்பற்றிய ஆய்வு நடத்துதல் என்னும் முறையை மேற்கொள்ளும். ஜி. எம். டிரெவிலியன் அறிவுத் துறைகளில் (1) விஞ்ஞான, (2) கற்பனையுலகைச் சார்ந்த, (3) இலக்கியம் என்று மூன்று துறைகள் உண்டென்றார். இதைச் சிறிது மாற்றி (1) விஞ்ஞான, (2) திறனாய்வு சார்ந்த, (3) தத்துவத்தின்பாற்பட்ட என்று மூன்று பிரிவுகளை மேற் கொள்ளலும் ஆம். இவற்றில் திறனாய்வு சார்ந்ததே வரலாற்றுப் பகுதியாம்: ஏனெனில், நிகழ்ச்சிகளின் தன்மையைப்பற்றிய திறனாய்வு நடத்துவதே வரலாற்றின் சிறந்த அலுவல்.

## (ii) பயன்பாடு

'வரலாற்றினைக் கற்றதனாலாய பயனென்கொல்' என்னும் வினா அடிக்கடி எழுவது உண்டு. இதற்குத் தரப்படும் விடைகள் யாவையும், 'பயன்' என்னும் சொல்லுக்கு ஒருவர் என்ன பொருள் கொள்கின்றார் என்பதைப் பொறுத்திருக்கின்றன. இவ் வினாவினைக் கேட்போரில் சிலர் சுத்தமான உலகியல் நோக் கோடு கேட்பர். அதாவது ஒருவன் பள்ளியில் அல்லது கல்லூரியில் விஞ்ஞானம், கணிதம், வாணிகம் முதலிய பாடங்களைப் படித்துத் தேறினால் நல்ல ஊதியம் தரக்கூடிய அலுவல்களில் அமர முடியும்; வாழ்க்கையில் செல்வத்தோடும் சிறப்போடும் முன்னேற இயலும்; ஆனால் வரலாற்றைக் கற்பவன் வரலாற்றாசிரியனாகப் போதலைத் தவிர வேறு ஊதியம் தரும் வேலையைப் பெறுதல் கடி னம். இது உலகியல் அனுபவத்தை அரைகுறையாகக் கண்டவர் கள் கூறுவது. இக் கூற்றில் உண்மையில்லை என்று கூற முடியாது. ஆயினும், எப் பொருளில் இக் கேள்வி கேட்கப்படுகின்றதோ அப் பொருளிலேயே அதை எடுத்துக்கொண்டு விடை கூறலாம். தொழிற் புரட்சி, கைத்தொழில் முன்னேற்றம், பொறியியல் புரட்சி முதலியன தோன்றிய பிறகு இயற்பியல், வேதியியல், பொறியியல் முதலிய அறிவுத்துறைகளுக்குக் கிராக்கி ஏற்பட்டது. இவ் விஞ்ஞான இயல்களின் அடிப்படையில் நிற்கும் கணிதத்தை யாவரும் கற்றாக வேண்டுமாதலின் அதுவும் செல்வாக்குடைய அறிவியற்றுறையாயிற்று. இன்றைய உலகம் பண்டைய பண் பாட்டு மதிப்பீடுகளைப் பெரிய அளவு கைவிட்டு, வாணிக உலக மாக மாறிவருதலால் வாணிகக்கலையும் செல்வாக்குடைய பாடப்பகுதியாயிற்று. இந் நிலையில் வரலாறு கற்றலால் யாது பயன் என்னும் கேள்விக்கு ஓரளவு நியாயம் ஏற்படுகிறது என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். இருப்பினும் கேள்வி கேட்கப்படும்

நிலையிலேயே அதற்கு விடைகூற முயல்வோம். முதற்கண், கல்லூரியில் உயர்நிலைப் பட்டம் பெற்றவன் எவனுக்கும், அவன் எப் பாடத்தை எடுத்துப் படித்திருப்பினும், அரசாங்க அலுவல் களில் சம வாய்ப்பு உண்டு. இயற்பியல், கணிதம் என்பவற்றைப் படித்துப் பொறியியலராகவோ, வேதியியல், உயிரியல் என்பவற் றைப் படித்து மருத்துவராகவோ தொழில் புரிதற்கு வாய்ப்பு கள் உள; ஆயினும் இவ் வலுவல்கள் தவிர அரசாங்கத்தில் ஏராள மான பிற வேலை வாய்ப்புகளும் உண்டு. உதாரணமாக, நிருவாகத் துறையில் உள்ள உயர் பதவிகளில், தலைமைச் செயலகங்களில் தலைமைச் செயலர் நிலைகளில் எல்லாம் அமர்வதற்கு வர லாற்றுக் கல்வி மிகவும் பயன்படும் என்று கருதியே பொதுச் செயலகங்களுக்கு அலுவலர் பொறுக்கும் பொறுப்புடையர் வரலாறு கற்றாரையே விரும்புவர். முக்கியமாக அயல் நாட்டுறவு களை மேற்பார்க்கும் துறைகளிலும் தூதரகங்களிலும் விஞ்ஞா னங் கற்றாரைவிட உலகியல் அநுபவமும் அறிவும் வளர உதவும் வரலாற்றுக் கல்வி பெற்றாரையே வேண்டுவர். சில வெளிநாடு களில் தல நிருவாகத்துறையில் உயர் அதிகாரிகளாக நியமித்தற்கு வரலாறு கற்றாரே உரியர் என்று ஏராளமான அத்தகைய அலுவல் களை அவர்களுக்காக ஒதுக்கிவைப்பர். அன்றியும் பொருட் காட்சிச் சாலைகள், கலைக்கூடங்கள் என்பவற்றை நடாத்துப வர்கள் வரலாறு கற்றிருத்தல் சிறந்தது என்று கருதுவர். ஆதலால் ஆசிரியர்த் தொழில் தவிர பிற வேலை வாய்ப்புகள் வரலாறு கற்றார்க்கு இன்று என்று கருதலாகாது.

ஆயினும், வரலாற்றால் வரும் பயன் யாது என்னும் வினவை மேற்கண்ட பொருளில் கேட்பதாகக் கொள்ளக் கூடாது. வெற்று உலகியற்பயன்படு பொருளில் இவ் வினவை விடுப்பவர்கள், இயற் பியலில் மின்சாரத்தின் இயல்பைக் கற்றலால் விசிறியைச் சுற்ற வைக்கலாம், விளக்கை எரிய வைக்கலாம், வண்டிகளை யோட்ட லாம்—ஆனால் வரலாறு கற்று இவ்வாறு பயன்படு காரியங்களில் எதைச் செய்யமுடியும்? என்று கேட்பர். ஆனால் இத்தகைய கேள்விகளைக் கேட்பவர்கள் வாழ்க்கையைப்பற்றி மிகக் குறுகிய கருத்துகளைக் கொண்டவர்கள் என்பதில் தடையில்லை. விஞ்ஞான வளர்ச்சியும், தொழில்நுட்பத் திறனும் அளிக்கும் வாழ்க்கை வசதிகளை அநுபவித்திருத்தல்தான் வாழ்க்கைக் குறிக்கோள் என்று கருதுவோர்க்கு மட்டுமே இத்தகைய கேள்விகள் பொருளு டையவையாகத் தோன்றும். உதாரணமாக, இன்னிசை கேட் டலால் யாதுபயன்? இலக்கியம் கற்றலால் என்ன பயன்? அழகிய ஓவியத்தைக் கண்ணுறலால் உளதாகும் பயன் யாது? நல் லொழுக்க நெறிகளைச் சிறந்தோர் கூறக் கேட்டலால் ஒருவர்

எய்தும் பயன் யாது? என்னும் வினுக்களுக்கெல்லாம் எது வெளிப் படையான விடையோ அதுவேதான் 'வரலாறு கற்றலால் ஒருவன் பெறும் பயன் என்ன?' என்னும் வினுவிற்கும் விடை யாகும்.

'வரலாறுகள் மக்களை அறிவுடையராக்குவன' என்று பேக்கன் என்னும் அறிஞர் கூறியதை மறத்தல் கூடாது. அனுபவத்தால் எந்த மனிதனும் பயன் எய்துவான் என்று எதிர்பார்க்கலாம். தன் வாழ்க்கை அனுபவத்தாலேயே ஒருவன் பயனெய்துவான் எனில், உலக அனுபவம், பண்டையோர் அனுபவத் தொகுதி என்றெல்லாம் கருதக்கூடிய வரலாற்ருல் ஒருவற்கு அளவிறந்த பயன் கிட்டும் என்பது உண்மையன்ருே?

அன்றியும், வரலாறு அறிதலால் யாது பயன்? என்னும் கேள்வியை வரலாறு இல்லையாயின் என்னுகும்? என்று சற்று மாற்றிக் கேட்டால், வரலாற்றின் அருமை புரியும். வரலாறு என்பது சமுதாய நினைவு ஆதலால் வரலாறு இல்லாத சமுதாயம் அதாவது வரலாற்றுணர்ச்சி இல்லாத சமுதாயம்—நினைவில்லாத மனிதனைப் போன்றதாகும். நேற்று நடந்தது இன்றைக்கு நினைவில்லாத மனிதனுடைய நிலையில்தான் சென்ற நூற்ருண்டில் நிகழ்ந்ததை நினையாத சமுதாயமும் இருக்கும். ஆதலால், வரலாறு என்பது மக்களுக்குச் சாதாரணமாகப் பயன்படுவ தொன்று என்று மட்டும் கருதவேண்டுவதன்று. வரலாற் றுணர்ச்சி இல்லாத மக்கள், பிறழ்ந்த உளவியல் (abnormal psychology) மனிதனுக்குச் சமம் என்றும் கூறலாம்.

வரலாறு இத்தன்மையது என்று எந்த மனிதனும் அறிந்து கொள்ள விரும்புவதற்குக் காரணமே, எல்லா மக்களுக்கும் இயல் பாக அமைந்து கிடக்கும் அறி-ஆர்வ இயல்பே (curiosity) ஆம். இது இயற்கையாக அமைந்துள்ள ஓர் இயல்பாதலால் இதை அடக் குவதும் தவருகும்; அவ்வாறு இயற்கை இயல்பினை அடக்கி வாழும் சமுதாயங்களை வெறுப்புலகிலோ அன்றி முற்றிலும் ஒரு கற்பனை உலகிலோதான் காண முடியும் என்று பெர்ட்ராண்டு ரஸ்ஸல் என்னும் ஆங்கிலேயத் தத்துவர் இப் பொருள்பற்றிக் கூறியுள்ளதைக் காண வேண்டும்: 'வரலாற்றுணர்ச்சியேயில்லாத மக்கள் தேசிய வாழ்வில் வெறுப்பும் ஏமாற்றமும் அடைந்தவர் களாகவும் அக் காரணம்பற்றிச் செயலற்றவர்களாகவும் இருப்பர். சென்ற பத்து நூற்ருண்டுகளாக இங்கிலாந்தைப் புறத்தார் படையெடுத்துத் தாக்கவில்லை என்பது காணத்தக்கது' என்று குறிப்பிட்டுள்ளார். வரலாற்றுணர்ச்சி நெடுங்கால அளவில்

மட்டுமன்று, குறுகிய கால அளவிலும் ஒரு நாட்டிற்குத் தேவைப்படும்.

வரலாற்றில், சென்ற காலத்து அனுபவத்தைக்கொண்டு அக் காலத்தில் நிகழ்ந்திருக்கக்கூடிய தவறுகளைத் திருத்திக்கொண்டு முன்னேறுதல் இயலும்; அவ் வனுபவத்தைக்கொண்டு எதிர் காலத்தை நிருணயித்துக் கொள்ள முடியும்; அதற்குத் திட்டமிட முடியும். இன்றேல் செய்த குற்றங்களையே திரும்பத் திரும்பச் செய்தலும், அவற்றைக் களைந்துகொண்டு திருந்தாமையும் நிகழும். ருஷ்யாமீது 1810ஆம் ஆண்டில் படையெடுத்துச் சென்று தோற்றுத் திரும்பிய நெப்போலியன் செய்த தவறுகளின் உண்மையை உள்ளவாறு அறிந்திருந்தால் ஹிட்லர் 1942-ல் ருஷ்யப் படையெடுப்பை மேற்கொண்டிரார். இது வரலாற்றின் குற்றமன்று; வரலாறு சற்று வெளிப்படையாகவே அளிக்கும் பாடங்களை மக்கள் கற்றுப் பயனடைய மறுப்பதன் குற்றமேயாம். பண்டைய ரோமானியப் பேரரசு புறத்தார் தாக்குதல்களாலும், உள்நாட்டுச் சீரழிவாலும் தாழ்ந்து வீழ்ந்தது என்னும் வரலாற்றுண்மையை ஒரளவேனும் உணர்ந்திருந்தமையால், பிரிட்டன் தனது பேரரசை அது வலிய விலகுமுன் வலிந்து விலக்கிவிட்டது. இவ்வாறு வரலாறு அளிக்கும் அபாய அறிவிப்புகளையும், நன்னெறி உதாரணங்களையும் அறிந்து முறையே நீக்கியும் மேற்கொண்டும் அச் சமூகமும் பயன்பட முடியுமாகையால் வரலாற்றின் பயன்பாடு அளவிறந்தது எனலாம்.

'பழைமை என்பது நமக்கு ஒரு சுமையாகவும் இடர்ப்பாடாகவும் அமையுமானல், அவற்றை நீக்கிக்கொள்ளுதற்கு ஒரே வழி அப் பழைமையை நன்கு அறிந்துகொள்ளுவதுதான்' என்றார் ஆக்டன் பிரபு. இவ்வாறு பழைமையின் படிப்பினைகளை முறையே அறிந்துகொள்பவர்கள் வெறுப்பு, அகநிலைநோக்கு (subjectivity) என்பவற்றைக் களைந்துகொள்ளலாம். விஞ்ஞான முறையிலும் அறிவியல் வகையிலும் வரலாற்றைக் கற்றவர்கள் மூட நம்பிக்கைகளுக் காளாகார்.

'வரலாற்றைக் கற்பவர்கள் 'உலகில் ஓர் உண்மைதான் உண்டு—ஒரு கோட்பாடுதான் உண்மையானது' என்றெல்லாம் எண்ணுவதை விட்டுவிடுவர்' என்றார் ஆக்டன்பிரபு. 'சென்ற தலைமுறைகளின் வரலாற்றை யுள்ளவாறு அறிந்துகொள்ள ஒருவனுக்கு முடியுமாயின் அவன் தனது தலைமுறையின் தத்துவத்தை நன்கு அறிந்துகொள்ள முடியும்' என்றார் லெக்கி (Lecky) என்னும் அறிஞர். 'எதிர் காலத்தில் நாம் வைத்துள்ள நம்பிக்கை,

முற்றிலும் நாம் இறந்த காலத்தை எவ்வளவு நன்றாக அறிந்து கொண்டிருக்கிறோம் என்பதைப் பொறுத்துள்ளது' என்றார் ஹாரிஸன் (Harrison); அன்றியும் 'வரலாறு பழைமையை அறி தற்குமட்டுமன்றி எதிர்காலத்தைப் புரிந்துகொள்ளுதற்கும் பயன் படும்' என்றும் அவர் கூறினர்.

மேற் கூறிய முறைகளில் எல்லாம் வரலாறு பயன்படும் என்பது ஒருபுறமிருக்க, அதனைக் கற்போர்க்கு அளவிறந்த இன்பம் பயக்கும் :இயல்பு அதற்கு உண்டு என்பது குறிப்பிடத்தக்கது. பெரும்பாலோர் எழுதும் வரலாறு துன்பம் பயக்கக் கூடியதாக இருக்கின்றதே என்று கூறுவார்க்கு, 'அது வரலாற்றின் குற்றமன்று; அதனை எழுதத் தெரியாதவர்கள் எழுத முற்படுவதால் விளையும் ஆபத்துத்தான் அது என்று விடையிறுக்கவேண்டும். இத்தகைய ஐயம் கொண்டவர்கள் ஹெரடோடஸ், தூஸிடிடிஸ், கிப்பன், மெக்காலே, கார்லைல், டாயின்பீ முதலிய பெரியோர் யாத்த வரலாற்றுநூல்களைக் கற்று இதன் உண்மையைக் காணவேண்டும். இலக்கியத்தைவிடவும் கற்போர்க்கு இன்பம் அளிக்கக் கூடியது வரலாறு. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் ஆங்கிலம் அறிந்த கிறிஸ்துவர்களிடம் விவிலியம், ஷேக்ஸ்பியர், மெக்காலேயின் வரலாற்றுக் கட்டுரைகள் என்னும் மூன்று நூல்கள் முக்கியமாக இருந்தன என்று கூறப்படுவது இதன் உண்மையை நன்கு விளக்கும்.

இப் பயன்பாட்டினைத் தவிர, டிரெவிலியன் கூறுவதுபோல வரலாற்றிற்குக் கல்விபுகட்டும், அறிவுறுத்தும் இயல்பும் உண்டு. இதுவே வரலாற்றின் மிகச்சிறந்த பயன்பாடு என்பார் அவ் வரலாற்றாளர். 'வரலாற்றிற்கு விஞ்ஞானத்தைப் போல உலகியற் பயன்பாடு இல்லை; அது இன்பம் பயக்கும்; அறியாத பழைமையைக் கண்டுபிடித்து அறியும் முயற்சியால் வரும் உள்ளக் கிளர்ச்சி பெரிதாகும். துப்புறியும் நவீனத்தின் இறுதியில் 'யார் அதைச் செய்தான்?' என்னும் கேள்விக்கு விடைபுரியும்போது ஏற்படும் உள்ளக் கிளர்ச்சி போன்ற தொன்று வரலாற்றினை ஆராய்வானுக்கும் ஏற்படும். அன்றியும் உலகியலினை உள்ளது போற் காட்டி அறியாதவனுக்கு அறிவுறுத்தும் கல்வி புகட்டும் பான்மை வரலாற்றின் சிறந்த பணியாகும் என்றார் டிரெவி லியன். 'எண்ணிறந்த தத்துவ நூல்களைவிட, நன்றாக எழுதப் பட்ட ஒரு வரலாற்று நூலின் சில பக்கங்கள் ஒருவனுக்கு மனித இயல்பினை நன்கு எடுத்துக்காட்டுவதோடு அதனை மகிழ்விக்கும் முறையிலும் தோற்றுவிக்கும்' என்றார் ஸர் தாமஸ் மன்றோ என்பார்,

# 3. வரலாற்றின் எல்லேவரையறையும் வகைகளும்

## (i) வரலாற்றின் எல்லேவரையறை

வரலாறு என்னும் அறிவுத்துறையின் எல்லேக்கு வரையறை யுண்டு; ஆனல் பிறதுறைகளேப்போல அதன் வரையறை குறுகிய தன்று. பிற துறைகள் யாவற்றையும் விட மிக நெடிய வரை யறையைக் கொண்டது வரலாறு. ஆயினும், அதற்கு வரையறை யுண்டு என்பது ஈண்டு நினேவு கொள்ளற்பாலது. முதற்கண், வரலாறு என்பது மனிதனது வரலாற்றையே குறிக்கும். விலங்கு கள், பறவைகள், உயிரில்லாத பொருள்கள், தாவரம், நிலம், தாதுப்பொருள்கள் முதலியவற்றைப்பற்றி யெல்லாம் ஆய்தற்குத் தனித் தனி அறிவுத் துறைகள் உள்ளன. வரலாறு மனிதனது செயற்பாடுகளே, சாதனேகளே, முன்னேற்றத்தை, அவனுல் நிறுவப்பட்ட நிலேயங்களே ஆராய்கின்றது. ஆதி மனிதனது பரிணமத்தைப்பற்றி முக்கியமாக மனிதவியல் ஆராய்கின்ற தாதலின் அது வரலாற்றில் சிறிய இடமே பெறும். மனிதன் தன் வரலாற்றினேத் தானே எழுதிவைக்க முற்படுதற்கு முன்பு அவன் நாகரிகமற்ற நிலேயில் வாழ்ந்துவந்தனன். அந் நிலேயிலும் அவனுக்கு ஓவியம் வரைதற்குத் தெரியும்; மட்பாண்டங்களேச் செய்யத் தெரியும்; அவற்றில் சில குறிகளே இடத்தெரியும். ஆனல் எழுத்து முறையில் தன் கருத்துகளே வெளிப்படுத்தும் மரபை அறிந்தபிறகுதான் அவன் வரலாற்று மனிதனுகிறுன். அது வரையில் அவன் வரலாற்றுக்கு முற்கால அல்லது வரலாற்றுத் தொடக்ககால மனிதனே ஆவான். இது ஒரு வரையறை.

மற்றும், மனிதவரலாற்றிலும், வரலாறு எல்லா மனிதர் களேப்பற்றியோ அன்றிச் சில மனிதர்களின் எல்லா விவரங்களேப் பற்றியோ அக்கறை கொள்வதில்லே. வரலாற்று முக்கியத்துவம் பெற்றவர்கள், அவர்கள் நிறுவிய நிலேயங்கள், அவர்கள் பரப்பிய கருத்துகள், அவர்கள் கருத்தூட்டிய இலக்கியங்கள் என்பவற்றைத் தாம் வரலாறு தனது அறிவுத்துறைப் பொருள்களாக் கொள்ளு கின்றது. ஈண்டு முக்கியத்துவம் என்பது வரலாற்றின் போக்கில் முக்கியமான மாறுதல்களே-அவை எத்தகையவாயினும் உண்டாக்கும் திறமையையே குறிக்கும். இம் மாறுதல்களே

உண்டாக்கக் கூடியவர்கள் வரலாற்றில் இடம் பெறுவர்; இம் மாறுதல்களால் பாதிக்கப்பட்டவர்களும் இடம் பெறுவர். வலுவுள்ள ஒரு நாடு வலுவற்ற இன்னொரு நாட்டின்மீது படையெடுத்துப் போர்புரிந்து வென்ருல், வரலாற்றில் இவ் விருநாடுகளின் செயற்பாடுகளும்—வெற்றி தோல்வியாகிய இரண்டும்—இடம்பெறும். மக்களது பொது வாழ்க்கையை எவ்வகையிலும் அல்லது ஓரளவிற்கு மேல் பாதிக்காத நிகழ்ச்சிகள் வரலாற்றில் இடம்பெரு.

வரலாறு பெரும்பாலும் பழைய, இறந்தகால நிகழ்ச்சிகளைப் பற்றி ஆராய்கின்றது. அந் நிகழ்ச்சிகளின் உறவுகள், செல்வாக்குகள், காரண காரியத் தொடர்புகள் என்பவற்றை வரலாற்ருளன் ஆராய்கின்ருன். நிகழ்கால நிகழ்ச்சிகளிற் சில அவனது ஆய்வுக்கு உட்படுகின்றன. இனி இப் பழைமையின் பொருண்மை யாது என்று நிருணயிக்கும் முறையில் ஒவ்வொரு வரலாற்ருளனுக்கும் ஒவ்வொரு கருத்து இருத்தல் கூடும்; இருந்தும் வந்துள்ளது. வால்ட்டேர், கிப்பன் முதலியோர், வரலாற்றைப் பற்றி நம்பிக்கையிழந்த கருத்துகளைத் தெரிவித்துள்ளனர். சிலர் பண்டைக்கால நிகழ்ச்சிகள் சிலவற்றைப் பொற்காலம் என்றும் குறிப்பர். இவ்வாறு கருத்துகள் வேறுபட்டாலும் அப் பொருள்களைப்பற்றி வரலாறு அக்கறை கொள்ளும் என்பதில் பொதுவான கருத்தொற்றுமை யுண்டு.

வரலாறு பெரும்பாலும் மனிதனுடைய சமுதாயச் செயற்பாடுகளை ஆராய்கின்றது; அரசு—தனிமனிதன் உறவுகளையும் முக்கியமாக ஆய்கின்றது. பொது மனிதன், தனிமனிதன் என்போரைப்பற்றியும், அவர்களது நம்பிக்கைகள், ஏமாற்றங்கள், வாழ்க்கை வெற்றிகள், தோல்விகள், வாழ்க்கை நெறிகள் என்பவற்றை ஆய்தலும் வரலாற்றின் நோக்கமாகும். அண்மைக் காலத்தில் சமூக வரலாற்றிற்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டு வருதல் குறிப்பிடத்தக்கது. மனிதனுடைய செயற்பாடுகளைப்பற்றி ஆயுங்கால் அவனது சமூக அரசியல் செயல்களைமட்டுமன்றி, கருத்து வளர்ச்சிகளையும் விஞ்ஞானம், கலை, இலக்கியம், நுண்கலைகள், தொழில் நுட்பம் முதலியவற்றில் எல்லாம் அவனடைந்துள்ள முன்னேற்றத்தையும்பற்றி ஆராய்தல் வரலாற்றின் வரையறைக்குட்பட்ட முயற்சியே.

## (ii) வரலாற்றின் வகைகள்

வரலாறு என்னும் அறிவுத்துறை பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு இயற்றப் பெறும்; கற்கப்பெறும்; ஆராயப்பெறும். இவ்வாறு பிரித்தல் வசதிகாரணமாகவே யன்றி மனிதவரலாறு அங்ஙனம் பிரிந்து இயங்குகின்றது என்று கருதக்கூடாது.

(1) அரசியல் வரலாறு, (2) அரசியற் சட்ட வளர்ச்சி வரலாறு, (3) சட்டவரலாறு, (4) பன்னாட்டு அரசியல் உறவு வரலாறு, (5) இராணுவ வரலாறு, (6) பொருளாதார வரலாறு, (7) சமூக வரலாறு, (8) முழுமை அல்லது பிரபஞ்ச வரலாறு, (9) அறிவியல் வரலாறு என்றெல்லாம் முக்கியமாக வரலாற்றைப் பிரிக்கலாம்.

1. அரசியல் வரலாறு

பெரும்பாலும் வரலாறு என்றாலே அரசியல் வரலாறு என்று கருதுவது ஒரு மரபாக வளர்ந்துவந்துள்ளது. ஏனெனில், பண்டைக்காலத்திலாயினும் இக் காலத்திலாயினும் மனிதனுடைய பொது வாழ்க்கை அரசியலாளர்களுடைய செயற்பாடுகளால் பெரிதும் பாதிக்கப்பட்டு வந்துள்ளது. அரசு (அரசனாயினும், குடியரசு தலைவர்களாயினும்) குடிகளின் வாழ்க்கையில் முன்னணைவிட இந் நாள்களில் மிகவும் ஈடுபடுதல் யாவரும் அறிந்தது. எகிப்தில் ஆண்ட முதல் தலைமுறைக் காலத்திலிருந்து இன்றுவரை அரசு சமூகத்தில் ஆதிக்கம் செலுத்திவந்துள்ளது. ஆதலால், அவ் வரசின் வரலாற்றையும், அவ் வரசு ஆதிக்கம் செலுத்துதற்குப் பயன்படுத்திய நிலைய வாயில்களைப்பற்றியும், மக்கட்கும் அரசுக்கும் இடையே நிலவிய உறவுகளைப் பற்றியும் ஓர் அரசுக்கும் ஏனையவற்றிற்கும் இடையே வளர்ந்துவந்த உறவுகளைப்பற்றியும் இயல்பாகவே வரலாறு மிகுதியும் ஆய்ந்தது.

அன்றியும், அலெக்ஸாந்தர், சீசர், நெப்போலியன், ஹிட்லர் போன்ற அசாதாரண மனிதர்கள் அரசியல் வானில் தோன்றி உலக வரலாற்றின் போக்கைப் பல வகைகளில் பாதித்துள்ளனர்; மாற்றியுள்ளனர். இவர்களைப்பற்றி யறியாவிடில் வரலாற்றின் தன்மையை யறிதலும் இயலாது.

இக் காரணங்களேயன்றி வரலாற்றினை வரைதற்குத் தேவை யான மூலச் சான்றுகளில் பெரும்பாலானவை அரசால் ஆக்கப் பெற்றவை. அவற்றை வைத்தே வரலாறு இயற்றப்படவேண்டி யிருத்தலின், அவ் வரலாறுகள் பெரும்பாலும் அரசியல் வரலாறு களாகவே அமைகின்றன. பாணர், பில்ஹணர் என்போர் ஹர்ஷர், ஆறும் விக்கிரமாதித்தர் பற்றியும் அபுல்பசல், அக்பர் பற்றியும் இயற்றிய வரலாறுகளில் அவ் வரசர்களைப்பற்றியே பெரிதும் கூறுகின்றனர். இவ்வாறே பிற சான்றுகளும் உள.

ஆதலால் அரசகுல வரலாறுகள் எழுதப்படல் வேண்டா, பொதுமக்கள் வரலாறு அல்லது சமுதாய வரலாறு எழுதப்படல் வேண்டும் என்று கூறுதல் நன்றே யாயினும், அங்ஙனம் இயற்று தலில் உள்ள இடர்ப்பாடுகளையும் காணவேண்டும். இதுவேயன்றி,

சமுதாயத்தில் பெரும் பங்குவகிக்கும் அரசின் வரலாற்றை யொதுக்கிவிட்ட ஒரு சமூகத்தின் வரலாற்றை இயற்றுதல் விரும்பத்தக்கதுமன்று.

2. அரசியல் சட்டவளர்ச்சி வரலாறு

அரசியல், அரசியல் சட்டத்தின் வாயிலாகச் செயற்படுகின்ற தாதலின், அரசியல் வரலாற்றிற்கு அடுத்தபடியாக அரசியல் சட்ட வளர்ச்சியை, வரலாற்றுளன் உணர்தல் வேண்டும். அரசியல் சட்டமும் அதனை அடுத்து உருவாக்கப் பெறும் அரசியல் சம்பிர தாயங்களும் மரபுகளும் ஆட்சியின் ஒழுக்கத்தை நிருணயிப்பன. இவற்றில் குடிமக்களின் உரிமைகள், (சில சமயங்களில் அவரது கடமைகள்), அரசின் உரிமைகள், அரசு செயற்பட வேண்டிய முறைகள், அரசு செயற்படுதற்காக நிறுவப்படும் நிலையங்கள் என்பவற்றின் தோற்றம், வளர்ச்சி என்பன அரசியல் சட்ட வளர்ச்சி வரலாற்றால் ஆராயப்படும். அரசியல் சட்டம் என்பது ஒன்றில்லாத இங்கிலாந்து போன்ற நாடுகளிலும், சம்பிர தாயங்கள், முக்கியமான சட்டங்கள், ஆட்சிநிலையங்களின் அதிகார வரம்புகள் என்பவை உளவாதலின் அந் நாட்டு அரசியல் சட்டவளர்ச்சியும் கருதப்படும். டைஸி (Dicey) என்னும் ஆங்கிலேயச் சட்ட அறிஞர் இயற்றிய 'அரசியற் சட்ட விதி' என்னும் நூல் இத்தகைய வரலாற்றிற்கோர் சிறந்த எடுத்துக் காட்டாம். 'அரசியற் சட்ட வரலாறு ஆள்களைப்பற்றி யாரா யாமல், நிலையங்களைப்பற்றி ஆராய்வது; இவ் வளர்ச்சிக்கு உதவிய முக்கியமான மனிதர்களின் வாழ்க்கை வரலாற்றினை ஆராய்தலும் உண்டு. இத்தகைய வரலாற்றின் முக்கிய நோக்கம் நிலையங்களின் வளர்ச்சியை ஆராய்வதேயாம்' இவ்வாறு கூறுவார் ஏ. எல். ரவுஸ்(A. L. Rowse) என்னும் ஆசிரியர்.

3. சட்ட வரலாறு

நாகரிக முதிர்ச்சியுற்ற எல்லா நாடுகளிலும் சட்டவாயிலாகத் தான் ஆட்சி நடைபெறும். சட்டம் என்பது எல்லா மக்களும் அறிந்துகொள்ளும் வகையில் வெளிப்படையாக நிறுவி வெளிப் படையாக அறிவிக்கப்படும் பொது வாழ்க்கை விதிகள். இவ் விதிகளை ஏற்படுத்துவது அரசு. ஏற்படுத்தியபின் அரசும் அவ் விதிகளுக்கு உட்படவேண்டும் என்பது நாகரிக வாழ்க்கையில் ஒரு ஏற்பாடு. இவ்வாறு சட்டங்கள் எவ்வாறு உருவாகின்றன; அச் சட்டங்களின் ஆதாரத் தத்துவங்கள் யாவை; அவை காலத்திற்குக் காலம் எவ்வாறு மாறுபட்டு வந்துள்ளன; சட்டத்தில் எத்தனை வகைகள் உண்டு; என்றெல்லாம் ஆய்வது சட்டவரலாற்றின் பாற் படும். இங்கிலாந்தில் பிளாக்ஸ்டன் (1790) என்பாரியற்றிய

'Commentaries on the Laws of England' என்னும் நூலும் ஹோல்ட் ஸ்வர்த் என்பாரியற்றிய 'History of English Law' (14 பகுதிகளில் வெளியானது) என்னும் நூலும் இத்தகைய வரலாற்றிற்கு எடுத்துக்காட்டுகளாம். டைஸி (Dicey), போலர்டு (Polard), மையிட்லண்டு (Maitland), போலக் (Pollock) என்பார் இத்தகைய இலக்கியத்திற்குப் பேருதவி புரிந்துள்ளனர். இந்தியாவில் மனு, பண்டைய சுமேரியாவில் ஹமுராபி, இடைக்கால ஐரோப்பாவில் ஜஸ்டினியன், அண்மைக்கால ஐரோப்பாவில் நெப்போலியன் என்பார் வகுத்துள்ள சட்டங்கள் உலகப்புகழ் பெற்றவை. இவற்றைப்பற்றிப் பிற்காலத்தார் இயற்றியுள்ள பல வழிநூல்களையும் சட்ட வரலாற்றின் பகுதிகளாகவே கருத வேண்டும்.

4. பன்னாட்டு அரசியல் உறவு வரலாறு

இது அரசியல் வரலாற்றின் ஒரு பகுதியாகவே கருதப்படும். பன்னாட்டு உறவு இந் நெறிகளால் அமைக்கவும் மாற்றவும் செலுத்தவும் படும். பன்னாட்டு உறவுச் சட்டங்கள் தேசியச் சட்டங்களைப் போல நன்கு வரையறுக்கப்படாதவை. அச் சட்டங்களை வற்புறுத்த எந்த நிலையத்திற்கும் அதிகாரம் இல்லையாதலின், அவை சட்டங்களாகா; உண்மையில், சில 'ஏற்றுக்கொள்ளக்கூடிய விதிகள்' அவ்வளவே. எந்த ஒரு கட்சி விரும்பினாலும் அவ் விதிகளை மீறலாம்; போரிட்டு அவற்றை மாற்றலாம்.

நாடுகளிடையே நிலவும் உறவுகளை நடைமுறைப்படுத்தவும் மேற்பார்த்துக்கொள்ளவும் தூதர்கள் நியமிக்கப்படுகின்றனர். இவ்வலுவல்களை இத் தூதர்கள் எங்ஙனம் மேற்கொள்ளுகின்றனர் என்பது பன்னாட்டு உறவு நெறி வரலாற்றின் பகுதியாம். உள் நாட்டு விவகாரங்கள் தேசியச் சட்டங்களால் கட்டுப்படுவது போல, பன்னாட்டு உறவு நெறி வெளி நாட்டு விவகாரங்களால் நிருணயிக்கப்படும். நாடுகளிடையே உறவுகள் மிகுந்துவருதலால், நாடுகள் ஒன்றை ஒன்று எதிர்பார்த்து வாழ வேண்டியிருத்தலால், பன்னாட்டு உறவு நெறி வரலாற்றின் முக்கியத்துவம் மிகுந்து வருகின்றது. உலகில் கெடுபிடி நிலைகள், ஆதிக்கச் சமநிலைப் பிரச்சினைகள், பிராந்தியக் கூட்டுகள், ஐக்கிய நாட்டுச் சபையின் செயற்பாடுகள் என்பவற்றுலெல்லாம் பன்னாட்டு உறவு நெறிகள் மிகுதலால் இவ் வரலாறு தற்காலத்தில் மிகுந்த முக்கியத்துவம் பெற்றுள்ளது.

5. இராணுவ வரலாறு

இது அரசியல் வரலாற்றின் ஒரு பகுதி என்பதில் ஐயமின்று; போரிடுதல் என்பது அரசியல் செய்கை. இத்தகைய வரலாற்றில்

போர்கள் ஏற்படும் காரணங்கள், போர் முறைகள், போர்க் கருவிகள், போர் இலாகாவின் நிருவாக ஏற்பாடுகள், முக்கியமான போர்களின் வரலாறு என்பவை யெல்லாம் பேசப்படும். தூஸிடிடிஸ் என்னும் கிரேக்க வரலாற்றுளர் இயற்றிய 'பெலபொனிசியப்போர் வரலாறு,' கிளாரண்டன் பிரபு இயற்றிய 'மாபெருங் கலகம்' (The Great Rebellion) முதலிய நூல்கள் இராணுவ நிகழ்ச்சிகளை மையமாகவைத்து இயற்றப்பட்ட வரலாற்று நூல்கள். அமெரிக்க உள் நாட்டுப் போரைப்பற்றி எண்ணிறந்த நூல்கள் இயற்றப்பெற்றுள்ளன. இந்தியக் கலகம் (1857), முதல் உலகப் போர், இரண்டாம் உலகப் போர் என்னும் நிகழ்ச்சிகளைப்பற்றி இயற்றப் பெற்றுள்ள நூல்களைத் தவிரப் போர் என்னும் பன்னாட்டுச் செயற்பாட்டின் வரலாற்றை இயற்றினோர் பலர் உள்ளனர். கிளாஸ்விட்ஸ் என்னும் ஜெர்மானியர் இயற்றிய பல இராணுவ வரலாறுகளையும், இந்திய அறிஞரான பி.ஸி., சக்கரவர்த்தி யென்பார் இயற்றிய 'பண்டைய இந்திய இராணுவக் கலை' (The Art of war in Ancient India) என்னும் நூலினையும் இதற்கு உதாரணங்களாகக் கூறலாம்.

### 6. பொருளாதார வரலாறு

எந்தச் சமுதாயமும் இயங்கும் முறைக்கு ஆதாரமாக விளங்குவது அச் சமுதாயத்தில் அமைந்து கிடக்கும் பொருளாதார ஏற்பாடே என்பதில் ஐயமில்லை. வாழ்க்கை நிலையையும் வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்திக்கொள்ள வேண்டும் என்று எந்தச் சமுதாயமும் விரும்புவது இயற்கையே. இதன் விளைவாக அதன் பொருளாதாரச் செயற்பாடுகள் அமையும். வேளாண்மையும், கைத்தொழிலும், மக்கள்தொகையும், கூலி நிலையும், வங்கிகள் வழங்குதலும், பஞ்சங்கள் ஏற்படுவதும், அவற்றைத் தடுக்க முயற்சிகள் மேற்கொள்வதும், வாணிகத்தைப் பெருக்குவதும், வரிகளை விதிப்பதும், பண வீக்கத்தைத்தடுப்பதும் என்பன வெல்லாம் பொருளாதாரச் செயற்பாடுகள். இவற்றை எம் முறையில் ஒரு நாடு மேற்கொள்கிறது என்பதும் இவையெல்லாம் ஒரு சமூகத்தை எப்படிப் பாதிக்கின்றன என்று காண்பதும் பொருளாதார வரலாற்றின் பகுதிகளாம். மனித வரலாற்றிலேயே சமூகச் செயற்பாடுகளே முக்கியமானவை என்றும் அவற்றுள்ளும் பொருளாதாரப் பிரச்சினைகளும் அவற்றைத் தீர்க்கும் முறைகளுமே மிக முக்கியமானவை என்றும் கருதுவோர் உளர். அவர்களுக்குப் பொருளாதார வரலாறு, ஏனையவகை வரலாறுகளைவிடச் சிறப்புடையதாகத் தோன்றும்.

உண்மையில் பொருளாதார நிலையைப் பொறுத்து ஒரு சமுதாயத்தின் நாகரிக நிலை அமையவேண்டி யிருத்தலால், அப்

பொருளாதார நிலையைச் சீர்ப்படுத்திக்கொள்வதே உலகில் இன்று பெருமுயற்சியாயுள்ளது. செல்வந்த நாடுகள், ஏழை நாடுகள் என்று பன்னாட்டுச் சூழ்நிலையில் வேறுபாடுகள் இருத்தல் போல், எந்தச் சமுதாயத்திலும் ஏழை, செல்வந்தர் என்னும் பாகுபாடு இருக்கிறது. இப் பாகுபாடு பெருமளவு மறைய வேண்டுமாயின், பல தேசிய, பன்னாட்டுக் கூட்டு முயற்சிகள் தேவைப்படுகின்றன. இவையெல்லாம் பொருளாதார வரலாற்றில் பேசப்படும்.

'பொருளாதார வரலாறு என்பது, மக்கள் எவ்வாறு தங்கள் சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொள்கின்றனர் என்பதன் வரலாறேயாம்; அதாவது சூழ்நிலையிலிருந்து தமக்குவேண்டிய வாழ்க்கைத் தேவைகளைப் பெற்றுத் திருப்தியடைதல் என்பது. இத்தகைய முயற்சி சமூக முயற்சியாகவே எப்போதும் இருந்து வந்துள்ளது' என்று ஸர் வில்லியம் ஆஷ்லி என்பார் கூறியுள்ளார். மரப் பொந்துகளில் வாழ்ந்துவந்த தனி மனிதனும், தனித் தீவில் ஒன்றியாக அகப்பட்டுக்கொண்ட ராபின்ஸன் குருஸோவும்கூட ஒருவகைப் பொருளாதாரச் செயற்பாட்டில் ஈடுபட்டுத்தான் இருந்தனர் என்பதனை நினைவுகூர்தல் வேண்டும்.

7. சமூக வரலாறு

சமூக வரலாறு என்பது மனித சமுதாயத்தின் செயற்பாடுகளைப்பற்றிய வரலாறு என்று பொருள்படும். இதில் அரசியல், இராணுவம், சட்டம் முதலிய துறைகளைப் பற்றிய வரலாறுகளைச் சேர்க்காமல், சமயம், பொருளாதார ஏற்பாடுகள், கல்வி, சமூகப் பழக்க வழக்கங்கள் என்பவற்றைப்பற்றி மட்டும் சேர்த்துக் கொள்வர். 'இங்கிலாந்தின் சமூக வரலாறு' என்று டிரெவிலியன் இயற்றிய நூல் தொடக்கத்தில் அவர் 'சமூக வரலாறு என்பது அரசியலை நீக்கிவிட்டால் எஞ்சுகின்ற சமுதாயச் செயற்பாடுகளின் வரலாறு' என்று கூறிய இலக்கணத்தைக் கொண்டு இவ்வாறு ஒரு பாகுபாட்டினைப் பெரும்பான்மை வரலாற்றுளர் கொள்கின்றனர். டிரெவிலியனுடைய பாகுபாடும் இலக்கணமும் முற்றிலும் சரி என்று இக்காலத்துப் பலர் ஏற்றுக்கொள்வதில்லை. அதற்குக் காரணம் அவர் இயற்றிய நூலில் அவர் எந்த ஆதாரத் தத்துவக் கருத்தையும் நிறுவ வேண்டி வரலாற்றுச் செய்திகளுக்கு வலிந்து ஒரு பொருள் தரவில்லை என்பதேயாகலாம்.

சமுதாய வரலாறு என்பது சிறப்பாக அரசியல் வரலாற்றைக் குறைத்துப் பொதுமக்கள் செய்திகளை மிகுத்துக் கூறுவதாகவே இருக்கும். சமூக வரலாறு சமுதாய நிலையங்களின் தோற்றம், வளர்ச்சி, தேய்வு என்பவற்றை ஆய்ந்து விளக்கும். இத்தகைய

நூல்களை வாழ்வியல் நூல்கள் என்பர். இவற்றில் ஸிட்ஜ்விக் என்பார் இயற்றிய 'ஐரோப்பிய வாழ்வியலின் பரிணமம்' என்னும் நூலும், கே. பி. ஜவாப்வால் இயற்றிய 'இந்து வாழ்வியல்' என்னும் நூலும் உதாரணமாகக் கூறக்கூடியவை.

இந் நிலையில் சமூக வரலாற்றிற்கு டிரெவிலியன் கூறிய இன்னொரு இலக்கணமும் காணவேண்டும்: அவ் வரலாறு பண்டைக்காலத்து வாழ்ந்த மக்களின் தினசரி வாழ்க்கையின் வரலாறு; இதில் சமுதாயத்திற் காணப்படும் பலதரப்பட்ட வகுப்பாரிடை நிகழ்ந்த உறவுகள், குடும்ப வாழ்க்கை முறை, தொழிலாளர், தொழில் செய்யாதவர் என்போருடைய நிலைமைகள், மனிதனுக்கும் இயற்கைக்கும் உள்ள தொடர்பு, வாழ்க்கை மாறுவதால் அவ் வக்காலங்களில் தோன்றிய கலாசார மாறுதல்கள், இவை சமயம், இலக்கியம், இசை, கட்டடக்கலை, கல்வி, கருத்தோட்டங்கள் என்பவையாகப் பரிணமித்தல் என்பவை யெல்லாம் அடங்கும்' என்பதே அவ் விலக்கணம்.

8. முழுமை அல்லது பிரபஞ்ச வரலாறு

வரலாறு முழுமையையும் இயற்றுதல் என்பது அண்மைக் காலத்தில்தான் தொடங்கிற்று. ஆயினும் 17ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஸர் வால்ட்டர் ராலே என்பவர் 'உலக வரலாறு' ஒன்றை இயற்றினார். உலக வரலாறு என்பது எல்லா நாட்டுச் சமுதாயங் களின் வரலாற்றையும் தொகுத்து எழுதுவதாகாது. இது உலகில் மனித சமுதாயம் எங்ஙனம் முன்னேறி வந்துள்ளது என்பதன் வரலாறேயாகும். இது முழுமை வரலாறு. இதனை இயற்று தலில் பல இடர்ப்பாடுகள் உள. நாட்செல்லச் செல்ல இத்தகைய வரலாற்றை இயற்றுதல் இயலுவதேயாகாது என்றும் தோன்று கிறது. எச். ஜி. வெல்ஸ் என்னும் ஆங்கிலேய அறிஞர் இயற்றிய 'உலக வரலாறு' என்பது அண்மையில் எழுந்த ஒரு புகழ்பெற்ற முயற்சி. ஐக்கியநாட்டுச் சபையின் ஓர் அங்கமாக விளங்கும் யூனெஸ்கோவின் சார்பில் 'மனிதகுல வரலாறு, கலாசார விஞ்ஞான வளர்ச்சிகள்' என்னும் பல தொகுதிநூல் வெளி வருகின்றது. இத்தகைய முயற்சி தவறான முயற்சியென்றும், இயலாத காரியத்தை முயலாமை அறிவுடைமையாயினும், இவர்கள் முயல்வதால் அது அறிவீனம் என்றும் டி. எச். பிஷர் என்பார் கருதுவார். இது ஓரளவு உண்மையேயாயினும், வில்டூரான்ட் என்பவர் இயற்றியுள்ள 'நாகரிக வரலாறு' என்னும் பல தொகுதிநூல் போற்றுதற்குரியது. இஃதேயன்றி ஆட்டோ ஹெனீம்-ரின் என்பார் 'பொதுக் கலாசார வரலாறு' என்று இயற்றிய நூல் (1877—1897) ஏழு தொகுதிகளில் வெளிவந்

தது'—மற்றும் ஹென்றிபர் என்பார் பதிப்பாசிரியராயிருந்து வெளியிட்ட 100 தொகுதிநூல், 'நாகரிக வரலாறு' என்னும் நூல் என்பவை இத்தகைய முயற்சிகளில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியவை. ஹாமர்ட்டன் என்பார் 8 தொகுதிகளில் வெளியிட்ட 'உலகின் பிரபஞ்ச வரலாறு' என்னும் படங்கள் நிறைந்த வரலாற்றுநூல் பெரிதும் பயன்படக்கூடிய ஒரு வெளியீடேயாம்.

9. அறிவியல் வரலாறு

மனிதவரலாறு உலகியல் காட்சிப் பொருள்களால் மட்டும் உருவாவதன்று; அவனது கருத்துகளாலும் குறிக்கோள்களாலும் கொள்கைகளாலும் ஆதாரத் தத்துவங்களாலும் இலக்கியங்களாலும் பண்பு, குறிப்புகளாலும் பெரும்பாலும் உருவாகின்றது என்னும் பேருண்மையை அறிந்ததன் விளைவாக 'அறிவியல் வரலாறு'கள் இயற்றப்படுகின்றன. இவ்வகை வரலாற்றில் கருத்துகள், நம்பிக்கைகள், மூடநம்பிக்கைகள் என்பவை மனித வாழ்க்கையை எவ்வாறு பாதித்துள்ளன என்று கூறும் 'மனித உள்ளத்தின் கருத்து வளர்ச்சியைப் போல வரலாற்றில் முக்கியமான வேறு அமிசம் யாதொன்றுமில்லை' என்று டாக்டர் ஜான்ஸன் என்னும் ஆங்கிலேயப் பெரியார் கூறியது முற்றிலும் உண்மையே. இத்தகைய வரலாற்று நூல்களில் எச். ஈ. பார்ன்ஸ் என்னும் அமெரிக்க அறிஞர் மற்றும் பிறர் இயற்றிய 'மேலை நாட்டு உலகின் அறிவியல் மற்றும் கலாசார வரலாறு' என்னும் மூன்று தொகுதி நூல் ஒரு முக்கியமான உதாரணமாகும். ஐரோப்பிய நாடுகளின் அறிவியல் முன்னியக்கத்தைப்பற்றிப் பல நூல்கள் உள்ளன. இவ்வாறு கருத்து வளர்ச்சியைப்பற்றிய ஆய்வு மிகவும் பயனுடைத்து என்று குஸ்டாவ்ஸன், காலிங்வுட் என்போர் கூறுவர். 'வரலாறு என்பதே கருத்துகளைக் கூறுவதாகும்' என்றார் காலிங்வுட். 'கருத்துகள் இன்றி இயக்கங்கள் பிறவாவாதலின், வரலாற்றின் அடிப்படையே கருத்துகள்தாம்' என்றார் குஸ்டாவ்ஸன்.

மேற் கூறியவையெல்லாம் வரலாறு இத்துணை முறைகளில் பிரித்து ஆராயப்படக் கூடும் என்பதைத் தோற்றின.

## (iii) வரலாறு மறுபடியும் நிகழ்கின்றதா?

மேற்போக்காக வரலாற்றை ஆராய்வார் பலர் 'வரலாறு அவ்வப்போது திரும்பத் திரும்ப நிகழ்கின்றது, அதாவது வரலாறு மறுபடியும் நிகழ்கின்றது' என்று கூறுவர். இது அறியாமையாற் பிறக்கும் கூற்று. இதனைச் சற்று ஆராய்ந்து பார்த்தால்

இதன் உண்மை விளங்கும். வரலாறு இடம், காலம் என்னும் இரண்டின் உடனிகழ்ச்சியால் ஏற்படுவது என்பதை மேலே கண் டோம். இடத்தில் நிகழ்ந்தது திரும்ப நிகழலாம். ஆனால் காலம் மாறிக்கொண்டே வருவதால் ஒருமுறை நிகழ்ந்தது திரும்ப நிகழமுடியாது என்பது வெளிப்படையாகும். உதாரணமாகப் ஃபிரெஞ்சுப்புரட்சி (1789) திரும்பவும் நிகழ முடியாது. ஃபிரான் ஸில் பல புதுப் புரட்சிகள் நிகழலாம்; ஆனால் 1789-ல் நிகழ்ந்த புரட்சி நடந்துவிட்டது, அது மறுபடியும் நிகழ முடியாது. இவ் வுதாரணத்தைப் பார்த்ததும் 'வரலாறு மறுநிகழும்' என்று கூறிய வர்கள் "அப் பொருளில் நாங்கள் 'மறு நிகழும்' என்று சொல்ல வில்லை; முன்பு வரலாற்றில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் போன்றவை மறுநிகழும் என்றுதான் கூறினோம் என்பர். ஒரே நிகழ்ச்சி திரும்பத் திரும்ப நிகழ்தற்கும், ஒரு நிகழ்ச்சி போன்ற பிற நிகழ்ச் சிகள் நிகழ்தற்கும் மிகுந்த வேறுபாடு உண்டு என்பதை இவர்கள் காணவேண்டும். இதனால் வரலாறு மறு நிகழ்வதில்லை என்பது மட்டுமன்று, மறு நிகழ இயலாது என்பதும் உண்மை என்று காணலாம்.

வரலாறு மறு நிகழ்வதில்லையாயின், வரலாற்றுனின்றும் பாடங்களை நாம் கற்றுக்கொள்ளும் பிரச்சினையே எழாதே என்பதொரு ஐயம். அதாவது ஓர் அரசு மக்களைப் பட்டினி போட்டு வதைத்தால் புரட்சி யுண்டாகும் என்னும் படிப்பினை ஃபிரெஞ்சுப் புரட்சியிலிருந்து தெரிகிறது. அத்தகைய நிலைமை திரும்ப வாராதாயின் அப் படிப்பினையால் வரும் பயன் யாது என்னும் கேள்வி பிறக்கும். நாம் மேலே கண்டவாறு அதே புரட்சி திரும்ப நிகழாதாயினும் அது போன்ற நிலைமைகள் திரும்ப உருவாதல் கூடும், அந் நிலைமைகளைச் சமாளிக்க அப் படிப்பினை பயன்படும் என்பது காணவேண்டும். இத்தகைய படிப்பினை களைப் பெறுவோர் வரலாற்று உணர்ச்சி மிக்கவர்களாக இருத்தல் வேண்டும் என்பதை ஈ. எச். கார் என்பவர் வற்புறுத்தியுள்ளார்.

ஆதலால் 'வரலாறு மறு நிகழ்கின்றது' என்பதை மாற்றி ஒன்றையொன்று ஒத்த நிகழ்ச்சிகள் அவ்வப்போது வரலாற்றில் நிகழக்கூடும்' எனல் பொருந்தும். இதனையே சற்று மாற்றி ஜி. எம். டிரெவிலியன் 'வரலாற்றில் மறு நிகழ்ச்சியுண்டு எனலும் இல்லை எனலும் ஒரே அளவு பொருத்தமுடைய கூற்றுகள்' என்று கூறினார்.

# 4. வரலாறும் தொடர்புடைய பிற இயல்களும்

மனித அறிவு என்பது ஒன்றியது. அறியப்படுவது எல்லாம் அறிவு. இதனையே ஆரியர் 'வேதம்' என்றனர். அது 'வித்' (அறி) என்னும் பகுதியடியாகப் பிறந்தது. அறிவு ஐம் புலன்கள் வாயிலாக ஒருவருக்கு ஏற்படும். கண்டு, கேட்டு, உண்டு, முகர்ந்து, பயின்று அறியப்படும் அறிவு யாவையும் மனத்தில் சேர்க்கப்படும். எவ்வாறு அறிதற்குப் பல வாயில்கள் உண்டோ, அவ்வாறே அறியப்படும் பொருள்களும் பலவாயின. அவை ஒவ்வொன்றும் எப் பகுதியைச் சார்ந்தவை? எத்தன்மையவை? என்று இனம் பிரித்து அதாவது அறுத்துக் காணும் தகுதியே அறிவு எனப்பட்டது. ஆதலாலேதான், வள்ளுவரும் 'எப் பொருள் எத் தன்மைத்தாயினும் அப் பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு' என்றார். 'மெய்ப்பொருள்' என்றது எந்தப்பொருளே யாயினும் அதன் உண்மைத் தன்மையினை. இதனின்றும் விளங்கு வது யாதெனில், உலகியற் பொருள்கள் யாவையும் ஒன்றோ டொன்று தொடர்புடையவை, அவற்றை நன்கு உணர்தற் பொருட்டு நாம் செயற்கைவகையில் பாகுபடுத்திக் காண்கிறோம் என்பது. விலங்கு என்பது ஒரு சாதி; அதனைப் புலி என்றும், மாடு என்றும், குதிரை என்றும் பாகுபடுத்துவது எளிதில் ஒன்றன் தன்மையை உணர்தற்பொருட்டே என்க. இவ்வாறு வெளித் தோற்றத்திலும் செயற்கை முறையிலும் உலகியற் பொருள் களிடையே வேறுபாடுகள் பல இருப்பினும் அடிப்படை யொற்றுமை அவற்றிற்கு உண்டு என்பது வெளிப்படை. இங்ஙனமே இப் பொருள்கள்பற்றிய அறிவுத்துறைகளும் (சாத்திரங்களும்) பலவாம். இவை பலவாயினும் அறிவு என்பது ஒன்றே என்பதனை மறத்தல் கூடாது. பண்டைக்காலக் கிரேக்கர் களும் எல்லா அறிவுத்துறையும் தத்துவம் (Philosophy) என்னும் ஒரே துறையில் அடங்கும் என்று கொண்டனர். இத் துறை களிடையே நவீன காலத்தில் பற்பல பிரிவுகள் தோன்றியிருத்தல், அறியப்படும் பொருள்கள் இக் காலத்து மிகப் பலவாயினமை பற்றியே. பிளேட்டோ தாம் நிறுவியிருந்த 'அகாடமி' என்னும் தத்துவ போதனைப் பள்ளியிற் சேரவிரும்பும் மாணவர்கள்

கணிதக்கலை பயின்றிருத்தல் வேண்டும் என்று விதித்தார் என்ப. இஃதுண்மையாஞல் தத்துவமும் கணிதமும் அடிப்படையில் தொடர்புடையன என்று அவர் கருதினுர் என்பது விளங்கும்.

மேற்கூறியவற்றை உளத்திற் கொள்வோமாயின், வரலாற்றிற்கும் பிற மானுட வியற் கலைகட்கும் பெரிதும் தொடர் புண்டு என்பதும், அத் தொடர்பினைப் புரிந்துகொண்டாலன்றி அக் கலைகளில் ஒன்றையும் செவ்விதின் உணர்தல் இயலாது என்பதும் விளங்கும். மனிதனது வாழ்க்கையையும் செயற்பாடு களையும்பற்றி ஆராயும் அறிவுத்துறைகளில் தலை சிறந்தது வரலாறு; அது பல கலைகளையும் அறிவுத் துறைகளையும் உள்ளடக்கியது. அவ்வாறே மனிதனின் செயற்பாடுகளில் ஒவ்வொரு வகையினையும் தனித்தனியே எடுத்து ஆயும் பிற கலை களும் உண்டு. இவை யாவையும் மனிதனேடு ஏதேனும் ஒரு வகையில் சம்பந்தப்பட்டவையாதலின், அவற்றிடையேயும் சில தொடர்புகள் இருத்தல் வேண்டும் என்பது கண்கூடு. அரசியல் கலை, பொருளாதாரம், புள்ளியியல், புவியியல், புவிஅமைப்பியல், உயிரியல், இனவியல், இலக்கியம், சமூகவியல், சமயம், ஒழுக்க வியல், உளவியல், தருக்கம், தத்துவம் என்பவையெல்லாம் ஒவ் வொருவகையில் வரலாற்ருேடு தொடர்புடையவை. இவற் றிற்கும் வரலாற்றிற்கும் ஒரு சிறு வேறுபாடு யாதெனில், வரலாறு பிற இயல்களைத் தன்னுள் அடக்கும்; பிற இயல்கள் வரலாற்றைத் தம்முள் அடக்கா என்பது. அதாவது வரலாறு வரைவோர் அரசியல் கலை வரலாறு, பொருளாதார வரலாறு, இலக்கிய வரலாறு என்று அவ்வத் துறைகளின் தோற்றம், வளர்ச்சி முதலிய வற்றின் வரலாற்றை இயற்ற முடியும்; அதேபோல உளவியல் அல்லது தத்துவம் என்னும் துறைகளில் பயில்வோர் தத்தம் வரலாற்றை வரைதலைவிடுத்து வரலாற்றைப்பற்றி ஆராய்வ தில்லை. பௌதிக சாத்திரம் ஆர்க்கிமிடிஸ் காலத்திலிருந்து ஐன்ஸ்டைன் காலம் வரை எவ்வாறு பரிணமித்துள்ளது என்பது வரலாற்று நூல்களிற் காணப்படுமேயன்றி வரலாற்றுச் செய்திகள், உதாரணமாக ஔரங்கஜிப் தக்காணத்தின்மீது படையெடுத்தது போன்றவை, பௌதிக சாத்திரத்தில் காணப்படா. ஆதலால் வரலாறு எல்லா அறிவுத்துறைகளுக்கும் தேவைப்படும்; ஆஞல் அவ் வறிவுத் துறைகளின் செயல்முறையின்றி வரலாறு இயங்கக் கூடும். அதாவது வரலாறு 'உள்ளடக்கிய' துறை; பிற 'நீக்குந் தன்மை' யுடையவை. வரலாற்றிற்கு வரையறை காண்டல் எளிதன்று. ஏனைய துறைகளுக்கு நன்கு புலப்படக் கூடிய வரை யறைகள் ஏற்பட்டுள்ளன.

இனி, வரலாற்றிற்கும் மேலே பட்டியலாகக் கூறிய பிற மானுடக் கலைகளுக்கும் உள்ள தொடர்பினைக் காண்போம்.

## (i) தொடர்புடைய இயல்கள்

### (அ) வரலாறும் அரசியற்கலையும்

வரலாற்றோடு மிக நெருங்கிய தொடர்புடையது அரசியற் கலை; ஏனெனில் வரலாற்றின் பல பகுதிகளுள்ளும் அரசியல் வரலாறே பெருவரவிற்று, பெரும்பகுதியுடையது என்று மேலே கண்டோம் ('வரலாற்றின் வகைகள்' என்னும் தலைப்பு—அத்.3). வரலாற்றையும் அரசியலையும் தொடர்புபடுத்தி மூன்று கூற்றுகள் நிகழ்ந்துள்ளன :

(1) 'வரலாறு இறந்தகாலத்து அரசியல், அரசியல் என்பது நிகழ்காலத்து வரலாறு.' இதனைக் கூறியவர் ஆங்கிலேய வரலாற்றாளரான ஸீலி (Seeley) என்பவர். இக் கூற்று ஓரளவு உண்மையானதே. அதாவது தற்காலத்தில் நிகழ்ந்து செய்தித் தாள்களில் அடிபடுவதை வரலாறு என்று கூறாமல் அரசியல் நிகழ்ச்சிகளாகவே கருதுகிறோம்; இத்தகைய செய்திகள் முற் காலத்திலும் நிகழ்ந்திருக்கும்; அவற்றை அரசியல் என்னாமல் வரலாறு என்கிறோம். இந்த அளவிற்கு ஸீலியின் கூற்று ஏற்றுக் கோடற்பாலதே. ஆயினும் இக்கால அரசியல் நிகழ்ச்சிகள் அனைத்தும் ஒரு காலத்தில் வரலாறாகிவிடா; அன்றியும் இன்று நாம் காண்பவை யாவையும் பண்டைக்காலத்து அரசியல் என்றும் கூறிவிட முடியாது. பாம்பே (Pompeii) நகரம் வெஸுருவியஸ் என்னும் எரிமலையால் அழிக்கப்பட்டமை வரலாற்றிற் குறிக்கப்படு மாயினும் அது நிகழ்ந்தபோது ஓர் அரசியல் நிகழ்ச்சியன்று என்பது காண்க.

(2) 'அரசியல் என்பது வேர், வரலாறு என்பது பழம்' : இக் கூற்றும் முந்தியதைப் போலவே ஒருபகுதி யுண்மை. அதாவது அரசியல் என்னும் ஒருவகை வேரிலிருந்துதான் வரலாறு தோன்றும் என்றும், வரலாறாகப் பரிணமிப்பதெல்லாம் அரசியலின் பின்விளைவு என்றும் கூறுதல் ஓரளவே பொருந்தும்.

(3) ஆக்டன்பிரபு 'வரலாறு என்னும் ஆற்றின்கீழ் மணற் பகுதியில் பொன் தாதுக்களென வடிந்துநிற்பது அரசியல் என்னும் கலை யொன்றுதான்' என்று கூறியதும் மேற்கூற்றோடு சற்று ஒப்புமையுடையது.

இவை எவ்வாறேயாயினும் வரலாற்றிற்கும் அரசியல் கலைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பது வெளியாகின்றது. ஆனால் மனித வாழ்க்கை முற்றிலும் வரலாறு ஊடுருவி நிற்கும், அவ்வாறு அரசியல் ஊடுருவி நிற்றல்வேண்டும் என்பதின்று. மனிதன் சமயம், பிற தனி மனிதர்களோடு தொடர்பு, கலை என்னும் வகைகளில் தன் வாழ்க்கையை ஈடுபடுத்தலாம்; அரசியலோடு எத்தகைய தொடர்பும் இல்லாமல் மனிதன் வாழ முடியும். சட்டப்படி எல்லோரையும் அரசியல் கட்டுப்படுத்து கின்றதேயன்றி, உணவு இன்றி மனிதன் வாழ முடியாது என்பது போல அரசியல் இன்றி ஒருவன் உயிர்வாழ முடியாது என்று கூறுதல் பொருந்தாது. தற்காலத்தில் அரசு மனிதவாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் தலையிடத் தொடங்கியபிறகு, அரசியல் வரலாற்றோடு நெருங்கிய தொடர்புகொண்டுள்ளது எனலாம். இடைக்கால ஐரோப்பிய வரலாற்றில் அரசிற்கும், திருச் சபைக்கும் இடையே நிகழ்ந்த போராட்டங்கள் சமுதாயத்தின் பொறுப்புகளையும் கடமைகளையும் இருவகையாகவேனும் பிரித்தன என்பதைக் காட்டும். இந்து சமயத்தில் அரசன் என்பவன் சமூகத்தில் உள்ள பலவிதத் தொழில்களில் ஒன்றைச் செய்பவனாக இருந்தனனேயன்றி எல்லாவற்றையும் அடக்கிய ஆதித்தியம் உடையவனாக ஏற்றுக்கொள்ளப்படவில்லை. பன்மைச் சமுதாயங்களில் அரசின் ஆதித்தியம் குறைந்தே காணப் படும். ஆனால், அரசியலார் வரலாற்றைக் கற்று வைத்துக் கொள்வது நல்லது; அவர்களுக்கும் நாட்டிற்கும் ஒரு நாட்டின் பண்டைய வரலாற்றின் தன்மையை யுள்ளவாறு உணர்ந்தா லன்றித் தற்காலத்தில் அதனை நன்னெறியில் செலுத்தமுடியாது என்பது தெளிவு.

(ஆ) வரலாறு, பொருளாதாரம் மற்றும் புள்ளியியல்

வரலாறும் பொருளாதாரமும் நெருங்கிய தொடர் புடையவை என்பது வெளிப்படை. ஆயினும், பொருளாதாரக் காரணங்களாலேதாம் வரலாறு உருவாகின்றது என்றோ, வரலாற் றிற்குப் பொருளாதாரப் பொருண்மை யொன்றுதான் உண்டு என்றோ கூறமுடியாது. மனிதனது பொருளாதாரச் செயற்பாடு கள் செல்வத்தை ஆக்கல், பகுத்தல், அழித்தல் என்பவற்றில் அடங்கும்; ஆக்கலானது செல்வத்தை உற்பத்தி செய்தல், பகுத்த லாவது பலரிடையே பகுத்துக் கொடுத்தல், அழித்தலாவது அச் செல்வத்தைச் செலவழித்தல். அது உணவாயின், நெல் சாகுபடி செய்தல் அதனை ஆக்கல், பண்டிகளில் ஏற்றிச் சந்தைகளுக்குக் கொண்டுசென்று விற்றல் பகுத்தல், வாங்குபவர்கள் அதனை

உண்டல் அழித்தலாகும். இதனையே வள்ளுவர் 'பாத்தூண்' (பகுத்து உண்டல்) என்றார். சமுதாயத் தொடக்க காலத்தில் இருந்த அடிமைநிலை, பிறகு படைமானிய முறை, பிறகு பேரரசு நிறுவுகை, பிறகு முதலாளித்துவம், அதன் பிறகு சோஷலிசம் என்று ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றும் படிப்படியான வளர்ச்சி பொருளாதார உந்துதல்களால் ஏற்படும் பரிணமமே என்று மார்க்சியர் கருதுவது உண்மையே. ஆயினும், சமயம் போன்ற சில மனித உளவியல் உந்துதல்களுக்கும் வலிந்து பொருளாதாரத் தத்துவத்தை ஏற்றுதல் சரி என்று தோன்றவில்லை. அரசியல் எவ்வாறு வரலாற்றின் ஒரு பகுதிகட்கு மேலோ அதேபோலப் பொருளாதார உந்துதல்களும் மனிதவாழ்க்கையின் ஓரளவு அடிப்படையே என்று காண்டல் வேண்டும். அகப்பொருள், புறப் பொருள் என்னுமிரண்டில் பிந்தியதற்கு வேண்டுமாயின் வலிந்து பொருளாதாரப் பொருண்மைகளைக் கற்பிக்கலாமேயன்றி முந்தியதும் அவ்வாறே உந்தப்பெறுவது என்று கூறுதல் அனுபவத்தை எதிர்ப்பதாகும்.

வரலாற்றாளன் பொருளாதாரத்தை அறிந்துவைத்திருத்தல் வேண்டும் என்பது போலப் பொருளாதார அறிஞனும் வரலாற்றை, அதாவது தனது அறிவுத்துறையின் வரலாற்றை யேனும் செவ்விய முறையில் அறிந்துவைத்திருத்தல் வேண்டும். பண்டைக்காலத்து புள்ளிவிவரங்களிற் சில—விலைவாசிநிலை, கூலி நிலை, வட்டிமுறை, வேலைவாய்ப்பு, மக்கள்தொகை, பஞ்சங் களும் அவற்றின் காரணங்களும், தொழிற் புரட்சி என்பன போல்வன—இன்றைய வரலாற்றாளனுக்கும் மிகவும் பயன்படு வனவாம்.

தற்காலப் பொருளாதாரக் கலை, கணித சாத்திரத்தின் முறைகளையும் குறியீடுகளையும் மிகுதியாக மேற்கொள்ளு கின்றது. பொருளாதார விதிகளைக் கணித வாய்பாடுகளை ஈடுபடுத்திக் கூறுவர். ஆனால், பொருளாதாரம் அடிப்படையில் ஒரு மானுடக்கலை என்பதை நினைவிற் கொள்வோமாயின், அக் கலையில் விதி என்று நாம் கூறுவதெல்லாம், சில சாத்தியக் கூறுகளையே என்பது புலனும். மனித சுபாவத்தைப்பற்றிப் பொருளாதார அறிஞர் சில கருத்துகளை அடிப்படைக் கருத்து களாக ஏற்றுக்கொள்வர்; அதாவது அவர் இலக்கணப்படி 'பொருளாதார மனிதர்' (Homo economicus) என்று ஒருவரைக் கற்பனை செய்துகொள்வார். அத்தகைய மனிதரே இயற்கை யான மனிதர் என்றும் கொள்வார். அவர் நடத்தையை வைத்துத்தான் பொருளாதாரம் ஒரு கலையாகின்றது. ஆனால்,

வரலாற்றில் எல்லாவித மனிதர்களும் உட்படுவர். பொருளாதாரம் கணித முறைகளை மேற்கொள்கிறது என்பதைவிடப் புள்ளியியல் மரபுகளையும் குறியீடுகளையும் பயன்படுத்துகின்றது எனலே பொருந்தும். புள்ளியியல் முறைகளும் கணக்குப் பொறிகளும் கணக்கிடும் காலத்தை மிச்சப்படுத்துகின்றனவேயன்றிச் சமுதாய நிலைமையினைப்பற்றிய உண்மைகளைக் கூறிவிடமாட்டா. அதற்கு வரலாற்றுளன் உதவிதான் தேவைப்படும்.

இக் காலத்தில் சிலர் வரலாற்றுராய்ச்சிக்குக்கூடப் புள்ளியியல் முறைகளைக் கையாள முற்பட்டுள்ளனர். இம் முயற்சி வரலாற்றிற்கு அதிகமாகப் பயன்படாது. வரலாறு கலையா? விஞ்ஞானமா? என்னும் வினுக்களுக்கு வேருெரு அத்தியாயத்தில் விடைகாண முயல்வோம். வரலாற்றிற்கு விஞ்ஞானத்தின் செயல் முறை நேரிடையாகப் பயன்படாது. பொருளாதாரக் கலைஞர்களைப்போல வரலாற்றுளர்களும் ஒரு சிறு அளவிற்குச் சில குறியீடுகளைப் பயன்படுத்தலாம். அவ்வளவேயன்றி, சாத்தியக்கூறுகளும் மனிதன் தன் சுபாவத்தால் எவ் விதியையும் மீறும் தன்மையும் மிகுந்துள்ள வரலாற்றுக் கலையில், கணிதத்திற்கேயுரிய துல்லியத்தைக் காண இயலாது. வரலாற்றிற்குப் பொருளாதாரம் ஓரளவிற்கும், புள்ளியியல் மிகக் குறைந்த அளவிற்கும் பயன்படும். புள்ளியியலை வரலாற்றுளன் பயன்படுத்துதல் அவன் எத்துறையில் ஆராய்ச்சி செய்கிருன் என்பதைப் பொறுத்துள்ளது.

### (இ) வரலாறு, நிலவியல், மற்றும் புவியியல்

நிலவியல் வரலாற்றின் ஆதிகால உறவு: புவியியல் நாள்தோறும் மனிதனையும் அவனது நாகரிகத்தையும் கலாசாரத்தையும் பாதிப்பதும் உருவாக்குவதும் ஆகும். மனிதகுலம் பூமி என்னும் ஒரு கிரகத்தில்தான் வாழ்கின்றது. உயிர் பூமியைத் தவிர வேறு எங்கும் காணக் கிடைக்காதது என்பது உண்மையாயின் நிலத்தின் இயல்பிற்கும் மனித வாழ்க்கைக்கும் அடிப்படைத் தொடர்பு தெரிகிறது. ஏதோ சில இயற்கையின் சேர்க்கைகளால் ஆதி காலத்தில் உயிர் பிறந்து அதன் பரிணமப் போக்கில் மனிதனும் தோன்றினன். ஆதலால் வரலாறு நிலவியலில் தோன்றிற்று எனல் மிகைக் கூற்றுகாது. கல், மண், தாதுக்கள், கனிகள், பூகம்பங்கள், எரிமலைகள் என்பவற்றின் சூழலில் மனிதன் வாழ்கின்ருன். சிலவற்றை எதிர்த்து வாழ்கின்ருன்: சிலவற்றைப் பயன்படுத்துகிருன். கடல் கொந்தளிப்பால் நாடுகளின் பகுதிகள் அழிகின்றன; புதுத் தீவுகள் தோன்றுகின்றன. இவை வரலாற்றின் உருவத்தையும் போக்கையுமே மாற்றுகின்றன.

புவியியலிற்கும் வரலாற்றிற்கும் உள்ள தொடர்பு மேலும் வெளிப்படையாகப் புலனாகும். தட்பவெப்ப நிலைகள், ஆறுகள், இவற்றோரங்களில் தோன்றி வளரும் நாகரிகங்கள், காடுகளால் மழை மிகுதலால் செழிப்பு ஏற்பட்டு மனிதகுலம் பயனடைதல், சூழ்நிலையால் கலாசாரம் உருவாதல், கலாசாரம் சூழ்நிலையை மாற்றி யமைத்துக்கொள்ள முயலுதல் என்பவையும் இவை போன்ற பிறவும் புவியியலுக்கும் வரலாற்றுக்கும் நெருங்கிய உற வுண்மையைக் காட்டும். ஒவ்வொரு நாட்டினுடைய வரலாறும் அதன் புவியியல் இருப்பைப் பொறுத்து மாறியமைந்துள்ளது என்பது தெளிவாம். புவியியல் வசதி மிகுதியாக உள்ள நாடு களில் கலாசாரம் செழிப்பதும், அவ் வசதி குன்றியுள்ள இடங் களில் வாழும் மக்கள் காட்டுமிராண்டிகளாயிருப்பதும், கடுங் குளிர் நாடுகளில் மக்கள் செயலற்றுக் கிடப்பதும் வரலாற்றிற் கண்டது.

புவியியலைப்பற்றி அறிந்துகொள்ள வரலாற்றாளர்கள் என்றுமே முயன்றுள்ளனர். டாலமி என்னும் கிரேக்கப் புவியிய லார் பண்டைக்காலப் புவியியல் நூல் ஒன்றை இயற்றினார். அவர் காலத்திலிருந்து இன்றுவரை புவியியல் ஆராய்ச்சிகளின் விளைவுகளில் வரலாற்றாளர்கள் அக்கறைகாட்டி வந்துள்ளனர். கொலம்பஸ், ராலே முதலிய மேலை ஐரோப்பியர்கள் புது நாடுகளைக் கண்டபின் உலகின் வரலாறே புதுத்தன்மை எய்தியது. தட்ப வெப்ப நிலையே வரலாற்றில் தேசியத் தன்மையை ஏற்படுத்துகின்றது, அத் தன்மைக்கேற்ப அவ்வந் நாடுகளின் வரலாறுகள் மாறுகின்றன என்று சில அறிஞர்கள் கருதுவர். மான்டெஸ்கியூ, பக்கில், ஹண்டிங்டன் என்போர் இவ்வாறு கருதியவர்கள். வெபர் (Febure) என்பார் ‘வரலாற்றிற்கோர் புவியியல் முகவுரை’ (Geographical Introduction to History) என்னும் நூலை இயற்றினார். அந் நூலில் இவ் விரு துறைகளுக்கும் எத்தகைய நெருங்கிய தொடர்பு உண்டு என்பது விளக்கப் பட்டுள்ளது. மனிதன் விஞ்ஞானம், தொழில் நுட்பக்கலை முதலிய வற்றில் மிகுந்த தேர்ச்சியுற்ற பின்பு சூழ்நிலையைக் கட்டுப்படுத் திக்கொள்ள இயலுகின்றதாயினும் இயற்கையை வென்றுவிட்ட தாகச் சொல்லமுடியாது. ஏனெனில், பருவமழை தவறுவ தையும், சுழற்காற்று, சூறாவளி, கடல் கொந்தளிப்பு ஆகிய வற்றால் நேரும் சேதங்களையும், பூகம்பங்கள் நேர்வதையும், எரிமலை குமுறுவதையும் முற்றிலும் முற்கூறவும் முடிவதில்லை, அவ்வாறு ஓரளவு கூறினாலும் அவற்றைத் தடுக்க இயல்வதே யில்லை. இவையெல்லாமும் வரலாற்றில் இடம்பெறுகின்றன.

(ஈ) வரலாறும் உயிரியலும்

வரலாற்றிற்கும் உயிரியலுக்கும் பல காரணங்களால் நெருங்கிய தொடர்புஉண்டு. இரண்டிற்கும் பரிணாமக் கொள்கை பொது வானது என்பது ஒரு முக்கியமான தொடர்பு. உயிரியல் அறிஞரான சார்லஸ் டார்வின் இயற்கைத்தோற்றத்தில் பரிணாமக்கொள்கையை நிறுவுதற்கு முன்பே, வரலாற்றாளர்கள் அக் கோட்பாட்டினை யறிந்திருந்தனர். காலிங்வுட் (Collingwood) என்பவர் உயிரியல் அறிஞர்கட்கும் இக் கொள்கையைக் கற்றுக் கொடுத்தவர்கள் வரலாற்றாளர்களே என்று கூறுவார். இதைப் பற்றிய காலவரையறையைக் கவனித்தோமானால் பரிணாமக் கொள்கையின் வரலாறு யாது என்பது விளங்கும்: (1) கிறிஸ்துவ மதக்கோட்பாடுகளின் வளர்ச்சி, அச் சமயக் கருத்துகளின் பரிணாமம் என்பவற்றைப்பற்றி நியூமன் (Newman) கி. பி. 1845-ல் ஒரு கட்டுரை எழுதினார். பரிணாமக் கொள்கையை ஓரளவு கூறிய ஜெர்மானியரான ஹெர்டர் (Herder) நியூமனுக்குமுன்பு இருந்தவர். (2) டார்வினின் 'உயிர் வகைகளின் தோற்றம்' என்னும் நூல் 1859-ல் வெளிவந்தது. (3) காரல் மார்க்ஸின் டாஸ் காபிடல் (Das Kapital) என்னும் நூல் 1867-ல் வெளியாயிற்று. இம் மூன்று முயற்சிகளும் பரிணாமக்கொள்கையைக் கூறுகின்றன. இதிலிருந்து டார்வினுக்கும் முன்பே, பிறர் வரலாற்று நிலையில் பரிணாமக் கருத்தைக் கூறியுள்ளனர் என்பது போதரும். '19ஆம் நூற்றாண்டில் வரலாற்று ஆராய்ச்சிமுறை, விஞ்ஞானம் அந் நூற்றாண்டில் பரிணாமக் கொள்கையால் உருவானது போலவே உருவாயிற்று; இவ் விரு நிகழ்ச்சிகளும் ஒரே சமயத்தில் நிகழ்ந்தமை' என்றார் ஜே. பி. பியூரி. பரிணாமம் என்பது முன்னி யக்கக் கருத்துகளை உந்தியது. இதனை வரலாற்றிலும் காணலாம். இதனை முற்றிலும் பயன்படுத்தியவர் காரல் மார்க்ஸ். பரிணாமம் எய்துவிக்கும் முன்னியக்கம் தன்மையிலும் சிறந்து விளங்கும் என்னும் கருத்தூட்டியவர் மார்க்ஸ். 'வரலாற்று முறை என்று சொல்லப்படும் ஒப்புமைமுறை, சட்டம், மொழி, புராணக் கதைகள், மானுடவியல், சமூகவியல் என்னும் அறிவுத்துறை களையே மட்டுமன்றித் தத்துவம், இயற்கை விஞ்ஞானம் முதலிய துறைகளையும் மிகவும் பாதித்துள்ளது' என்று 1894-ல் பிராதிரோ (Prothero) என்னும் வரலாற்றாளர் கூறினார்.

இயற்கையுலகில் நடைபெற்று வருவதாக டார்வின் கூறிய தக்கது நிற்றல், வாழ்க்கைப் போராட்டம் என்பவை நாகரிக மடைந்ததாகக் கூறப்படும் மனித சமுதாயத்திலும் நாள்தோறும் நடைபெற்று வருகின்றன. இவை ஒருபுறமிருக்க, இயற்கை விதிகளை எதிர்த்துச் சில செயற்கை விதிகளை மேற்கொள்ள

மனிதன் முயல்கின்றனன். இவ்வாறு முயல்வதுதான் நாகரிகம், பண்பாடு என்று எண்ணுகிறுன். அதாவது இயற்கை, மனிதர்களை ஏற்றத்தாழ்வுகளோடு படைக்கின்றது. நிறம், உயரம், தோற்றம், அறிவுடைமை, திறமை, உடல்வலு என்பவற்றில் எல்லாம் ஒருவரைப் போல் ஒருவர் இல்லாத உலகை இயற்கை படைக்கின்றது. ஆனுல், மனிதன் சட்டப்படி எல்லோரையும் ஒருவருக்கொருவர் சமம் என்று கூறுகின்ருன். இதனுல் இயற்கை விதிக்கும் நிலையை மனிதன் புறக்கணிக்க முயன்று அதனுல் இயற்கையின் பகையைச் சம்பாதித்துக் கொள்கின்ருன். 'ஆனுல் இங்ஙனம் செய்யாவிடில் விலங்கு வாழ்க்கைக்கும் நாகரிக மனிதவாழ்க்கைக்கும் வேறுபாடு இராது என்றும் தோன்றுகிறது. இவ்வாருகப் பரிணுமம் அடைந்துவரும் இயற்கையுலகு மனிதனுக்குப் பல அறைகூவல்களை விடுக்கின்றது. அவற்றை வெற்றியோடு மனிதன் சமாளிக்கும் கதைதான் மனிதவரலாறு எனப்படுவது. இத்தகைய அறைகூவல்களில் மிகவும் முக்கியமானது மால்தூஸ் (Malthus) என்னும் ஆங்கிலேயப் பொருளாதார அறிஞர் கூறியது. அதாவது மக்களினப் பெருக்கம், அவர்களுக்குத் தேவையான உணவுப் பெருக்கத்தைவிட மிகவேகமாக முன்னேறுகின்றது என்பது. இவ் விரண்டிற்கும் உள்ள இடைவெளி பெருகிக்கொண்டேபோனுல், உணவின்றிப் பெருவாரி மக்கள் மடிந்து மனிதகுலம் அழியவேண்டியும் வரலாம் என்று ஓர் எச்சரிக்கையும் அவர் விடுத்துள்ளார். ஆதலால் இருவகையில் இந்த அறைகூவலைச் சமாளிக்கவேண்டும்: ஒன்று, இனப்பெருக்கம் குறைய வேண்டும்; இரண்டு, உணவு உற்பத்தி பெருகவேண்டும். இவ்விரு முயற்சிகட்கும் உயிரியல் ஆராய்ச்சி மனிதவரலாற்றிற்கு அவசியமாகவும் விரைவிலும் தேவைப்படும் நிலையில் இன்று மக்கள் உள்ளனர். வரலாறும் உயிரியலும் மேற்கூறிய காரணங்களால் மிக நெருங்கிய தொடர்புடையவை என்பது புலனுகும்.

(உ) வரலாறும் இலக்கியமும்

வரலாறு கலையா? விஞ்ஞானமா? என்னும் வினுவை ஜே. பி. பியூரி எழுப்பியபோது அவர் 'அது இலக்கியத்தின் ஒரு பகுதியன்று என்பதுமட்டும் நிச்சயம்' என்று கூறினுர். ஒரு முடிவில்லாத விவாதம் அக்கூற்றிலிருந்து பிறந்தது. அவ் விவாதம் தொடங்கியதற்குக் காரணம் ராங்கே (Ranke) போன்ற ஜெர்மானிய அறிஞர்களின் செல்வாக்கு ஆங்கிலேய வரலாற்ருளரிடையே மிகுவதாயிற்று என்பதே. இதனுல் வரலாறு விஞ்ஞானக் கட்டுரைகளைப்போலத் தருக்க ரீதியான விவாதங்கள், முடிவுகள், சான்றுகள், மேற்கோள்கள் என்பவற்ருேடு நின்றுவிடவேண்டுமே

யன்றி இலக்கிய நடையழகோடு விளங்கக்கூடாது என்று கூறப் பட்டது. ஹெரடோடஸ் காலத்திலிருந்து மெக்காலே, குரோட், கார்லைல் என்பார் காலம் வரையில் வரலாற்றில் யாது கூறு கின்றோம் என்பதேயல்லாமல் அதனை எவ்வாறு கூறுகின்றோம் என்பதும் முக்கியமானது என்று கருதப்பட்டது. நன்றாகக் கூறப் படுவது உண்மையாக இராதோ என்னும் ஐயம் எழுந்தது. இவ் விரண்டிற்கும் ஏதோ இயற்கையாகவே ஒரு பகை இருப்ப தாகவும் கருதப்பட்டது. கிப்பன் (Gibbon) நன்றாகவும் கூறினார், உண்மையாகவும் கூறினார் என்பதை இவர்கள் மறந்து விடுகின்றனர். அன்றியும் நடைச்சிறப்பில்லாமல் எழுதுவதே விஞ்ஞான முறை வரைவியல் என்னும் கருத்தும் நிலவத்தொடங் கிற்று. இக் கொள்கை இக் காலத்தில் மேலும் பரவிவருகிறது.

வரலாற்றிற்கும் இலக்கியத்திற்கும் என்றைக்குமே நெருங்கிய தொடர்பு உண்டு என்பது வரலாற்றையோ இலக்கியத்தையோ சிறிது கற்றோரும் அறிவர். ஹோமர் இயற்றிய இலியடுவில் (Iliad) கிரேக்க டுரோசண் போர் (உண்மையில் நிகழ்ந்தது) கவிவாக்கால் கூறப்படுகின்றது. ஹெரடோடஸும் செனபனும், ஸீஸரும் அவ்வவர் மொழியில் எழுதிய வரலாறு அம் மொழியை மொழியாகக் கற்கும் மாணவர்க்கும் பயன்படுவதாம். அன்றியும் மாக்கியவல்லி, ரூஸோ முதலியோர் தங்கள் இலக்கியங்களால் வரலாற்றையே உருவாக்கியுள்ளனர். வரலாறு இலக்கியமாகவும் மிளிர்வதற்கு கிப்பன் இயற்றிய 'ரோமானியப் பேரரசின் வளர்ச்சியும் வீழ்ச்சியும்' என்னும் நூலும் மெக்காலேயின் 'இங்கிலாந்து வரலாறு'ம், மிஷெலெயின் (Michelet) 'ஃபிரான்ஸ் வரலாறு'ம், பிரெஸ்காட்டின் 'அமெரிக்க வரலாறு'ம் சிறந்த எடுத்துக்காட்டுகளாம்.

இனி வரலாற்று நிகழ்ச்சிகளை இலக்கியம் புனைதற்கு ஏற்ற பொருளாகக் கொள்ளுதலும் காணப்படும். ஷேக்ஸ்பியர் தமது நாடகங்களிற் சிலவற்றை இயற்றுதற்கு வரலாற்று நிகழ்ச்சிகளை எடுத்தாண்டமையை யாவருமறிவர். வரலாற்று நிகழ்ச்சிகளை நவீனங்களின் கதைக்காக எடுத்தாளும் முயற்சியை முதன் முதலாகச் சிறந்த முறையில் பெருமளவு ஸர் வால்ட்டர் ஸ்காட் (Sir Walter Scott) மேற்கொண்டார். அவரது ஐவன்ஹோ, குவென்டின் டர்வர்டு, டாலிஸ்மன் என்னும் நவீனங்கள் தனிச் சிறப்புடையவை. வரலாற்று நிகழ்ச்சிகளையும், கதாபாத்திரங் களையும் உருமாறுமல் எடுத்தாண்ட சிறப்பு அவருக்கு உண்டு; அன்றியும் பொதுமக்களுக்கு வரலாற்றை அறிமுகப்படுத்துதற்கு இத்தகைய வரலாற்று நவீனங்கள் பெரிதும் பயன்பட்டன.

ஃபிரெஞ்சு நாவலாசிரியரான அலெக்ஸாந்திரே டியூமா, விக்டர் ஹியூகோ என்போரும், ருஷிய ஆசிரியரான லியோடால்ஸ்டாய் என்பாரும் இத்தகைய முயற்சியில் பெருவெற்றி கண்டவர்கள். டியூமாவின் 'மூன்று துப்பாக்கி வீரர்கள்', ஹியூகோவின் 'தொண்ணூற்று மூன்று', டால்ஸ்டாயின் 'போரும் காதலும்' என்னும் வரலாற்று நவீனங்கள் உலக இலக்கியத்தில் இடம் பெற்றவை. வரலாறும் இலக்கியமும் நெருங்கிய தொடர்புடையவை என்பதில் ஐயமின்று; இலக்கிய வரலாறுகளில் வரலாற்றிலக்கியத்தைப் பற்றியும் விரிவாகக் குறிப்பிடுவதுண்டு. உயிருள்ள, உணர்ச்சியுள்ள வரலாறு என்பது இலக்கியப் பண்போடு நடையழகோடு விளங்கவேண்டும் என்பதில் ஐயமிருக்கமுடியாது.

வரலாற்று நவீனம் என்னும் வகை இலக்கியம் பெரும்பாலும் இலக்கியமாகக் கருதப்பட வேண்டுமே யன்றி, வரலாருகக் கருதப் படாது. ஏனெனில், அவ்வகை இலக்கியத்தில் வரலாற்றை ஒரு கருவியாகப் பயன்படுத்திக்கொண்டு இலக்கியம் உருவாக்கப்படுகின்றது. முற்றிலும் கற்பனையான இடங்கள், பாத்திரங்கள் என்பவற்றை விடுத்து வரலாற்று வாயிலாக நாம் அறிந்த இடங்கள், பெயர்கள் என்பவற்றைப் பயன்படுத்தி இலக்கிய நவீனங்களைப் படைத்தல் சற்றுக் கடினமான இலக்கிய முயற்சி. வரலாற்றைச் செம்மையாக அறிந்தவர்களும், இலக்கிய இலக்குகளுக்காக வரலாற்றுண்மையைத் தியாகம் செய்யத் துணியாதவர்களுமே இத்தகைய முயற்சிகளில் ஈடுபடுதல் நன்று. 'வரலாற்று நவீனம் என்பது வரலாறு அன்று; ஆனுல், அது வரலாற்றினின்றும் பிறப்பது, வரலாற்றைப் பாதிப்பது, வரலாற்றுக் கதைகளைப் புனேவோர் பழைமைக்கு உயிர் கொடுக்கின்றனர்; ஆனுல், அவர்கள் நூல்களால் பழைமை நிகழ்ச்சிகள் உயிர் பெருவாதலின் அவை வரலாறல்ல' என்று டிரெவிலியன் கூறியது நினைவுகூரற்பாலது.

(ஊ) வரலாறு, உளவியல், தருக்கம் மற்றும் தத்துவம்

வரலாறு பல்வேறு திசைகளில் திரும்பி முன்னேறி வந்துள்ளது; இத் திருப்பங்கள் மொத்தமாகச் சமுதாயத்தால் உந்தப் பெற்றவையாயினும், சிறந்த தலேவர்களால் ஆக்கப்பெற்றிருப்பினும் ஏதோ ஓரிடத்திலிருந்து அம் மாறுதல்களுக்குத் தேவையான உந்துதல் பிறந்திருத்தல் வேண்டும். இது சமுதாய முழுமையால் நிகழ்ந்திருந்தால் சமூக உளவியலும், தனித் தலேவர்களால் நிகழ்ந்திருந்தால் தனியார் உளவியலும் காரணமாயிருத்தல் வேண்டும். உந்துதலுக்கு (activise) முன்பு செயல்நோக்கம் (motivation) இருக்கும். செயல்நோக்கத்தை

ஆய்ந்து நிறுவினால்தான் வரலாற்று நிகழ்ச்சிகளுக்குக் காரணம் காணல் முடியும். வரலாற்றில் நிகழ்ச்சிகளுக்குக் காரணம் காணல் ஒரு முக்கியமான செயற்பாடாதலின், உந்துதல்களையும் அவற்றை நிருணயிக்கும் செயல் நோக்கங்களையும் செவ்வனே ஆய்தல் தேவைப்படும். இவையெல்லாம் உளவியலின்பாற் பட்டவையாதலின் வரலாற்றிற்கும் உளவியலுக்கும் நெருங்கிய அடிப்படையான தொடர்பு உண்டு என்பது விளங்கும். பெருந் தலைவர் ஒருவரின் தலைமைக்கீழ்ப் பல்லாயிரமக்கள் பணிந்து தொடர்தல் சமூக உளவியலிற் சேர்ந்தது; தலைவரின் கருத்து, நடத்தைச் செம்மைகளைப் புரிந்துகொண்டு—ஏற்றுக்கொண்டு அங்ஙனம் அவர்கள் தொடர்கிறார்கள் என்பதின்று. தலைமையின் வசீகரம் (cherisme) அவர்களை ஈர்த்துச்செல்லும்.

இனி, இத் தலைவர்களின் உளவியலினை ஆய்ந்து வரலாறு வரைதல், 'உளவியல் முறை வரலாறு' எனப்படும். இம் முறையைக் கையாண்டு எரிக்ஸன் என்பவர் மகாத்மா காந்தி, லெனின் முதலிய தலைவர்களைப்பற்றி ஆய்ந்துள்ளார். ஸீஜ்மாண்டு பிராண்டு என்பவர் உளவியல் தத்துவத்தில் 'உளவியல் பகுப்பு' (Psycho-analysis) என்னும் ஒருவகை விஞ்ஞானக் கலையையே உருவாக்கியவர். அவர் அமெரிக்க ஜனாதிபதியா யிருந்த உட்ரோவில்ஸன் என்பாரைப்பற்றி இத்தகைய ஆய்வு ஒன்றினைச் செய்துள்ளார். இவ் வாய்வுகளால் பெருந் தலைவர்கள் என்று சொல்லப்பட்டவர்களது உளவியலை அலசி ஆய்ந்து, அவர்களது செயல்நோக்கங்களை வெளிப்படுத்துதல் இயலும்; அதுவே இதன் நோக்கமுமாம். இங்ஙனம் சமூகங்களை யும் தனி ஆள்களையும் உளவியல் முறையில் ஆய்தலில் சில சிக்கல்கள் உளவாயினும் இம் முறையைப் புறக்கணிப்பதால் பல அருமையான, மறைந்திருக்கும் உண்மைகள் அறியப்படாமலே போனாலும் போகும்.

இன்னொரு வகையிலும் உளவியற்கும், வரலாற்றிற்கும் உள்ள தொடர்பு காணவேண்டும். வரலாற்றாளர்கள் ஏதேனும் ஒரு பொருள்பற்றி ஆராயும்போது சில கோணங்களிலிருந்து ஆராய்ந்து சில முடிவுகளுக்கு வருகின்றனர். ஒவ்வொரு வரலாற்றாளரும் வெவ்வேறு முடிவுகளுக்கு ஒரே பொருளைப்பற்றி வருதலும் இயல்பே. இதற்குக் காரணம் அவ்வவ் ஆசிரியரின் உளப்பாங்கு, மற்றும் கருத்துநோக்குகளும் வேறுபடுதலேயாம். இந்திய வரலாற்றை எழுதிய வின்ஸன்ட் ஸ்மித், இராபர்ட்ஸ் முதலிய ஆங்கிலேய ஆசிரியர்கள் பேரரசு கண்கொண்டு அவ் வரலாற்றைக் கண்டமையின் இந்தியாவில் ஆங்கிலேயர் நடத்திய ஆட்சியை

ஆதரித்து எழுதினர்; இதற்கு மாறாக, இந்தியர்களிற் சிலர் நாட்டுப்பற்றுக் கோணத்திலிருந்து இந்திய வரலாற்றினை வரையப் புகுந்தமையால், அதே ஆட்சியைக் குறைகூறி நூலியற்றினர். இவ் வேறுபாட்டிற்கு அவர்கள் கருத்துநோக்கங்கள் வேறுபடுதலே காரணம் என்க. இதனை ஆராய்தலும் ஒருவகை உளவியல் ஆராய்ச்சியே.

அறிவியல் முறை எண்ணங்கள் யாவையும் தருக்க ரீதியாக நடைபெறுபவை; ஆதலால் வரலாற்று முடிபுகளும் தருக்க முறை முடிபுகளாதல் வேண்டும். பொது விதியைச் சிறப்பு உதாரணத்திற்கு ஏற்றி முடிபுகள் காணுதல் தருக்க முறை. ஆனால் பொது விதிகள் உள்ள நிலைகளில் மட்டும்தான் இத்தகைய முடிபுகளைக் காணமுடியும். உதாரணமாக, எல்லாப் புழுக்களுக்கும் முதுகெலும்பு இல்லை; இது ஒரு புழு; ஆதலால் இதற்கு முதுகு எலும்பு இல்லை' எனல் தருக்க முடிபு. 'எல்லா மனிதர்களும் என்றேனும் ஒருநாள் இறப்பர்; இவன் ஒரு மனிதன்: ஆதலால் இவனும் ஒரு நாள் இறப்பான்' இதுவும் மேற்கூறியவாறே. இங்குக் கூறிய இரண்டு உதாரணங்களிலும் முதற்கூற்று பொதுவிதி. அத்தகைய பொது விதிகள் வரலாற்றில் இல்லையாகையால் தருக்க ரீதி முடிபுகளை வரலாற்றில் காண்டல் இயலாது என்றே தோன்றுகின்றது. தவிர, தருக்கவியல் அளவைகளைக் கொண்டு வரலாற்றில் நன்று, தீது என்று முடிபுகளைக் காணும்போது தருக்கம் பயன்படாது; அவரவர் மனச்சாட்சியே பயன்படும். இவை பொருளுள்ள வாதங்களே. ஆனால் வரலாற்றில் ஏதேனும் ஒரு நிலைமையின் காரண காரியத் தொடர்புகளை எடுத்து ஆராயும்போது, அதற்குட்பட்டுத் தருக்க ரீதியில்தான் அவ் விவாதத்தை நடத்தவேண்டும் என்பது எல்லோர்க்கும் ஒப்ப முடிந்தது. டி. எச். ஃபிஷர் என்னும் ஆசிரியர் 'வரலாற்றில் தருக்கக் குறைபாடுகள்' (Historical Fallacies) என்னும் நூலில் வரலாற்றாளர்கள் தமது முடிபுகளில் எத்துணைவகைத் தருக்கக் குற்றங்கள் செய்யமுடியும் என்று உதாரணமுகத்தான் விளக்கியுள்ளார். இத்தகைய குற்றங்களைத் தவிர்த்துக் கொள்ளுதல் வரலாற்றாளரின் கடமையேயாம்.

விஞ்ஞானத்திற்கும் வரலாற்றிற்கும் எவ்வளவு தொலைவோ அவ்வளவு தொலைவு வரலாற்றிற்கும் தத்துவத்திற்கும் உண்டு. ஆயினும், வரலாற்றை விஞ்ஞானம் என்பார் போல அதனைத் தத்துவம் என்பாரும் உளர். அது ஒரு புறமாக, விஞ்ஞானம், தத்துவம் என்னும் இரு சொற்களுக்கும் குறுகிய பொருளும் காணலாம்; பரந்த பொருளும் காணலாம். பரந்த பொருளில்

வரலாற்றிற்குத் தத்துவம் உண்டு என்றே கூறவேண்டும்: இந் நூலில் எட்டாம் அத்தியாயமான 'வரலாற்றுத் தத்துவம்' என்னும் அத்தியாயத்தில் தத்துவம் என்னும் சொல் பரந்த பொருளிலேயே ஆளப்பெறுகின்றது.

வரலாற்றில் இருவகை வினக்கள் எழுதல் உண்டு; (1) வரலாற்றுள் எழும் வினக்கள்; (2) வரலாற்றைப்பற்றி எழும் வினக்கள். முதல் வகை வினக்களுக்கு உதாரணமாக, 'தஞ்சைப் பெருவுடையார் கோயில் எந்தச் சோழமன்னனால் கட்டப் பட்டது?' என்பதைக் கூறலாம். இதற்கு விடை 'முதலாம் இராஜராஜசோழன்' என்று எவரும் எளிதில் கூறுவர். ஆனால், 'வரலாற்றுச் செய்தி என்றால் என்ன? வரலாற்றில் பொருண்மை என்பது என்ன? வரலாற்றில் பொதுவிதிகள் உளவா?' என்பன போன்ற வினக்கள் வரலாற்றைப் பற்றியவை. இவற்றிற்கு விடையளிக்க வெறும் நிகழ்ச்சிக்குறிப்பாளர்கள் போதா; வரலாற்றாளர்களே வேண்டும். இவையெல்லாம் வரலாற்றுத் தத்துவத்தின்பாற்பட்டவை. வரலாற்றுத் தத்துவங்களைப்பற்றிய ஆய்வுகளை வரலாற்றாளர்கள் செய்தல் வேண்டுமா? அன்றித் தத்துவர்கள் மேற்கொள்ள வேண்டுமா? என்னும் பிரச்சினைக்கு விடை எளிதிற் கூறலாம். இத்தகைய ஆய்வுகளை வரலாற்றாளர்களே மேற்கொள்ள வேண்டும்; ஏனெனில் அவர்களுக்கே வரலாற்று விவரங்கள், செய்திகள் என்பவை நன்கு தெரியும்; இச் செய்திகளைப் புறக்கணித்துவிட்டுக் கட்டப்படும் எந்தத் தத்துவக் கோட்பாடும் வரலாற்றிற்குப் பொருந்தாது என்க.

### (எ) வரலாறு, சமயம், ஒழுக்கவியல் மற்றும் பௌராணிகக் கட்டுக் கதைகள்

வரலாற்றிற்கும் சமயத்திற்கும் பகை யாதொன்றும் இல்லை. வரலாறு உலகியலின்பாற்பட்டது; சமயம் தெய்வீகத்தோடு தொடர்புடையது. சமயம் உலகியலை, அதாவது வரலாற்றின் எல்லையைத் தாண்டிச் செல்வதுண்டு; ஆனால் வரலாறு சமயத்தை, அதாவது சமயத்தின் வரலாற்றைத் தன்னுள் அடக்கும். கடவுள் எவ்வாறு காட்சி, மானதப் பொருள்கள் யாவற்றையும் படைத் தார் என்று சமயம் ஆராய்ந்து வரும்போது, மனிதன் எவ்வாறு தன் தேவைக்கும் விருப்பத்திற்கும் ஏற்பக் கடவுளைப் படைத்துக் கொண்டான் என்று ஆராய்கின்றது வரலாறு. சிலர் 'சமயம் என்பது அச்சத்தால் தோன்றியது' என்றும் வேறு சிலர் 'சமயம் ஏழ்மையில், துயரத்தில் பிறப்பது' என்றும் பலவாறாகக் கூறுவர். இவ்வாறு சமயத்தைப்பற்றிக் கூறுவதெல்லாம் வரலாறு வாயிலாகவே நிகழும்.

சமயம் என்பது நல்லொழுக்கத்தை மக்களிடையே நிறுவுவதற்கு இன்றியமையாதது என்று கருதப்படும். விவிலியத்தில் கூறப்பட்டுள்ள 'பத்துக் கட்டளைகள்' கடவுள் பெயரால் பிறந்தவை. மனிதன் பரிணமித்துவரும் போக்கில் அச்சமின்றித் தவறுகள் செய்ய முற்படும்போது சமயத்தால் சில அச்சங்களை ஏற்படுத்தி மனிதனை நல்லொழுக்கப் பாதையில் செலுத்துவது சமயம். ஆதலால் சமயம், கடவுள் என்னும் கோட்பாடுகளின் தேவை எப்போதும் எல்லோராலும் உணரப்பட்டு வந்துள்ளது. வால்ட்டேர் 'கடவுள் என்று ஒருவர் இல்லையாயின், அவரை ஆக்கவேண்டிவரும்' என்று கூறியது ஒரு பெரிய உண்மை.

19ஆம் நூற்றுண்டில் விஞ்ஞானத்தின் செல்வாக்கு மிகுந்து வந்த காலத்தில், டார்வினின் பரிணாமக் கோட்பாட்டால் 'கடவுள் உலகைப் படைக்கவில்லை, அது தானே தற்செயலாக உற்பத்தியாகிப் பல இயற்கை விதிகட்கு உட்பட்டுப் பரிணமித்துள்ளது' என்றுகொண்டு கடவுள் அடிப்படையில் இயங்கும் சமயக் கருத்துகளைப் புறக்கணித்தல், இளப்பம் செய்தல் என்னும் நோக்கங்கள் மிகுந்திருந்தன. ஆனுல் 20ஆம் நூற்றுண்டில் விஞ்ஞானத்திற்கும் சில முடிவான, மீற முடியாத எல்லைகள் உண்டு என்று கண்டபின் முன்புபோல அத்துணை வேகத்தோடும் உற்சாகத்தோடும் விஞ்ஞானத்தைக் கடவுள் நிலைக்கு உயர்த்தும் முயற்சி கைவிடப்பட்டு வருகின்றது. ஆனுல் பொதுவாகப் பார்க்குமிடத்து உலகாயதம், சமயப்பற்றினை மெல்லமெல்ல வென்றுவருதல் கண்கூடு.

இதேபோல ஒழுக்கவியலும் விஞ்ஞான முன்னேற்றத்தால் பாதிக்கப்படுதலைக் காணலாம். 'ஒழுக்கம் என்பது காலத்திற்குக் காலம் மாறுவது அன்று' என்று ஆக்டன் பிரபு 19ஆம் நூற்றுண்டில் வலுவாகக் கூறினுர். ஆனுல், இக் காலத்துப் பல அறிஞர்கள் ஒழுக்கவியல் நாட்டிற்கு நாடு, காலத்திற்குக் காலம், மாறுகின்றது என்பது மட்டுமன்றி ஒரே நாட்டில் ஒரே காலத்தில் சமுதாயத்தின் பல நிலைகளில் உள்ளாரிடையேயும் வெவ்வேறு விதமாகப் போற்றப்படுதலும் வற்புறுத்திக் கூறப்படும். 'வழக்கும் தண்டமும் உலகநெறி நிறுத்துதற் பயத்தவாவது அல்லது, ஒழுக்கம் போல மக்கள் உயிர்க்கு உறுதி பயத்தல் சிறப்பில ஆகலான்,... சிறப்புடைய ஒழுக்கமே அறம் என வள்ளுவரால் எடுத்துக்கொள்ளப்பட்டது' என்று பரிமேலழகர் கூறியது இக்கால அறிஞர்கள் பலருக்கு உதவாததாகி வருகின்றது. 'ஒழுக்கவியல் பலரால் பலவிதமாக நிருணயிக்கப்பட்டு, அதற்கு ஒரு சார்பியல் தன்மை ஏற்றப்படுவது நேரிதே' என்றும் கருதப்படுகின்றது.

வரலாற்றுளர்கள் வரலாற்றில் தோன்றி மறைந்துள்ள தலைவர்கள் அவர்கள் செயற்பாடுகள் முதலியவற்றை ஒழுக்கக் கண்கொண்டு பார்க்க வேண்டுமா வேண்டாவா என்னும் வினவிற்குப் பலவகை விடைகள் தரப்படுகின்றன. ஆயினும், எந்த வரலாற்றுளனும் தனக்கெனவேனும் ஓர் ஒழுக்கவியலை வகுத்துக் கொண்டிருப்பான் என்பதும், அதற்கேற்ப அவன் வரலாற்று நிகழ்ச்சிகளைக் கணிப்பான் என்பதும், ஆதலால் ஒழுக்கவியலுக்கும் வரலாற்றிற்கும் நெருங்கிய தொடர்புண்டு என்பதும் கருதவேண்டும்.

புராணக் கதைகள் என்பவை உலகில் எல்லா நாடுகளிலும் உண்டு; புராணம் என்பது பழைமை; புராணக்கதை என்பது பழங்காலத்திலிருந்து சொல்லப்பட்டு வரும் கதை. இக் கதைகளுக்கு உட்பொருள், புதைதத்துவம் என்பன இருக்கக் கூடும். இவற்றிற் சில சமயக் கோட்பாடுகளை நிறுவுவதற்காகவே ஏற்பட்டவை; வேறு சில சமுதாயத்திற்குச் சில நிரந்தரமான உண்மைகளைப் போதிப்பதற்காக அறிஞரால் புனையப்பட்டவை. பழங்காலக் கதைகளை ஆய்ந்துபார்த்தால் அவற்றின் அடிப்படையில் சில வரலாற்று உண்மைகள் இருத்தல் கூடும். இராமாயணக்கதையில் இராமன் பரசுராமனை வென்றதாகக் குறிப்பிடும் கதை, உண்மையில் அரசகுலத்தினரான க்ஷத்திரியர்கள் பிராம்மணர்களது ஆதிக்கத்தைக் குறைத்துத் தாங்கள் மேம்பாடுற்ற காலத்தைக் குறிப்பது என்று கொள்ளலாம். இவ்வாறு புராணக்கதைகளும் வரலாற்றுளனுக்குப் பயன்படுவனவேயாம். தற்கால வரலாறு வரைதல் என்னும் மரபு கட்டுக் கதைகள் வாயிலாக உலகியல் நிகழ்ச்சிகளைக் கூறுதலைவிட நேரிடையாக உண்மையைக் கூறுதலே சிறந்தது என்று கருதும். இதுவே சிறந்ததுவுமாம்.

(ஏ) வரலாறும் சமூகவியலும்

சமூகவியல் என்பது அண்மையில் எழுந்த ஓர் அறிவியல்துறை. இத் துறையில் நூல்கள் எழுந்ததே இரு நூற்றுண்டுக்கால அளவிற்குள்ளாகத்தான். இத் துறை தற்காலத்தில் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் மிகவும் பிரபலமாகியுள்ளது. இதில் சற்று மானுடவியல், பண்டைக்காலச் சட்டவியல், புராதன மக்களின் வாழ்க்கை முறைகளையும் சமூக நிலையங்களையும் ஆய்தல் என்பன அடங்கும். இவை யாவும் வரலாற்றுலும் ஆராயப்படும் என்க. 'Sociology' என்னும் ஆங்கிலச் சொல் முதன்முதல் ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் என்பவரால் ஆளப்பெற்றது (1851). ஆயினும், தற்காலத்துச் சமூகவியல் பண்டைய நிலையங்களையும் இறந்துபட்ட நாகரிகங்களையும் ஆராய்வதில்லை. சமூகத்தில் மாறுதல்கள் எங்ஙனம் தோன்று

கின்றன? என்பதே முக்கியமாக ஆராயப்படும் பிரச்சினையாகும். குடும்பம், கிராமம், பிற மக்கட்குழுக்கள் ஆகியவற்றின் செயற்பாடுகளைச் சமூகவியல் ஆயும். இதற்கும் வரலாற்றிற்கும் தொடர்புடைமை வெளிப்படை.

(ஐ) வரலாறும் இனவியலும்

இனவியல் என்பது மக்கட் குலத்தின் பல்வேறு இனங்களின் பரிணமம் முதலியவற்றை ஆய்வது. மங்கோலியர்கள் அல்லது மஞ்சள் இனம், நீக்ரோக்கள் அல்லது கறுப்பர் இனம், காகேஷியர் அல்லது வெள்ளையர் இனம் என்பவை முக்கியமான இனங்களாம். இனக் கோட்பாடுகள் வரலாற்றில் என்றுமே மக்கள் வாழ்க்கையைப் பாதித்துவந்துள்ளன. ஆரியரும், ஹிட்லரும், தென் ஆஃப்ரிக்கரும், இனத்தையும் நிறத்தையும் வைத்து மக்களிடையே ஏற்றத்தாழ்வுகளை உண்டாக்கி அவற்றை வைத்துச் சமுதாய நிலையங்களை உருவாக்குவதில் முனைந்தனர். இனம் என்பது ஒன்றுண்டாயினும் அதனை அரசியல் நிலையில் வைத்துப் பேசுவதால் பல கோடிமக்களுக்கு இன்னல் விளைந்துள்ளது. இதனால் இனமே இல்லை என்று சொல்ல முற்படுதலும் தவறுடைத்தாம். இனத்தின் உண்மையை ஏற்றுக்கொள்வது விஞ்ஞானம்; இனவெறியைத் தூண்டுவது அரசியல் என்னும் வேறுபாட்டை உணர்தல் வரலாற்றுளர்க்கு நல்லது.

## (ii) வரலாற்றின் துணையியல்கள்

வரலாற்றோடு தொடர்புடைய பிற இயல்களைப் பட்டியல் படுத்தி அத் தொடர்பு இத்தன்மைத்து என்பதையும் மேலே கண்டோம். இனி வரலாறு செயற்படும்போது அதற்கு உதவியாக இயங்கும் சில அறிவுத்துறைகளும் உள. தொல்பொருளியல், காசு இயல், தொல் தாவரஇயல், சரீர மற்றும் கலாசார மனித இனவியல். மொழியியல் என்பவற்றை இத்தகைய துணையியல்களாகக் கூறுவதுண்டு. சிலர் இனவியலையும் இவற்றில் சேர்ப்பர். இயற்பியல், வேதியியல், மொழியியல் என்பவை தாமேயும் முக்கியமான விஞ்ஞான அறிவுத்துறைகள். வரலாறு என்னும் ஆதார அறிவுத்துறை ஒரு மானுடத்துறை (Humanist discipline); அதற்குத் துணையாக அமைபவை முற்றிலுமே ஓரளவு விஞ்ஞான முறைகளைப் பின்பற்றுபவை. தொல்பொருளியல் புவியைத் தோண்டிப் புதைந்துகிடக்கும் பண்டைய மனிதவாழ்க்கையைத் தோற்றும் சான்றுகளைப் புறப்படுத்தும் வழிமுறைகளையுடையது.

இதற்குத் தேவையான விஞ்ஞானமுறைகள் அத் துறைக்கு வகுக்கப்பட்டுள்ளன. பண்டைய நாகரிகங்களின் காலத்தை நிருணயிப்பதற்குத் தொல் தாவர வியலும் இயற்பியலும் பயன் படுகின்றன. சில இயற்பியல் பொறிகளைக் கொண்டு, வேதியியல் முறைகளை மேற்கொண்டு உலோகத்தாலான பொருள்கள் புதைந்து கிடக்குமிடங்களை நிருணயித்தல் கூடும். அன்றியும், கரிப் பொருள் கலந்த பண்டங்களின் வயதை 'கரித்தனிமம்–14' என்னும் சோதனை வாயிலாக நிருணயிக்கலாம். ஆதிகால வரலாற்றில் பல முடிவுகளைக் காண இத் துணையியல்கள் பயன் படுகின்றன. ஆனால், இவை தொடக்ககால வரலாற்றிற்கும் அதற்கும் முந்திய காலங்களுக்கும்தாம் பெரும்பாலும் பயன் படுபவை. காசுகளில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துகளை ஆய்தல் தொல்லெழுத்தியலின்பாற் படும். பண்டைக்காலக் காசுகள் எவ்வளவு எடை, மதிப்பு, எந்த விகிதத்தில் கலக்கப்பட்ட உலோ கங்களாலானது என்பவற்றை வேதியியல் உதவிகொண்டு காண லாம். மனித இனவியலார் மண்டை ஓடுகளைக்கொண்டு அவை எவ் வினத்தைச் சேர்ந்த மக்களுடையது என்பதைக் கூறுவர். மொழியும் எழுத்தும் தனிக் கலைகளாக வளர்ந்துள்ளன. மொழி யியலும் தொல்லெழுத்தியலும் வரலாற்றுளர் காணும் முடிவு களுக்குத் துணைபுரிகின்றன. ஆதலால் வரலாறு பல துணை இயல் களின் உதவியைக்கொண்டு செயலாற்றுகின்றது. ஆனால், இக் காரணத்தால் இத் துணை இயல்களில் எஃதொன்றும் வரலாற்றிற் குச் சமம் என்று கருதிவிடக்கூடாது. ஒரு வீடுகட்டும் பொறியிய லர்க்கு, மேஸ்திரி, கூலியாள்கள் போன்றவர்கள் எங்ஙனம் உதவு கின்றார்களோ அவ்வாறே இத் துணையியல்கள் வரலாற்றிற்கு உதவுகின்றன. வரலாற்றுளர் வரலாற்றுப் பெரும் பிரச்சினை களில் ஈடுபடுவர்; தத்துவங்களை ஆராய்வர். அன்றியும் மேற் கூறிய துணை இயல்களை வரலாற்றுளர் அறிந்திருத்தல் வேண்டும் என்னும் நியதி இன்று. உதாரணமாக, வானவியல் உதவி கொண்டு சில பண்டைய நாள்களை நிருணயிக்க வேண்டிய நிலைகள் ஏற்படுவதுண்டு; அதற்காக வரலாற்றுளர் வான இயலராகவும் இருத்தல் வேண்டும் என்று ஒருவரும் கூறார். இக் கருத்தினைக் கார் (Carr) என்னும் அறிஞர் தமது 'வரலாறு என்பது யாது?' (What is History) என்னும் நூலில் விரிவாகக் கூறியுள்ளார்.

## (iii) வரலாற்றை மாற்றிவரைதல்

அவ்வப்போது வரலாற்றை மாற்றி எழுத வேண்டும் என்னும் கூக்குரல் எழும்புவதுண்டு. இதற்குப் பல காரணங்கள் இருக்க லாம், இவற்றில் சில நியாயமானவையாகவும் சில முறை

கேடானவையாயும் உள்ளன: (1) நாளடைவில் ஆய்வு முறைகள் (methods) மாறிவருகின்றன. முறையியல் வளராத காலத்தில் இயற்றப்பெற்ற நூல்களையும் அவை ஆயும் பொருள்களையும் நவீனகால முறையியல் அளவைகொண்டு மறு ஆய்வு நடத்த வேண்டும் என்று விழைதல் நியாயமான ஏற்றுக்கொள்ளத்தக்க விழைவேயாம்; (2) அன்றியும் முற்காலத்தில் கிடைக்காத புதுச் சான்றுகள் இப்பொழுது கிடைத்திருப்பின் அவற்றின் துணை கொண்டு வரலாற்றைப் புதுப்பிக்க வேண்டிவரும்; (3) இஃதன்றி யும் ஒவ்வொரு வரலாற்றுளனும் தனது சொந்தக் கருத்துகளை ஏற்றி எந்த வரலாற்றுப் பிரச்சினையையும் புதியதொரு கோணத் திலிருந்து ஆய்ந்து முடிவுகளைக் காணலாம். இதற்கு யாதொரு தடையுமின்று. இது வரலாற்றை 'மாற்றி' யமைப்பதாகாது; வரலாற்றிற்குப் புதுப் பொருண்மை காண்டல் என்னும் அளவினதே.

ஈதிவ்வாறுக, அரசியல் நிலைமைகள் மாறுவதன் காரணமாக ஒரு நாட்டின் வரலாற்றைப் புது நிலைகளிலிருந்து காணவேண்டும் என்னும் அவாப் பிறத்தல் இயல்பே. இந்தியா ஆங்கிலேயர் ஆட்சியில் இருந்த காலத்தில் பேரரசு கோணத்திலிருந்து வின்ஸன்ட் ஸ்மித் போன்ற ஆசிரியர்கள் நூலியற்றினர் எனல் ஒரு மரபு; இதனை மாற்றித் தேசியக் கோணத்திலிருந்து இந்திய வரலாற்றை மாற்றி எழுதவேண்டும் என்று விழைதலில் தவறு ஒன்றுமில்லை. ஆனல், இதனை அவ்வாறு வெளிப்படையாகக் கூறிவிடுதல் நன்று. ஒவ்வொரு வகை ஆசிரியரும் தங்கள் நோக்குக் கோணமும் கூற்றும் முடிவும் மட்டும் சரியானது, பிறர் கூறுபவை தவறுடையவை என்று கூறுதல் ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று. வரலாறு உண்மைகாண்டற்குப் பயன்படவேண்டுமே யன்றி, பிரசாரத்திற்குப் பயன்படக்கூடாது. எந்த உயர்ந்த குறிக்கோளுக்காகவும் எந்த வரலாற்றுளனும் அறிவை அடகு வைத்தல் கூடாது என்பது நியாயமான நோக்கங்களைக் கொண்ட வர்கள் ஏற்றுக்கொண்டது. ஆனல் ஏதோ ஒரு கொள்கைக்காகத் தனது வரலாற்றுக்கருத்துகளை மாற்றிக்கொள்ளுதல் எவ்வளவு ஏற்புடையது என்பது அக்கொள்கையின் சிறப்பைப் பொறுத்திருக்கும்.

வரலாற்றை மாற்றி எழுதும் முயற்சி சில சமயங்களில் வரலாற்றைப் புனைந்து எழுதுவதால் வரலாற்றையே மாற்றி யமைத்துவிடமுடியும் என்று எளிதில் நம்புகிறவர்களும் உளர்.

வரலாற்றுச் சான்றுகளை மறைக்கவும் அழிக்கவும்கூட இத்தகையோர் முற்படுவர். இவர்கள் வரலாற்றுத் துறைக் குற்றவாளிகள். சோவியத் ருஷ்யாவில் ஸ்டாலின் காலச் சாதனைகளை முற்றிலும் மறைத்துப் புது முறை வரலாறு இயற்ற இக் காலத்தார் முற்பட்டிருப்பது வரலாற்றை மறைக்கச் செய்யப்பட்டுள்ள பல பெரிய முயற்சிகளில் ஒன்றாகும். இறுதியில் இம் முயற்சிகள் பயன் படா. வரலாறு இம் முயற்சிகளையும் கண்டுபிடித்து உண்மையைக் கூறும். மேற் கூறிய சிறந்த காரணங்களுக்காக வரலாற்றை மாற்றி எழுத மேற்கொள்ளும் முயற்சிகள் வரவேற்கத்தக்கவை; பிற கண்டிக்கத் தக்கவை.

# 5. வரலாறு விஞ்ஞானமா? கலையா?

இவ் விவாதம் சென்ற ஒரு நூற்றுண்டுக் காலமாக வரலாற்றுளரிடையே மலிந்து வந்துள்ளது. வரலாற்றினைக் கலையுருவில் வடிக்கவேண்டும், விஞ்ஞானக் கட்டுரைகளைப் போல இயற்ற வேண்டும், அதன் உண்மையை அணியின்றிக் கூறவேண்டுமா? அன்றி அவ் வுண்மையை எடுத்துரைக்கும்போது அதனை அழகிய இலக்கிய நடையில் வழங்கவேண்டுமா? என்னும் விவாதம், ஹெரடோடஸ் 'பாரசீகப் போர்களின் வரலாறு' என்னும் நூலை இயற்றிய காலத்திலிருந்தே வரலாற்றுளர்கள் கவனத்தை ஈர்த்து வந்துள்ளது. ஆயினும், இந் நூற்றுண்டுத் தொடக்கக்காலத்தில் ஜே.பி. பியூரி என்னும் ஆங்கிலேய வரலாற்றுளர் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் ஆற்றிய தொடக்க உரையில் சில கருத்துகளை வெளியிட்டார். அப்போதிலிருந்து இவ் விவாதம் சற்றுக் கார சாரமாகியுள்ளது. அவர் கூறியதாவது; 'குற்றங் களைந்து குணம் மிகுவிக்கும் பணியில் வரலாற்று மாணவர்களைப் பயிற்றுவிக்க வேண்டுமாயின் நினைவிலிருத்தவேண்டுவது யாதெனில், அவ் வரலாறு வருஞ் சில நாள்களுக்குமட்டும் பயன்தரும் முயற்சி என்று எண்ணுமல், வரலாறு இலக்கியத்திற்கும் தத்துவ விசாரத்திற்கும் வேண்டிய கச்சாப்பொருள்களை அளிக்கவல்லதாயினும் அதுதானே ஒரு விஞ்ஞான அறிவியல்—மிகுதியுமின்று குறைவுமின்று— என்பதை நினைவுகூரவேண்டும்' என்பதே. இக் கூற்றின் இறுதிப் பகுதியை மட்டும் வைத்துக்கொண்டுதான் வரலாற்றின் தன்மையைப்பற்றிய விவாதம் நடைபெறுகின்றது.

19ஆம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் ஜெர்மனியில் பெரிய வரலாற்றுளர் என்று புகழோடு விளங்கிய லியோபால்டுவான் ராங்கே (1795-1886) என்பவர் வரலாற்றின் தன்மையைப் பற்றிக் கூறவேண்டிவந்தபோது, 'அதன் அலுவல் பழைமையை நிருணயிப்பதன்று; எதிர்கால நன்மையை முன்னிட்டு இக் காலத்தார்க்கு அறிவுரை வழங்குவதன்று; ஆனுல் நடந்ததை நடந்தவாறு உள்ளபடி கூறுவதுதான்' என்றார். 'நடந்ததை நடந்தவாறு உள்ளபடி' என்னும் சொற்கள் அவர் காலத்திற்குப்பிறகு வேத வாக்காகக் கொள்ளப்பட்டது, அவரது கொள்கைகளை மேற்கொண்ட வரலாற்றுளர்களால். ராங்கே 'விஞ்ஞானமுறை

வரலாறு வரைவியலின் தந்தை' என்று புகழப்பெற்ருர். இவரது புகழ் முதலில் ஐரோப்பாக்கண்டத்தில் பரவிப் பிறகு இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் பரவலாயிற்று. ஜெர்மானியருடைய தத்துவங்கள் கெதே (Goethe) யிலிருந்து காண்ட் (Kant), ஹெகல் (Hegel) வாயிலாக மார்க்ஸ் (Marx) வரை—முதலில் இங்கிலாந்தில் பரவின வாயினும், ராங்கே முதலியோருடைய வரலாற்றுத் தத்துவக் கருத்துகளும் உடனடியாக இங்கிலாந்திற்புகுந்து சிலரால் ஏற்றுக்கொள்ளப்பட்டன. அக் கொள்கைகளின் செல்வாக்கில் அகப்பட்டுக் கொண்ட பியூரியும் மேற்கூறியவாறு உரைத்தார். அவரைத் தொடர்ந்து ஸீலி என்னும் வரலாற்ருளரும் அதே கருத்துகளைத் தெரிவித்தார். இவற்றை மறுத்தார் பலருளர். அவர்களில் மிகச் சிறந்தவர் ஜி. எம். டிரெவிலியன் என்பார் ('இங்கிலாந்து வரலாறு' இயற்றிய மெக்காலே பிரபுவின் மருமான் மகன்).

உண்மையில் இவ் விவாதத்தின் தன்மையைப் புரிந்துகொள்ள வேண்டுமாயின்' 'விஞ்ஞானம்' என்ருல் என்ன? கலை என்பது யாது? என்னும் கேள்விகளுக்கு விடை காணவேண்டும். விஞ்ஞானம் என்னும் சொல் ஆங்கிலத்தில் (பொதுவாக இலத்தீன் செல்வாக்கிற்குட்பட்ட ஐரோப்பிய மொழிகளில்) 'ஸயன்ஸ்' (Science) எனப்படும். 'ஸயன்ஸ்' என்னும் சொல் விஞ்ஞானம் என்னும் சொல் குறிப்பதையே குறிக்கின்றது. விஞ்ஞானம் என்னும் சொல் அறிவு அல்லது ஞானம் என்பதோடு தொடர்புடையது போல ஸயன்ஸ் என்பதும் ஞானத்தோடு தொடர்புடையதுதான். ஆயினும், ஆங்கில மொழி பேசும் நாடுகளில் இயற்பியல், வேதியியல், உயிரியல் போன்ற அறிவியல் துறைகளை மட்டும் குறிப்பது என்னும் மொழிமரபு ஏற்பட்டுள்ளது. ஆனல், ஐரோப்பாக் கண்டத்திலுள்ள நாட்டவர்கள் ஸயன்ஸ் என்னும் அதே சொல்லைப் பொதுவாகத் தருக்க விதிகட்குட்பட்டு இயங்கும் எல்லா அறிவியல் துறைகளையும் குறிக்கும் மரபு இருந்துவருகிறது. அவ் வகையில்தான் ஜெர்மானியர் முதலியோர் வரலாற்றையும் 'ஸயன்ஸ்' (விஞ்ஞானம்) என்கின்றனர். உண்மையில் வரலாறும் தருக்க விதிகட்குட்பட்டு இயங்கும் ஓர் அறிவியல்துறை யாதலின் அங்ஙனம் கூறுதல் தவருகாது. ஆயினும் ஆங்கிலம் பேசும் நாட்டினர் 'ஸயன்ஸ்' என்பதை ஒரு குறுகிய பொருளில் பயன் படுத்துவதால், அப் பொருளில்கூட வரலாறு விஞ்ஞானமாகுமா என்பதுதான் ஈண்டு எடுத்துக்கொண்ட பிரச்சினை.

இதுமட்டுமன்று; தற்காலத்தில் சிலர் 'உண்மையிலேயே வரலாற்றுத் துறையையும் ஒரு விஞ்ஞானத் துறையாகக் கருதி

அதற்கேற்ப அதனை வரைதல் வேண்டும்; வளர்த்தல் வேண்டும்; ஆய்வுமுறைகளை நடத்தல் வேண்டும்; எடுத்துக்கூறும் முறைகளை மேற்கொள்ள வேண்டும்' என்றெல்லாம் கூறுவர்.

விஞ்ஞானத்திற்கும் வரலாற்றிற்கும் உள்ள ஒற்றுமை, வேற்றுமைகளை யுணர்ந்தால், வரலாறு என்பது விஞ்ஞானமா ஒரு கலையா என்னும் வினுவிற்கு விடைகாண்டல் எளிது.

1. விஞ்ஞானம் பழைமையையும் இக் காலத்து நிகழ்வனவற்றையும்பற்றிமட்டும் ஆராய்வதன்று. அது எக் காலத்திற்கும் பொதுவான இயற்கை விதிகளைக் காண்டற்கு விழைவது; முயல்வது. வரலாறு அங்ஙனமின்றிப் பழங்காலத்தில் நிகழ்ந்தவற்றை அறியமுயல்வது.

2. இதனுற் பெறப்படுவது யாதெனில் விஞ்ஞானம் ஐம்புலன்களால் உணரப்படும், சோதனைக்கு ஆளாகக் கூடிய பொருள்களைப்பற்றி ஆராய்வது, இயற்பியல் பஞ்சபூதங்களால் ஆக்கப்பட்டுள்ள பொருள்களையும் அவற்றின் தன்மைகளையும் ஆய்வது, வேதியியல் அல்லது இரசாயன சாத்திரம் என்பது தாதுப் பொருள்கள், அமிலங்கள் முதலியவற்றையும் அவற்றது தன்மையையும் ஆய்வது. உயிரியல் மனிதனை உணர்ச்சியுள்ள, வாழும், சிந்தனை செய்யும் ஒரு ஜீவனுகக் கருதாமல், நரம்பு, தசை, இரத்தம், எலும்பு முதலியவற்றுல் பிணைக்கப்பட்ட ஓர் உயர்வகை விலங்காகக் கருதி ஆயும். நிலவியல் கல்லையும் மண்ணையும், பூமிக்குக் கீழிருக்கும் பிற உயிரில்லாத ஜடப்பொருள்களைப்பற்றியும் ஆராயும். தாவரவியல் (உயிருள்ள) தாவரங்களை ஆராய்ந்தால் அவை ஓரறிவுயிராதலின் மனிதனைப்போல் இயங்கா. விலங்கியலை ஆய்வார்கூட ஐயறிவுவரையுள்ள விலங்கினை ஆராய்வாரேயன்றி ஆறறிவு படைத்த மனிதனுடைய தன்மைகளையும் செயற்பாடுகளையும் ஆராயமாட்டார்கள். கணிதம் எப்பொருளின் தன்மையையும் ஆராயாது தருக்கசாத்திரம் போல் ஓர் அளவை நூலாகமட்டும் பயன்படும்; இயங்கும். ஆதலால் அதனை ஒரு கருவிநூல் எனலாம். கணிதம் காட்சிப் பொருள்களின் அளவை நூலாயின், தருக்கம் மானதக் கருத்துகளின் அளவை நூல். ஆதலால் கணிதமும் தருக்கமும் அளவைக் கருவிநூல்க ளாகவும், இயற்பியல் முதலிய அறிவுத் துறைகள் உயிரில்லாத அல்லது மனிதனைப் போற் செயற்படாத பொருள்களை ஆயும் நூல்களாகவும் கருதப்படும்.

ஆனுல் வரலாறு பொருளாதரம், சமுதாயவியல், அரசியல் முதலிய இயல்களைப் போலவும் அவற்றைவிட ஓரளவு மிகுதியாகவும் மனிதன் மனிதனுகச் செயற்படும் நிலையில் அவனை ஆய்

கின்றது. தனிமனிதன் செயற்பாடுகள், அவன் சமூகச் சூழ்நிலை யில் ஆற்றும் செயல்கள் என்பவற்றை அது ஆயும்.

3. ஆதலால் விஞ்ஞானி ஆய்வுக்கூடத்தில் தன்னுற் கட்டுப் படுத்தப்பட்ட குறுகிய சூழ்நிலையில் தனது ஆய்வுகளை நடத்த முடியும். வரலாற்றுளன் அங்ஙனம் செய்ய முடியாது. இதற்குக் காரணம் அவரவர் ஆய்விற்கு எடுத்துக்கொண்ட பொருள்களின் தன்மை வேறுபாடே. உயிரில்லாத பொருள்களையோ, தன்னிச்சை யாகச் சோதனையைத் தடுக்கும் அல்லது எதிர்க்கும் திறமையுள்ள பொருள்களையோ வைத்து ஆய்வு நடத்துதற்கும் எந்த ஆய்வின் போக்கையும் முடிவையும் தன் விருப்பத்தாலேயே மாற்றக் கூடிய திறமையும் தன்மையும் உள்ள மனிதனை வைத்து ஆய்வு நடத்துதற்கும் உள்ள வேறுபாடு மிகுந்ததே. இவ் வேறுபாடு விஞ்ஞானத்திற்கும் வரலாற்றிற்கும் உள்ள அடிப்படைத் தன்மை வேறுபாட்டினைக் குறிக்கும்.

4. விஞ்ஞான ஆய்வுகள் விஞ்ஞானியின் கண்ணெதிரில் அவன் கட்டுப்பாட்டிலுள்ள கருவிகளைக்கொண்டு நடத்தப் பெறுவன. வரலாறு அத்தகைய சோதனைகளை நடத்தமுடியாது. விஞ்ஞானிகளின் சோதனை முறைகளில் ஒரு முக்கியமான அமிசம் யாதெனில், அச் சோதனைகளைத் திரும்பத்திரும்ப நடத்தமுடியும். வரலாற்றில் ஒரு முறை நிகழ்ந்தது நிகழ்ந்தேவிட்டதாதலின், அதைத் திரும்ப நிகழவைக்க முடியாதாதலின் விஞ்ஞானத்திற்கும் வரலாற்றிற்கும் உள்ள வேறுபாடு தெற்றென விளங்கும்.

5. விஞ்ஞானம் தனித்தனி நிகழ்ச்சிகளைத் திரும்பத்திரும்ப நிகழவைத்து அவை நிகழும் ஆற்றினைக் கவனித்து அவ் வகை நிகழ்ச்சிகள் யாவற்றையும் உளப்படுத்தும் பொது விதிகள் யாவேனும் உளவா என்று ஆராயும், வரலாறு அத்தகைய விதிகள் இருப்பதாகக் கருதாது; ஆதலின் அந்த நோக்கத்தோடு வரலாறு நிகழ்ச்சிகளைக் கருதாது. ஒவ்வொரு நிகழ்ச்சியும் தனித்தன்மை யுள்ள நிகழ்ச்சியே. இவற்றையெல்லாம் பிணைக்கும் விதியொன்று இருப்பதாக வரலாற்றுளர் ஒத்துக்கொள்ளமாட்டார்.

6. விஞ்ஞானம் இன்று ஒரு சோதனைமூலம் கண்ட பொது விதி எல்லாக் காலத்திற்கும் பொருந்தும் என்று கொள்கிறது. அக் கொள்கைதான் விஞ்ஞானத்திற்குப் பொருள் தருகின்றது; பயன்படவைக்கின்றது. வரலாறு இத்தகைய ஒரு கொள்கையை மேற்கொள்ள முடியாது. இறந்தகால நிகழ்ச்சியை வைத்து நிகழ் காலத்தைப்பற்றி அறுதியாகக் கூறுவதோ எதிர்காலத்தைப்பற்றிச் சோதிடம் கூறுவதோ வரலாற்றின் நோக்கமன்று; தொழிலன்று; ஏனெனில், அது இயலாது.

7. வரலாறு (மற்றும் சமூகவியல், பொருளாதாரம் முதலிய மானுட இயல்கள்) என்பது மனிதனுடைய செயற்பாடுகளை மனிதன் ஆராயும் ஒருவகை அறிவியல் ஆய்வு. விஞ்ஞானம் அவ்வாறன்று. இவ் வேறுபாடு மிகவும் முக்கியமானது. வரலாற்றில் சொந்தக் கருத்துகளும் உணர்ச்சிவயப்படும் தன்மையுமுள்ள மனிதகுலத்தைப்பற்றி அதே தன்மையுள்ள இன்னொரு மனிதன் ஆராய்கின்ருன்; ஆதலால் அத்தகைய ஆய்வில் அகநிலை நோக்கு மிகுதல் இயல்பே. விஞ்ஞானத்தில் புறநிலை நோக்கு மிகுந்து காண்பதற்குக் காரணமும் அதுவே.

8. விஞ்ஞானி தனது ஆய்வுகளில் முடிவுகளைப்பற்றி ஒழுக்க நெறித் தீர்மானங்களைக் (moral judgement) கூற மாட்டான். வரலாற்ருளனுல் அவ்வாறு செய்யாதிருக்கமுடியாது.

9. விஞ்ஞானி ஜடப்பொருள்களை ஆய்ந்து பொது விதிகளைக் கூறுவதால் விஞ்ஞான மொழி என்று சூத்திர ரூபமாகச் சின்னங்கள் (symbles) வாயிலாக குழூஉக்குறிகளை (Technical language) அமைத்துக்கொண்டு விஞ்ஞான விதிகளை எடுத்துரைக்கும் மரபதனை ஏற்படுத்திக்கொண்டுள்ளான். ஆனுல், வரலாற்ருளன் இத்தகைய குழூஉக்குறிகளையோ சின்னங்களையோ பயன்படுத்தாமல் இலக்கிய மொழியையே பயன்படுத்துவான். அம்மொழி இலக்கிய மரபினையொட்டி இருத்தலையும் சிறந்த வரலாற்ருளர் விரும்புவர்.

10. டில்தி (Dilthey) என்னும் ஜெர்மானிய வரலாற்ருளர் வரலாற்றிற்கும் விஞ்ஞானத்திற்கும் உள்ள வேறுபாட்டினைக் கீழ்க்காணுமாறு குறிப்பிட்டார்: 'வரலாறு காணும் உண்மை ஒன்றுதான் இறுதி உண்மை; விஞ்ஞானி காண்பனவெல்லாம் தோற்றங்கள்; ஏனெனில், மனிதன் மனத்தில் எழும் எண்ணங்களே பிற தோற்றங்களுக்கு ஏற்புடைமையை (validity) அளிக்கின்றன. பிற தோற்றங்கள் விஞ்ஞானி காண்பன. ஆனுல், வரலாற்ருளன் காண்பன தோற்றங்களைப்பற்றிய எண்ணங்கள் அல்ல; அவை எண்ணங்களாகவே உருவாகிக் கருத்தளவிலேயே ஏற்புடைமை பெறுகின்றன. ஆதலால் பிந்தியவை இயல்பாகவே ஏற்புடைமை உடையன. முந்தியவை—அதாவது விஞ்ஞானி காணும், கூறும் தோற்றங்கள்—எண்ணங்கள் வாயிலாகமட்டும் ஏற்புடைமை பெறுவன. இதனின்றும் வரலாற்றுக் கருத்துகள்தாம் உண்மையில் ஏற்புடைமை உடையன என்பது போதரும்' என்ருர்.

மேற்கூறிய பத்துவித வேறுபாடுகள் முக்கியமானவையாயிருப்பினும், இன்னென்றும் அடிப்படையான வேறுபாடு என

லாம். அதாவது விஞ்ஞான ஆய்வுகளில், ஆராயப்படும் பொருளைப்பற்றிய திறனாய்வு நடைபெறுவதில்லை. உதாரணமாக, மேலிருந்து ஒரு கல்லை உருட்டிவிட்டால், அது கீழே விழுகிறது. அது தன்னிச்சையாக அவ்வாறு செய்வதில்லை. புவியீர்ப்பினால் அவ் வீழ்ச்சி நிகழ்கின்றது. ஆகவே, அவ்வாறு உருட்டிவிடப் பட்ட கல் விழுதல் என்னும் தொழிலைச் செய்யுங்கால், நியாய மாகவும், ஒழுக்கநெறிப்படியும் நடந்து கொள்கிறதா என்று நாம் ஆராய்வதில்லை. ஆனால் நெப்போலியன்—புரட்சியின் புதல்வன் என்று தன்னைக் கூறிக்கொண்டவன்—ஃபிரெஞ்சுப் பேரரசனாக முடிசூட்டிக் கொண்டது முறையா என்னும் ஆராய்ச்சி வரலாற் றாளனுக்கு உண்டு. விஞ்ஞானிக்குத் தான் ஆயும் பொருள்களின் இயற்கைச் செயற்பாடுகளைத் தவிரப் பிறிதொன்றையும் பொருட் படுத்தி ஆராயும் அலுவலின்று. வரலாற்றாளனுக்கு அவ் வலுவலே மிகுதியாக உண்டு. இதனை இவ் விருவகை அறிவுத்துறைகளுக்கு மிடையேயுள்ள ஆதார வேறுபாடு என்று கூறலாம்.

'வரலாற்றிற்கும் விஞ்ஞானத்திற்கும் உள்ள போலி ஒற்றுமை களைக்கொண்டு அவற்றிடையே ஒப்புமை கூறுவது தவறு' என்றார் ஜாப்ரே பாரக்லா என்னும் அறிஞர். 'எல்லா ஒப்புமைகளையும் கூறி முடித்த பின்பும் விஞ்ஞானம் வேறு, வரலாறு வேறு என்னும் உண்மை எஞ்சி நிற்கும்' என்றார் ஏ. எல். ரவுஸ் என்பார். 'நன்கு வரையறுக்கப்பட்ட விதிகளைக் கூறுவது விஞ்ஞானம்; நாள் தோறும் மாறிமாறி வரும் நோக்குகளை வைத்துப் பேசுவது வரலாறு' என்றார் பர்க்கார்ட் என்னும் வரலாற்றாளர்.

ஆர். ஜி. காலிங்வுட் என்னும் ஆங்கிலேய வரலாற்றாளர் விஞ்ஞானத்திற்கும் வரலாற்றிற்கும் இடையே உள்ள வேறு பாட்டினை உதாரணமுகத்துடன் விளக்கினார்: 'ஒரு லிட்மஸ் காயிதத்தை நெருப்பில் காட்டினால் அது நீலநிறம் பெறுகிறது என்னும் நிகழ்ச்சியைச் சோதனைக்கூடத்தில் எத்துணை முறை வேண்டுமாயினும் திரும்பத்திரும்பச் சோதித்துக் காணலாம். ஆகையால், லிட்மஸ் காயிதத்தை நெருப்பில் காட்டினால் என்ன நடக்கும் என்னும் கேள்விக்கு விடை வார்த்தைகளில் கூறாமலே சோதனை வாயிலாகக் காட்சிக்குப் புலனாகுமாறு செய்யலாம். மற்று, வரலாற்றில் ஒரு நிகழ்ச்சியை எடுத்துப் பார்ப்போம்: ஜூலியஸ் சீஸரை புருடஸ் ஏன் கொன்றனன்? என்னும் வினாவிற்கு விஞ்ஞானியைப் போல் விடையளிக்க முடியாது. இதற்கு முக்கிய மான காரணம், சீஸர், புருட்டஸ் முதலியோர் இப்பொழுது இல்லை. அவர்கள் திரும்ப வரலாற்றில் வரவும் மாட்டார்கள். அவர்களை நேரில் அழைத்துச் சோதிக்கவும் முடியாது. 'சீசர் கொலை' என்னும் வரலாற்று நிகழ்ச்சி ஒருமுறை நிகழ்ந்து

விட்டது; மறுபடி எப்போதுமே நிகழாது. ஆதலால் விஞ்ஞான முறையில் விடை இதற்குக் காண்டல் இயலாது. 'வரலாற்றுளன் தனது விடைகளுக்கு நூல்நிலையம், சுவடிகள், காசுகள், கல் வெட்டுகள், பண்டைய பத்திரகள், குறிப்புகள் என்பவற்றை நம்பி யுள்ளான். ஆனால், விஞ்ஞானி ஆய்வுக்கூடத்தையும், விஞ்ஞானக் கருவிகளையும், எந்திரங்களையும் நம்பியுள்ளான். இதனால் விஞ்ஞானியின் ஆய்வுமுறை காட்சியையும் (observation), அளவையையும் (measurement) கண்டுணர்ந்த செய்திகளின் தொகை (data) யினின்றும் பெறப்படும் பொதுமையையும் (generalisation) அடக்கியது.

ஜி. எம். டிரெவிலியன் என்னும் புகழ்பெற்ற வரலாற்றுளர் இப் பொருள்பற்றிக் கூறுவதாவது: 'விஞ்ஞானம் சாதிக்க விரும்புவது இருவகைக் காரியங்கள்: ஒன்று மக்களுக்குப் பயன் படக்கூடிய, அதாவது வாழ்க்கை வசதியை மிகுவிக்கும் முறையில் பயன்படக்கூடிய, மின்சாரம், விரைவுச்செலவு, மிகுதியாகவும் விரைவாகவும் நல்ல முறையிலும் நுகர்பண்டங்களை ஆக்குதல் முதலிய செயற்பாடுகள்; இரண்டாவது இயற்கையின் நடை முறையில் மறைந்துகிடக்கும் ஆதார விதிகளைக் காணல். இவ் விரண்டு காரியங்களையும் வரலாறு செய்யமுடியாது. ஆதலால், வரலாறு செய்ய முயலும் காரியங்களை விஞ்ஞானம் என்றோ விஞ்ஞான முறைகளைக் கொண்டு செய்யப்படுவனவாகவோ கருதுதல் கூடாது' என்பதாம்.

இவ்வாறு மேற்கூறப்பட்ட முக்கியமான வேறுபாடு தவிர, விஞ்ஞானம் சோதனை மூலமும் காட்சி முறையை மேற்கொண்டும் எடுத்துக்கொண்ட கோட்பாட்டினை ஐயத்திற்கு இடமின்றி, எதிர் மாறு கூறமுடியாத முறையில் நிரூபித்துவிட முடியும்; உண்மையில் அவ்வாறு நிரூபிக்காவிட்டால் அது விஞ்ஞானம் ஆகாது. ஆனால், வரலாறு மேற்கொள்ளும் எந்த நிலையையும் வரலாற்றுளன் தன் சொந்த அனுபவத்தில் கண்டறிந்ததாகக் கூற முடியாமலிருக்க லாம்; மிகப் பெரும்பான்மை அவ்வாறு அமைகின்றன. வரலாற் றுளன் பிறப்பதற்கு முன் நிகழ்ந்த எந்த நிகழ்ச்சியைப்பற்றி அவன் முடிவு கண்டாலும் அது காட்சிக்குப் புறம்பானதாகவே இருக்கும்; தன் சொந்த அனுபவத்தின்பாற்படாத பிற சான்று களைக்கொண்டே அவற்றை நிரூபிக்க வேண்டியிருக்கும். ஆதலால் விஞ்ஞான நிரூபணத்திற்கும் வரலாற்று நிரூபணத் திற்கும் மிகுந்த வேறுபாடு உண்டு என்பது எளிதில் விளங்கும். இந் நிலையில் வரலாற்றுளனை நீதிமன்றத்தில் வழக்கு விசாரிக்கும் நீதிபதிக்கு ஒப்பிடுவதுண்டு. நீதிபதி தாம் நேரில் கண்டறியாத விஷயங்களைப்பற்றி வழக்கறிஞர்கள் வாதாடுவதைக் கேட்டு; இரு

தரப்பார் கூற்றையும் சரிபார்த்துத் தம் சொந்த அறிவைக் கொண்டு தருக்கமுறையைக் கையாண்டு முடிவு காண்பார்; உண்மையில் ஒரு வழக்கில் ஏதேனும் ஒருவிதத்தில் தொடர்பு கொண்டவர்கள் ஒருவரும் அவ் வழக்கினை விசாரிக்கக் கூடாது என்பது ஒரு நல்ல மரபு. இதனை வரலாற்றாளன் விஷயத்திலும் மேற்கொள்ளலாம். அவ்வாறு தொடர்புடையவர்கள் வரலாறு எழுதுவதில் குற்றமில்லை; ஆனால் அவர்கள் எழுதுவதை ஒரு வழக்கோடு தொடர்புடையோர் நீதிமன்றத்தில் தரும் வாக்கு மூலங்களுக்குச் சமமாகக் கொள்ளவேண்டும்.

வரலாற்றில் பொது விதிகள் காண முடியா என்பதைச் சற்று விளக்கவேண்டும். புரட்சி விதி, போர் விதி, அமைதிவிதி, பன்னாட்டு உறவுவிதி என்றெல்லாம் விதிகள் கிடையா. ஏனெனில், சில நிலைமைகள் ஒன்றுசேர்ந்தால், உதாரணமாக, பெரும்பாலோர் பட்டினி, அரசாங்கத்தின் கொடுங்கோன்மை, நிருவாகத்தின் திறமையின்மை என்னும் நிலைமைகள் ஒன்றுசேர்ந்தால் அந்த நாட்டில் புரட்சியுண்டாகும் என்பது ஃபிரெஞ்சுப் புரட்சி, ருஷ்யப் புரட்சி என்பவற்றைக் கண்டவர்கள் காட்டும் முடிவு. ஆனால், இந் நிலைமைகள் எல்லாம் அந் நாடுகளிலிருந்ததைவிடப் பன்மடங்கு அதிகமாகவும் இருக்கக்கூடிய சில நாடுகளில் புரட்சி ஏற்படுவதில்லை. பட்டினியால் புரட்சியும் ஏற்படலாம்; பட்டினிச்சாவும் ஏற்படலாம். ஆதலால் எந்தக் காரணங்களையும் கொண்டு, 'இந்தச் சூழ்நிலையில் இந்த விளைவு ஏற்படுகின்றது. அதே போன்ற சூழ்நிலையில் அதே போன்ற விளைவுகள் ஏற்படும்' என்று கூற முடியாது. விலையைக் கட்டுப்படுத்தினால் சில சமயம் விலைவாசி இறங்கும்; அவ்வாறன்றிக் கறுப்புச் சந்தை ஏற்பட்டுவிடுவதுமுண்டு. ஆகையால், வரலாற்றில் பொதுவிதி காண்பது இயலாத தொன்றாகும். பொருளாதாரத்திற் போல, வரலாற்றிலும் சில பொதுப் போக்குகள் (trends) இருக்கலாமேயொழிய உறுதியான விதிகள் இரா. நல்ல காசுகளும் கள்ளக் காசுகளும் ஒரேசமயத்தில் சந்தையில் உலவினால் முந்தியது மறைந்து போகும்; பிந்தியது விரைவாக உலவும் எனினும் பொருளாதாரக் கொள்கைக்குப் பொதுப் போக்கேயன்றி அது ஒரு விஞ்ஞான விதியாகாது. இவ்வாறே வரலாற்றிலும் காண்க.

இனி வரலாறு முற்றிலும் கலையாகாது; முற்றிலும் விஞ்ஞானமும் ஆகாது. வரலாற்றாராய்ச்சியில் இரண்டு குறிகள் உண்டு. முதற்பகுதி வரலாறு வரைதற்குத் தேவையான விவரங்களைச் சேகரித்தல். இவை பெரும்பாலும் எடுத்துக்கொண்ட கோட்பாட்டோடு தொடர்புடையனவா யிருக்கும். இவற்றைத் தேடிச் சேகரிக்கும் வேலையில் தொல்பொருளியல் முதலிய விஞ்ஞான

முறையை மேற்கொண்டு இயங்கும் இயல்கள் பயன்படுகின்றன. சேகரித்த விவரங்களை வரிசைப்படுத்த வேண்டும். பிறகு அவற்றைத் தருக்க முறையில் அலசி ஆராய்ந்து ஏற்றுக்கொள்ளத் தக்கவை ஏற்றுக்கொள்ளத் தகாதவை என்பதை இனங்கண்டறிந்து முந்தியதை ஏற்றுக்கொண்டு பிந்தியதை நீக்கிவிட்டு, எஞ்சியதை வைத்து வரலாறு வரைதல் வேண்டும். இதுவரை வரலாற்றுராய்ச்சியில் மேற்கொள்ளப்படும் முறையியல், விஞ்ஞான முறையியல் போன்றதேயாம்; முக்கியமாகப் புறநோக்கு ஒன்றைக் கொண்டே இச் செயல்கள் அனைத்தும் மேற்கொள்ளப்படும். இரண்டாவது நிலையில், விவரங்களைப் பாகுபடுத்தி ஒழுங்குசெய்த பிறகு அச் செய்தித் தொகுதிக்கு ஒரு பொருள் ஒரே (meaning) தரவேண்டும், அதற்கு நோக்குவிளக்கம் (Interputation) தருதலும் வேண்டும். இந் நிலையில்தான் வரலாற்றுளனது அகநோக்கு இப் பொருண்மையிலும் நோக்கு-விளக்கத்திலும் இரண்டறக் கலந்துவிடும். அப்போது வரலாறு விஞ்ஞான ஆய்வு நிலையிலிருந்து மாறிக் கலைநிலைக்கு வரும். உதாரணமாக ஒரு கட்டடம் எழுப்ப வேண்டுமாயின் அதன் அடிக்கற்கள் பூமியில் புதைந்து கண்ணுக்குத் தெரியாதவாறு கிடக்குமாறு அமைக்கப்படும்; அது அஸ்திவாரமெனப்படும். அது வலுவாயிருத்தல் வேண்டும்; பல மாடிகளைக்கொண்ட வீட்டின் பளுவைத் தாங்கக்கூடியதா யிருக்கவேண்டும். ஆனால் அது அழகாக இருக்கிறதா என்று ஒருவரும் பார்க்கமாட்டார்கள். அதற்கு மேல் எழுப்பப்படும் வீடு வசித்தற்குப் பயனுள்ளதாயிருத்தலோடு அழகுடையதாயு மிருக்க வேண்டும் என்று விரும்புவர். அது போலவே வரலாற்றுராய்ச்சியில் விஞ்ஞானப்பகுதி ஆய்வு கட்புலனாகாமல் மறைந்துகிடப்பதோடு அடுத்த நிலையில் நடக்கவிருக்கும் வரலாற்று நோக்கு விளக்கத்தை ஆதரித்துத் தாங்கும் முறையிலும் அமையவேண்டும். அதன் பிறகு மேற்கொள்ளப்படும் வரலாற்று வரைவில் இனிய இலக்கிய நடையில் சுவை மிக்க வகையில் கற்பார் களிக்கும் முறையில் பொருண்மைகளும் நோக்குவிளக்கங்களும் தரப்படுதல் வேண்டும். இவ்வாறு கருதுங்கால் வரலாறு முதற் பகுதியில் விஞ்ஞானப் பண்போடும், பிற்பகுதியில் கலைப்பண்போடும் விளங்கும் என்று கூறலாம். முற்பகுதி வரலாற்றுளனது முறையியலோடு (methodology) தொடர்புடையது. இரண்டாம் பகுதியே அவ் வரலாறு கற்பாரோடு தொடர்புடைத்து. இதுகாறும் கூறியவற்றால் வரலாற்றினை முற்றிலும் விஞ்ஞானம் என்றோ முற்றிலும் கலை என்றோ கூறிவிட முடியாது என்பது உண்மையாயினும், அது விஞ்ஞானத்தைவிட அதிகமாகக் கலைப் பண்பினையுடையது என்று கொள்ளுதலே சிறப்புடையது என்க.

# 6. வரலாற்றின் புறநோக்குத் தன்மை

வரலாற்றுளர்க்குப் புறநோக்குச் சாத்தியமா என்னும் விஞ வரலாறு வரைதல் என்னும் பயிற்சி தொடங்கிய காலத்திலிருந்து கேட்கப்பட்டுவருவது. வரலாற்றை எழுதுபவர் ஒவ்வொருவரும் தாம் புறநோக்கோடு எழுதுவதாகத்தான் கருதுவார், கூறுவார். அவர்கள், 'உண்மை என்னவென்றுல்'... என்று தொடங்குவது வழக்கம். ஆனல் அவர்கள் சொந்த அகநோக்குக் கருத்தைத் தான் 'உண்மை' என்று கூறுவார்கள். இக் காரணத்தாலேயே தான் ஒரே விவரங்களே வைத்துக்கொண்டு வெவ்வேறு முடிவு களேக் காண்பதும், ஒவ்வொருவரும் தத்தம் முடிவுதான் சரியானது என்று கூறுவதும் நிகழ்கின்றன. இவ் வேறுபாட்டிற்குக் காரணம் அக நோக்கு.

'அகநோக்கு' என்பது ஒரு மனிதன் உள்ளத்தில் தன்னியல் பாகத் தோன்றும் கருத்துகள், பாவனேகள், எழுச்சிகள், விருப்பு வெறுப்புகள் முதலியனவாம். இவை எழுதற்குக் காரணம் ஒவ் வொருவர் உள்ளத்திலும் தொடக்கத்திலிருந்தே (அனுபவம், பாரம்பரியம், சூழ்நிலே, கல்வி ஆகிய காரணங்களால்) ஏற்பட்டு வளர்ந்துவரும் நோக்கத் தொகுதி. இவை ஒருவருக்கே சொந்த மாகியிருக்கும் காரணத்தால் அகநோக்கு எனப்பட்டன. தமிழ் இலக்கியத்தில் அகம், புறம் என்று இருவகையாகப் பொருளினேப் பிரித்தல் போல், ஈண்டும் காணவேண்டும். இவ்வாறு ஒருவர் அகத்தே கருத்துகளாகத் தோன்றி அவரின் செய்கைகளின் தன்மையை நிருணயிப்பன ஒருபாலாக, வெளித்தோற்றமான புறப்பொருள்களேப்பற்றிய, வேறுபாட்டிற்கு இடமளிக்காத, கருத்துகளும் உளவாம். ஒரு மனேயை, அல்லது ஒரு மரத்தைக் கண்டு ஒருவன் இது மனே, இது மரம் என்று கூறுவானுகில் அதனே எல்லோரும் ஏற்றுக்கொள்வர்; ஏனெனில், இப் புறப்பொருள்கள் எல்லோருடைய மனத்திலும் தம்மைப்பற்றி ஒரே உருவத்தைத் தோற்றுவிக்கின்றன. இத் தோற்றங்களால் உந்தப்பெறும் கருத்துகள் பலவாதல் கூடும். அவை அகநோக்குகளாம். இம் மனேயில் பேயுள்ளது, இம் மரத்தில் பிசாசு அண்டியுள்ளது என்று ஒருவன் கூறுவானுகில் அவை மனே, மரம் என்னும் அளவிற்குக் கருத்து வேறுபாடிராதாயினும் அவ்விடங்களில் பேயும் பிசாசும்

அண்டியிருக்கும் கருத்துச் சிலரால் ஏற்றுக்கொள்ளப்பட்டுப் பிறரால் மறுக்கப்படும். கருத்து வேறுபாட்டிற்கே இடமில்லாத பொருள்களைப்பற்றிப் புறநோக்கும், அப் பொருள்களைப்பற்றி மதிப்பீடுகளாகப் பிறக்கும் கருத்துகள் அகநோக்கும் ஆம். கி.பி. 1875ஆம் ஆண்டில் வாட்டர்லூ சண்டையிடப்பட்டது; அதில் தோற்றவர் ஃபிரன்சுப் பேரரசரான நெப்போலியன்; வென்றவர் வெலிங்டன் தலைமையில் ஆங்கிலேயரும், புளுசெர் தலைமையில் ஜெர்மானியரும். இதுவரையில் எல்லோரும் ஒப்புக்கொள்வர்—புறநோக்குவாயிலாக இவ் வெற்றி தோல்விகளுக்குக் காரணம் ஆராயப்புகுந்தால், அகநோக்குத் தோன்றும். ஃபிரெஞ்சு வரலாற்றுளர்களாயின், உதாரணமாக விக்டர் ஹியூகோ, தோல்வியின் காரணங்களை வேறுவிதமாகக் கூறுவதோடு தோற்றவனையே வென்றவனைவிடச் சிறந்தவனாகவும் உரைப்பார். இவ்வாறு நாட்டுப்பற்றுக் காரணமாக, ஒரே நிகழ்ச்சியைப்பற்றி மாறுபடக் கருத்துக் கூறுதல் நிகழும். இவையெல்லாம் அகநோக்கின்பாற்படும். இந் நிலையில் புறநோக்கிற்கும் அகநோக்கிற்கும் உள்ள வேறுபாடு வெளிப்படையாகவே யாவரும் அறிவர். ஆனால், அகநோக்கு வேண்டப்படாதது, புறநோக்கு விரும்பத்தக்கது என்னும் பொதுக் கூற்று ஓரளவு உண்மையேயாயினும், அது எவ்வளவு உண்மை என்பதையும் காணவேண்டும்.

வரலாற்றுளன் வரலாறு வரையும்போது உண்மையை—நடந்ததை வரையவேண்டும். வரலாற்றுளனது விருப்பு வெறுப்புகள் அவனது கூற்றுகளைப் பாதிக்கக்கூடாது. இது மிகவும் நேர்மையான, தேவையான கூற்று என்றே மேற் போக்காகப் பார்ப்பவர்களுக்குக் காணப்படும். இது எவ்வாறு மேற்போக்கான நோக்கு என்பதை மேலே காண்போம். ஈண்டு அக நோக்கில் வேண்டப்படுவதும் உண்டு, வேண்டப்படாததும் உண்டு. வேண்டப்படாத அகநோக்கு இருவகையில் தோன்றும். முதலாவதாக, வரலாற்று நிகழ்ச்சிகளின் தன்மையைப் புரிந்து கொள்ளாமையில் வரலாற்றுளன் குழப்பத்திற் காளாகலாம்; இரண்டாவதாக, தான் அறிந்ததை வேண்டுமென்றே திரித்துக் கூறுதலால் பிழைகள் நேரலாம். முந்தியவை அறியாமையாலும், பிந்தியவை கெட்ட எண்ணத்தாலும் நிகழ்பவை; ஆதலால், முந்தியவகைப் பிழைகளைத் திருத்தலாம், அவற்றை ஓரளவு மன்னிக்கலாம்; ஆனால் பிந்தியவை திருத்தினாலும் திருந்ாதவை, மன்னிக்கமுடியாதவை. முதல்வகைக் குற்றங்கள் திறமையின்மையால் ஏற்படுபவை; இரண்டாம் வகைக் குற்றங்கள் வரலாற்றுளனுடைய ஒழுக்கக்கேட்டால் நிகழ்பவை. வரலாற்றைத் தவறாக எழுதுதல், மூலச்சான்றுகளை முறையே கற்காமையால் ஏற்படும்,

அல்லது மூலச்சான்றுகளைத் தாமே படிக்காமையாலும், பிறர் எழுதியவற்றைச் சரி பார்க்காமலே மேற்கொள்ளலாலும் தோன்றும். ஆனால், வரலாற்றை எழுதுபவன் சில ஆதாரக்கோட் பாடுகளை மனத்திற்கொண்டு அக் கோட்பாடுகளுக்கேற்ப விவரங் களைத் திருத்திக் கூறுவானாயின் அவன் வரலாற்றை வரைபவனா கான்; சில கொள்கைகளுக்கு விளம்பரம் செய்பவனாகவே அவனைக் கருத வேண்டும். இவ்வாறு கொள்கைகள் வரலாற்றைத் திருத் தற்குப் பல காரணங்கள் உள. சமயம், நாட்டுப்பற்று, அரசியல் கொள்கை ஈடுபாடு, கோட்பாட்டுப்பற்று என்பவை இவற்றில் முக்கியமானவை. சமயப்பற்று இடைக்காலத்தில் மிகுந்திருந்தது. இந்தியாபோன்ற சில நாடுகளில் சமயத்தின் உந்துதலால் வரலாற்றிற்குப் பதிலாகப் புராணங்கள் போன்ற இலக்கியங்கள் இயற்றப்பட்டன.

இவ்வகை இலக்கியங்களை வரலாறு என்பாரும் உளர். ஆனால், இவற்றில் சில சமய உண்மைகளை நிலைநாட்டுதற்காக வரலாற்று நிகழ்ச்சிகளைத் திரித்துக் கூறுதலில் தவறு ஒன்றுமில்லை என்று கருதப்பட்டது. அரசியல் கொள்கைகள், நாட்டுப்பற்று என்பவையும் இதே போல வரலாற்றை உருக்குலைக்கவும் சீரழிக்க வும் தூண்டும் உந்துதல்களாம். நாட்டுப்பற்று ஒரு வகையில் வரலாற்றைப் பாதிக்குமாயின், அதற்கு நேர்மாறான பேரரசு ஆர்வங்கள் வேறுவிதமாக வரலாற்றைத் திரிக்கும். இவை யிரண்டுமே ஏற்றுக்கொள்ள முடியாத நிலைகள். கோட்பாட்டுப் பற்றுதல் என்பது ஆதாரக் கோட்பாடுகள், (ideologies) மதிப்பீடு களில் வேறுபாடுகள் (value variations) என்பவை காரணமாக வரலாற்றுக் கோணங்களை மாற்றுதலும், கருத்துகளை மாற்றிக் கூறுதலும் நிகழும். உதாரணமாக, வரலாற்றின் அடிவாரத்தில் சில முன்வரைவுகள், (patterns) ஆதியிலேயே தீர்மானிக்கப்பட்ட சில நிர்ணயங்கள் (determinism) இருப்பதாக நினைப்பவர்கள், வர லாறு நிருணயத் தன்மையால் கட்டுண்டு இயங்குகின்றது என்று கருதுபவர்கள். அவர்கள் அவ் வரைவுகளை நிலைநிறுத்தும்பொருட்டு வரலாற்றினைத் தமக்குத் தக்கவாறு வரைவர். அதாவது எந்த வரைவதனை நிறுவ முயன்றாலும் அதற்கேற்ற வரலாற்று விவரங்களைச் சேகரித்தல் எளிதேயாம். ஒரு வரைவிற்கேற்ற விவரங்களைச் சேர்த்தல் என்பது அதற்கு உதவாத விவரங்களை நீக்கிவிடுதல் என்றே பொருள்படும். இது அகநோக்கிற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

ஆனால், இவ் விவாதத்தில் ஆதாரப் பிரச்சினை யாதெனில் அகநோக்கு என்பதை முற்றிலும் ஒழித்துவிட முடியுமா,

ஒழித்துவிட முடியுமாயினும் அவ்வாறு செய்தல் விரும்பத்தக்கதா? என்பதேயாம். அகநோக்கினை முற்றிலும் ஒரு வரலாற்றாளன் களைந்துகொள்ள முடியாது என்பதற்குக் காரணம் அகம் அல்லது மனப்பான்மை அல்லது உள்ளப்பாங்கு என்பதனை ஒழித்தால்தான் அகநோக்கினை நீக்கமுடியும். எந்த வரலாற்றாளனும், எந்த மனிதனும், தன் உள்ளம், தன் மனப்பான்மை என்பவற்றைக் களைந்துவிட முடியாது. அஃதாயின் அகநோக்கும் இருந்தே தீரும். ஒரு மனிதனின் எண்ணங்கள், கருத்துத் தொகுதி, விருப்பு வெறுப்புகள் என்பவையெல்லாம் அவன் பிறப்பிலிருந்தே, சில சமயங்களில் பாரம்பரியமாகவேகூட ஏற்பட்டுவிடும்; அதன் பிறகு சூழ்நிலையும் கல்வியும் அவனது உள்ளப்பான்மையைப் பாதிக்கும். இவ்வாறாயின் ஒரு பிரச்சினையை எடுத்து ஒரு வரலாற்றாளன் ஆராயும் முன்பே அப் பிரச்சினையைப்பற்றியோ அதனோடு தொடர்புடைய பிற கருத்துகளைப்பற்றியோ அவன் சில எண்ணங்களைக் கொண்டிருப்பான். இக் கருத்துகள் அவன் அப் பிரச்சினையை எவ்வாறு அணுகுகிறான் என்பதைப் பெரும்பாலும் நிருணயிக்கும். இந் நிலையில் அகநோக்கினை முற்றிலும் ஒழித்தல் என்பது இயலாததாம்.

இனி அகநோக்கினை ஒழித்தல் வேண்டுமா என்பது அடுத்த பிரச்சினை. சிலர் வரலாற்றாளன் தனது சொந்தக் கருத்துகளைச் சொந்தக் கோணத்திலிருந்து வரலாற்றினை வரையாவிட்டால், அவ் வரலாற்றிற்குத் தனித்தன்மை யிராது; பொருண்மை யிராது என்று கருதுவர். இக் கருத்தில் உண்மையுண்டு: வேறுபட்ட பொருண்மைகளைக் கூறாவிட்டால், வரலாறு வளராது, அதிற் சுவை யிராது, இறுதியுண்மை புலப்படாது. ஆயினும் அகநோக்கு என்பதை வெறுப்புணர்ச்சியாகவோ, ஒருபாற் கோடலாகவோ திரித்துவிடாமல் விழிப்பாகப் பார்த்துக்கொள்ள வேண்டும். அக நோக்கு முதிர்ந்தால் ஒருபாற் கோடலாகிவிடும். ஆனால் அக நோக்கினைக் கட்டுப்படுத்தி உண்மையான, நியாயமான கருத்து வேறுபாட்டோடு நிறுத்திக்கொண்டால், அதனால் தவறு இராது; அதனை மறுக்கவேண்டிய தேவையில்லை. இதிலிருந்து இரு முடிவு களுக்கு வரலாம்.

1. ஓரளவிற்கு அகநோக்கினை ஒருவராலும் களைந்துகொள்ள முடியாது.

2. ஒழுங்காகப் பயன்படுத்தப்பட்டால் அகநோக்கு வர லாற்றுப் பொதுநோக்கைப் பாதியாது. இதற்கு உதாரணம் காண்டல் எளிது. ஒரு கட்டி சுயத்தை ஓரிடத்தில் வைத்து

எடை போட்டால், தராசில் தவறு இல்லையேல், நிறுப்பவர் யாவர்க்கும் எடை ஒன்றாகவே காட்டும். ஆனால் வரலாற்றாளர்க்கு எந்த வரலாற்று நிகழ்ச்சியைப்பற்றி ஆய்ந்தாலும் ஒரே முடிவு தோன்றும் என்று கூறமுடியாது. எத்தனை வரலாற்றாளர்கள் ஆராய்கின்றார்களோ அத்தனை முடிவுகள் தோன்றலாம். இவ் வேறுபாடு அகநோக்கு வரலாற்றிற்கு உண்டு; விஞ்ஞானத்தில் இல்லை என்பதால் ஏற்படுகின்றது.

இனி அகநோக்கு ஆசிரியருக்கு ஆசிரியர் வேறுபட்டுக் கொண்டே இருந்தால் எந்த வரலாற்று நிகழ்ச்சியைப்பற்றியும் உறுதியாகவும் இறுதியாகவும் ஒன்றுமே கூறமுடியாது என்னும் நிலைமை ஏற்படும். இது விரும்பத்தக்கதா? இதை இன்னொரு கோணத்திலிருந்தும் காணலாம். அகநோக்கிற்கும் (Subjectivity) வரலாற்றுச் சார்பியத்திற்கும் (Historical Relativism) ஓரளவு தொடர்பு காணப்படும். அகநோக்கு என்பது ஒருவன் தன் உள்ளப்பான்மையால் தன் மதிப்பீட்டு மரபால் ஒரு நிகழ்ச்சிக்கு ஒரு பொருண்மையளித்தற்கு வேண்டிய உந்துதல். உதாரணமாக, சமயத்தின் பெயரால் போரிடலாம், நாடுகளை வெல்லலாம், மக்களை வலுக்கட்டாயமாக மதம் மாற்றலாம் என்னும் கருத்து கள் சிலருக்குத் தீவிரமாக இருக்கலாம்; வேறு சிலருக்கு, எத்த கைய உயரிய காரணத்திற்காகவும் இத்தகைய காரியங்களைச் செய்தல் தவறு என்று தோன்றும். இக் கருத்து வேறுபாடு அக நோக்கால் எழுகின்றது. மற்று, வரலாற்றுச் சார்பியம் எவ்வாறு நிகழ்கின்றது என்று கண்டால், இடைக்காலத்தில் சமயப்பற்று மக்களிடையே மிகுந்து சமயவெறி என்று கூறக்கூடிய அளவிற்கு வளர்ந்திருந்தமையால், இந் நிகழ்ச்சியினைத் தவறான ஒழுக்கக் கேடான நிகழ்ச்சிகள் என்று பலர் நினைக்கவில்லை. ஆனால். தற் காலத்தில் ஒழுக்கநிலைகளைப் பற்றிக்கூட மதிப்பீடுகள் மிகவும் வேறுபடுதலால் இப் பிரச்சினையைப் பற்றிய கருத்து அடிப்படை யாக மாறியிருக்கும். ஒவ்வொரு காலத்தில், ஒவ்வொரு நாட்டில் நிலவிவரக் கூடிய ஒழுக்கவியல் கருத்துகள் மாறிவருதலால் அவற் றைப்பற்றி ஆராயும் வரலாற்றாளரும் எந்தக் காலத்தையும் எந்த நாட்டையும்பற்றி ஆராய்கின்றாரோ அவற்றைப் பொறுத்து அக் கருத்துகளை ஏற்றுக்கொண்டு அவற்றிற்கேற்பத்தான் முடிவுகாண வேண்டும் என்பதாகும். இது வரலாற்றுச் சார்பியமாம். ஆனால், சார்பியத்திற்குச் சில எல்லைகள் உள என்பதை நினைவிற் கோடல் வேண்டும். இப் பிரச்சினை ஒன்பதாம் அத்தியாயத்தில் விரிவாக விளக்கப்படும்.

ஆயினும் சார்பியத்தோடு ஒட்டிய சில கருத்துகளை ஈண்டுக் காண்போம். எல்லாக் கருத்துகளும், அதாவது ஒழுக்கவியற்

(ethical) கருத்துகள் உட்பட, சார்பியற் கருத்துகள் என்று கொண்டால், நன்று, நீதி, பாவம் புண்ணியம், நன்றி, நன்றி கோறல், துறக்கம் நரகம் என்னும் கருத்துகள் யாவையும் பொருளற்றவையாகிவிடும். எந்தக் குற்றமும் செய்யலாம், அதனைத் தற்காக்கலாம். இவ்வாறு ஓர் உலகம் இருக்குமாயின் அது அஞ்சத்தக்கதாயிருக்கும். வரலாற்றாளன் ஹிட்லர், செங்கிஸ்கான் முதலியவர்களுக்கும் இயேசு, காந்தி போன்றவர்களுக்கும் இடையே வேறுபாடு காணமாட்டான். நன்று தீது என்பவற்றிடையே மனச்சாட்சி உள்ளவன் எவனும் வேறுபாடு காண்பான். நடுவுநிலைமை என்பது நல்லதைக் கெட்டதாகவும் கெட்டதை நல்லதாகவும் பிறழக் காண்பது என்று பொருளாகாது. ஆக்டன் பிரபு ஒவ்வொரு வரலாற்றாளனுக்கும் நல்லதை நல்லது என்றும் தீமையைத் தீமை என்றும் விருப்பு வெறுப்பு அச்சம் ஆர்வம் என்பன வின்றிக்கூறும் கடமையுண்டு என்றார்.

மைக்கேல் ஒக் ஷாட் என்னும் வரலாற்றாளர், 'வரலாற்றாளர் உள்ளதை உள்ளபடி சொல்ல வேண்டும் என்பதை நாம் ஏற்றுக் கொள்வதால், அவருக்கு வரலாற்று நிகழ்ச்சி, செய்கை என்பவற்றைப்பற்றி என்ன கருத்துத் தோன்றுகின்றதோ அதையும் வெளிப்படையாகக் கூற வேண்டிய கடமை உண்டு. வரலாற்றில் காணப்படும் கொடுங்கோலைக் கொடுங்கோல் என்று கூற வேண்டும், அதனைக் கண்டிக்க வேண்டும்; நன்மையை விளக்கிக் கூறிப் போற்றவேண்டும்' என்று கூறினார். இக் கருத்தை மறுத்து ஆல்பிரடு காபன் என்னும் ஆய்வாளர், 1792 செப்டம்பர் மாதத்தில் ஃபிரெஞ்சுப் புரட்சிக்காரர்கள் சிறையிற் கிடந்த எண்ணிறந்த கைதிகளையும் மன்னர்—கட்சிக்காரர்களையும் கொலை செய்த நிகழ்ச்சியைச் 'செப்டம்பர்ப் படுகொலை' என்று கூறவேண்டும் என்று பேராசிரியர் ஒக்ஷாட் கூறுகின்றார்; ஆனால் படுகொலைகள் தீய செயல்கள் என்று கூறவேண்டிய தேவை வரலாற்றாளனுக்கு இல்லை: ஏனெனில் அவ்வாறு கூறத் தொடங்கினால், வரலாற்று நிகழ்ச்சிகள் யாவற்றையும் ஒழுக்கவியல் கண்கொண்டு விமர்சிக்க வேண்டியது வரலாற்றாளன் கடமை என்று ஒப்புக்கொண்டதாகும்; ஆனால், அவற்கு அத்தகைய கடமையாதொன்றும் இல்லை; உண்மையில் ஒழுக்கவியல் விமரிசனங்களைச் செய்யாமலிருக்கும் கடமை வரலாற்றாளர்க்கு உண்டு' என்று கூறினார்.

உண்மையில் காபன் கருத்தை ஒருவரும் ஏற்றுக்கொள்ள முடியாது. தீது என்று நன்றாக, வெளிப்படையாகத் தெரிந்ததையும் தீது என்று கூறுவதில் தவறு ஒன்றும் இருக்கமுடியாது. காலம், இடம், கருத்து என்பவை எவ்வளவு வேறுபட்டாலும்

எக் காலத்திற்கும் பொதுவான, நல்லவர்கள் யாவராலும் வேறு பாடின்றி ஏற்றுக்கொள்ளப்பட்ட சில கருத்துகள் உள; அவற்றை மறக்கவோ, மறுக்கவோ, புறக்கணிக்கவோ கூடாது. அப்படிச் செய்வது புறநிலை நோக்காகாது. ஒரு நீதிபதி வாதி பிரதிவாதி என்னும் இருவரையும் சரிநிகராகப் பாவிக்கவேண்டும் என்று இருவரையும் விடுதலை செய்வது அல்லது இருவருக்கும் தண்டனை யளிப்பது என்று தொடங்கினால் அந் நிலைமை எவ்வளவு ஏற்றுக் கொள்ள முடியாதோ அவ்வளவு காபன் போன்றோர் கருத்து களையும் ஏற்றுக்கொள்ள முடியாது; மற்று, ஒரு வழக்கில் இரு தரப்பார் வாதங்களையும் கேட்டுவிட்டுத் தீர்ப்புச்சொல்ல மறுக்கும் நீதிபதியின் நிலைமையில்தான் காபன் போற்றும் வர லாற்றாளர் இருப்பார்.

இத்தகைய நிலைமையிலிருந்து ஓரளவு தப்புவதற்கு மாக்ஸ் வீலர் என்னும் ஜெர்மானியச் சமுதாய இயலர் ஓர் இடைநிலை (via medium) காண்கிறார். வரலாற்றில் ஒழுக்கவியல் நெறியை மேற்கொண்டு கண்டிக்க அல்லது போற்றக்கூடியது நிலையங்கள் முதலியனவையே யன்றிக் குறிப்பாக எந்த மனிதரையும் குறிப் பிட்டுக் குறைகூறக் கூடாது, புகழவும் கூடாது என்பது அவர் கூற்று. ஆனால் நீரோ (ரோமானியப் பேரரசன்) போன்றவர் களுடைய தீச்செயல்களை எந்த நிலையத்தின்மீது ஏற்றிக் கூறுவது? டாயின் பி போன்ற வரலாற்றாளர்கள் தீதுகண்டவிடத்து மறை வின்றிக் கண்டிக்கும் இயல்பினர். ஆனால் நௌல்ஸ், குரோச்சே போன்ற வரலாற்றுத் தத்துவர்கள் இக் கருத்தினின்றும் வேறுபடு கின்றனர். 'வரலாற்றாளர் ஒரு நீதிபதியல்லர்; கொலைத் தண்டனை அளிக்கும் நீதிபதியாக அவரைச் சிறிதும் கருதமுடியாது' என்றார் நௌல்ஸ். 'இவர் நல்லர், இவர் தீயர்; இந் நிகழ்ச்சி நன்று, இந் நிகழ்ச்சி தீது என்று கூறித் திரியும் வரலாற்றாளர்க்குச் சிறிதும் வரலாற்றுணர்ச்சியில்லை என்று கூறவேண்டும்' என்றார் குரோச்சே.

ஆனால் இக் கருத்துகளை எதிர்த்து ஆக்டன்பிரபு கூறியதை மேற்கொள்ளுதலே சிறந்தது. 'ஒழுக்கம் என்பது ஆளுக்குஆள், நாளுக்குநாள் மாறுவதன்று; இதனை எடுத்துக்கூறுதல் வரலாற் றாளன் கடமை' என்றார் அவர். உலக நாகரிகத்தின் சாதனையை வரலாறு கற்பார்க்கு எடுத்துக்கூறும் கடமையை மேற்கொண்ட வரலாற்றாளர்க்கு இவ் வேறுபாட்டினை உதாரணமுகத்தான் எடுத்துக்கூறுதலும் ஒருகடமையே.

அகநிலைக் கூற்றுகள் மிக அதிகமாக ஏற்படுதற்கு வழி சமூக வரலாற்றில்தான் காணப்படும். இதனால் ஆதாரக்கோட்பாடு

களில் பெரும்பாலானவை சமூகத்தைவைத்து யாக்கப்பட்டுள்ளன. அரசியல் வரலாறுகளிலும் இவை காணப்படுதல் உண்மையே. ஒருவர், 'அமெரிக்க உள்நாட்டுப் போரைப்பற்றிய புறநிலை வாலாறு—தென்நாடுகள் கோணத்திலிருந்து எழுதப்பட்டது' என்று ஒரு வரலாற்றுநூல் எழுதியதாகக் கூறுவதுண்டு, இவ்வாறே இந்திய வரலாற்றையும் பல வரலாற்றுளர்கள் இந்திய தேசியக் கோணத்திலிருந்து இயற்றினுல்தான் புறநோக்கு அமையும் என்று கூறுவர். இவற்ருல் புறநோக்கைப்பற்றிய கருத்துகள்கூட அகநோக்காற் பாதிக்கப்படும் என்பது பெறப்படும். அரசியல் வரலாற்றில் ரோமானியவரலாற்றை இயற்றிய பொலிபியஸ் என்பார் மேற்கொண்ட முறை மிகவும் போற்றத் தக்கது. அவர்தாம் இயற்றிய வரலாற்று நூலில் ரோமானியர் களையும் கார்த்தஜினியர்களையும் நிகராகக் கருதித் தம் நாடு செய்த குற்றங்களையும் மறைக்காமல் கூறி, பகைவர்களுடைய தகுதியையும் சாதனையையும் வெளிப்படையாகப் போற்றியுள்ளமை வரலாற்றுளர் யாவர்க்கும் ஓர் உதாரணமாக விளங்கும்.

ஃபாரடே என்னும் ஆங்கிலேய விஞ்ஞானி, 'விஞ்ஞானி என்பவன் எதையும் கவனிக்கவேண்டும்; ஒன்றையும் எதிர்பார்க்கக் கூடாது' என்று அறிவுறுத்தினுர். வரலாற்றுளர்க்கும் 'இவ் வறிவுரை பொருந்தும். ஆனுல் அவர்கள் கவனிப்பதோடுகூட, கவனித்து அறிந்ததைப்பற்றி விமரிசனம் செய்யும் தொழிலையும் மேற்கொண்டவர்களாதலின், அகநிலை நோக்கு அவர்களால் தவிர்க்கப்படாததாம். ஆகவே, அகநிலைநோக்கு ஒழிக்கற்பால தன்று; சில எல்லைகளுக்குள் அடங்கிநிற்குமாறு கட்டுப்படுத்தப் பெறவேண்டியது. புறநிலை நோக்கு முற்றிலும் சாத்தியமாவ தன்று; ஆனுல் எவ்வளவு இயலுமோ அவ்வளவும் மேற்கொள்ள வேண்டியது.

# 7. வரலாற்றின் நிருணயத்தன்மை

வரலாற்றுப் போக்கு முற்றிலும் நிருணயிக்கப்பட்ட ஓர் இயக்கம் என்பதோர் கோட்பாடு உண்டு. இக் கோட்பாடு வரலாற்றுப் போக்கு முழுவதுமே, மொத்தமாகப் பார்க்குமிடத்து, முன் நிருணயிக்கப்பட்டதாகவும், அப் போக்கின் ஒவ்வொரு நிகழ்ச்சியும் பூரணமாக நிருணயிக்கப்பட்டதாகவும் கருதும். மனிதன் தனக்குச் சுதந்திரத் துணிவாற்றல் (free will) உண்டு என்று எண்ணிக்கொண்டிருந்தாலும், துணிதற்கும் பல சாத்தியக் கூறுகளில் தனக்கு வேண்டிய ஒன்றைத் தேர்ந்துகொள்ளுதற்கும் தனக்குத் திறமை உண்டு என்று கருதினாலும், முன் நிருணயிக்கப்பட்ட அல்லது விதிக்கப்பட்ட வழியேதான் நடந்துகொள்ள வேண்டிய கட்டாயம் அவனுக்கு ஏற்படுகிறது. ஆதலால், வரலாற்றின் நிருணயக் கோட்பாடு என்பது வரலாற்று நிகழ்ச்சிகளின் தன்மை, காலம் என்பவையெல்லாம் முன்கூட்டியே யாராலோ (எதனாலோ) நிர்மாணிக்கப்பட்டுவிட்டது என்பதை வற்புறுத்துவதோ மறுப்பதோ ஆகும். சில வரலாற்றுக் கொள்கையாளர்கள் முந்திய கொள்கையையும் (அதாவது நிருணயத் தன்மையை வற்புறுத்துவது) சிலர் பிந்தியதையும் (அதாவது அக் கொள்கையை மறுப்பது) மேற்கொள்வர். வேறு சிலர் இவ் விரு கோட்பாடுகளுக்கும் இடை நெறி யொன்றை மேற்கொள்வர். நிருணயக் கொள்கை முழுவதையும் 'இன்றியமையாமைக் கோட்பாடு' என்று ஒரு சொல்லில் அடக்கிவிடலாம். வரலாற்றில் இனி நடக்கப் போகும் செயல்களை முன்கூட்டியே கூறிவிடுதல் இயலாது; ஆனால் செயல்கள் நிகழ்ந்த பிறகு அவற்றிற்குக் காரணம் காண முயலலாம். ஒரு துப்பறியும் கதையிற் போல் முடிவு நமக்குத் தெரியாது; அது தெரிந்த பிறகு ஏன் அந்த முடிவு என்பதற்கான காரணங்களைப் புரிந்துகொள்ளலாம். 'விளக்கம் என்பது இறந்தகாலத்தைப் பற்றிய விமரிசனம்; முற்கூற்று என்பது இனி நடக்கப்போவதைக் கூறுவது. நிருணயத் தன்மையின் இன்றியமையாமை என்பது ஒரு விளக்கமேயன்றி முற்கூற்றன்று' என்பது இக் கொள்கைபற்றிய ஒரு கருத்து. ஆதலால் ஸ்கிரிவன் (Scriven) என்பார், 'எதிர்கால நிகழ்ச்சிகளிடையே தேர்ந்துகொள்ளும் சக்தி, இறந்தகால நிகழ்ச்சி

களுக்கு விளக்கம் அளித்தலோடு முரண்படாது' என்றார். தொடக்கம் இவ்வாறு அமையும் என்று கூறிவிட்டால் எதிர்காலம் இவ்வாறுதான் இருக்கும் என்று உறுதியாகக் கூறிவிட முடியுமா என்னும் பிரச்சினை வரலாற்றாளர்கள் கவனத்தை ஈர்த்து வந்துள்ளது. ஆதாம் ஏவாள் என்பாரின் சொந்த விவகாரத்தில் சைத்தான் குறுக்கிடாமலிருந்தால், அவர்களுடைய எதிர்காலம் எவ்வாறு அமைந்திருக்கும் என்று சமய ஆய்வாளர் கருதிப் பார்க்கலாம். டிரெவிலியன் என்னும் வரலாற்றாளர் 'வாட்டர்லூ சண்டையில் நெப்போலியன் வென்றிருந்தால்...' என்று வரலாற்றுக் கற்பனைக் கட்டுரையொன்றை இயற்றினார். இவ்வாறு கற்பனையாகப் பல வரலாற்றுப் பிரச்சினைகளை எண்ணிக்கொண்டு கட்டுரைகள் வரையலாம். ஆனால், அவை அவ்வவ் வாசிரியனுடைய வரலாற்று அறிவையும் கற்பனைத் திறனையும் காட்டுவனவே யன்றி வேறல்ல. முற்கூறுதல் என்பது வரலாற்றாளருடைய தொழிலன்று; அதில் நம்புவதும் அவர் தொழிலன்று என்றுகூடக் கூறலாம்.

வரலாற்று நிருணயத்தில் பொருளாதார நிருணயம் என்பது முக்கியமானது : அதாவது, வரலாற்று நிகழ்ச்சிகள் யாவையும் பொருளாதாரக் காரணங்களால் நிருணயிக்கப்படுகின்றன என்னும் தத்துவம். எங்கெல்ஸ் (Engels) என்னும் ஜெர்மானியத் தத்துவர்—இவர் காரல்மார்க்ஸ் என்பாரோடு நெருங்கியிருந்த பொருளாதார, வரலாற்றுத் தத்துவர்—பின்வருமாறு கூறுகிறார் : 'மிகமிகப் புராதன, வரலாற்றுத் தொடக்க காலங்களில் தவிர, பிற்காலங்களில் எல்லாம் வரலாறு வருக்கப் போரால் நிருணயிக்கப்பட்டது என்பதை யறிவோம்; சமுதாயத்தில் எப்போதும் ஒன்றோடொன்று போரிட்டுவரும் இவ் வருக்கங்கள் யாவையும் பொருளாதார உற்பத்தி முறைகளையும் அவற்றின் வேறுபாடுகளையும் பொறுத்தவை; அதாவது அவ்வக் காலத்துப் பொருளாதார நிலைமைகளைப் பொறுத்தவை. பொருளாதார அடிப்படையிலிருந்துதான், சமுதாயத்தின் பிற நிலையங்களும் அவற்றின் தன்மையும் செயற்பாடுகளும் பிறக்கின்றன. இப் பொருளாதாரத் தன்மை காலத்திற்குக் காலம் மாறுபடும் தகைய; அவை எவ்வாறு மாறுபடும் என்பதற்கோர் நிருணயத் தன்மையுண்டு. 'இதுதான் மார்க்ஸியர்கள் கூறும் பொருளாதார நிருணயத்தன்மை. இதன் முடிவு, அவர்களுக்கு, சோஷலிஸம் என்பது. நீதி, சமயம், ஒழுக்கமுறை, அரசியல் உறவுகள் என்பவையும், குடும்ப உறவுகள் முதலியவையும் கூடப் பொருளாதார நிலைமையால் பாதிக்கப்படுவன, உருவாக்கப்படுவன, நிருணயிக்கப்படுவன என்பது அவர்கள் கோட்பாடு.

மார்க்ஸியர்கள் 'நாம் வரலாறு என்று இப்பொழுது கூறுவது வரலாறு அன்று; வருக்க உணர்ச்சியின் பரிணாமமே வரலாறு; வருக்க உணர்ச்சியின் தோற்றமே வரலாற்றுணர்ச்சியின் தோற்றம்' என்பர். மார்க்ஸியர்கள், அதாவது மார்க்ஸ் (Marx) தொடங்கி அவரும் அவர் கருத்துகளை ஏற்றுக்கொள்வோரும், ஹேகல் (Hegel) என்பவருடைய 'விவாதக் கோட்பாட்டை' (Dialectics) மேற்கொண்டனர். 'விவாதக் கோட்பாடு' என்பது 'வாழ்க்கையில் (அதாவது வரலாற்றில்) 'நிறுவுகை' அல்லது 'கோள்' (Thesis) என்பதொன்றுண்டு; அது ஒரு 'கொள்கையை நிறுவுதல்' என்று பொருள்படும்; அதற்கு மாருக 'எதிர் நிறுவுகை' (எதிர்கோள்—antithesis), என்பதொன்று பிறக்கும்; 'எதிர் நிறுவுகை' 'நிறுவுகை'யின் உந்தலாலேயே பிறக்கும். இவ் விரண்டின் மோதலால் 'சம நிறுவுகை' 'இடைக்கோள்' (Synthesis) என்பது தோன்றும்; பிறகு இச் 'சமநிறுவுகை'யே ஒரு நிறுவுகை யாகி அது தன்னுடைய எதிர்நிறுவுகையைத் தோற்றுவிக்கும்; இவ் விரண்டின் மோதலால் புதியதொரு 'சம நிறுவுகை பிறக்கும்'— இவ்வாருகச் சங்கிலித்தொடர் போல் இது வளர்ந்து கொண்டேயிருக்கும்' என்பதேயாம்.

இக் கோட்பாட்டின்படி 'நிறுவுகை' எத்தன்மைத்து என்று தெரிந்துவிட்டால் 'எதிர்நிறுவுகை' எளிதில் புலப்படும்; இவற்றின் மோதல் விளைவு எத்தன்மைத்து என்பதும் அறியக் கூடியதே. ஆயின், வரலாறு இவ்வாறு அமையும் என்பதையும் ஒருவாருக ஊகிக்கலாம். வரலாற்ருளர்க்கு அது ஊக அளவில் நிற்குமாயினும், நிகழ்ச்சிகள் இவ்வாறுதான் நிகழவேண்டும் என்பது அவற்றின் இயல்பாலும் மோதலாலும் முன்பே நிருண யிக்கப்பட்டு விட்டன என்பது விவாதக் கோட்பாட்டின் தத்துவ மாம். மார்க்ஸியர்கள் வரலாறு என்பதற்குப் பதிலாக 'விவாதக் கோட்பாட்'டினை நிறுவவேண்டும் என்பர்; இது வரலாற்றிற்கே புதியதொரு விளக்கம் தருவதாகும். இப்போது இப் பிரச்சினையில் நமக்கு வேண்டுவது யாதெனில், மார்க்ஸியர்கள் நிருணயக் கோட்பாட்டுக்காரர்கள் என்பது.

கார்டினர் என்னும் வரலாற்றுத் தத்துவர் ஹேகல் நிருணயக் கோட்பாட்டிற்கும் மார்க்ஸியர்களின் நிருணயக் கோட்பாட்டிற் கும் இடையே உள்ள வேறுபாட்டினை விளக்கியுள்ளார். ஹேகல் சம்பந்தப்பட்டவரை நிருணயக் கோட்பாடு என்பது 'வரலாற்றில் தவிர்க்க முடியாதவாறு நிகழ்கின்றவை யாவை என்று உணர்தல். ஆனல், மார்க்ஸ் கூறும் நிருணயக் கோட்பாட்டில் 'இன்றியாமை யாததும் தவிர்க்கமுடியாததுமான பின்னிகழ்ச்சிகளை அறிந்து

ஏற்றுக்கொள்வது மட்டுமன்றி அவற்றின் நிகழ்ச்சியைத் துரிதப் படுத்தி நிகழவைத்தலும் மக்களுடைய கடமை' என்பதும் ஒரு பகுதியாம். இவ் வேறுபாடு இருப்பினும், நிருணயக் கொள்கை என்பது இருவர்க்கும் உடன்பாடு. ஹேகல் தத்துவ நிலையில் நின்று நிருணயக் கோட்பாட்டைக் கூறினர். மார்க்ஸ், எங் கெல்ஸ் என்போர் உலகியல், பொருளாதார நிலையில் நின்று அக் கோட்பாட்டினைக் கூறினர்.

நிருணயக் கோட்பாடு விஞ்ஞான ஆய்வுகளுக்கும் முடிவு களுக்கும் பொருந்துவதேயன்றி வரலாற்று ஆய்வு முறைக்குப் பொருந்தாது என்பார் காரல்பாப்பர் என்னும் தத்துவர். எதிர் காலப் போக்கினை நிருணயித்து முற்கூறுதல் விஞ்ஞானத்தின் தொழில், ஆனல் வரலாற்றின் தொழிலன்று; இத்தகைய முற் கூற்றினை 'வரலாற்றியம்' என்னும் பெயரால் பாப்பர் அறிந்தார். இப் பொருண்மையை அவர் விவரிக்கும் முறையை 'வரலாற் றியமும் வரலாற்றுச் சார்பியமும்' என்னும் அத்தியாயத்திற் காண்போம்.

ருஷ்ய அறிஞரான பிளகனேவ் (Plekhenov) என்பார் ஒரு சோஷலிஸ்ட். அவர் இயற்றிய 'வரலாற்றில் தனியாரின் செயல்' என்னும் கட்டுரையில் தனி ஒருவரின் விருப்பச்செயல் (Individual's will power) திறமையை ஏற்றுக்கொள்ள வேண்டுமாயினும், சமூக சக்திகள் (Social forces) இயங்குவதை மறுக்கமுடியாது' என்றார். அதாவது, அவர் கருத்துப்படி தனியார் தீர்மானங் களும் செயற்பாடுகளும் அவர் உள்ளத்திலிருந்தே உருவாவன வாயினும், அவற்றின் நிகழ்ச்சியைச் சமுதாயச் சக்திகள் நிருண யிக்கும் என்றார் பிளகனேவ். ஆனல், திறமை வாய்ந்த பெரி யோன் எவ்வாறு தோன்றுகிறான்? தொடக்கத்திலேயே பிறரினும் பெரியோனாக அவன் எப்படி விளங்குகிறான் என்னும் வினாவிற்கு பிளகனேவிடம் விடையில்லை. சமூக சக்திகள் பெரியோனை உருவாக்குகின்றன என்றுமட்டும் அவர் கூறுகின்றார்; அன்றியும், சமூக சக்திகளுக்கே நிருணயத் தன்மையுண்டாயினும் தனியார் முயற்சி நின்றுவிடுவதில்லை என்றும் கூறுகின்றார். ஆதலால் அவர் சுதந்திர விருப்பக் (Free will) கோட்பாட்டிற்கும் நிருணயக் கோட் பாட்டிற்கும் இடைப்பட்ட ஒரு கொள்கையை நிறுவுகின்றார். இதனை ஒருவகை இடைநிலைக் கோட்பாடு எனலாம்.

கான்ட் (Kant) என்னும் புகழ் பெற்ற ஜெர்மானியத் தத்துவர், 'நிரந்தரமான எப் பொருளும் சில பிரபஞ்ச விதிகளுக்கு உட்பட்டு இயங்குதல் போலத் தனிமனிதரின் உள்ளத்தில் எழும்

செயல் விருப்பங்களும் அத்தகைய விதிகட்கு உட்பட்டே இயங்கும்' என்ருர். 'இங்கிலாந்து நாட்டு நாகரிக வளர்ச்சி வரலாறு' என்னும் அரிய நூலை இயற்றிய பக்கிள் (Buckle) என்பார், 'நாம் எச் செய்கையை மேற்கொள்ளும்போதும் அச் செய்கைக்கு ஒரு செயலூக்கக் கருத்து (motive) இருந்தேதீரும்; இச் செயல் ஊக்கக் கருத்துகள் சில முன்னிகழ்ச்சிகளின் விளைவாகத் தோன்றுபவை: ஆதலால் எல்லா முன்னிகழ்ச்சிகளைப்பற்றியும் முற்றிலும் விரிவாக நாம் அறிந்துகொள்ள முடியுமாயின், எது எவ்வாறு எப்போது நிகழும் என்பதை ஐயந்திரிபின்றிக் கூறலாம்' என்று கூறினர். சமயவாதிகளுக்கு நிருணயக் கொள்கை என்பது கர்மா அல்லது ஊழ் என்று பொருள்படும். 'ஊழிற் பெருவலி யாவுள?' என்று வினவி, 'தான் முந்துறும்' என்று விடையளித்தார் வள்ளுவரும். இதனின்றும் சமயவாதிகளுக்கு வேருெரு கேள்வி பிறக்கும். அதாவது, ஊழிற் பெருவலி கடவுள் அல்லரா என்பது; ஊழையும் உப்பக்கம் காணும் தகுதியும் திறமையும் கடவுளுக்குக் கூட இல்லையா என்பது; அதாவது கடவுளுக்குக்கூடச் சுதந்திர விருப்பம் இல்லையா என்னும் கேள்வி முக்கியமானது. இதற்கு இருவகையான விடைகள் அளிப்பது உண்டு. அவை பெரும்பாலும் பிளகஞேவின் கொள்கையை ஒத்தவையாயிருக்கும். தவிர்க்க முடியாமை என்பது காரண காரியத் தொடர்பினுல் உண்டாவது. ஒரு காரணம் ஒரு காரியத்தைத்தான் நிகழ்விக்கும் என்ருல் காரணம் தோன்றியவுடனே அதற்கு உரிய காரியம் தவிர்க்க முடியாததாகி விடுகின்றது. காரண காரியத் தொடர்பு என்னும் சங்கிலியை இடையிலே அறுத்துவிடவேண்டுமாயின், கடவுளுடைய அருள் (எந்தக் காரணத்தாலும் கட்டுப்படாதது) வேண்டப்படும். கடவுளிலும் அவருடைய அருளிலும் நம்பிக்கையில்லாதவர்கள் காரண காரியத் தொடர்பு மாற்ற முடியாதது என்று கருதுவர். காரண காரியத் தொடர்பிலும் நம்பிக்கையின்றிக் கடவுளிலும் நம்பிக்கையின்றி, எதேச்சையிலும் மக்களுடைய சுதந்திர விருப்பத் திறமையிலும் நம்பிக்கை கொண்டவர்களும் உளர். இவர்கள் மூன்ருவது பிரிவினேச் சேர்ந்தவர்கள்.

இத்தாலிய வரலாற்ருளரான குரோச்சே (croce) என்பவர் காரணகாரியத்தொடர்பிற்கு வேருெரு விளக்கம் கூறுவார். 'முதலில் காரியங்கள் அல்லது நிகழ்ச்சிகளை யறிந்து சேர்; பிறகு அவற்றைச் சில காரணங்களைக்கொண்டு பிணை—அதாவது காரண காரியத் தொடர்புகளை வரலாற்ருளர்தாம் ஏற்படுத்துகிருர்; அவை இயல்பாக அமைந்துகிடக்கின்றன என்று கூறமுடியாது' என்பது அவருடைய விளக்கம். ஆயினும், இவ்வாறு ஒரு தொடர்பினை வரலாற்ருளர் ஏற்படுத்தினுலும்கூட அது பொருள்

நிறைந்ததாகவும் ஏற்றுக்கொள்ளத் தக்கதாகவும் இருத்தல் வேண்டும். குரோச்சே கூறுவார்: 'தனியன்களுக்குப் பொருள் இல்லை. அவற்றை யொன்றோடு ஒன்று பிணைத்து வரலாற்றாளர் பொருள் கற்பிப்பதால்தான் பொருண்மை (meaning) பிறக்கின்றது; அத் தனியன்கள் அர்த்தமுள்ளவையாகின்றன.' நிகழ்ச்சிகளுக்கு, அதாவது எல்லாத்தனியன்களுக்குமே, பல காரணங்கள் இருத்தல்கூடும்; அக் காரணங்களில் எதுதான் உண்மைக் காரணம் என்று காண்டல் அரிது. மற்றும், எல்லாத்தனியன்களுக்கும் முதற் காரணம் கண்டுபிடிக்கப்போனால் வரலாற்றுத் தொடக்கத்திற்கும் முன்பு கொண்டுபோய்விடும். புராணத்தில் சிவபிரானது அடிமுடி தேடியவர்கள் அவற்றைக்காணமுடியவில்லை என்று கூறியதன் பொருள் நிரந்தரமான பொருளின் ஆதிகாரணத்தையும் இறுதி முடிவையும் யாராலும் காணமுடியாது என்று வற்புறுத்துவதற்காகவேயாம். இவ் விரு காரணங்களால் நிருணயக் கோட்பாட்டை ஏற்றுக்கொள்ள முடியாது என்றார் குரோச்சே.

நிருணயக் கோட்பாடு என்பது வரலாற்றாளரிடையே அண்மையில் எழுந்தது. சமயவாதிகள் இக் கொள்கையை நெடு நாளாகவே அறிந்திருந்தனர்; ஆயினும் அவர்களுக்கும் இக் கோட்பாடு அருள் என்னும் கருத்தால் கட்டுப்பட்டது. பண்டைய கிரேக்கர்கள் நிருணயக்கருத்தைக் கூறவில்லை. 'வரலாறு முழுவதும் மக்களினத்தின் குற்றங்கள், துர்ப்பாக்கியங்கள், தவறுகள் என்பதன் தொகுதியே யாம்' என்று 18ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வால்ட்டேர், கிப்பன் என்போர் கூறினர்; அவர்கள் மக்கள் செய்யும் குற்றங்கள், தவறுகள் என்பவற்றிற்கு அவர்களையே பொறுப்பாளிகளாக்கினராதலின், அவர்களும் நிருணயக் கொள்கையில் நம்பிக்கையில்லாதவர்கள் என்பதாயிற்று. கார்லைல், ரூஸோ என்பவர் இருவரும் 'Romanticists' ஆயினும் அவர் தம்முள்ளே இப் பொருள்பற்றிவேறுபடுகின்றனர். கார்லைல் ஃபிரஞ்சுப் புரட்சிக்குச் சில காரணங்களையும், நெப்போலியனை 'ஊழ்வலி வீரன்' என்றும் கருதினார். ஆனால் ரூஸோ 'மனிதன் எங்கணும் சுதந்திரனாகத்தோன்றினான்; ஆனால் இப்போது எங்கும் பிணிப்புண்டு கிடக்கின்றான்' என்றார்; அதனால் அவர் மனிதன் அடைந்துள்ள நிலைக்கு அவனே காரணன் என்று கருதினாராயிற்று. ஆனால், ஹேகல் என்னும் தத்துவரே முதன்முதலாக நிருணயக் கோட்பாட்டினை ஐயத்திற்கிடமின்றி வெளிப்படையாகக் கூறினவர். அவர் வரலாற்றையே ஜீவனுள்ள, உணர்ச்சியுள்ள, அறிவுள்ள ஒரு பொருளாகக் கருதினார். அவர் கூறிய விவாதக் கோட்பாடு நிருணயத்தை நிரூபிக்க முயல்வது. ஆனால், நிருணயம் மார்க்ஸின் கொள்கைகளில் வலுவாகக் காணப்படுகின்றது.

ஆஸ்வால்டு ஸ்பெங்ளர் (Oswald Spengler) என்னும் ஜெர்மானிய அறிஞர் தாமியற்றிய 'மேனாடுகளின் தாழ்ச்சி' என்னும் நூலில் உலகில் தோன்றிய கலாசாரங்களைப் பட்டியல்படுத்தி அவை தாழ்ந்து வீழ்தற்குக் காரணங்களையும் விவரித்தார். இத்துணை வற்புறுத்தலோடு நிருணயக்கோட்பாட்டினைக் கூறியவர்களில் அவரே முதல்வராவார்.

காரல்பாப்பர் (Karl Popper) என்னும் அறிஞர் தாமியற்றிய 'வெளிப்படைச் சமுதாயமும் அதன் பகைகளும்' என்னும் நூலில் 'எதேச்சாதிகாரிகள், கோட்பாடுகட்கு உட்பட்டு இயங்கும் ஆட்சிகள் என்பவை மறைபட்ட சமூகங்கள்'; இவையாவும் நிருணயக் கோட்பாட்டினை மேற்கொள்வன. அவர்கள் நிருணயம் என்னும் போலிக் கொள்கையை நம்புகின்றனர்' என்றார். இராணுவக் கட்டுப்பாடு போன்றதொரு கட்டுப்பாட்டிற்கு அடங்கியொழுகும் சமுதாயங்களையும் அவற்றின் தத்துவங்களையும் அவர் கண்டிக்கிறார். அவர் ஆர்னல்டு டாயின்பீ என்னும் வரலாற்றுத் தத்துவரையும் நிருணயவாதி என்கிறார். பிளேட்டோவிலிருந்து டாயின்பீ வரையுள்ள பன்னிருட்டுத் தத்துவர்களையும் வரிசைப் படுத்தி பாப்பர் நிருணயவாதிகளில் சேர்ப்பார். ஆனால் டாயின்பீ தாம் ஒரு நிருணயவாதி என்பதை ஒப்புக்கொள்வதில்லை. பீட்டர் கெயில் என்னும் வரலாற்றாளரோடு டாயின்பீ நிகழ்த்திய ஒரு விவாதத்தில் அங்ஙனம் அவர் மறுத்துரைத்துள்ளார். டாயின் பீ நிருணயத்தைப்பற்றிக் கூறுவது கீழ்க்காணுமாறு: 'உலகில் இது வரை நிகழ்ந்துள்ளவற்றிற்கு நான் ஒருகாரணம் கற்பித்துள்ளேனேயன்றி, இனி நிகழப்போவனவும் அவ் விதிகளையொட்டியே நிகழும் என்று கூறவில்லையாதலால், நான் ஒரு நிருணயவாதி அல்லன்' என்பது. அவர் இங்ஙனம் கூறியுள்ளாராயினும், 'வரலாற்றின் பாடம்' (Study of History) என்னும் மாபெரும் நூலில் அவர் எழுதிவரும் முறையைப் பார்த்தால், எதிர்காலத்தைப்பற்றியும் அவருக்கு நம்பிக்கையில்லை என்றே காண்கிறது. தவிர்க்க முடியாதது நடந்தேவிடும், அதனினின்றும் தப்பமுடியாது என்று அவர் அஞ்சுவதாகவே காண்கிறது.

நிருணயம் என்னும் இக் கோட்பாட்டினை ஆய்ந்துள்ள வரலாற்றறிஞர்களில் டால்ஸ்டாஸ் என்னும் ருஷ்ய நாவலாசிரியர் வேறொரு கருத்துக் கூறுவார்: 'வரலாறு என்பது மனிதனுடைய சுதந்திரத் துணிவாற்றல் அன்று; நாம் அதனை (அத் துணிவாற்றலை) எவ்வாறு விளக்குகிறோம் என்பதைப் பொறுத்தது. சுதந்திரத் துணிவாற்றல், தவிர்க்கமுடியாமை என்னும் இரண்டு முரண்பாடான சக்திகளும் ஏற்கெனவே கலந்துவிட்ட வரலாற்று

நிலைமையையே நாம் வரலாற்றில் விளக்குகின்றோம்' என்பதே அவரது கருத்து.

இஸயா பெர்லின் ((Isaiah Berlin) என்பார் 'வரலாற்றில் தவிர்க்க முடியாமை' (Historical Inevitability) என்னும் தமது கட்டுரையில் 'நிருணயக் கோட்பாடு என்பது நாம் செய்வன யாவும், நம்மாற் செய்யப்படுவன யாவும் ஒரு முன்வரைவின்படி நிகழ்கின்றன என்று பொருள்படும் என்று விளக்கி, வாழ்க்கையில் எதேச்சைத் தேர்வுச் சக்திகளும் உள்ளன; அவற்றை நெருக்கிக் கட்டுப்படுத்தும் கட்டாயச் சக்திகளும் உள்ளன. விஞ்ஞானத்தில் காரணங்களுக்கும் காரியங்களுக்கும் இடையிற் கிடப்பதாக, அவ் விரண்டையும் பிணைப்பதாகக் கூறப்படும் வகை காரண காரிய உறவு மனிதன் செயற்பாடுகளில் இல்லை, அதாவது மனிதன் தன்னிச்சையாகத் துணிந்து செயலாற்றும் சக்தியுடையவன் என்று நாம் நினைப்பது ஒரு மாயையாயின், அம் மாயை நமது உள்ளத்தின் அடியில் ஆழ்ந்து படிந்து கிடப்பதொன்றாகும்' என்று கூறுகின்றார். ஆயினும், துணிவாற்றலுக்கும் தவிர்க்க முடியாமைக்கும் இருப்பதாக நாம் எண்ணும் முரண்பாட்டைப் பற்றிச் சமயவாதிகளும், தத்துவர்களும் ஆராய்வது முறையே யாம்; ஆனால், வரலாற்றாளர்க்கு அவ் விவாதத்தில் இடமில்லை; ஏனெனில், வரலாற்றாளர் பெரும்பாலும் காட்சிக்குட்பட்டு நிகழ் செயல்களில் ஈடுபாடுடையரேயன்றி அவற்றிற்குப் பின்பு கிடக்கும் தத்துவத்தைப்பற்றி அக்கறைப்பட வேண்டுவதில்லை என்பதும் அவர் கருத்து. அனுபவ அளவில் வரலாற்றாராய்ச்சியை நிறுத்திக்கொண்டு அனுபவத்திற்குப் புறம்பான தத்துவங்களைப் பற்றி அவன் கவலைப்பட வேண்டாம் என்பது பெர்லினின் கருத்து எனலாம்.

சமுதாய நிலையில் வைத்துப் பார்க்கும்போது மனிதனை முற்றிலும் எதேச்சையும் சுதந்திரமும் உடையவனாகக் கருத இடமில்லை. ஏனெனில், ஒவ்வொருவருக்கும் சுதந்திரத் துணிவாற்றல் உண்டு என்றால் பலர் கூடியிருக்கும் சமூகச் சூழ்நிலையில் அவ்வெல்லாருடைய சுதந்திரத் துணிவாற்றல்களும் சேர்ந்து ஒன்றையொன்று பாதிப்பதால் பிறக்கும் உந்தல்கள் யாரொருவருடைய துணிவாற்றலையும் குறியாது பொதுப்படையான ஒரு சக்தியைக் குறிக்கும்; அன்றியும் ஒவ்வொருவருடைய துணிவாற்றலும் பிறர் துணிவாற்றலால் மாற்றப்பட்டுச் சிதைந்து போகும். இந் நிலையில் எவருக்கும் துணிவாற்றல் இருப்பதாகக் கூறுவதே தவறாகும். பிறருடைய துணிவாற்றலோடு முரண்படாத சூழ்நிலைகளில் எவரும் தமது துணிவுகளை மேற்கொள்ளலாம், செயற்

படுத்தலாம்; ஆனால் இது சமுதாயச் சூழ்நிலையில் நடைபெறுது. வரலாறு சமுதாயச் சக்திகளைப்பற்றியே ஆய்வதாதலின், தனி மனிதன் துணிவாற்றல் என்னும் பிரச்சினை வரலாற்று நிருணயத் தன்மை என்னும் நிலையில் செயலற்றுவிடும். ஆனால் அந்த ஒரு நிலையிலும் காலத்திலும் எந்த மனிதனும் எந்த வகையில் செயற்படுவான் என்று ஒருவராலும் கூறமுடியா தாதலின், வரலாற்றின் போக்கு நிருணயிக்கப்பட்டதோ அன்றி முற்கூற் றிற்கு உட்பட்டதோ என்று எளிதிற் கூறிவிட முடியாது. இப் பிரச் சினைகளே, மொத்தமாக வரலாற்றில் முன்வரைவுகள் உளவா இலவா என்னும் பெரிய பிரச்சினையோடு மயங்கிக் குழப்பிவிடக் கூடாது.

# 8. வரலாற்றுத் தத்துவம்

வரலாற்றுத் தத்துவம் என்பது 'வரலாற்றின் அடிப்படையில் அமைந்து கிடப்பதாக அறிஞர் கருதும் கோட்பாடுகளின் தொகுதி' என்று பொதுவாகப் பொருள்படும். இத் தொடரின் ஆங்கிலவுரு வான 'philosophy of History' என்னும் தொடரின் ஃபிரெஞ்சுப் பரியாயத்தை முதன்முதல் உருவாக்கியவர் ஃபிரெஞ்சுத் தத்துவ ரான வால்ட்டேர் (18ஆம் நூற்றுண்டு) என்பதை யாவரும் அறிவர். அத் தொடரை எந்தப் பொருளில் வால்ட்டேர் வழங் கினுர் என்பதைத் தெள்ளிதின் உணரோமாயினும் ஆர். ஜி. காலிங்வுட் என்னும் ஆங்கிலேய வரலாற்றுத் தத்துவர் கீழ்வருமாறு கூறுவார்: 'வால்ட்டேர் வரலாற்றுத் தத்துவம் என்று கூறியது ஆய்வு முறை வரலாறு அல்லது விஞ்ஞான முறை வரலாறு என்பதையேதாம். அதாவது வரலாற்று முடிவுகளில் பிறரது கருத்துகளை ஆராயாமலே மேற்கொள்ளாமல் வரலாற் ருளன் தனது பகுத்தறிவினைக் கொண்டே எம் முடிவையும் காணல் என்பதாம்' என்று அவர் விளக்கம் கூறினுர். சமயவாதிகள் வரலாற்றிற்குப் பாரமார்த்திகமான பொருள் வழங்குவர்; அப் பொருளினின்றும் வால்ட்டேரின் கருத்தை வேறுபடுத்திக் காண் பதற்கே காலிங்வுட் இவ்வாறு விளக்கம் கூறினுர். 18ஆம் நூற்றுண்டினிறுதியில் ஹேகல் முதலிய ஜெர்மானிய வரலாற்று ளர்களும் வரலாற்றுத் தத்துவம் என்னும் தொடரைப் பயன்படுத் தினுர்கள். ஆனுல், அத் தொடருக்கு அவர்கள் உலக வரலாறு அல்லது பிரபஞ்ச வரலாறு என்றே பொருள் கண்டனர்.

வரலாற்றுத் தத்துவம் என்னும் தொடருக்கு மூன்று வித மாகப் பொருள் கூறலாம்: (1) காரண காரியத் தொடர்பு, முன்னியக்கம் முதலிய வரலாற்று நிகழ்-முறைகளைப்பற்றிய வரலாற்றுளர் கொண்டுள்ள அடிப்படைக் கொள்கைகள் அல்லது தற்கோள்கள்; (2) வரலாற்று ஆய்வுமுறைகளைப்பற்றிய கருத்து களும் ஆராய்ச்சிக் கட்டுரை வரைவதற்கான விதி முறைகள்; (3) வரலாற்றின் ஆதாரத் தன்மையைப்பற்றிய உயர்நிலைக் கோட்பாடுகள். பெரும்பாலும் வரலாற்றுத் தத்துவத்தைப்பற்றி வரைவோர் யாவரும் மூன்ருவது கூறிய பொருளையே மேற்

கொள்ளுவர். லோவித் (Lowith) என்னும் வரலாற்றுளர் வரலாற்றுத் தத்துவம் என்பதனைக் கீழ்க்காணுமாறு விளக்கு கின்றார்: 'வரலாற்று நிகழ்ச்சிகள், தொடர்ச்சிகள் என்பவற்றை ஒன்றித்து ஓர் இறுதிப் பொருள் பயக்கும் வகையில் அவற்றைச் செலுத்தும் ஓர் ஆதாரத் தத்துவக் கோட்பாட்டினையொட்டிப் பிரபஞ்ச வரலாற்றிற்கு ஒரு முறையான வகையில் பொருண்மை காண்டல் என்பதே வரலாற்றுத் தத்துவமாம்' என்றார் அவர். இவ்வாறு காணப்போனல் வரலாற்றுத் தத்துவம் என்பது வர லாற்றுச் சமய மரபில் கொண்டுபோய் விடும். கிறிஸ்துவ சமய மரபின்படி மனித வரலாறு முதற்பாகம், கருவாய், நிறைவு, வீடு என்று பரிணமித்து வருவதாம். ஆகவே, வரலாற்றுத் தத்துவம் என்பது சமயச் சார்பாகவோ வேறு விதமாகவோ வரலாற்றிற்கு ஒரு பொருண்மை கண்டு அப் பொருண்மையினைத் தத்துவ நிலைக்கு உயர்த்தல் என்பதாகும்.

19ஆம் நூற்றுண்டு (விஞ்ஞான) உடன்பாட்டுக் கோட்பாட் டாளர்கள் (positivists) வரலாற்றுத் தத்துவத்தை 'வரலாற்றிற் கூறப்படும் நிகழ்ச்சிகளையெல்லாம் பொருள்தரு வகையில் பிணைக் கும் ஒரு தத்துவம்' என்று கொண்டனர். தத்துவ அல்லது சமய நிலையிலிருந்து வரலாற்றைப்பற்றிக் கேட்கப்படும் வினுக்களுக்கு விடையளித்தல் எளிதன்று; அதாவது காட்சிக்கு அடங்கிய அல்லது பௌதிகப் பிரமாணத்தால் கண்டறிந்து கூறக்கூடிய எவ்வகை விடையும் அத்தகைய வினுக்களுக்குத் திருப்தியளியாது. 'இறுதிப் பொருள்களை அல்லது ஆதிப்பொருள்களைப்பற்றிய கேள்விகள் யாவையும் இத்தகையவே; எந்த விடையாலும் திருப்தியுருமலிருக்கும் தன்மையே இவ் வினுக்களுக்கு ஒருவகை முக்கியத்துவம் அளிக்கின்றது' என்றார் லோவித்.

மேற்கூறியவற்றினின்று புலப்படுவது யாதெனில், வரலாற்றுத் தத்துவ ஆய்வில் இருவகைக் கருத்துகள் தென்படுகின்றன என்பது; அதாவது, வால்ட்டேர், ஹேகல் முதலியோர் வரலாற்றுத் தத்துவம் சில கொள்கைகள், கோட்பாடுகள், தற் கோள்கள் என்பவை வரலாற்றிற்கு ஒரு தனித்தன்மை யளிக் கின்றன, அவற்றைக் கண்டு வகைப்படுத்திக் கூறுதலே வரலாற்றுத் தத்துவ ஆய்வாளனது கடமை என்று கருதினர். இரண்டாவதாக, உடன்பாட்டுக் கோட்பாட்டாளர்கள் அறிவியல் என்பது பொதுவானது; அதற்கு விஞ்ஞானம், வரலாறு என்று வேறுபாடில்லை-விஞ்ஞானத்திற்கு உரிய ஆய்வு முறைகள், குறிக் கோள்கள் என்பவை வரலாற்றின் ஆய்வு முறைகள் குறிக்கோள்கள் என்பவற்றிற்கும் பொருந்தும் என்னும் கருத்து. இவ் வுடன்பாட்டுக்

கோட்பாட்டளார்கள் வரலாற்றினை இலக்கியம், தத்துவம் என்னும் அறிவியற் பிரிவுகளோடு சேர்க்காமல் வானிலையியல் போன்ற அறிவுத் துறைகளோடு இணைப்பர். ஆதலால், இவ் விரண் டாம் வகைக் கருத்தின்படி, வரலாற்றுத் தத்துவத்தின் தொழில், நிகழ்ச்சிகளின் பொதுத் தன்மையை ஆய்ந்து அறிந்து விதிகளை வெளிப்படுத்துதலாம்; முதல்வகைக் கருத்தின்படி வரலாற்றுத் தத்துவம் என்பது வரலாற்றுளன் தன் அறிவின்படி உண்மை காண்டல் என்பதே.

ஆர். ஜி. காலிங்வுட் கூறுவார்; 'வரலாற்றுத் தத்துவம் வரலாற்றுப் பழைமையோடு மட்டும் தொடர்புடையதன்று; தவிர, அப் பழைமையைப்பற்றிய வரலாற்றுளனது சிந்தனைகளோடு மட்டும் தொடர்புடையது மன்று. அவ் விரண்டின் பரஸ்பர உற வாடலால் தோன்றும் நிலைமையை ஆய்வதே வரலாற்றுத் தத்துவ மாம், அதாவது வரலாற்றுளன் பழைமை நிகழ்ச்சிகளை எங்ஙனம் காண்கிறான் என்பது. இவற்றில் முந்தியது வரலாற்றுப் பழைமை யில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளின் மொத்தத் தொகுதி, இரண்டாவது, அத் தொகுதியைப்பற்றி வரலாற்றுளன் என்ன கருதுகிறான் என்பது.' இங்ஙனம் கூறிய கருத்தின் சுருக்கம், 'எல்லா வரலாறும் சிந்தனையின் வரலாறேயாம்' என்பதே. மற்றும், வரலாறு என்பது 'பண்டைய வரலாற்று நிகழ்ச்சிகள் வர லாற்றுளன் உள்ளத்தில் இரண்டாவது முறையாக நிகழ்தல் என்னும் தன்மையுடையது' என்றும் அவர் கூறினார். இக் கூற்று கள் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தவை. இவ் வாங்கிலேய வரலாற்றாய்வாளர் கருத்துப்படி, வரலாற்றுப் பழைமை என்பதும், அதனைப்பற்றி வரலாற்றுளன் சிந்தித்தல் என்னும் காரியமும் மிகவும் தனித்தன்மை வாய்ந்தவை. இவை பிற வகை அறிவியற் செயற்பாடுகளோடு (intellactual activity) ஒப்பிடற் குரியவல்ல.

வரலாற்று நிகழ்முறையில் எந்தவிதமான ஒரு வரைவும் அல்லது பொருண்மையும் இருக்கமுடியாது என்பது சில தத்துவர் களுடைய கருத்து. ஃபிரூடு (Froude) என்னும் ஆங்கிலேய வரலாற் றுளர் ஒருமுறை கூறினார்: 'வரலாறு என்பது நெடுங்கணக்கு எழுத் துகளைக் கொண்ட ஒரு சிறுர் விளையாட்டுப் பெட்டகம் போன்றது; அவ் வெழுத்துகளை வைத்துக்கொண்டு அச் சிறுர் எந்தச் சொல்லை வேண்டுமானாலும் கட்டலாம் என்பதுபோல வரலாற்று நிகழ்ச்சி களை வைத்துக்கொண்டு வரலாற்றுளன் எந்தப் பொருண்மையை யும் காணலாம்', என்று. வரலாற்றிற்கு எத்தகைய தனிப் பொருண்மையும் இல்லை என்பார் கூற்று இதனையொக்கும். தாம் இயற்றிய 'ஐரோப்பிய வரலாறு' (History of Europe) என்னும்

நூலின் முகவுரையில் எச். ஏ. எல். பிஷர் என்பார் 'வரலாற்றில் ஒரு முன்வரைவு, ஒரு லயம், ஒரு நயம், ஒரு கட்டுக்கோப்பு என்பவை இருப்பதாகத் தமக்குப் புலப்படவில்லை' என்று தெளிவாகக் கூறினர். இதனை மறுத்துக்கூறவந்த ஏ. எல். ரவுஸ் (A.L. Rows) கீழ்க்காணுமாறு உரைத்தார்: 'வரலாற்றில் ஒரு லயம், ஒரு கட்டுக்கோப்பு இருப்பதாகக் கூறுவது தவறு; லயங்கள், கட்டுக்கோப்புகள், அமைப்புகள் என்பவையும், மறுபடி நிகழ்வுகளும்கூட ஏராளமாக இருக்கின்றன; ஆதலால் வரலாற்று நிகழ்ச்சிகளிலிருந்து ஒரு படிப்பினையை, ஒரு பொது விதியை அல்லது பல படிப்பினைகளை, பல பொது விதிகளைக் காண இயலும்' என்ருர். பேராசிரியர் பட்டர்ஃபீல்டு (Butterfield) என்பார், 'வரலாறு தனது சக்தியாலேயே முன்இயங்கிச் செல்வது; இதனைக் கண்டு அது இயங்கிச்செல்லும் திசையினை அறிந்து உணர்த்துவது வரலாற்ருளனின் கடமை' என்ருர்; 'வரலாறு எவ்வாறு இயங்கி வந்துள்ளது, இப்போது எக் குறிக்கோளைநோக்கி முன்இயங்கிக் கொண்டிருக்கின்றது என்பதையறியாமல் அதனோடு எதிர்மோதுவார் வரலாற்றுச் சக்திகளால் அழிக்கப்படுவர்' என்பது அக் கருத்தின் விளைவாகும். இதனுல் வரலாறு அபாயங்களை அறிவித்து மக்களை எச்சரிக்கின்றது, அவ் வெச்சரிக்கைகளை அறிவுடையோர் பொருட்படுத்த வேண்டும் என்பதாயிற்று. ஆனுல், மக்கள் வரலாற்றிற்குள் சிக்கி, அதன் பிணிப்புகளில் அகப்பட்டு நிற்பவர்கள், வரலாற்று நிகழ்—முறைக்குப் புறம்பானவர்கள் அல்லர் என்பதை நினைவுகூர்தல் வேண்டும்.

வரலாற்றினை ஓர் ஆருகவே உருவகித்துக்கொண்டால் அதன் போக்கில் சாதாரண ஆற்றெழுக்கு உண்டு; நீர்ச்சுழல்கள்உண்டு; பல நதிகள் வந்து கூடுதல் உண்டு: நீர்வீழ்ச்சிகள் இருக்கும்; பல வாய்க்கால்களாகப் பிரிந்துஓடும்; இறுதியில் கடலொடு கலக்கும். இவ் வுருவகத்தில், அரசியல், சமயம், பொருளாதாரம், சமுதாயம் பழக்கவழக்கங்கள் போன்ற பலவகை வரலாற்றுவகைகள் வந்து ஒன்றுகூடுதல், ஒவ்வொரு வரலாறும் பல காலத்திற்கும் பலநாடுகளுக்கும் பொருந்துவனவாகிய சிறு சிறு வரலாறுகளாகப் பிரிந்து இயங்குதல், புரட்சிகள் போன்ற கடு நிகழ்ச்சிகள் முதலியவற்றைக் காணலாம். இவற்றையெல்லாம் அவ்வவற்றிற்கு ஏற்ற சூழ்நிலையில் வைத்துப் பொருளும் தத்துவமும் காணவேண்டும் என்பது ஒரு சாரார் கருத்து; பர்க்ஹார்ட் போன்ற வரலாற்றுத்தத்துவர்கள் இக் கோட்பாட்டினை மேற்கொள்வர். அதாவது 'நிகழ்ச்சி எந்தக் காலத்தில் நிகழ்ந்ததோ அந்தக் காலத்து அறிவியல், ஒழுக்கவியல், மரபுகள், தகுதிகள், திறமைகள், விருப்புகள், வெறுப்புகள், கட்டாயங்கள் முதலியவற்றை மனத்திற்கொண்டு அவற்றின்

அளவையால் அந் நிகழ்ச்சியைப்பற்றிய முடிவுகளை மேற்கொள்ள வேண்டும் என்பது. அதாவது இருபதாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு வரலாற்றாளன் பத்தாம் நூற்றாண்டு நிகழ்ச்சியைத் தான் அல்லது தன் உடன்காலத்தவர்கள் மேற்கொண்டுள்ள பண்பு மதிப்புகளை அளவைகளாகக்கொண்டு மதிப்பிடக்கூடாது என்பது. இடைக்காலத்தில் ஐரோப்பாவில் சமயம் தலைதூக்கி நின்றது, படைமானியம் நடைமுறையில் இருந்தது, பண்டைய இந்தியாவில் சாதி முறை ஏற்றுக்கொள்ளப்பட்டது என்னும் வரலாற்றுப் போக்குகளை அவ்வக் காலத்துப் பண்பு மதிப்பு நிலையில் வைத்து ஆராய்வதே நியாயமாகும் என்னும் கருத்து, பண்பு மதிப்பு காலத்திற்குக்காலம், நாட்டிற்கு நாடு, இனத்திற்கு இனம் மாறுபடுகின்றது இயற்கையே' என்னும் கருத்தோடு ஒத்தது. இது வரலாற்றுக்காப்பியம் (Historical Relativisum) எனப்படும்; இதன் விரிவினை ஒன்பதாம் அத்தியாயத்தில் விரிவாகக் காண்போம்.

வரலாற்றியம் (Historicism) என்பது வரலாற்று எதிர்காலப் போக்கினை முன்கூட்டியே அறிந்து அறிவிக்க முடியும் என்னும் தற்கோளால் தோன்றியது. மார்க்ஸ், ஸ்பெங்ளர், டாயின் பீ போன்றவர்கள் வரலாற்றின் அடிப்படையிலோ, பின்னணியிலோ ஒரு பொதுமையுண்டு, அதனைக் கண்டுபிடித்து வெளிப்படுத்துதலே வரலாற்றின் கடமை என்னும் கருத்தோடு நூல்களை யாத்துள்ளனர், கோட்பாடுகளை அமைத்துள்ளனர். இப் பொதுமைகளை நாம் ஏற்றுக்கொள்ளாவிடில் வரலாறு என்பது ஓர் அன்றாட உதிரி நிகழ்ச்சிகளின் செயற்கைத் தொகுதியே என்று கருத வேண்டிவரும்.

மனிதனது சுதந்திரத் துணிவாற்றலுக்கும், வரலாற்று நிருணயத்தன்மைக்கும் இடையே தோன்றும் முடிவில்லாத பூசலைப் பற்றிய வரலாற்றுத் தத்துவங்கள் பல உள. அவற்றை 'வரலாற்று நிருணயத்தன்மை' என்னும் அத்தியாயத்தில் கண்டோம். சூழ்நிலையும் மரபும் மனிதனது சுதந்திரத் துணிவாற்றலைக் கட்டுப்படுத்துகின்றன; அவற்றையும் மீறிச் சில சமயங்களில் மனிதன் சுயேச்சையான முடிவுகளை மேற்கொள்ளுகிறான், அவற்றைச் செயற்படுத்துகிறான் என்று இருவகையிலும் உள்ள உண்மையை வற்புறுத்துவர் தத்துவர். மார்க்ஸ் இந் நிலையில் கூறுவது காணத் தக்கது; 'மனிதன் தனது வரலாற்றைத் தானே ஆக்கிக்கொள்கின்றானேயன்றித் தனது சுய நிருணயச்சக்தியாலோ சுதந்திரத் துணிவாற்றலாலோ அன்று. ஆனால், வரலாற்றில் அமைந்து விட்ட சூழ்நிலைகளுக்கும் பூர்வீகப் பாரம்பரியங்களின் வேகத்

திற்கும் உட்பட்டுத்தான் வரலாற்றை ஆக்குகின்முன். தனி மனிதர்கள் தாங்களே செயற்பாடுகளை ஊக்குவிப்பதாக எண்ணுகின்றனர்; ஆனுல் அவர்கள் சில சக்திகளின் பிரதிநிதிகளாகவே இயங்குகின்றனர்'.

வரலாறு என்பது மனிதனுடைய குற்றங்கள், தவறுகள், பாவங்கள், துர்ப்பாக்கியங்கள் என்பவற்றின் தொகுதியே என்று கருதுபவர்கள் ஒருபுறமிருக்க, வரலாறு மனிதனது துக்கங்களையே உருவகிக்கின்றது என்று கருதுவாரும் உளர்.

மனிதன் துக்கத்திற்கு ஆட்பட்டவன்; அதனின்றும் விடுதலை பெறுதலே அவனது சிறந்தமுயற்சி; அங்ஙனம் பெறும் விடுதலையே வீடு அல்லது நிர்வாணம் அல்லது மோக்ஷம் என்னும் கருத்துகளைப் புத்தர் போன்ற பண்டைய இந்திய அறிஞர்களிடம் காணலாம். இது நம்பிக்கையிழந்த நிருணயக் கொள்கை எனப்படும்; வரலாற்று முன்னியக்கக் கோட்பாட்டோடு இது முரண்படும்.

வரலாற்றைப்பற்றிய இருவகை வேறு கருத்துகள் உள. அவற்றில் ஒன்று, ஆதிகாரணக்கோட்பாட்டின் அடிப்படையிலும் மற்றையது இறுதி நிகழ்ச்சி ஆய்வின் அடிப்படையிலும் அமைவது. ஆதிகாரணக் கோட்பாடாவது எல்லா நிகழ்ச்சிகளுக்கும் ஓர் ஆதிகாரணம் உண்டு என்பது; இறுதி நிகழ்ச்சி ஆய்வாவது வரலாறு முற்றிய பிறகு அல்லது தனி மனிதன் வாழ்வு முற்றிய பிறகு நிகழும் சாவு, பிரளயம், முற்றிய முடிவு போன்ற நிகழ்ச்சிகளைப்பற்றி ஆய்தல். இவ் விருவகை யாராய்ச்சிகளுமே கட்டுக்கதைகளாக முடியலாம்; ஏனெனில் இந் நிலையில் எழும் விளக்கங்கள் யாவையுமே வரலாற்ருய்வுக்குப் புறம்பானவை. ஏனெனில் ரோமானியப் பேரரசு வீழ்ச்சியுற்றது, 19ஆம் நூற்ருண்டில் பிரிட்டிஷ் பேரரசு ஓங்கியது, 1947-ல் இந்தியா சுதந்திரம் பெற்றது என்பனயாவும் இறைவன் திருவருளால் நிகழ்ந்தன எனல் உலகியல் விளக்கங்களுக்கும் காரணகாரியத் தொடர்புகளுக்கும் புறம்பானது. மனிதனுக்குச் சற்றுச் சுதந்திரத்துணிவாற்றல் இருப்பதாக நாம் ஒப்புக்கொண்டாலும், இத்தகைய விளக்கம் முற்றிலும் திருப்தியளியாது.

வரலாற்றிற்கு முற்றிலும் உலகியல் விளக்கம்தரும் கொள்கை உலகாயத அல்லது பௌதிகக் கோட்பாடு எனப்படும். இக் கோட்பாடு கடவுள் அருளால் பிரபஞ்சம் இயங்குகின்றது என்னும் கருத்தை ஏற்பதில்லை. அக் கருத்துப்படி மனிதன் சிற்றுயிராகத் தொடங்கிப் பரிணுமவாயிலாக இன்றுள்ள நிலையை

எய்தியுள்ளான் என்பது. உண்மையில் அக் கருத்தைக் கொண்டவர்கள் கடவுளுக்குப் பதிலாகப் பரிணமம் என்பர். இக் கோட்பாடு ஆங்கிலேய உயிரியல் அறிஞரான சார்லஸ் டார்வின் என்பாரது பரிணமக்கொள்கையைப் பின்பற்றியது. இதனை மனித இயலர் மேற்கொள்ளுவர். மனிதன் முன்னேறுவது இயற்கையின் விதிகளையொட்டி; சூழ்நிலையை எதிர்த்து; இயற்கை தரும் அறைகூவல்களை ஏற்று; தன் உத்தியால் பிறக்கும் புத்திசத்தியை வைத்து; இதுதான் மனிதனது முன்இயக்கத்தின் உண்மை நிலை என்பது இக் கோட்பாட்டின் விளக்கம். மனித அனுபவம் வளர வளர• வெற்றிகளும் தோல்விகளும் வாழ்க்கையில் மிக மிக, அறிவு பெருகப்பெருக, தோல்விகளை வெற்றிகளாக மாற்றிக் கொள்வதற்குத் தேவையான வசதிகளைச் செய்து கொண்டுவரவே, மனித வரலாறு முன்னேறுகின்றது, இது பௌதிகக் கோட்பாடு.

ஆனால், இதுகாறும் கூறியவற்றால் சமயவாதிகளின் கோட்பாடுகளும் பௌதிகவாதிகளின் கோட்பாடுகளும் நேர்மாறானவை என்று தோன்றக்கூடும்; ஆயினும் சமயவாதிகளும் சிறிது உலகாயதத்தை ஏற்றுக்கொள்வதுபோல, உலகாயதிகளும் சற்றுச் சமயக் கருத்துகளை மேற்கொள்வர். இயற்கை, தற்செயல் முதலிய கருத்துகளில் அதன் அடிப்படை அல்லது இறுதித்தன்மைகளைப்பற்றி யுணரமுடியாது என்னும் ஒப்புக்கொள்ளுதல் காணப்படும். சமயவாதிகள் வெளித்தோற்றத்தை யோரளவேனும் ஏற்றுக்கொள்ளுதல் போல, லௌகிகவாதிகள் ஆன்மவாதங்களைச் சற்று ஏற்றுக்கொள்வர். 'வரையறை கடந்த' கோட்பாடு என்பது எதன் தன்மையையும் கட்புலனாகா அறிவின் எல்லையையும் கடந்த விளக்கங்களால்தாம் அறிய முடியும் என்பது. 'வரையறை கடந்த' விளக்கங்கள் தரப்படவில்லையெனின் வரலாற்று நிகழ்ச்சிகளுக்குத் தரப்படும் உலகியல் விளக்கங்கள் பயன்பட மாட்டா. ஒரு மனிதனுக்கு என்ன பொருள் என்றால் அவனைக் கைவேறு கால் வேறு அங்கங்களாகப் பிரித்துவிட்டால் அவற்றிற்குப் பொருள் இராது; அப்படியே ஒரு பொருள் தந்தாலும் அப் பொருள் மனிதனுக்குரிய பொருளாகாது. அதே போல வரலாற்றைத் தனித்தனி நிகழ்ச்சிகளாகப் பிரித்துவிட்டால், அத் தனி நிகழ்ச்சிகளுக்கு வெவ்வேறு பொருள் கொடுத்தாலும் அவை வரலாற்றின் பொருளாகா. 'வரலாற்றில் 'வரையறை கடந்த' பொருள் காண்பதே வரலாற்றுத் தத்துவமாகும்' என்றார் குரோச்சே. வரலாற்றில் பொதுமை காண்டல் இன்றியமையாதது : இது ஒரு கருத்து. ஆனால் வரலாற்றில் பெரும் பொது உண்மைகள் இல்லையென்போரும் சிறு படிப்பினைகள் உண்டு என்று ஏற்றுக்கொள்வர். ஆதலால் வரலாற்றி

லிருந்து நாம் படிப்பினைகள் பெறுகிறோமா இல்லையா என்னும் வினவிற்கு, உண்டு இல்லை என்னும் இருவகை விடைகளையும் அளிக்கவேண்டும்; அதாவது, வரலாற்றிலிருந்து நாம் சிறுசிறு அன்றாட உண்மைகளைத்தாம் உணர்கிறோம், படிப்பினைகளைத்தாம் பெறுகிறோம் எனல்வேண்டும்.

வரலாறு என்பது மனித சுதந்திர வரலாற்றின் பரிணமம் என்பது ஒரு வரலாற்றுத் தத்துவக் கோட்பாடு; அதாவது வரலாற்றின் பொருள் மனிதன் தனது சுதந்திரத்திற்காகப் பாடுபட்டு வந்த கதைதான் என்பது. ஆக்டன் பிரபு இக் கருத்தை வெளியிட்டார். இதே போன்ற கருத்து ஒன்றைக் குரோச்சேயும் கூறியுள்ளார். இடைக்கால ஐரோப்பியர்கள் கிறிஸ்துவக் கோட்பாடான 'பாவம் செய்த மனிதன் கடவுள் வழிபாடு என்னும் பரிணமவாயிலாக வீடு பேறடைதல்' என்பது பாவத்தாற் கட்டுண்ட மனிதன் விடுதலையடைந்து சுதந்திரம் பெறும் வரலாற்றை விவரித்தது; அதுவும் ஒரு சுதந்திரத்திற்காக மனிதகுலம் பாடுபடும் கதைதான். இக் கருத்தை போஸ்லே என்பார் வற்புறுத்தினர். சுதந்திரம் என்னும் கருத்தின் வளர்ச்சிதான் வரலாற்றுத் தத்துவம் என்றார் ஹேகல்.

மாபெருந் தலைவன் அல்லது பெரியோன் வரலாற்றை உருவாக்குகின்றான் என்னும் கொள்கை கார்லைல் என்னும் ஆங்கிலேய வரலாற்றாளரால் வற்புறுத்தப் பெற்றது. கார்லைல் பெரியோனைக் கடவுளுக்கு நிகராகவே கருதினர். முகம்மது நபி, மகா ஃபிரெடரிக், ஷேக்ஸ்பியர் போன்றவர்களை அவர் உண்மையான வரலாற்றுத் தலைவர்கள் என்றார். நீட்சே (Nietsche) என்னும் ஆஸ்திரியத் தத்துவரும் தலைவருக்குத் தனிப்பெரும் பண்புகள் உள்ளன என்றார். 'தலைவன் வரலாற்றை ஆக்குவான்; அவன் வரலாற்றால் ஆக்கவும் படுவான்' என்று இருதலைக் கருத்தை வில் டூரான்ட் (Will Durant) என்னும் வரலாற்றாளர் கூறுவார். பண்டைய இந்திய அறிஞர்களும் 'ராஜா காலஸ்ய காரண' என்று கூறினர்; அதாவது 'அரசன் காலத்தை உண்டாக்குகின்றான்' என்பது. வரலாற்றில் பெரும்பாலும் வெற்றி கண்டோர் கதையே கூறப்படுதலால், வரலாறு பெருந்தலைவர்களுடைய கதையே என்றும் கூறலாம்.

வரலாற்றில் தலைவனுடைய தொழிற்கூறு (role) யாது என்று இயல்பாகவே கேள்வி பிறக்கும். மெக்காலே பிரபு இதனை விளக்கு முகத்தான் ஓர் உதாரணம் தந்தார்; அதாவது, பரிதி உதிக்கும் நேரத்தில் ஒரு மலையுச்சிமீது ஒருவன் நின்றான்: அம் மலையடி

வாரத்தில் பலர் நின்றனர். மலையுச்சிமீது நின்றவன் சூரிய உதயத்தை முதலிற் காண்பான்; அடிவாரத்தில் நிற்பவர்களும் சூரிய உதயத்தைக் காண்பர். ஆயினும் மலையுச்சிமீது நின்றவன் கண்டு சற்று நேரங்கழித்தே. மலையுச்சியில் நிற்பவனைத் தலைவனாக வும், ஏனையோரை அவன் பின்செல்வோராகவும் கருதலாம். உயரத் தில் நிற்பவனுக்கு இயற்கை ஓர் ஏற்றம் தருகின்றது; அதுவே 'தலைமை' எனப்படுவது; அதனை வசிகரம் (Charisma) என்றும் கூறுவர்; அஃதின்மையால் ஏனையோர், தலைவனுக்குப் புரிந்துவிட்ட உண்மையை நேரங்கழித்துத்தான் உணர்கின்றனர். இவ் வுவமை பொருத்தமாகவே காணப்படுகின்றது. ஆனால், ஜான் ஸ்டுவர்ட் மில் (John Stuvart Mill) என்னும் ஆங்கிலத் தத்துவர் இவ் வுவமையை மறுத்தார். அவர் கருத்துப்படி, மலையுச்சியில் நிற்பவ னுக்குத்தான் உண்மை தெரியும், ஏனையோருக்கு அவனுக்குத் தெரிந்த உண்மை எப்போதுமே தெரியாது; அவன் வாயிலாகத் தான் அவர்கள் உண்மையை அறிந்துகொள்ள முடியும். இம் மறுப்பை மில் உதாரணமுகத்தான் விளக்கினர். நியூட்டன் என்னும் அறிஞன் கண்டுபிடித்த விஞ்ஞான உண்மைகளை அவனில்லாவிட்டால் இன்னொரு நியூட்டன் வந்தால்தான் கண்டு பிடிக்க முடியும். ஒரு நூற்றாண்டு கழிந்தால் நியூட்டன் அளவு விஞ்ஞான அறிவு படைக்காதவனும் எவ்வாறேனும் அவ் வுண்மைகளைக் கண்டுபிடித்து விடுவான் என்று கூறமுடியாது. இவ் வுதாரணத்தை மெக்காலே பிரபு கூறிய உதாரணத்தோடு பொருத்திப் பார்ப்போமேயாயின், மலையுச்சியில் நின்றவன் தான் பகலவன் தோற்றத்தைக் காணமுடியும், பிறரால் முடி யாது என்பதாயிற்று; அன்றியும் மலையுச்சியில் நிற்கும் தகுதி சிலருக்கு இயல்பாகவே அமைந்துகிடக்கின்றது; அவர்களே பிற வியற் பெரியோர்; பிறர் அப் பெரியோரைப் பின்பற்றும் பெற்றி யுடையரேயன்றித் தலைமை தாங்கும் தகுதியுடையரல்லர். இக் கருத்துகள் யாவற்றிற்கும் எதிராகக் கூறப்படும் கொள்கை யாவது: சூழ்நிலையும் சந்தர்ப்பங்களுமே மனிதர்க்குத் தலைமை நிலையை ஆக்குகின்றன; தலைவன் என்று ஒருவரும் பிறப்பதில்லை என்பது. இத்தகைய கருத்துகளைக் கம்யூனிஸ்ட்டுகள் முதலிய மார்க்ஸியர்கள் கூறுவர். எல்லோருமே தலைமை நிலைக்கு எவ்வாறோ உரியர் என்று மக்களாட்சிக் கொள்கைக்காரர்களும் கூறுவர். ஆனால், ஒரே சூழ்நிலைச் சந்தர்ப்பங்கள் உருவாக்கும் பலரில் ஒருவரோ ஒரு சிலரோ மட்டும் அவற்றைப் பயன்படுத்திக் கொண்டு தலைமை எய்துகின்றனர் அல்லது அவற்றைத் தமது முன்னேற்றத்திற்கும் வேண்டும் தலைமைக்கும் ஏற்றவாறு மாற்றிக் கொள்கின்றனர். இஃது எவ்வாறு நிகழ்கின்றது என்னும் வினா இன்றும் விடை பெறாது நிற்கின்றது.

வரலாற்றுத்தத்துவம் என்பது வரலாற்றிற்குப் பொருண்மை காண்பது என்னும் அளவிற்று. ஆனல், இவ்வாறு ஒரு பொருண்மைக்குத் தேடி அலைவது என்பது அனுபவத்தின் பயனைப் புறக்கணித்துவிட்டு ஓர் ஒருமை, ஒன்றியதன்மை என்னும் இல் பொருள்களைத் தேடி அலைவதற்கு நிகர் என்று இஸையா பெர்லின் (Isaiah Berline) என்னும் வரலாற்றுத் தத்துவர் கூறுவார். இந் நிலையை வேறுவிதமாக விளக்கிக்கூறுவார் போவிக் (Powicke) என்னும் அறிஞர்: 'எந்த வரலாற்று நிலைமைக்கும் ஒரு பொருண்மை காணவேண்டும் என்னும் பேரவா மக்களுள்ளத்தில் ஆழப்பதிந்திருத்தலால் அதற்கு வகையின்றேல் அவர்கள் மறை ஞானி (cynic) களாகவோ, (போலி) நயம் வெறுப்பவர்களாகவோ முடிவர்' என்றார். இதனுல் மனித உள்ளம் ஏதோ ஒன்றைத் தேடிஅலைகிறது என்றால், அது உளதாகும் என்றாகிவிடாது; இல்லாததையும்தேடி அலையும் பண்பு மக்கள் உள்ளத்திற்கு உண்டு. 'வரலாற்று நிகழ்முறையில் தோன்றும் அறிவியல் கொள்கைகளைக் கண்டுபிடித்தல்தான்' வரலாற்றுத் தத்துவம் என்றார் ஸி. ஏ. பியர்டு என்னும் அமெரிக்க அறிஞர். ஆனல் ஹேகல் முதலிய வரலாற்றுத்தத்துவர்களுடைய முடிவுகளை ஏற்க மறுக்கிறார் ஜெ. பி. பியூரி. 'சமுதாய வளர்ச்சி என்னும் கதையை ஒரு விரைப்பான கட்டுக்கோப்பிற்குள் அடக்க முயல்கின்றனர் ஹேகல், குரோஸ் (Krause) முதலிய அறிஞர்கள்; அவர்களுடைய மரபு வரலாற்று விவரங்களை முற்றிலும் அறியாதது' என்றார் அவர். ஜி. எம். டிரெவிலியன் என்பார் 'வரலாற்றில் தத்துவம் இல்லை; அதற்கு ஒரு தத்துவம் நாம் தரவேண்டும்' என்றார்.

ஐரோப்பியக் கலாசார மறுமலர்ச்சி என்பது கி. பி. 14ஆம் நூற்றாண்டில் இத்தாலியில் தோன்றி 17ஆம் நூற்றாண்டிற்குள்ளாக ஐரோப்பா முழுவதும் பரவிய ஒரு புதுமை. இம் மறு மலர்ச்சியால் கிறிஸ்துவிற்கு முன்பு ரோம் முதலிய இடங்களில் பரவி இருந்த இலக்கியம், விஞ்ஞானம், கலை, வாழ்க்கைத்தத்துவம் முதலிய பண்புகளைத் திரும்பவும் ஐரோப்பியர் உணர்ந்து போற்றத் தொடங்கினர். இடைக்கால ஐரோப்பாவில் சமயம் தலை தூக்கி நின்றது. இம் மறுமலர்ச்சியின் காரணமாக அவ் விடைக் கால வாழ்க்கைத் தத்துவங்கள் பெரிதும் பாதிக்கப்படலாயின; பல மாறுதல்களுக்கு உள்ளாயின. இங்கிலாந்தில் ரோஜர்பேக்கன் (1214—1294) என்று ஒரு தத்துவ விஞ்ஞானியிருந்தார்; 1561—1626 வரை ஃபிரான்ஸிஸ் பேக்கன் என்னும் புகழ்பெற்ற ஆங்கி லேயத் தத்துவ ஞானியும், அரசியலரும், கட்டுரையாளரும் ஆன பெரியார் வாழ்ந்திருந்தார். இவ் விரு பேக்கன்கள் காலத்திற்கு மிடையே 'விஞ்ஞானத்தத்துவம்' ஒன்று வளர்ந்து முதிர்ந்தது.

இதனாற் பயனடைந்தவர்களில் 17ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த நியூட்டன், ஹார்வி என்பவர்களைக் கூற வேண்டும். இந் நூற்றாண்டில் இயற்பியல், வேதியியல் முதலிய விஞ்ஞானக் கலைகள் மிகுந்த முன்னேற்றத்தை யடைந்தன. இவ்வகை அறிவியல் இயக்கங்கள் ஒரு புதுவிதத் தத்துவத்தை உருவாக்கி, 18, 19ஆம் நூற்றாண்டுகளில் உயர்நிலை எய்திய பிற அறிவியல் துறைகளையும் மிகவும் பாதித்தன. இதனால் ஒருவகைச் சமுதாயத் தத்துவமே உருவாயிற்று. சமுதாய இயக்கங்களும் வரலாற்று நிகழ்ச்சிகளும் கூடச் சில அறிந்து அளவிடக்கூடிய விதிகளுக்கு உட்பட்டு நிகழ்கின்றன என்னும் கருத்து வலுத்தது. அன்றியும் விஞ்ஞான இயல்களில் மேற்கொள்ளப் பெறும் ஆய்வு முறைகள் வரலாற்றிற்கும் பொருந்தும் என்றும் கருதப்படலாயிற்று. வரலாறு என்பது ஒன்றன் பின் ஒன்றாக நிகழும் தனியன்களின் (facts) தொடர்ச்சியே என்னும் கருத்து மெலிந்து, இவையாவும் சேர்ந்து ஒரு பொருண்மை பயக்கக் கூடியவை என்னும் கருத்து வலுவடைந்தது. இத்தகைய பொருண்மையைக் கண்டுபிடிக்க முயற்சிகள் தொடங்கப்பட்டன. சிலர் இப் பொருண்மை வரலாற்று நிகழ்-முறைக்குப் (Process) புறம்பாகநின்று வரலாற்றைப் பொருளுள்ளதாகச் செய்யும் ஒரு சக்தி என்று 'வரையறை கடந்த' கோட்பாட்டை மேற்கொண்டனர்; மற்றுஞ் சிலர் இச் சக்தி அந் நிகழ் முறைக்குள்ளேயே அமைந்துகிடப்பதாகும் என்று கருதினர்.

அதனால் விஞ்ஞானத் துறையிற் காண்பதுபோல் காரண காரியத் தொடர்புகளை வரலாற்றுத் துறையிலும் ஆய்ந்து காண விரும்பினர். காரண காரியத் தொடர்பினை நிருணயம் செய்யும் பிற ஆக்கக்கூறுகள் (factors) உளவோ? உளவாயின் அவை யாவை? என்னும் வினாக்கள் விடைகோரின. இவற்றிற்கு விடைகாண இருவழிகள் இருந்தன. ஒன்று, விஞ்ஞான முறையை மேற்கொண்டு ஒப்புமை மரபில் பல சமுதாயங்களை ஒப்புப்பார்த்து அவற்றிடைத் தோன்றும் பொதுமைகளைக் கண்டு, அவை முன்னேறியுள்ள பாதையிற் காணப்படும் பொதுக் கூறுகள் யாவை என்றறிந்து அவற்றின் அடிப்படையில் பொதுமைத் தத்துவங்களை ஆக்கல்; இரண்டாவது, சமயமரபை மேற்கொண்டு வரலாற்றை இயக்குவது தெய்வீக சக்தி என்பது. 18ஆம் நூற்றாண்டிலேயே இரண்டாவது மரபின் வேகந்தணிந்து முதல் மரபின் செல்வாக்கு ஓங்கலாயிற்று. முதல் மரபினைத் தெளிவுற எடுத்துக்கூறிய அறிஞர் 'பிரபஞ்ச வரலாறுபற்றிய பிரவசனம்' (Discourse of Universal History-1681) என்னும் நூலை இயற்றிய போஸ்வே என்பார். இவர்களும் சமய மரபினை

யொட்டித் தெய்வீகக் கொள்கைகளைக் கூறினராயினும், அவற்றை இயற்கை முதலிய கோட்பாடுகளை வைத்துப் போர்த்தினர்.

18ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த அறிவொளித் தத்துவர் (Enlightenment philosophers) இடைக்கால மூடநம்பிக்கையி லிருந்து தாங்கள் விடுபட்டுவிட்டதாகக் கருதி அறிவொளித் தத்து வத்தைப் பரப்பினர். அவர்கள் கணக்குப்படி பகுத்தறிவு ஒன் றையே மூல ஆதாரமாகக் கொண்டு முடிவுகள் காணவேண்டும். பகுத்தறிவைக் கொண்டு (அதாவது தருக்க ரீதியாக) ஆய்ந்தறிந் தவையே தவிர்க்க முடியாத இயற்கை நெறி என்று அவர்கள் கண்டனர். 'வரலாற்று நிகழ் முறையில் நாம் காணும் சில பொதுமைகளைத் தவிர, வரலாற்று மொத்தமும் ஒரு குறிக்கோளை நோக்கி முன்னியங்குகின்றது; அக் குறிக்கோள் வரலாற்றுக்குப் புறம்பே நின்று அதனை இயக்குகின்றது; இவ் விளக்கம் சற்றேனும் மாறுமாயினும் அம் மாற்றத்திற்குத் தனிப்பட்ட விளக்கங்கள் தர வேண்டும். 'இக் குறிக்கோளும், அதை நோக்கிச் செல்லுகின்ற பாதையும் நடுநிலையானவை (neutral) அல்ல; அவை ஒழுக்கவியல் முறையிற் சிறந்தவை என்று கொள்ளவேண்டும்' என்பவை அவர்க ளுடைய கருத்துகள். ஆயினும், 'ஏன் அவ்வாறு கொள்ளவேண்டும்' என்னும் வினவிற்குத் தருக்க ரீதியாக அவர்களால் பதிலளிக்க இயலவில்லை. மேற்கூறிய கருத்து 18, 19ஆம் நூற்றுண்டுகளில் பரவலாகத் தோன்றிய சமுதாயச் சீர்திருத்த இயக்கங்களிலும், முன்னியக்கக் கோட்பாட்டிலும் காணப்பட்டது. மேற்போக்காக ஒழுக்கநெறிக் கருத்துகளைக் கூறினராயினும் அறிவொளி இயக்கத் தினர் பகுத்தறிவு (Reason), அனுபவமுறை (Empiricism) என்ப வற்றை இறுதியாக வற்புறுத்தினர். 18ஆம் நூற்றுண்டு அறிவொளி இயக்கத்தினர் சாதித்த பெருஞ்சாதனை, வெளிப் படையான தெய்வீகக் கோட்பாடுகளை ஒதுக்கிவிட்டமையே யாம்.

இக் காலத்தில் தோன்றிய கருத்துகளில் முக்கியமானவை மூன்று: (1) மனிதகுலத்தைப் பூரணச் சிறப்படையச் செய்ய முடியும்; (2) வரலாற்று நிகழ்முறை தவிர்க்கமுடியாதது; (3) சமுதாய நிகழ்முறையை மனிதன் மாற்றியமைக்க முடியும். இதில் விந்தை யாதெனில் இம் மூன்று கருத்துகளும் ஒரே சமயத்தில் பலரிடையே பரவியிருந்தமையே. இக் கருத்துகளைப் பரப்பிய முன்னேடிகள் என்று கருதத் தக்கவர்கள் டர்கோ (Turgot), கண்டார்செ (condercet) என்னும் ஃபிரெஞ்சு அறிஞர்கள். அவர்களைப் பின்பற்றிப் பத்தொன்பதாம் நூற் றுண்டில் செயின்ட் சைமன் (Saint Simon), காம்ட் (Comte), மார்க்ஸ் என்போர் தமது கோட்பாடுகளை உருவாக்கினர்.

இவ் வகை விளக்கங்களைத் தவிர விக்கோ (Vico), ஹெர்டர் (Herder), மான்டெஸ்க்யூ (Montesquieu) என்போர் வேறு சில கொள்கைகளை நிறுவினர். தேகார்ட்டே (Descarts) என்னும் ஃபிரெஞ்சுக்கணிதத்துவர் நிறுவிய 'கார்த்தீசிய'க் கோட்பாட்டினை விக்கோ ஏற்றுக்கொள்ள மறுத்தார். (தேகார்ட்டேயின் ஆதாரக் கோட்பாட்டினைக் 'கார்த்திசிய'க் கோட்பாடு என்பர்.) தேக்கார்ட்டே கூறியதாவது: 'கணிதத்திலும் பிற விஞ்ஞான இயல்களிலும் பொது உண்மைகளைக் கண்டால் அவை எல்லா நிகர்நிலைகளுக்கும் பொருந்துவனவாம்' என்பது. இதனை மறுத்த விக்கோ 'பொதுவாக மனிதர்களைப்பற்றிய உண்மை ஒரு தனி மனிதனுக்குப் பொருந்தாமலும் இருக்கலாம்; மக்களுடைய அளவை மனிதனுக்கு ஏலாமலிருக்கலாம்' என்றார். விக்கோவும் ஹெர்டரும் 'தற்கால அறிவியல் பகுத்தறிவு என்பவற்றைக் கொண்டு பழைமையை அளந்துவிட முடியாது' என்றனர். நிகழ் காலக் கருத்தளவைகளைக் கொண்டு இறந்தகால நிகழ்ச்சிகளின் தன்மையை அளவிட முயலுவதால் கட்டுக்கதைகள் பிறக்கின்றன. மனித இயல்பு என்னும் செயற்கைக் கோட்பாட்டை நிறுவிக் கொண்டு, குருட்டுத்தனமாக அக் கோட்பாட்டினைப் பழைமைக்கு ஏற்றுதல் தருக்க முறைக்கு மாறானது என்று அவர்கள் சுட்டினர். எல்லாவற்றையும் நிகழ்காலத்தை வைத்தே கணக்கிடுதல் வரலாற்றாளருடைய தன்மையாகும்; அது இயற்கையுமாகும்; ஏனெனில், வரலாற்றாளர் ஒரு நிகழ்காலத்தனியன் (fact). அவர் இறந்த காலத்திலோ எதிர் காலத்திலோ இருக்க முடியாது—அதாவது அவர் ஆய்வு நடத்தும்போது. ஆதலால் நிகழ்காலக் கோணத்திலிருந்தே அவர் வரலாறு முழுமையையும் காண்கிறார். அவருக்குப் பழைமை என்பது 'நிகழ்கால ஞாபகங்களின் தொகுதி; உடன் காலம் என்பது 'நிகழ்காலச் சிந்தனைகள்'; வருங்காலம் என்பது 'நிகழ்காலத்தின் எதிர்நோக்குகள்' என்பது ஒரு வகைப் பாகுபாடு; அது நிகழ்காலத்தை எல்லாக் காலத்திற்கும் ஓர் அடிப்படையாகக் கொள்கின்றது. இது பொருந்தாது என்பது விக்கோ முதலியோருடைய கருத்து.

காம்ட் முதலிய ஃபிரெஞ்சுத் தத்துவர்கள் விஞ்ஞானத்தின் பொதுத் தன்மையை வற்புறுத்தித் தமது 'உடன்பாட்டு'க் கோட்பாட்டினை நிறுவினர்; அக் கோட்பாடு மிக விரைவிலேயே அறிவியலுலகில் மிகுந்த செல்வாக்குப் பெற்றுவிட்டது. காம்ட்டின் தத்துவத்தால் மிகுதியும் பாதிக்கப்பட்டவர்களில் முக்கியமானவர் மார்க்ஸ் எனலாம். ஆயினும், மார்க்ஸின் அறிவியலைப் பாதித்து இன்னொரு பெரிய ஐரோப்பியத் தத்துவரான ஹேகல் வரலாற்றின் தனித்தன்மையை வற்புறுத்தினார். இயற்கை நிகழ்ச்சி

களுக்கும் வரலாற்று நிகழ்ச்சிகளுக்கும் இடை எழும் வேறுபாடுகள் பல என்றார் ஹேகல். பகுத்தறிவு, பரிணாமம் (மனித இச்சையால் தோன்றும் வளர்ச்சி), நிகழ்-முறை, சுதந்திரம் என்னும் கருத்துகள் யாவையும் வரலாற்று வளர்ச்சிக்குமட்டும் பொருந்துபவை; இவற்றை விஞ்ஞான அளவைகளால் அளவியற்படுத்தி அளந்து காணமுடியாது என்பது இதன் கிளைமுடிவு (corollary). 'ஒரு சில அறிவியல் துறைகளில் (உதாரணமாக, அளவியற்படுத்தற்கெளிய விஞ்ஞானத்துறையில்) பயன்படும் நிகழ்-முறைகள், சோதனைக் கருவிகள் முதலியவை பிற அறிவியல் துறைகளுக்கும் (உதாரணமாக, வரலாறு) பொருந்துவனவாம்' என்னும் கருத்தை ஒப்புக் கொள்ள மறுத்தமையாலேயே ஹேகல் தமது புகழ் பெற்ற விவாதக் கோட்பாட்டினை (dialectics) நிறுவினார்.

வரலாற்றுத் தத்துவம் என்பது பெரும்பாலும் இரு பொருள் ஈனும்: (1) வரலாற்று நிகழ்ச்சிகள் யாவையும் முன்பே நிருணயிக்கப்பட்டுவிட்டவை; அல்லது அவற்றிற்கு ஒரு பொருள் வரலாற்றிற்குப் புறம்பே நிற்கும் ஒரு சக்தியால் ஆக்கப்படுகின்றது என்னும் கொள்கைகளை ஏற்றுக்கொண்டு அத்தகைய பொருண்மை யொன்றைக் கண்டுபிடிக்க முயலுதல்; (2) இறந்த கால நிகழ்ச்சிகள் ஒரு முன்வரைவினைத் தோற்றுகின்றவையாயினும், இனி நிகழப்போகும் தனியன்களின் (fact) தன்மையை மனிதன் தனது முயற்சியால் மாற்றிவிட முடியும்; அவ்வாறு அவன் முயல வில்லையெனின், முன்பு அமைந்துகிடந்த வரைவு தொடர்ந்து நிகழும். இவ் விரு கருத்துகளில் முந்தியது ஸ்பெங்ளர் என்னும் ஜெர்மானிய அறிஞர் மேற்கொண்டது; பிந்தியது ஆர்னல்டு டாயின் பீ என்னும் பிரிட்டிஷ் வரலாற்றுத் தத்துவர் ஏற்றுக் கொண்டது.

வரலாற்றுத் தத்துவம் என்பது நன்கு வரையறுக்கப்பட்ட எல்லைகளையுடைய பிரச்சினைகள் அடங்கிய ஓர் அறிவியற்பகுதி யன்று. 18ஆம் நூற்றாண்டிறுதிவரையில் வரலாற்றாளர்கள் மேற் கொண்ட ஆய்முறைகள், கையாண்ட வரலாற்று வரைவியல் மாதிரிகள் என்பவற்றால் தோற்றுவிக்கப்பெற்ற பிரச்சினைகள் சில தத்துவ நிலைகளை யுருவாக்கின. இவை 19ஆம் நூற்றாண்டு வர லாற்றாளர்களால் ஆய்விற்கு மேற்கொள்ளப்பட்டன. மதிப்பீடு களும், திறனாய்வுகளும் முக்கியமான அறிவியல் அளவைகள் ஆயின. வரலாற்று அறிவின் தன்மை, வரலாற்றிற்கும் விஞ்ஞானத்திற்கும் உள்ள தொடர்பு போன்ற பிரச்சினைகள் தத்துவர்கள் கவனத்தை மேலும்மேலும் ஈர்ப்பனவாயின. டில்தி (Dilthey), குரோச்சே (Croce), காலிங்வுட் (Collingwood)

என்போர் வரலாற்று அறிவியலை (Historical epistemology) ஆராயத்தொடங்கினர்: வரலாறு ஒரு தனித்தன்மை பெற்ற அறிவியல் துறை என்று நிறுவ முற்பட்டனர்; விஞ்ஞானத்துறை களில் மேற்கொள்ளப்படும் ஆய்முறைகளை வரலாற்றாய்வில் மேற் கொள்ளுதல் தவறான நடைமுறை என்றனர். இந் நூற்றாண்டுத் தொடக்கத்தில் வரலாற்றுத் தத்துவம் இருகிளைகளாகப் பிரிந்தது. (1) கற்பனை முறையில் தத்துவக்கோட்பாடுகளை வரலாற்றுப் போக்கில் காணமுற்படுதல் (ஸ்பெங்ளர், டாயின் பீ என்போரைப் போல); (2) வரலாற்று நடைமுறை (practice), ஆய்முறை (research methods), நிகழ்முறை (processes), கலைச்சொற்கள், வகைகள் என்பவற்றை அமைத்தல்.

பண்டைக் காலத்திலிருந்தே வரலாற்றாளர்கள் இயற்றிய நூல்களில் ஓரளவு தத்துவம் அமைந்துகிடந்ததாயினும், கற்பனை-கலைக்காலத்தில் (The Romantic Age) தான் இத் தத்துவங்களுக்குப் பெயரிட்டு அமைத்து ஒழுங்குபடுத்தும் முயற்சி தோன்றிற்று. யூஸீபியஸ் (கி. பி. 260—340) காலத்திலிருந்து பாஸ்வே (Bosswet) (1627—1704) காலம் வரை விளங்கின கிறிஸ்துசமயச் சார்பான வரலாற்றாளர்கள் பல தத்துவங்களைத் தங்கள் நூல்களில் பொதிந்து வைத்திருந்தனர். கற்பனைக் கலையார்வம் கொண்ட 19ஆம் நூற்றாண்டின் தொடக்கப்பகுதிச் சிந்தனையாளர்கள் மனிதவரலாற்றின் பழைமையில் ஆர்வம் கொள்ளலாயினர்; பழைமையைப்பற்றிக் கற்பனைக் கருத்துகள் தோன்றலாயின. வீக்கோ:காலத்திலிருந்து வரலாற்றுத் தத்துவம் ஒரு தனித்தன்மை எய்தலாயிற்று. ரூஸோ, டர்கோ முதலிய அறிஞர்கள் வரலாற்றுத் தொடக்கத்தைப்பற்றிப் புதுக் கருத்துகளைக் கூறினர். ஜெர்மானிய அறிஞரான ஹெர்டர் (Herder 1744—1803) என்பார். 'மனித குல வரலாற்றின் தத்துவங்களைப்பற்றிய கருத்துகள்' என்று ஒரு நூலியற்றினார்; மற்றொரு ஜெர்மானியத் :தத்துவரான காண்ட் (Kant 1724—1804) என்பார் 'பிரபஞ்ச வரலாறு என்னும் கருத்து' என்னும் நூலில் வேறு சில கருத்துகளை நிறுவினார். ஃபிக்டெ (Fichte 1762—1814) என்னும் ஜெர்மானியர் 'ஜெர்மன் மக்கள் பிறர் யாவரினும் உயர்தர இனத்தைச் சேர்ந்தவர்கள், அவர்கள்ஆளப்பிறந்தவர்கள் —இவ் வேறுபாடெல்லாம் ஊழான மைந்தவை'' என்னும் கருத்தைத் தோற்றுவித்துப் பிற்கால ரோஸன்பெர்க், ஹிட்லர் முதலியவர்களது 'ஜெர்மானியத் தனி உயர்ச்சிக்' கொள்கைகளுக்கு வித்திட்டார். ஷெல்லிங் (1775—1854) என்னும் இன்னுமொரு ஜெர்மானியத் தத்துவர் ஃபிக்டெ யின் செல்வாக்கிற்குட்பட்டார். அவர் 'வரலாறு என்பது முழுமுத லின் சுயவெளித் தோற்றம்' என்னும் கருத்தை வெளியிட்டார்.

ஷிலேகல் (schlegal 1772—1829) என்னும் ஜெர்மானியர், 'மனித வாழ்க்கைக்கு ஓர் ஒற்றுமையையும் உட்பொருளையும் ஆக்கித் தருவதே வரலாற்றின் கடமை' என்றார்; 'ஆண்டவன் தன் உருவில் மனித குலத்தை ஆக்கிப் படிப்படியாக அதனை வளர்த்த கதையே வரலாறாகும்' என்றும் கூறினார் அவர். 'மனிதனது உள்ளுறு வேண்டுகின்ற சுதந்திர வேட்கையின் தன்-உணர்ச்சி (self consciousness) பரந்து வெளிப்படுகையே வரலாற்றின் தத்துவம்' என்றார் ஹேகல். ஃபிரிட்ரிச், கிராஸ் (Friedrich Krause, 1781—1832) என்பார் ஒரு தனிமனிதனின் வாழ்க்கை நிலைகளை வரலாற்று நிலைகளோடு ஒப்பிடலாம் என்று கருதினார். இவ்வாறு பல புகழ் பெற்ற ஜெர்மானியர்கள் வரலாற்றுத் தத்துவக் கோட்பாடுகளை உருவாக்கினர் என்பது புலனாகும்.

தியடோர் ஜாப்ரே (1796—1842) என்பார் இயற்கைத் தோற்றங்களுக்கும் மனிதவரலாற்றிற்கும் ஓர் அடிப்படை வேறுபாடு இருப்பதாகக் கருதினார். அவர் கருத்துப்படி மனிதன் முன்னேற்றத்திற்கு உட்பட்டவன்; முன்னியக்கம் அவனுக்கு உரியது; ஆனால், பிற ஜீவராசிகள் எப்போதும் ஒரு நிலைப்பட்டவை. இக் கருத்து டார்வின் பரிணாமக்கொள்கையை நிறுவுதற்கு முன்பு வெளியிடப்பட்டது என்பது தெளிவு. மனிதனின் கருத்துப் பரிணாமமே பிற மாறுதல்கள்—வளர்ச்சிகள் என்பவற்றிற்கு அடிப் படையில் நிற்பது என்பது ஜாப்ரேயின் கருத்து. எட்கார் குவினெட் (1803—1875) என்பாரும் இக் கருத்துகளையே தமது 'வரலாற்றுத்தத்துவம்' என்னும் நூலிற் கூறினார். வரலாற்றுத் தத்துவத்தை எடுத்துரைத்த ஃபிரெஞ்சு அறிஞர்களில் டர்கோ, செயின்ட்-சைமன், காம்ட் என்போர் குறிப்பிடத்தக்கவர்கள். இங்கிலாந்தில் காலிங்வுட் என்பாரைத் தவிர வரலாற்றுத் தத்துவத்தை ஆய்ந்தவர்கள் பிறர் பலர் இலர். சமூகவியலரான ஹெர்பர்ட்ஸ்பென்ஸர், பக்கிள், லேஜாட், லெஸ்லி ஸ்டீபன் என்போரும் வரலாற்றுத் தத்துவத்தை ஓரளவு ஆய்ந்துள்ளனர். அண்மைக்காலத்தில் வரலாற்றுத் தத்துவக் கோட்பாடுகள் முறையே வளர்ந்துவந்துள்ள சரித்திரத்தை 'ஐரோப்பாவில் வரலாற்றுத்தத்துவம்–ஃபிரான்ஸிலும், ஜெர்மனியிலும்' என்னும் நூலை இயற்றிய இராபர்ட் பிளின்ட் (1838—1910) என்பார் விரிவாக விளக்கியுள்ளார்.

ஹேகல் கூறிய விவாதக் கோட்பாட்டினை மேற்கொண்டு புதியதொரு வரலாற்றுத் தத்துவத்தை நிறுவியவர் காரல்மார்க்ஸ் என்பவர். அவர் மனிதகுல, சமுதாய வளர்ச்சி முற்றிலும் பொருளாதாரக் கூறுகளாலேயே நிருணயிக்கப்படுகின்றது

என்னும் நிருணயக் கொள்கையை நிறுவினர். பெனடெட்டோ குரோச்சே என்னும் இத்தாலியர் ஒரு புகழ்பெற்ற வரலாற்றுத் தத்துவர்; அவர் முக்கியமாக ஒரு கலை ஆய்வாளர்; ஆயினும், அவர் வரலாற்றுக் கோட்பாடுகளைப்பற்றியும் விரிவாக ஆராய்ந்துள்ளார். அவர் கொள்கைப்படி வரலாறு என்பது நிகழ்காலத்தில் வெளிப்படும் உண்மை (Reality); இதில் பழைமையின் நினைவுகளும் வருங்காலத்தின் கருவும் அடங்கியிருக்கும். 'வரலாறு என்பது மனிதனுடைய உள்ளம் இயங்கும் கதை; அவ் வுள்ளம் சில இலக்கியங்களைக்கொண்டு விளங்கும்; இவை அவனுடைய கலைப்படைப்புகளில் வெளியாகும்'. பால் பார்த் என்னும் ஜெர்மானிய வரலாற்றுளர் வரலாறு வேறு, வரலாற்றுதத்துவம் வேறு என்று கொண்டு பிந்தியதைச் சமூகவியலின் பகுதியாகக் கருதினர்; இக் கருத்தை மேற்கொண்டு 'சமூகவியலான வரலாற்றுத் தத்துவம்' என்னும் நூலை அவர் இயற்றினர். 'வரலாற்றில் சமுதாயப் பரிணமம் கூறப்படும்; அப் பரிணமப்போக்கில், சுபிட்சமான நாள்களும், ஊழிக்காலமும் மாறிமாறி வந்துகொண்டிருக்கும்' என்னும் கருத்தை ஃபிரடரிக் எரோசின் என்பார் தாமியற்றிய 'சமுதாய மற்றும் கலாசார இயங்கியல்' என்னும் நூலில் விவரித்துள்ளார். இக் கருத்து இந்துக்கள் தமது சாத்திரங்களில் கூறி வைத்துள்ள யுகக் கொள்கையைப் போன்றது.

# 9. முன்னியக்கம்

## (Progress)

'முன்னியக்கம்' (Progress) என்னும் சொல் ஓரிடத்திலிருப்பான் அவ்விடத்தினின்றும் 'முன்பாகப் போதல்' என்று பொருள்படும். இது பெரும்பாலும் இடையூறுகளை எதிர்த்துத் தான் விரும்பிய திசையில் தான் விரும்பிய வேகத்தில் மேலும் மேலும் செல்லுதல் என்னும் பொருளையே பயக்கும். இம் முன்னேற்றம் வளைந்தோ, வட்டமாகவோ, நேராகவோ அமைவது என்று கருதப்படும். இந் நேரியக்கக் கருத்து அண்மைக்காலத்தில் எழுந்தது; இதற்கு மாறாக, பண்டைக்காலத்தில் 'மனித வரலாறு சுற்றிச்சுற்றி வந்து கொண்டேயிருக்கும் ஒருவகைச் சுற்றியக்கம்' என்று கருதினர். இஃது இவ்வாறாயின் அவ் வியக்கத்திற்கு ஒரு தொடக்கமோ ஒரு முடிவோ இராது. தொடக்கமும் முடிவும் ஒன்றில் ஒன்று மறைந்துபோய் வட்டம் மட்டும் எஞ்சிநிற்கும்; அவ் வட்டம் குயவனது திகிரி போல் சுற்றிக்கொண்டேயிருக்கும். அவ் வட்டத்தின் சுற்றுவரையில் உள்ள ஒவ்வொரு புள்ளியும் வரலாற்றின் ஒவ்வொரு தனிப்பட்ட நிலையைக் குறிப்பதாயிருக்கும்; ஆயினும், அவற்றிற்குக் கணக்கிட்டுக் குறிப்பிடக்கூடிய ஓர் உச்ச எண் ஏற்பட்டுவிடும். ஆனால், வரலாறு என்பது ஒரு நீண்ட நேர்க் கோட்டில் தொடர்ந்து செல்வதாகக் கருதப்பட்டால், அத்தகைய மொத்த எண் காண்டல் அரிது என்பதும் விளங்கும். பூமியில் உருளும் ஒரு சக்கரம் ஒரு முறை சுற்றிவிட்டால், பிறகு முன்பு அச் சக்கரத்தில் பூமியைத் தொட்ட இடங்களே திரும்பத் திரும்ப அதே வகையில் தொட்டுக்கொண்டே வரும் என்பது காணப் படும். பண்டைய கிரேக்கர்கள், இந்துக்கள் முதலியோர் சுற்றியக்கக் கொள்கையை மேற்கொண்டிருந்தனர். ஆனால், பண்டைய எபிரேயர்களைப் போல இடைக்கால ஐரோப்பியர் களும் மனித இனம் ஒரு குறிப்பிடக்கூடிய குறிக்கோளை நோக்கி முன்னேறி வருவதாக எண்ணினர். இவ் வெண்ணம் சமயக் கருத்துகளின் உந்துதலால் ஏற்பட்டது. ஆயினும், மனிதன் தன் முயற்சியாலேயே காலப்போக்கில் முன்னேறிச் சென்று பூரணச் சிறப்பையுடைய ஓர் இலக்கை அடையக்கூடும்; உறுதியாக அடை வான் என்னும் கருத்து நவீனகாலக் கருத்தேயாம்.

'முன்னேற்றம்', 'முன்னியக்கம்' என்னும் சொற்களில் 'முன்' என்னும் அடைமொழி நல்ல, விரும்பத்தக்க இலக்கை நோக்கிச் செல்வது என்னும் கருத்தைத் தோற்றுவிக்கின்றது உண்மையே; ஆனால் இதுவரை நிகழ்ந்துள்ள மாறுதல்கள் நல்லவையா அல்லவையா என்பதைப்பற்றிய கருத்து வேறுபாடு இருத்தல் இயல்பே. அன்றியும் நல்ல குறிக்கோள் அல்லது இலக்கு என்பது யாது என்பதைப்பற்றியும் அடிப்படையான கருத்து வேறுபாடு இருக்கலாம். இக் கருத்துகளேயன்றி, காலப் போக்கில் மனிதன் அடித்துச் செல்லப்படுதல் உண்மைதான், ஆயினும் சில சமயங் களில் அவன் விரும்பத்தக்க முறையில் நல்லவற்றைச் சாதிக்கிறான்; அதே சமயத்தில் அல்லது பிற சமயங்களில் அவன் பின்தங்கிவிடு வதோ பின்நோக்கிச் செல்வதோகூட நடைபெறலாம் என்னும் கருத்துகளையும் காணவேண்டும். எல்லாத் துறைகளிலும் எப் போதும் எல்லோரும் நல்லிலக்குகளை நோக்கி ஒரே வேகத்தில் கை கோத்துக்கொண்டு பீடு நடைபோடுகின்றனர் என்று வரலாறு கூறவில்லை; உண்மையில் இதற்கு மாறான விவரங்கள் பல வரலாற் றில் கிடைக்கின்றன. உதாரணமாக, தற்கால உலகத்தில் விஞ் ஞானமும் நுண்ணிய கைத்தொழில் கலைகளும் மிக முன்னேறி யுள்ளனவாயினும், அறிவுத்துறையில் மனிதனது முன்னியக்கம் பெருமளவிற்றாயினும், ஆன்மிகத்துறையில், சமய உணர்ச்சிகளில், நுண்கலைகளில் அத்துணை முன்னேற்றம் அடையவில்லை என்பதே யன்றிச் சற்றுத் தேக்கமும் பின்னியக்கமும்கூட ஏற்பட்டுள்ளதைக் காணலாம். விஞ்ஞான அறிவின் வளர்ச்சி ஆன்மிக அமைதியைப் பாதித்துள்ளதோ என்று சற்று ஐயப்படவும் இடமுண்டு. மனிதன் பறவைகளோடு பறக்கவும், மீனோடு நீந்தவும் கற்றுக் கொண்டனனேயன்றி, மனிதனோடு மனிதனாக வாழக் கற்றுக் கொள்ளவில்லை என்னும் உண்மை வற்புறுத்தப்பெறும். இதே உண்மை வெவ்வேறு விதங்களில் வெவ்வேறு காலங்களுக்கும் பொருந்தும். ஐரோப்பிய இடைக்காலத்தில் சமயம் தலைதூக்கி நின்றது; உலகியல், மானுடம் என்பவை சற்றுப் புறக்கணிக்கப் படலாயின. வரலாறு வரைவோர் தாம் விரும்பும் கோட் பாடுகள், இலக்குகள், இயக்கங்கள் அவற்றின் அடிப்படையில் எழுந்த சாதனைகள் என்பவை சிறந்து விளங்கிய காலங்களை பொற்காலங்கள் என்பர்.

பழங்காலத்து நிகழ்ச்சிகளின் தன்மையைப்பற்றி ஒருவன் கொண்டுள்ள கருத்தடிப்படையில் எதிர்காலத்தையும் கணக்கிடு வான்; இக் காரணத்தால்தான் சிலர் எதிர்காலத்தைப்பற்றி நம்பிக்கையோடும் வேறு சிலர் நம்பிக்கை இழந்தும் பேசுகின் றனர். ஆனால், பழைமையைப்பற்றிக் கூறும்போது, சான்றுகளைக்

கொண்டு, விவரங்களை வைத்துக்கொண்டு பேசலாம்; ஆனால் எதிர் காலத்தைப்பற்றி ஒருவரும் ஒன்றும் அறியாராதலின் ஒன்றும் கூற இயலாது. எதையேனும் சொல்ல முற்பட்டால், அது அவர்கள் விருப்பக்கூற்று யமையுமேயல்லாமல், வேறன்று. சிலர் எதிர் காலமே வரலாற்றில் மிக முக்கியமான காலம் என்றுகூடக் கருதுவர்; ஏனெனில், இறந்தகாலம் இறந்தேவிட்டது,[1] அதைப் பற்றிச் செயற்பாலது ஒன்றுமில்லை. நமது அறிவு, அனுபவம் என்பவற்றைக்கொண்டு எதிர்காலத்தை உருவாக்குவதே இனி நாம் செய்யக்கூடியது ஆதலின், நடைபெற்றுவிட்ட வரலாற்றை விட இனி நடக்கப்போகும் வரலாறுதான் முக்கியமானது என்று எண்ணுவர். எதிர்காலத்தை ஒரு பொற்காலமாக அமைக்க முடியும் என்று கருதுவோர் யாவரும் முன்னியக்கத்தில் தீராத நம்பிக்கை கொண்டவர்கள். ஆனால் பெரும்பாலும், உண்மை யான வரலாற்று நிகழ்ச்சிகள் நம்பிக்கையைப் பொய்ப்பித்து விடுதலும் உண்டு. விரும்பத்தகாததை எதிர்நோக்குவதைவிட எந்த நம்பிக்கையுமின்றி இருத்தலே சிறந்ததாகலாம். நேரியக் கத்தில் நம்பிக்கை வைப்பவர்கள் அனுபவத்தின் உதவியால் தவறு களைத் திருத்திக்கொண்டு முன்னேறலாம் என்று கருதுவர். இறந்த காலம் அனுபவத்தையும் எதிர்காலம் நம்பிக்கையையும் உணர்த்து கின்றன என்பதை முதற்கண் அறிதல் வேண்டும்.

முன்னியக்கம் என்பதுயாது? சூழ்நிலையை மேலும் மேலும் சிறப்புறச் செய்தலா, அச் சிறப்பின் உதவிகொண்டு மனிதன் தனது விருப்ப இலக்குகளை அடைதலா, அன்றிக் கருத்துலகில் முன் னேற்றமா? சூழ்நிலையைத் திருத்திக் கொண்டால்மட்டும் போதாது; அதனைப் பயன்படுத்தும் முறையையும் திறமையையும் கூட மனிதன் அடைய வேண்டும் என்க. இக் கண்கொண்டு கண் டால் மனிதன் முன்னேற்றம் முழுவதும் மனத்தின் முன்னேற்றம் என்ற அளவில் அமையும்: அதாவது விஞ்ஞானமும் தொழில் திறமையும் அளிக்கும் சாதனங்களைக்கொண்டு சமுதாய நலன்களை யடைய முற்படவேண்டும் என்பது. இயற்கையின் எதிர்ப்புகளைச் சமாளித்துக்கொண்டு முன்னேற வேண்டியிருத்தலின், விஞ்ஞானத் தின் உதவி இன்றியமையாதது எனலாம். 'இக் காலத்தில் விஞ்ஞானம் அடைந்துள்ள வெற்றிகளைக் காணும்போது மனித னுடைய அறிவு ஆற்றலுக்கு எல்லையேயில்லை என்று தோன்று கிறது என்று கூறலாம் என்றார் கண்டார்செ (Condorcet) என்னும்

[1] எதிர்காலத்தைத் தமிழில் 'வாராக்காலம்' என்றனர். உண்மையில் இறந்த காலத்தைத்தான் அவ்வாறு கூறவேண்டும்; அதுதான் 'திரும்ப வாராக் காலம்'; எதிர்காலம் 'வாராக்கால'மன்று, அதுதான வருங்காலம்.

ஃபிரெஞ்சுக் கணிதத்தத்துவர். அகஸ்ட்காம்ட் (Auguste comte) என்னும் வேறொரு ஃபிரெஞ்சுத்தத்துவர் முன்னியக்கம் உறுதியாக ஏற்படும் என்று நம்பியவர்; 'மனித நாகரிகம் எல்லாத்துறையிலும் முன்னேறிவருதல் கண்கூடு; இம் முன்னேற்றத்தால் சமுதாயமும் சீர்திருந்திச் சிறப்புற்றுவருகின்றது என்று அவர் கருதினர். இனி விக்கோ (Vico) என்னும் இத்தாலியத்தத்துவர் 'Scienza Nuova' —புது விஞ்ஞானம்—என்னும் ஒரு நூலே இயற்றினர். அதில் 'மனி தனது செயற்பாடுகள் ஒரு மண்டலத்தில் சுழன்றுவருவன; அவ் வப்போது அதே நிகழ்ச்சிகள் திரும்பத் திரும்ப நிகழும்: அன்றியும் வட்டமாகவோ சூழலாகவோ வாராமல் நேர்க்கோடாக இயங்கு தலும்ஆம்' என்றெல்லாம் கூறினர். இவ் வியக்கக் கோட்பாடுகள் முன்னேற்றத்தின் தன்மையைப்பற்றி ஒன்றும் கூறுவன அல்ல. இதை ஆராய்ந்த ஜான் ஸ்டூவர்ட் மில் (John Stuart Mill) என்னும் ஆங்கிலேயத் தத்துவர் 'இவ் வியக்கத்திற்கு நல்லதொரு தன்மை யுண்டு; அதாவது மேலும் மேலும் விரும்பத்தக்க வகையில் சிறப் புறும்' என்றார்; 'இனிவரும் நிலேகள் இப்போதுள்ளதற்கும் சிறந்த தாகவும் மகிழ்ச்சி தருவனவாகவும் அமையும்.' கார் (carr) என்னும் மற்றோர் ஆங்கிலேய வரலாற்று அறிஞர், 'முன்னியக்கத்திற்குத் தடைகள் ஏற்படுவதுண்டு; ஆனல் இறுதியில் அவற்றையும் மீறிக் கொண்டு முன்னேறுதல் உறுதி' என்று கருதுவார்.

முன்னியக்கத்திற்கும், வெறும் வேறுபாடு அல்லது வெற்று இயக்கம் என்பதற்கும் உள்ள வேறுபாட்டினே உணரவேண்டும். முன்னியக்கத்திற்கு 'விரும்பிய, விரும்பத்தக்க திசையில் தேவைப் பட்ட தன்மையையுடைய இலக்கைநோக்கிச் செல்லுதல்' என்று பொருள் கொள்ளலாம். இன்றேல், வரலாற்றிற்குத் திசையே யில்லாமல்போகும். 'முன்னியக்கம் என்பது பழைமையின் அனு பவத்தொகுப்பும் எதிர்காலத்தைப்பற்றிய முன்னறிவும் சேர்ந்த ஒரு சேர்க்கை' என்றார் பியூரி (Bury) என்னும் ஆங்கிலேய வரலாற் றுளர். மார்க்ஸியக் கொள்கையாளரும், அவர் போன்றோரும் என்றோ ஒரு காலத்தில் இவ் வுலகிலேயே சுவர்க்கம் ஒன்று ஏற்பட்டு விடும் என்னும் கருத்துடையர். 'இக் கருத்து எதிர்கால வரலாற்று நிகழ்ச்சிகளோடு பொருந்துவதாயினும் பொருந்தாதாயினும், வருங்காலத்தில் சிறப்பெய்துதற்கு அது சாத்தியமாகும் என்னும் நம்பிக்கை இன்றியமையாதது' என்று கார் கூறுவார். 'பழைமை யைப் புரிந்துகொள்ள எதிர்காலத்தில் நிகழப்போவன உதவும்' என்று சற்று முரண்பாடு தோன்றச் சிலர் கூறுவர். இதன் கருத்து யாதெனில் இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூன்றற்கும் தொடர்புண்டு; இத் தொடர்பியக்கம் முன்னியக்கத்தில் கொண்டு போய்ச் சேர்க்கும் என்பதே.

'சென்ற இரு நூற்றாண்டுக் காலமாக மக்களது எல்லாக் கருத்துகளையும் ஊடுருவிநிற்கும் அடிப்படைக் கொள்கை யொன்றுண்டாயின் அது முன்னியக்கக் கோட்பாடே' என்றார் ஸி.ஏ. பியர்டு என்னும் வரலாற்றாளர்; மேலும் அவர் 'சிலர் நீங்கலாகப் பண்டைக்கால அறிஞர்களில் பெரும்பாலோர் சுற்றியக்கத்தில் நம்பிக்கைகொண்டவர்கள்; சில கட்டங்கள் அல்லது நிலைகள் வாயிலாக மனிதகுலம் சுற்றிச்சுற்றி வந்துகொண்டிருக்கும் என்று எண்ணியவர்கள்; இடைக் காலத்தில் கருத்தும் நடப்பும், 'மனிதன் ஒரு பாவி, அவன் முன்பு செய்த குற்றங்களுக்காக இப்போதும் இனியும் வருந்துவான்; அனுபவம் இவ் வுலக வாழ்க்கையோடு முடிந்துவிடாது, இறப்பிற்குப் பின் துறக்க, நரகங்கள் உள என்னும் எண்ணங்களால் உருவானவை. வாணிகமும், விஞ்ஞானமும், தொழில் செய்முறைகளும் வளர்ந்தபிறகுதான் மனிதனின் அளவிறந்த, முடிவற்ற எதிர்காலத்தின் தன்மையை அவன் உணர முடிந்தது. நிரூபிக்கமுடியாத (மூட) நம்பிக்கையிலிருந்து அவன் விடுபட்டான். எதிர்காலத்தின் தன்மையைக் கருதாமலே நிகழ்காலத்திலேயே மக்களினத்தின் வாழ்க்கைத்தரத்தைச் சீர்ப்படுத்திச் செம்மையாகவும் சிறப்பாகவும் அமைக்கமுடியும் என்னும் உணர்ச்சி பிறந்தது. இவ் வகையில்தான் முன்னியக்கக் கருத்துமே மேனாட்டில் தோன்றிவளர்ந்தது' என்றும் கூறினார்.

முன்னியக்கம் என்பது கீழ்க்காணும் வகைகளில் நிகழக்கூடும். மேல்வரைவில் க, ச என்னும் செங்குத்துக்கோட்டிற்கு இடப்புறம்




படம் 1.

நீண்டுள்ள கோட்டில் அ—ஆ என்பது இறந்த காலத்தில் நாம் அறியாதகாலம்—அதாவது பழங் கற்காலத்திற்கு முந்தியகாலம்; ஆ-இ என்பது இறந்தகாலத்தில் வரலாற்றுச்சான்றுகள் வாயிலாக நாம் அறிந்த காலம்; இ வழியாகச் செல்லும் க, ச என்னும் செங்குத்துக் கோடு நிகழ்காலத்தைக் குறிக்கும்; இனி இ-ஈ என்பது எதிர்காலம்; ஈ என்பது எவ்விடத்து நிகழும் என்பதை அறியோம். ஆகவே, இறந்தகாலத்தொடக்கமான அ—விலிருந்து எதிர்கால முடிவான ஈ—வரை வரலாறு ஒரு நேர்க்கோடாக இயங்கும் என்பது.

மேல்வரைவு நேர்க்கோடாக இன்றிப் பாம்புபோல் வளைந்த கோடாகவுள்ளது; வளைந்து வளைந்து, ஏறி இறங்கிச் செல்லு




படம் 2.

மாயினும், மொத்தமாக அ-எ வரை அது முன்னேறிக்கொண்டே யிருக்கும்; அதற்கு மேலும் அவ்வாறே செல்லும். ஏற்ற இறக்கத்தால் வேகம் தடைப்படுமேயன்றி முன்னியக்கம் தடைப்படாது.




படம் 3.

மேல் வரைவில் முன்னியக்கம் பின்னியக்கம் இரண்டும் நிகழ்கின்றன. அஆ இஈ உஊ எஏ என்பவை முன்னியக்கத்தையும், ஆஇ ஈஉ ஊஎ என்பவை பின்னியக்கத்தையும் குறிக்கும்; அதாவது முன்னியங்கிக்கொண்டே செல்லும்போது, சற்று அவ்வப்போது சில பின்னியக்கங்களும் நிகழ்கின்றன. ஆயினும் இறுதியில் முன்னியக்கமே மிஞ்சுகின்றது, அதாவது முன்னியக்கங்களை இலாபம் என்றும் பின்னியக்கங்களை நட்டம் என்றும் கொண்டால் நட்டத்தைவிட இலாபம் மிகுதியாயிருத்தலால், மொத்தத்தில் இலாபமே அதாவது முன்னியக்கமே என்பது.




படம் 4.

மேல் வரைவு ஒரு திருகுசுருள். அ-விலிருந்து ஆ—வரை இச் சுருள் நீள்கின்றது; ஆனால் சுருளும் இடையே உள்ளது. இத் திருகுசுருள் வழியே முன்னேறுவோன் (உதாரணமாகத் திருகு சுருள் படிக்கட்டு வழியே மேலே ஏறிச்செல்வோன்) சுற்றிச் சுற்றி வரும்போதும் முன்னேறிக் கொண்டிருக்கிறான் என்பது. இதற்கும் வட்டச் சுற்றியக்கத்திற்கும் உள்ள வேறுபாடு காண்க.

வட்டச் சுற்றியக்கம் அ ஆ இ ஈ என்று சுற்றி வரும்போது மறுபடியும் அ-வைத்தொட்டு, இன்னொரு சுற்றுச் சுற்றி மறுபடி

யும் அ-வைத் தொட்டு இவ்வாறே முடிவின்றி இயங்கிக் கொண்டிருக்கும். இதில் முன்னியக்கம் இராது.




படம் 5.

'முன்னியக்கம் என்னும் கருத்து' பியூரி—The Idea of Progress என்னும்—தமது அரிய நூலில் இக் கோட்பாட்டிற்குக் கருத்தூட்டி யுள்ளார். அவர் கருத்துப்படி, எக் கொள்கையும் தருக்க முறையில் தவறின்றி அமையவேண்டும் எனில், அது வரலாற்றில் பதிந்துள்ளவாறே வாழ்க்கையின் உண்மை விவரங்களோடு ஒட்டியிருத்தல் வேண்டும்; குழப்பமான எண்ணங்கள், விருப்பங்கள் என்பவை போதா. அவர் 'சமுதாயச் சூழ்நிலையில் வைத்துப்பார்த்தால் பரிணமம் என்பது மட்டும் மனிதனை விரும்பத்தக்க நன்மைக்கு இட்டுச் செல்லும் என்று கூற முடியாது. பரிணமக் கொள்கை விஞ்ஞான ரீதியான கருத்து; அது நன்மை தீமைகளுக்குப் புறம்பானது; நம்பிக்கை, நம்பிக்கையின்மை என்பவற்றிற்கும் பரிணமத்திற்கும் தொடர்பில்லை. எதிர்காலம் பயங்கரமானது அல்லது மெல்ல மெல்ல நல்வாழ்வுக்கு வழிகாட்டுவது என்னும் இரு பொருள் படவும் அறிஞர்கள் பேசியுள்ளனர். ஆனுல் ஏதோ ஒன்றுதான் உறுதியான முடிவு என்று கருதிவிடக்கூடாது. நல்வாழ்வை நோக்கித்தான் வாழ்க்கை செல்லுகின்றது என்று கூறிய உடனேயே, நாம் நல்லொழுக்கத் தத்துவத்தில் மாட்டிக்கொள்ளுகிறோம்' என்றும் கூறினர். மார்க்ஸியர்களும் ஹேகல் (Hegel) போன்ற அறிஞர்களும் மனிதவரலாறு என்பது 'ஓர் இயக்கம்' என்னும் அளவிற்கு நம்புகின்றனர் என்பது பியூரிக்கும் தெரியும். முன்னியக்கக் கருத்து என்பது வரலாற்று விளக்கமாகவும், வாழ்க்கைத் தத்துவமாகவும் அமையும். மனிதகுலத்தின் பரிணமம் கடவுள் தத்துவத்தின் வெளித்தோற்றமே யாயினும், ஹேகல் எண்ணியவாறு ஒரு பெரும் கருத்தின் மலர்ச்சியேயாயினும், மார்க்ஸ் (Marx) கூறியபடி மாறிமாறிவரும் சூழ்நிலைக்கேற்பத் தன்னை மாற்றிக்கொண்டேவரும் தொடர்முயற்சியேயாயினும், அது ஓர் இயக்கம் என்பதில் ஐயமின்று. முன்னியக்கக் கோட்பாட்டாளர்களுக்கு அது ஒரு விரும்பத்தக்க இயக்கம் என்று கொள்ளவேண்டிய தேவையுண்டு.

'முன்னியக்கக் கருத்து மனிதனுடைய மனோபாவத்திற்குத் தெம்பளித்து ஊக்குவிக்கும்; ஆனால் அது விஞ்ஞானக் கருத்து மன்று; டார்வின் கூறிய கொள்கையோடு ஒத்ததுமன்று' என்பது முன்னியக்கத்தைப்பற்றி பியூரியின் கருத்துச் சுருக்கம். இத்தகைய இயக்கம் அநேகமாக நன்மையையும் நல்வாழ்வையும் நோக்கி இருக்கலாம் என்பதே அவர் கருத்தும்; ஆனால், பூரணச் சிறப்ப டைய வெகுதூரம் செல்லவேண்டும். அன்றியும் அவருடைய எதிர்காலக் கொள்கை ஒரு நம்பிக்கையேயன்றித் தெளிந்த உறுதி யான உண்மையன்று. அவருக்கு அவ் வெண்ணம் இருந்திருப் பினும் அதனைத் தருக்கரீதியாகத் தற்காக்க முடியும் என்று அவர் எண்ணியிரார்.

முன்னியக்கக் கருத்து மனித வரலாற்றில் மேலும் மேலும் கடின முயற்சிகளை நம்பிக்கையோடு மேற்கொள்ள உந்துகின்றது என்ற அளவில் வைத்துக் கொள்ளவேண்டும். அதனை ஒரு வரலாற்று உண்மைநிலைக்கு உயர்த்திவிடக்கூடாது.

# 10. வரலாற்றின் இருகண்கள்

## (அ) இடம்

முன் உள்ள பொருளை நோக்கி இயங்குதற்கும், எப் பொருள் எத்தன்மைத்து என்று அறிந்துகொள்ளுதற்கும் மனிதனுக்குக் கண்கள் தேவைப்படும். அவ்வாறே வரலாற்றிற்கும் தான் எத் திக்கை நோக்கிச் சென்றுகொண்டிருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளுதற்கும் தனது இயல்புதான் யாது என்று புரிந்து கொள்ளுதற்கும் இருகண்கள் உள. அவைதாம் இடம், காலம் என்பன. இக் கருத்தைக்கொண்டே ஹாக்லுாயிட் என்னும் பயணி 'புவியியலும், காலவியலும் வரலாற்றின் இருகண்கள்'




படம் 6.

என்றார். இடம், காலம் என்னும் இரண்டில் ஒன்று இல்லாமல் மற்றொன்று இயங்காது. இரண்டும் சேர்ந்த அமைப்பு வரலாற்றின் அடிப்படை. மேலே காண்பது போன்ற ஒரு வரை படத்தில் கிடைக்கோட்டைக் காலம் என்றும், செங்குத்துக் கோட்டை 'இடம்' என்றும் விதித்துக்கொண்டால் இவ் விரண்டின் இணைஇயக்கத்தால் தோன்றுவது 'வரலாற்று நிகழ்ச்சி'

என்பது. ஆதலால் 'இடமும்' 'காலமும்' இணையியக்கப்பொருள் கள் எனலாம். இப் படத்திலிருந்து வரலாற்று நிகழ்ச்சியொன்றைக் குறிப்பதற்குக் காலமும் இடமும் எவ்வாறு உடன்சேரத் தேவைப் படுகின்றன என்பது விளங்கும். உதாரணமாக, தக்காணத்து முஸ்லிம் மன்னர்களின் கூட்டு விசயநகரப் பேரரசினரைப் போரில் வென்றது என்பது ஒரு வரலாற்று நிகழ்ச்சி. இதனை இடம், காலம் இரண்டின் வாயிலாக விளக்கவேண்டும். அப்படி விளக்கும் போது முஸ்லீம் அரசர்கள் விசயநகரப் படைகளைத் தலைக் கோட்டை என்னுமிடத்தில் கி. பி. 1565 ஆம் ஆண்டில் நிகழ்ந்த போரில் வென்றனர் எனல் வேண்டும். இதில் தலைக்கோட்டை என்பது இடம்; கி. பி. 1565ஆம் ஆண்டு என்பது காலம். இங்ஙனமே ஜான் அரசனிடமிருந்து ஆங்கிலேயப் பிரபுக்கள் மகா சாசனத்தைப் பெற்றுக்கொண்டனர் என்னும்போது அதன் விளக்கம் கீழ்க்காணுமாறு அமையும். அதாவது, ஜான் அரசரிட மிருந்து ஆங்கிலேயப் பிரபுக்கள் கி. பி. 1215-ல் ரன்னிமீடு என்னு மிடத்தில் மகாசாசனத்தைப் பெற்றுக்கொண்டனர். இவ்வாறே பிறவும் காண்க.

வரலாறு உலகியலோடு தொடர்புள்ளதாதலின் உலகு என்பது இப் புவியையும் அதன்மீது வாழும் மக்களையும் குறிக்கு மாதலின், வரலாற்றிற்கு 'இடம்' இன்றியமையாததாகின்றது. இடத்தினைப் புவியியல் வாயிலாக உணர்கிறோம். உலகு கண்டங் களாகவும், மாக் கடல்களாகவும், நாடுகளாகவும் பிரிக்கப் பட்டுள்ளது; அல்லது மனிதன் உலகை அவ்வாறு பிரித்துக் காண் கிறான். அரசாட்சிகளும் நாடுகளை அடிப்படையாகக்கொண்டு இயங்குகின்றன. ஆதிபத்தியக் கோட்பாட்டில் ஆதிபத்திய அரசிற்குத் தேவையான உறுப்புகளை எண்ணும்போது நாட்டி னையே முதற்கண் எண்ணுவர். 'படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆறு முடையான் அரசருள் ஏறு' என்ற வள்ளுவர் கூற்றில் 'குடி என்பது அதனையுடைய நாட்டினை' என்று பொருள் விரித் தார் பரிமேலழகர். வடமொழியாளரும் ஸப்தாங்கங்களில் நாட்டையும் ஒன்றாகக் கருதுவர். அன்றியும் நடைமுறை உலகில் அமெரிக்க அரசு, ஆங்கில அரசு, இந்திய அரசு, ஈரான் அரசு என்று நாடுகளை வைத்து அரசினை உணர்கின்றோம். கொலம்பஸ் போன்ற நாடுகண்டவர்கள் உலகினை யறியவைத்தவர்கள். நாடு பிடிக்கும் மண்ணாசையால் நிகழ்வன போர்கள். தம் நாட்டில் இடமின்றிப் பிற நாட்டில் குடிபுகுவோரால் குடியேற்றங்கள் ஏற்படுகின்றன. வரலாற்றை எழுதும்போது ஃபிரான்ஸ் வரலாறு, இத்தாலி வரலாறு, ஜப்பான் வரலாறு என்று நாட்டு அடிப் படையிலெழுதுவர். இவ் வகையில் எல்லாம் 'இடம்' வரலாற்றில்

இடம் பெறுகின்றது என்பதைக் காணலாம். அன்றியும், அங்ஙனம் வரலாறு வரையுங்கால் 17ஆம் நூற்றுண்டு ஃபிரான்ஸ் வரலாறு, 19ஆம் நூற்றுண்டு இந்திய வரலாறு என்று எழுதப்புகும்போது காலமும் ஓர் இணையியங்கியாக இடத்தோடு சேர்ந்து வரலாற்றிற்குப் பொருள் தருகின்றது. ஆதலால் காலமும் இடமும் வரலாற்றின் இணையியங்கிகள் என்பது போதரும்.

இனி வரலாற்றின் மற்றொரு கண்ணுன காலத்தின் இயல்பு யாது என்று காண்போம்.

## (ஆ) காலம்

வரலாற்றின் இரண்டாவது கண் 'காலம்' என்பதைக் கண்டோம். ஆதி நாள் தொட்டே மக்களுக்குக் 'காலம்' என்னும் கருத்து இருந்துவந்துள்ளது. இடமின்றிக் காலம் இல்லை என்பதையும், காலத்தினின்றும் இடம் தப்பமுடியாது என்பதையும் மேலே கண்டோம். இந் நிலையில் காலம் என்பது யாது என்பதையும் உணர்தல் வேண்டும். வரலாறு சமயத்தோடு தொடர்பில்லாத உலகியல் பொருளது; அது காலத்தோடு பிணைந்துநிற்பது, என்னும் இவ் விரு கருத்துகளும் வரலாற்றின் தன்மையை ஆராய்வார் யாவரும் நினைவுகூரவேண்டுவன. அதாவது இடம், காலம் என்னும் இரண்டையும் கடந்த பொருள்களும் கருத்துகளும் வரலாற்றிற்குப் புறம்பானவை. எல்லை கடந்த பிரபஞ்சமும், காலங் கடந்த நிரந்தரமும் வரலாற்றிற்கு அகப்படாதவை. இடம், காலம் இரண்டாலும் நிருணயிக்கப் பட்ட பொருள்களும் கருத்துகளுமே வரலாற்றேடு தொடர்புடையவை. காலம் என்னும் சொல்லைத் தொல்காப்பியர் எடுத்து ஆண்டுள்ளார். நச்சினர்க்கினியர் என்னும் உரையாசிரியர் அதனைத் தமிழ்ச்சொல் என்றே கருதுவார். அஃது உண்மையாயின், பற்பல நூற்றுண்டுகட்கு முன்பே காலத்தைப்பற்றிய சில கருத்துகள் தமிழர்க்கு இருந்தன என்பது விளங்கும். வடமொழியிலும் காலம் என்னும் கருத்து உண்டு. அம் மொழியாளர் அதனை ஒரு கடவுளாக்குவர். காலன் என்பது உயிரை உடலினின்றும் கூறுபடுத்தும் கூற்றுவனுக்கு இன்னெரு பெயர். காலத்தைக் கணக்கிட்டுக்கொண்டு அங்ஙனம் கூறுபடுத்துதலின் அதற்கு அப் பெயர் ஆயிற்று. தொன்மைக்காலக் கிரேக்கரும் எகிப்தியரும் சுமேரியரும் காலத்தைப்பற்றி எண்ணியுள்ளனர். சீனர் முதலிய பண்டைக்காலப் பண்பாட்டாளரும்கூடக் காலத்தின் போக்கைப்பற்றிய தத்துவங்களை எண்ணியவர்கள்.

வரலாறு நிரந்தரப் (அழியாப்) பொருள்களைப் புறக்கணிக்கும் என்பதிலிருந்து வரலாற்றுளர்கள் கடவுள், ஆன்மா முதலிய

காலங்கடந்த பொருள்களைப்பற்றி ஆராயார் என்பது விளங்கும்; இதிலிருந்து ஐம்புலன்களுக்கும் புலனாகும் உலகியற்பொருள்கள், அவற்றோடு தொடர்புடைய கருத்துகள் என்பவை மட்டும் வரலாற்றாளனுக்கு உடன்பாடு என்பதும் விளங்கும். இதனை வரலாற்றின் தன்மை என்னும் அத்தியாயத்திலும் கூறினோம். வரலாற்றினை 'உலகியல் செல்லுமாறு,' 'காலத்தின் இயக்கம்' என்றெல்லாம் கூறுவர். 'உலகியல்', 'காலம்' என்பவற்றிற்கு அப்பாற்பட்ட ஆன்மிக விருப்பங்களைக் கொண்டவர்களுக்கு வரலாறு பயன்படாது என்பது போதரும்; அன்றியும் அவர்களுக்கு வரலாறு இடையூறாகவும் அமையலாம்.

இடத்திற்கும் காலத்திற்கும் உள்ள முக்கியமான வேறுபாடு யாதெனில், முந்தியதற்கு முற்செலவு பிற்செலவு இரண்டும் இயலும்; பிந்தியதற்கு முற்செலவு ஒன்றே இயலும்; அதாவது ஓரிடத்திலிருந்து முன்பும் செல்லலாம், அங்கிருந்து திரும்பிப் பின்பும் செல்லலாம்; இதைப் பன்முறையும் செய்யலாம். ஆனால் காலத்தில் முன்பு செல்லலாமேயன்றிப் பிற்செலவு இயலாது. (ஈண்டு முற்செலவு என்பது இதுவரை எத் திக்கை நோக்கிச் சென்று கொண்டிருந்தனவோ அதே திக்கில் செல்லுதல் என்றும், பிற்செலவு என்பது அதற்கு நேர்மாறான திக்கில் செல்லுதல் என்றும் பொருள்படும்.) அன்றியும் இடம் என்பது கட்புலனானது; காலம் கட்புலனாகாதது; மனம் ஒன்றினால் எண்ணிப்பார்க்கத் தக்கதேயன்றி ஐம்புலன்கட்கு அப்பாற்பட்டது; அஃது ஒருபொருளன்று, கருதிப்பார்க்கக் கூடிய அளவிற்றே.

காலப்போக்கு என்பதை நமது அனுபவத்தில்தான் உணர முடியும். எந்தப் பொருளும் 'காலவகையினானே' பழைமை எய்தும். பழைமை எய்திய பொருள்கள் புதியவற்றினின்றும் வேறுபடத் தோன்றும். ஒரு பொருள் புதிதாயிருப்பதற்கும் அது பழைமை எய்திய நிலைக்கும் இடையே 'காலஞ்' சென்றிருக்கிறது என்பது இவ் வேறுபட்ட தோற்றத்தால்தான் உணரக்கிடக்கும். ஒரு வாலிபனுக்கும் ஒரு வயோதிகனுக்கும், அல்லது ஒரு காய்க்கும் ஒரு பழத்திற்கும் உள்ள வேறுபாட்டினை அதன் தன்மை மாறுபடுவதிலிருந்து புரிந்துகொள்ளுகிறோம். இவ்வாறன்றித் தனிப்படக் காலம் என்பதைக் கருதிப் பார்க்கமுடியாது. நரையாலும் திரையாலும் உடற்கட்டு விடுதலாலும் மூப்பை உணர்கிறோம்; நிறத்தாலும் முதிர்ந்திருத்தலாலும் பழத்தின் தன்மையை அறிகிறோம். ஒன்றன்பின் ஒன்றாக நிகழுங்கால், இரு நிகழ்ச்சிகளுக்கு இடைப்பட்டது காலம் எனக் கணிக்கப்படும்; அதனை 'இடையீடு' எனலாம். இடத்தில் ஒரு புள்ளிக்கும் மற்றொரு புள்ளிக்கும் இடையில் உள்ள

நீளத்தை 'தூரம்' என்போம்; அதுபோல நிகழ்ச்சிகளுக்கு இடைப் பட்டதைக் காலம் என்போம்.

காலத்தைப்பற்றி ஆராய்தலால் ஆகும் பயன் யாது? காலமின்றி உணர்வு, கருத்து என்பவை இருக்க முடியாது. காலத்தைப் பின்னணியில் வைத்துத்தான் எதைப்பற்றியும் யோசிக்கிறோம். ஃபிரெஞ்சு அறிஞரான டேகார்ட்டே (Descartes) என்பவர் 'நான் உள்ளுகிறேன் (எண்ணுகிறேன்); ஆதலால் நான் உள்ளேன் (இருக்கிறேன்)' என்றார். இருத்தல் என்பது உள்ளிப் பார்ப்பதால் பிறக்கும் என்பது கருத்து. இக் கருத்தைச் சற்று மாற்றி ஹென்ரி பெர்க்ஸன் என்னும் இன்னொரு ஃபிரெஞ்சுத் தத்துவர் 'நான் தொடர்ந்து நிகழும் ஒரு பொருள்' என்றார். இத் 'தொடர் நிகழ்ச்சி' தான் எதற்கும் ஒரு பொருள் தருகின்றது. தொடர் நிகழ்ச்சி இன்றேல் எப் பொருளும் இல்லை; அப் பொருள்களுக்குப் பொருளும் (அர்த்தம்) இல்லை. அதாவது இயக்கம் என்பது வாழ்க்கையின் அடிப்படை. இருத்தலைவிட இயங்குதலே முக்கியமானது. இயங்குதல் என்னும் நிகழ்ச்சி 'கால' த்தில் நடைபெறுவது.

காலத்தை இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்று பிரிப்பர். நடந்து விட்ட செயல்கள் 'இறப்'பிலும், நடந்து கொண்டிருப்பவை 'நிகழ்'விலும், நடக்கவேண்டியவை 'எதிர்'விலும் அடங்கும். 'இறப்'பின் தொடக்கமும் 'எதிர்'வின் முடிவும் நாம் அறியோமாதலின் அவை ஒன்றற்கு ஒன்று கால அளவில் ஒன்றே என்றும் கொள்ளலாம்; அன்றியும் அவற்றிற்குக் கால அளவு என்பது ஒன்றில்லை என்றும் காணலாம். நிகழ்வு என்பது காலப்பருமையில்லாதது; ஆதலின் அதனை ஒரு காலப் பருமனுகக் கொள்ளாமல், காலக் கோடாகவே கொள்ள வேண்டும். 'இறப்பு', 'எதிர்வு' களைப் போல 'நிகழ்'வையும் ஒரு காலமாகக் கருதுவராயினும், அதனை, இறப்பையும் எதிர்வினையும் பிரிக்கும் ஓர் அறிவுச் சாதனமாகவே கொள்ள வேண்டும். நிகழ்வைப்பற்றி யெண்ணும்போதும் அது இறந்த காலமாக மாறிக்கொண்டே யிருக்கும்.



படம் 7.

நிகழ்வை முற்றிலும் உணர்கிறோம்; இறந்தகால நிகழ்ச்சிகளில் நினைவில் நின்றவை மட்டும் நமக்குப் புலனும்; பிற மறப்பின்

பாலன. இறந்த காலத்தில் மறந்து போனவையும் நினைவிலிருப் பவையும் சேர்ந்து தெரியாத, தெரிந்த வரலாற்றுப் பகுதியாம்; வரலாறு என்பதே இறந்த காலத்தோடுமட்டும் தொடர்புடைய தாதலின். நிகழ்வு என்பது எப்போதும் இறந்த காலமாக மாறிக் கொண்டே இருப்பது. எதிர்வு என்பது இதுவரை நிகழாதது, ஆதலால் நாம் இன்னும் அறியாதது. அவ் வறியாமை காரண மாக எதிர்காலம் வரலாற்றுளர்க்கு உடன்படாதது ஒன்று. வரலாற்றினை ஓர் ஆருக வருணிக்கலாம்; காலப்போக்கில் அது ஓடுகின்றது. அவ் ஆறு தொடங்கி நாம் இருக்கும் இடம் வரையில் வருவதையெல்லாம் ஆற்றின் இறந்தகாலமாகவும், நாம் கண் ணெதிரே காணும் ஆற்றொழுக்கினை நிகழ்காலமாகவும், இனி மேலும் ஆறு ஓடுகின்ற போக்கை எதிர்காலமாகவும் கற்பனை செய்யலாம். ஆகவே அவ் ஆறு செல்லச் செல்ல மேலும் மேலும் நீரை முகந்துகொண்டு பெருகிக்கொண்டே போகும். அது தொடங்கின இடமும், அது கடலோடு கலக்கும் இடமும் நமக்குத் தெரியாது என்று கொண்டால், ஆறு வரலாற்றிற்கு ஒரு நல்ல உவமையாகும். ஆதலால் அவ் ஆய்பொருட்கு வரலாறு (வரல் + ஆறு) என்று பெயரிட்டது பொருந்துவதேயாம்.

'காலம் என்பது யாதொன்றோடும் சார்பிலது; அது தனி முற்றன்மை எய்தியது' என்ற கொள்கை முன்காலத்தில் இருந்து வந்தது. கடிகாரம் காட்டும் காலம் பூமி சூரியனைச் சுற்றிவர எத்துணை நாளாகின்றதோ அதனை, திங்கள் பூமியைச் சுற்றிவர ஆகும் நாள்களால் வகுத்து வரும் ஈவினை மாதங்களாக்கி ஒவ்வொரு திங்களையும் சந்திரனது கலை (பிறை)களால் வகுத்து, அதனை நாளாக்கி, அந் நாளை எதேச்சையாக (arbitrarily) இருபத்து நான்கு பகுதிகளாக்கி அப் பகுதி ஒவ்வொன்றினையும் ஒரு மணி என்று கணக்கிட்டு அம் மணிகளில் எத்தனை கழிந்தன என்று காட்டும் சாதனமே கடிகாரம் என்பது. தனிமுதல் தன்மையுள்ள காலத்திற்கும் இம் மணி காட்டும் காலத்திற்கும் தொடர்பில்லை. ஆயின் தனிமுதல் காலம் (Absolute time) என்று ஒன்றுண்டா? அன்றி எல்லாக் காலமும் சார்பியற் காலம் (Relative time) தானா? என்னும் வினுக்கட்கு விடையளிக்க வந்த அயின்ஸ்டைன் (Einstein) என்னும் பௌதிகர் காலம் என்பது சார்பியற்காலமே என்றார். இதனை ஈண்டு விளக்கவேண்டா. வரலாற்றில் காலத்தைக் கணிக்கப்புகின் 'அப்தம்' (era) என்னும் ஓர் அளவுகோலை இட்டுக்கொண்டு கணக்கிடுகிறோம். இவ் வாண்டு கி. பி. 1978 எனில் கிறிஸ்து பிறந்த காலத்தை ஒரு கால அளவு கோலின் தொடக்கப் புள்ளியாகக்கொண்டு அதன் பிறகு இத் துணை ஆண்டுகள் கழிந்தன என்று கூறுகிறோம். அன்னியர்

ஆட்சியிலிருந்து இந்தியா விடுதலையடைந்து 30 ஆண்டுகள் கழிந்தன எனில் விடுதலை பெற்ற ஆண்டான 1947 ஐத் தொடக்கப் புள்ளியாகக்கொண்டு கணக்கிடுகிறோம். ஒருவனுக்கு வயது 57 என்றால் அவன் பிறந்த ஆண்டை வைத்து அதன் பின் கழிந்த ஆண்டுகளை எண்ணிக் கூறுகிறோம். இங்ஙனம் கூறுதல் இயலுமே யன்றித் தனிமுதல் காலத்தைப்பற்றிப் பேச இயலாது; அத்தகைய காலம் என்பது ஒன்று இல்லை என்றே கூறலாம். ஆதலால் தனி முதல் தன்மை பெற்ற காலம் என்பது கருத்தளவிலும் இல்லை; சார்பியற் காலமே கருத்தளவிலும் நடைமுறையிலும் உண்டு.

பொதுவாக இறந்த காலத்தைப்பற்றிப் பேசுவோர் அக் காலம் அது செல்லுமாற்றானே இறந்தது என்று கொள்ளுவர்; அதனைத் திரும்பக் காணமுடியாது, அது திரும்ப உயிர்வராது என்பதால் அதனை இறந்தகாலம் என்று கூறுவது பொருந்துவதேயாம். ஆனால் இறந்தகாலத்தை வரலாற்றாளர்களிற் சிலர் கொன்றுவிடு கின்றனர் என்று பொருள்படும்படி பிளம்ப் (plumb) என்னும் ஆசிரியர் கூறுகின்றார். அவர் 'இறந்த காலத்திற்குப் பொருள் கொடுப்பது வரலாற்றாளன், அவன் அதற்குப் பௌராணிகரைப் போலச் சமயச் சார்புடைய கதைகளையோ பிற கதைகளையோ கூறி அவையே உண்மை என்று கூறலாம். 'முன்னைய முறையில் பழமை துர்ப்பிரயோகப்படுத்தப்படுகின்றது; பிந்திய முறை இறந்தகாலத்தைப் பயன்படுத்துகின்றது' என்றார் அவர். பழைமையைப் பலவகைகளில் பயன்படுத்தலாம். உதாரண மாக, பண்டைக்கால அரசர்களில் விளம்பரத்திற்காக வர லாற்றைத் துர்ப்பிரயோகப்படுத்தியவர்கள் பலர் உண்டு. ஹிட்லர் ஆரிய இனத்தைப்பற்றிப் பேசியதெல்லாம் இவ் வகையைச் சேரும். பழைமையைத் திரித்துக் கூறுவோரும் அதன் உண்மையை மறைத்துப் பேசுவோரும் என இத்தகையோர் பல ராவர். ஆதலால் பிளம்ப் என்பவர் பழைமை வேறு, வரலாறு வேறு என்று பிரித்துக் கூறுவார்.[1] 'பழைமை சிலருக்குப் பயன் பட்டது; வரலாறு பொதுமக்கட்குப் பயன்படும்' என்றார் அவர். ஆயினும் இறந்த காலத்தில், நாம் காலம் என்று கருதும் அளவு கோல் நடுநிலையுள்ள நொதுமல் தன்மையது; வரலாற்றாளரும் பிறரும் அதனைப் பயன்படுத்தும் முறையில் அதற்குப் பண்பு ஏற்று கின்றனர். பழைமையைத் திரித்தும் கூறலாம்; உண்மையாயும் கூறலாம்: ஆனால் முந்தியது வரலாற்றிற்குப் புறம்பானது, பிந்தியது வரலாற்றோடு பொருந்தியது.

1 The Death of the past: pp. 15, 16.

இனி, காலம் என்பது இருவகையில் இயலும் என்று கருதுவர். அதாவது (1) சுற்றிச்சுற்றி வட்டமாக இயங்கும் என்பது; (2) அது அளவிற்குட்பட்ட (அல்லது உட்படாத) நெடுந்தொலைவு நேர்க்கோடாக இயங்கும் என்பது. பண்டைய பாபிலோனியர்கள் கருத்தை மேற்கொண்டு பிளேட்டோ (Plato) என்னும் கிரேக்கத் தத்துவர் காலம் சுற்றியக்கமுடைத்து என்றார். ஒரு வரையறைக்குட்பட்டு ஒருவாறே சுற்றிவந்து காலத்தைக் காட்ட வேண்டுமாயின் ஒரு வட்டம் இன்றியமையாதது. கடிகார முள்ளும் வட்டமிழைத்துக்கொண்டே காலம் காட்டுதல் போல. ஆயினும், கிறித்துவர்கள் காலம் நேர்க்கோட்டில் செல்லும் என்று கருதினர். ஏனெனில், அவர்களுடைய சமயத் தத்துவத்தில் மனித வரலாற்றிற்கு ஒரு தொடக்கமுண்டு; அது பாவத்தில் தொடங்கியது. அதற்கு ஒரு பாவ விமோசனம் உண்டு. பாவ விமோசனத்தை நோக்கி மனிதகுலம் வரலாற்று வாயிலாக முன்னேறுதலால் அம் முன்னேற்றம் நேர்க்கோடாக அமைவதோடு அது செல்லும் காலமும் அவ்வாறே அமையவேண்டும் என்பதாயிற்று. 17ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கெப்ளர்கூடக் காலத்தின் சுற்றியக்கக் கொள்கையை ஆதரித்தார்; ஆனால் ஃபிரான்ஸிஸ் பேக்கன், பாஸ்கல் முதலியவர்கள் நேரியக்கமே உண்மை என்று கருதினர். லீப்னிஸ் என்னும் ஜெர்மானியர் முடிவற்ற நெடுந்தொலைவு நேரியக்கக் கோட்பாட்டைக் கூறினார். 18ஆம் நூற்றாண்டினர் இக் கொள்கையை ஆதரித்தனர். ஸ்பெங்க்லர், டாயின் பீ முதலிய 20ஆம் நூற்றாண்டு வரலாற்றாளர்கள் நாகரிகங்கள் 'தோன்றி எழுந்து பிறகு விழுந்து மறைகின்றன; இது ஒருவகைக் கால இடக்கம்' என்று கருதினர். ஆனால், இக் கொள்கைகள் யாவையும் வரலாற்றிற்குப் புறம்பானவை. நேரியக்கக் கொள்கையினர் என்றோ ஒரு நாள் சிறு நிகழ்ச்சி ஒன்று நிகழும் என்று நம்புகிறவர்கள்.

காலம் சுற்றியங்கும் என்றவர்கள் ஒரு காலத்தில் நிகழ்ந்ததே திரும்பவும் நிகழும் என்று எண்ணுகிறவர்கள். அடுத்துவரும் அத்தியாயத்தில் முன்னியக்கம் நிகழுமாற்றை விளக்குமிடத்து வரைபடம் வாயிலாக இஃது எடுத்துக் கூறப்படும்.

பண்டைய இந்தியர்கள் காலம் மாறி மாறி, அதாவது திரும்பத்திரும்ப வரும் என்று கருதினர். 'செல்வம் சகடக்கால்போல வரும்' என்று உவமை கூறுமுகத்தால் மனிதவாழ்வு கால வாய்ப்பட்டுச் சுற்றிச்சுற்றிவரும் என்று கூறினர். இந்துக்கள் சதுர்யுகம் என்று நான்குயுகங்களைக் கூறினர். இவை நீண்டகால அளவைகள். இவற்றைக் கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம்

என்று பாகுபடுத்தினர்கள். 12000 ஆண்டுகொண்ட மகாயுகம் ஒன்றையும் அவர்கள் கருதினர். அவர்கள் கருத்துப்படி கிருத யுகம் மிகச் சிறந்தது; அது சற்று இழிந்து திரேதாயுகமாகி அது மேலும் இழிந்து துவாபரயுகமாகி, முற்றிலும் கெட்டுக் கலியுக மாகும். கலிமுற்றி நன்மையைத் தீமைவெல்லும் அமயத்தில் திரும்பவும் கிருதயுகம் வந்து பழையபடி நல்வாழ்க்கையும் சீரும் சிறப்பும் அமையும் என்று கூறினர். இப்படிச் சுற்றிக்கொண்டே யிருத்தலால் அதற்கு ஒரு முடிவில்லை. இதைத்தான் பிராம்மணர் கள் நம்பினர். முடிவுள்ள காலத்திற்கு உட்பட்ட வரலாறு அவர்களுக்குத் தேவையில்லை; அது அவர்கள் ஏற்பாட்டைக் கெடுத்துவிடும் திறமைவாய்ந்தது. ஆதலாலே பிராம்மணர் இலக்கியத்தில் (அதன் செல்வாக்கால் இந்தியாவில் தோன்றிய பிற இலக்கியங்களிலும்) வரலாற்றிற் கிடமில்லாது போயிற்று. அவர்கள் கூறிய சுற்றியக்கக் காலப்போக்கில் இறைவனின் ஆக்கல், காத்தல், அழித்தல் என்னும் செயல்கள் நிகழ்கின்றன. பிறந்தது இறக்கும், இறந்தது பிறக்கும்—இதுவும் காலவாய்ப்பட்ட ஒரு சுற்றியக்கம். அவதாரக் கதைகளைக் கூறிய இந்துக்களும், ஜாதகக் கதைகளைக் கூறிய பௌத்தர்களும் சுற்றியக்கக் கோட்பாட்டை நம்பியவர்களே.

வரலாற்றுளனுக்குக் காலம் என்பது இறந்தகாலத்திற்கும் எதிர்காலத்திற்கும் இடையே எழும் வேறுபாட்டால் முக்கியத் துவம் அடைகின்றது. 'அது நிகழ்ந்தது' என்று வரலாற்றுளர் கூறமுடியும்; ஆனல் 'அது நிகழும்' என்று கூற முடியாது. இவ் வேறுபாடு அடிப்படையானது.

## காரண காரியத் தொடர்பு

இனி, காரணகாரியத் தொடர்பால் காலத்திற்குப் பொருள் ஏற்படுகின்றது. காலப்போக்கில் நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன என்பது யாவருமறிந்தது. சில நிகழ்ச்சிகள் முன்பு நடக்கின்றன; சில பின்பு நடக்கின்றன. இவற்றில் முன்பு நிகழ்பவற்றிற்கும் பின்பு நிகழ்பவற்றிற்கும் பிந்தியதை-முந்தியது-உந்துதல் என்னும் தொடர்பு இருக்குமாயின் அதனைக் காரணம்—விளைவு என்று பிரிப் போம்; அதாவது முதற்கண் நிகழ்வது காரணம், பிறகு அதன் உந்தலால் தோன்றுவது விளைவு. இவற்றிற்கு உந்துதல், உந்தப் பெறுதல் என்னும் உறவு இல்லையாயின், காரண-காரியத்தொடர்பு இன்றிப்போகும். காரணங்களில் தோற்றக் காரணங்கள், உண்மைக் காரணங்கள் என இருவகை யுண்டு. தோற்றக்காரணம் என்பது காரணம் போல் தோன்றுவது. ஆனல் உண்மையில் அது காரணமன்று; உதாரணமாக, சூரியன் பூமியைச் சுற்றிவருதலால்

சூரியஉதயம் காலையில் ஏற்படுகிறது என்பது தோற்றக் காரணம்: ஆனால், உண்மைக் காரணம் பூமி சூரியனைச் சுற்றிவருதலால் விடியற்காலையில் கிழக்குத்திக்கில் சூரியன் காணப்படுகின்றது. ஒரு வரலாற்று நிகழ்ச்சிக்கு ஏராளமான காரணங்கள் இருக்கமுடியும். உதாரணமாக, 1857-ல் நிகழ்ந்த இந்தியக் கலகத்திற்குக் காரணம் யாதென்று ஆராயப்புகுந்தால் அளவிறந்து போகும். ஃபிரெஞ்சுப் புரட்சிக்குக் காரணங்கள் முழுவதையும் காணத்தொடங்கினால் பூமியிலிருந்து ஆகாயம் வரை தேடினாலும் முற்றிலும் கிடையா என்று டிரெவிலியன் என்னும் ஆங்கிலேய வரலாற்றாளர் கூறியது இதற்கும் பொருந்தும். உண்மையில் இந்தியக் கலகம் என்பது ஒரு நிகழ்ச்சியன்று; அது ஒரு நிகழ்ச்சித் தொகுதி. ஆதலால் அத் தொகுதியிலுள்ள ஒவ்வொரு சிறு நிகழ்ச்சிக்கும் ஏராளமான காரணங்கள் தோன்றும். இவற்றையெல்லாம் கூட்டிப்பார்த்தால் காரணங்கள் அளவுகடந்து போகும். நிகழ்ச்சித் தொகுதிக்கு நிகழ்ச்சி என்பது பெயராயின் காரணத் தொகுதிக்குக் காரணம் என்று பெயரிடலாம். வரலாற்றில் எந்தக் கேள்வியையும் 'ஏன்' என்னும் சொல்லை முன்னிட்டுக் கூறலாம். அதாவது, 'சிப்பாய்க் கலகம் ஏன் தோன்றிற்று'? இதற்குள்ள பல காரணங்களில் ஒன்றான 'மாமிசப்பசை தடவிய துப்பாக்கிக் குண்டுகளை உபயோகிக்கும்படி வற்புறுத்தப்பெற்றமையால்' என்று விடை கூறலாம். இஃதோடுநில்லாமல் 'ஏன் அவ்வாறு வற்புறுத்தப் பெற்றது?' என்று மேலும் கேட்கலாம். இங்ஙனம் ஆதிகாரணம் விளங்கும் வரையில் கேள்விகள் தொடரலாம். இதற்கு முடிவேயில்லை. ஏனெனில், இறுதியாகக் கேட்கப்படும் கேள்விகள் இயற்கையின் தன்மையைப் பற்றியவையாயிருக்கும்; அவற்றிற்கு விடையிறுக்க இயலாது என்பது வெளிப்படை. மேற்கூறிய கருத்தை பேட்ரிக் கார்டினர் என்பவர் தாமியற்றிய 'வரலாற்று விளக்கத்தின் தன்மை' (Nature of Historical Explanation) என்னும் மிக அரிய நூலில் கூறியுள்ளார்.

இனி, காரணகாரியத் தொடர்பினை விளக்குதலாலேயே வரலாற்றில் நிகழ்ச்சிகளுக்குப் பொருள் ஏற்படுகின்றது. பொருளுள்ள வரலாற்றை இயற்றப்புகும் ஆசிரியன் காரணகாரிய விளக்கங்களில் ஈடுபடுதல் வேண்டும். காரணகாரியமாகத் தொடர்புபடாத நிகழ்ச்சிகள் ஏராளமாக உலகில் உண்டு. அவற்றையும் அவ்வாறு தொடர்புபட்ட நிகழ்ச்சிகளையும் ஒன்றோடொன்று மயங்கிக் காணக்கூடாது. இவற்றை ஒன்றினிலும் ஒன்றைப் பிரித்து

உண்மைக் காரணங்களைத் தனிப்படுத்தி நிகழ்ச்சிகளின் தொடர்பைப் பொருள்தரும் வகையில் நிறுவுதல் வரலாற்றுளன் செயற்பாலது.

இனி, எத்துணை ஆய்ந்தாலும் காரணம் ஒன்று தோன்றுமல் தன்னிச்சையாக நிகழும் நிகழ்ச்சிகள் பல உள. அவற்றிற்குத் தன்னிச்சை நிகழ்ச்சிகள் அல்லது காரணம்படா நிகழ்ச்சிகள் (contingent events) என்பது பெயர். இவ்வாறு பல நிகழ்ச்சிகள் வரலாற்றில் தோன்றுதலால் எல்லா வரலாற்று நிகழ்ச்சிகளும் எவ்வாறே ஒருவகைக் காரண காரிய வலையில் சிக்கிக் கொண் டுள்ளன என்று கருதுதல் பொருந்தாது. அன்றியும் 'ஒழுக்கக் காரண-காரியத் தொடர்பு' என்பதொன்றுண்டு. இது இந்துக்களுடைய கர்மாக் கொள்கையைப் போன்றது. 'தீங்கு செய்தார்க்குத் தீமை விளையும்; நல்லோர்க்கு நன்மை விளையும்— இத்தகைய காரண காரியத் தொடர்பு வரலாற்றில் உண்டு' என்று நம்புவது நம்பிக்கையளவில் நிற்கும். உலகியலோடு இணைந்து நிற்கும் வரலாற்று நிகழ்ச்சிகளுக்கு அத்தகைய தொடர்பு ஏற்படுத்த முற்படுதல் சிறிதும் பயன் தராது.

காரியத்திற்கும் அதை விளைவிக்கும் காரணத்திற்கும் மூன்று விதத் தொடர்புகள் காலிங்வுட் (Collingwood) என்னும் ஆங்கிலேய வரலாற்றுத் தத்துவர் கூறுகின்றுர்: (1) காரணம் இருந்தால் அது உந்தும் விளைவு இருந்தே தீரவேண்டும்; (2) அந்த ஒரு காரணம் இன்றேல் விளைவு நிகழாது ஆதல் வேண்டும்; (3) ஓரளவிற்கேனும் காரணம் காரியத்தை முந்துதல் வேண்டும்: இன்றேல் காரணம் காரியத்தை உந்த முடியாது. இதனின்று காரண-காரியத் தொடர்பினை ஒரு தவிர்க்க முடியாத வரலாற்று விதியாகக் கொள்ளுதல் தவறுடைத்தாம். ஆயினும், லெக்கி (Leeky) போன்ற வரலாற்றறிஞர்கள் 'வரலாறு என்பது ஒன்றன் பின் ஒன்றுக எதேச்சையாக நிகழும் நிகழ்ச்சிநிரல் அன்று. அது காரணங்களையும் காரியங்களையும் பிணைத்து வைத்த ஒரு சங்கிலி போன்றது' என்றனர்[1]. ஆனுல், இந் நிலையில் கே. ஆர். பாப்பர் (K. R. Popper) என்னும் ஜெர்மானிய வரலாற்றுளர் கூறுவதைக் காண்டல் வேண்டும். அவர் கூறுவதாவது : 'அ என்னும் நிகழ்ச்சி ஆ என்னும் நிகழ்ச்சியை உந்துதலால் ஆ ஏற்படுகிறது என்று

[1] History of European Morals Vol. I, p. 332.

சொல்லும்போது அ-வைக் காரணமாகவும் ஆ-வை விளைவாகவும் கூறுகிறோம். ஆனால், இவ்வாறு கூறுமுன்பு இன்ன வகையில் இன்னது நிகழ்ந்தால் அது, நாம் உறுதியாக எதிர்பார்த்துக் கூற முடியும் வகையில், இன்னொன்றை இன்ன முறையில் நிகழ்விக்கும் என்னும் பொதுவிதியொன்றினை முதற்கண் மனத்திற்கொண்டு அவ் விதிக்கு ஏற்ப இந் நிகழ்ச்சித் தொடரினை விளக்குகின்றோம். இது பெரும்பாலும் நம்மை யறியாமலேயே நிகழ்வது.'[1] பாப்பர் கூற்று முற்றிலும் உண்மையே. காரண காரியத் தொடர்புகளைக் கூற முற்பட்டதுமே, உலகப் பொது விதிகளில் நம்பிக்கையையும் தெரிவித்துக் கொள்கிறோம். பாப்பருக்கு 'உலகப் பொது விதிகள் என்று சில உள' என்னும் கொள்கை உடன்பாடன்று என்பதை 'வரலாற்றியம், வரலாற்றுச் சார்பியம்' என்னும் அத்தியாயத்திற் காண்போம்.

[1] K. R. Popper : One open Society and its enemies, Vol, II P. 249.

# 11. வரலாற்றியம் மற்றும் வரலாற்றுச் சார்பியம்

## (i) வரலாற்றியம்

வரலாற்றுத் தத்துவங்களிலேயே மிகக் கடினமான கருத்துகளில் 'வரலாற்றியம்' என்பது ஒன்று. இதன் கடின இயல்புக்குக் காரணங்கள் பலவுள. முதற்கண் இது புதுமையான கருத்து; இரண்டாவது வரலாற்றியம் என்னும் சொல்லுக்குப் பலர் பல பொருள்கள் கூறுவர். இப் பன்மையே (அதாவது ஒரு சொல்லுக்கே பல பொருள் கூறுதல்) வரலாற்றியம்பற்றிய சில குழப்பங்களுக்குக் காரணமாம். இச் சொல்லைப் புதுமையாக ஆக்கிக்கொண்டு அதனை ஆராய்வார் ஒருவரோடொருவர் பொருள் மாறுபட்டு ஆதாரத் தத்துவ நிலையில் நிகழ்த்தும் கருத்துப்போர் இக் குழப்பத்தை மேலும் மிகுவிக்கும். பல பொருள்படும் ஒரு சொல்லைப் பலர் பயிலுங்கால் எப் பொருளில் அச் சொல்லை ஒவ்வோரமயத்தில் ஒவ்வொருவர் ஆளுகின்றனர் என்பதை அறிதலும் கடினமாம். இவ்வாறு புதுச் சொற்களை ஆக்க வேண்டியிருத்தல் வரலாற்றுத் தத்துவங்கள் எத்துணை விரைவில் எவ்வளவு முன்னேறி வருகின்றன என்பதையும் அறிவுறுத்தும். சொல் அமைப்பைமட்டும் நோக்குங்கால் இது 'வரலாற்றுத் தத்துவம்' என்றேயும் பொருள் படலாம். வரலாற்றியம் என்பது 'Historicism' என்னும் ஆங்கிலச் சொல்லின் தமிழாக்கம். ஆங்கிலச் சொல்லான 'Historicism' ஜெர்மானிய 'Historismus' என்பதிலிருந்து பெறப்பட்டது. பாரக்லா (Barraclaugh) என்னும் ஆங்கிலேய வரலாற்றுளர் 'வரலாற்றியம்' என்பது வரலாற்றின் வளர்ச்சி, தொடர் இயக்கம் (இடையீடின்றித் தொடர்ந்து செயற்படுதல்) என்னும் இரண்டு பண்புகளையும் குறிக்கப் பயன்பட்ட சொல் என்பார். ஆயினும், 'வரலாற்றின் இயக்கத்தில் தொடர்ச்சி என்பது ஒரு முக்கியமான அம்சம் அன்று' என்பது ஹரன் ஷா (Hearn Shaw) என்னும் பிறிதோர் அறிஞரின் கருத்து. வரலாற்றில் ஓர் 'அமைப்பு' (ஒரு

கொள்கை, ஒரு தத்துவம்) இருப்பதாகக் கருதுவார்க்குத்தாம் வளர்ச்சி, தொடர்ச்சி என்பன முக்கியமாகத் தோன்றும். அப்படி ஓர் 'அமைப்பு' இன்றேல், 'தொடர்ச்சி என்பது, அதாவது வர லாற்றில் நிகழ்ச்சிகள் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து நிகழ்தல் என்பது, ஒரு பொருளுள்ள தொடர்ச்சியன்று. ஒவ்வொரு செயலும் தன்னிச்சையாக நடப்பது, காரண காரியத் தொடர் பால் பிணைக்கப்பட்டவை யல்ல' என்றே தோன்றும். இவ் வேறு பாட்டினை மனத்திற் கொள்ளுதல் வேண்டும்.

தொடர் நிகழ்ச்சியைக் கீழ்க்காணுமாறு குறிக்கலாம்.

அ ஆ இ ஈ உ ஊ எ ஏ
• • • • • • • • • • • • • •

படம் 8

மேலே காணும் புள்ளிகள் 'அ'-விலிருந்து 'ஏ'—வரை குறியீடு பெற்றுள்ளன. இப் புள்ளிகள் எல்லாம் நிகழ்ச்சிகளைக் குறிப்பன வாகக் கொள்வோமாயின், 'அ'-விற்கும் 'ஆ'-விற்கும், 'இ'-யிற்கும் 'ஈ'-யிற்கும் முதலாக உள்ள இடையீடுகள் கால இடையீடுகள். இவ்வாறு இடையீடு பட்ட நிகழ்ச்சிகள் ஒன்றற்கொன்று காரண காரியத் தொடர்புடையனவா அல்லவா என்பது ஓர் அடிப்படை வரலாற்று வினா. ஒன்றற் கொன்று அவை காரண காரியமாகப் பிணைக்கப்பட்டிருப்பினும், மொத்தமாக 'ஆ'-விலிருந்து 'ஏ'-க்கும் மேலாக உள்ள நிகழ்ச்சிகள்வரை ஒரு பரந்த வரலாற்றமைப்பிற் குட்பட்டவையா—என்பது அடுத்து வரும் முக்கியமான வினா.

வரலாற்றியம் என்பதற்கு வெவ்வேறு அறிஞர் கூறும் பல விளக்கங்களை இனிக் காண்போம்.

ஃபிரிட்ரிக் மயினிகெ ((Friedriche Meineeke) என்பார், 'உலக வரலாற்றில் மனிதன், சமுதாயம் என்னும் இனங்களின் அறிவியல் வளர்ச்சி, முன்னேற்றம் ஆகியவற்றை ஆராயும் (கருத்துகளின்) வரலாற்றுப் பகுதிக்கு 'வரலாற்றியம் என்று பெயர்' என்றார்.

குரோச்சே (Croce) என்னும் இத்தாலிய வரலாற்றுத் தத்துவர் இச் சொல்லுக்கு 'வரலாறு என்னும் விஞ்ஞான அறிவியல்' (Science) என்று எளியபொருள் ஒன்று கூறினார்; மேலும் அவர் கூறுவது: 'தனித் தனி வரலாற்று நிகழ்ச்சிகளையும் தனியன்களை

யும் கண்டு அவற்றைப் பொதுமை நிலைக்கு உயர்த்துதல் வரலாற்றியம் எனப்படும்' என்றார். அவர் இப் பொருள்பற்றி மேலும் கூறுவதாவது, '18, 19ஆம் நூற்றாண்டு அறிவியற் கோட்பாடு (அதாவது அறிவொளி இயக்கம்) மேற்போக்கானது; ஆழ்ந்த உண்மையைக் காண முடியாதது; 19ஆம் நூற்றாண்டு மதிப்பீட்டு முறைகள் அவ் வழி வொளிக்கொள்கையைத் தவறென்று நிரூபித்து விட்டன; அக் கொள்கைக்குப் பதிலாக மனிதனது பகுத்தறிவு என்று சொல்லப்படும் இயல்பு எத்துணை 'பகுக்க இயலாத அறிவு' என்பதை நிரூபித்து வேறொரு பேருண்மையை நிலைநாட்டுவதே உண்மையான மதிப்பீடு. இவ் வாய்மையை யுணர்ந்து செயற்படுவார் நிறுவுவதே உண்மையான வரலாற்றுத் தத்துவம்' என்றும் அவர் கூறினார். இதிலிருந்து குரோச்சே வரலாற்றுத் தனியன்கள் எத்தகைய முழுமுதன்மைக்கும் (absolute) கட்டுப்பட்டவையல்ல என்று கருதுகின்றார் என்பது போதரும். அவர் கூறினார், 'ஒவ்வோர் உடன்பாட்டுக் கூற்றும் ஒரு தீர்மானமாகும்; தீர்மானம் என்பது வகையினங்களின்பாலது; ஆதலால் வரலாறு வரைவியலின் பகுதிகள் யாவையும் தீர்மானவகை யினங்களால் (Judgement Category) ஆனவை என்பது தெளிவு. இதனை யடுத்து ஏ. ஏல். ரவுஸ் (Rowse) என்பார் கூறுவதாவது 'வரலாற்றுவகைச் சிந்தனை நம்மை வரையறை கடந்த நிலையினின்றும் காக்கின்றது; ஒரு காலத்திற்கும் ஒரு நாட்டிற்கும் ஏற்பவையான ஒழுக்கநெறிக் கருத்துகளை அவற்றினின்றும் முற்றிலும் வேறுபட்ட நிலையிலுள்ள பிற காலங்கள், நாடுகள் என்பவற்றின் செயற்பாடுகள்மீது திணிக்கும் மரபினின்றும் காக்கின்றது' என்பது.

பாரக்லா என்னும் வரலாற்றாளர் 'வரலாற்றியம் என்பது சார்பியத்தின் தந்தை' என்றார். 'வரலாற்றியத்திற்போல, சார்பியத்திலும் ஒரு நிலைமையின் உண்மை, அதன் சூழ்நிலை, இடம் பொருள் ஏவல், பூர்விகம் என்பவற்றைப் பொறுத்துத்தான் அமையும் என்று கருதப்படும்' என்பது அவர் கூற்று. இதனால் ஒவ்வொரு வரலாற்று நிலைக்கும் அதற்கே உரித்தான வாய்மையொன்றுண்டு என்பது அவர் கருத்து என்பதாயிற்று. வரலாற்றியம் என்னும் சொல்லுக்கு இப் பொருள் தந்தால், 'காலம் இடம் என்பவற்றைப் பொறுத்து மாற்றிக்கொள்ள வேண்டாத கொள்கையே இல்லை என்பதுதான் வரலாற்றியம்' என்று கூறலாம்.

இவ்வாறெல்லாம் வரலாற்றியத்திற்குப் பொருள் கூறுவார் ஒரு புற மிருக்க, காரல் பாப்பர் (Kerl Popper) என்பாரது

பொருள் வரையறை, தம் விருப்பப்படி தரப்பட்டதாயினும், மிகச் சிறந்ததாம். அவர் இச் சொற்குக் கூறும் வரையறுத்த விளக்கமாவது: 'சமுதாய அறிவு இயல் துறைகளின் கடமை யாவது வரலாற்று முற்கூற்றுகளைச் (Prophecy) செய்தல்; அன்றியும் நாம் அரசியலை முறையே செலுத்தவேண்டுமாயின் முற்கூற்றுகள் தேவைப்படும் என்று காண்பதே வரலாற்றியம். 'இவ்வாறு அதற்குப் பொருள் வரையறை செய்துவிட்டு அக் கருத்தினைத் தருக்க ரீதியாகத் தமதென்று நிரூபிக்க முற்படுகின்றார் பாப்பர். அவர் கொள்கைப்படி 'வரலாற்றியம் மிகப் புதிய, நவீனகால, புரட்சிகரமான, விஞ்ஞான ரீதியில் அமைக்கப்பட்ட ஒரு கோட்பாடு, ஒரு சிந்தனைவகை என்று அதன் ஆதரவாளர்கள் வற்புறுத்திக் கூறுவராயினும், உண்மையில் அது ஒரு மிகப் பழைய மூடநம்பிக்கையின் எச்சம்'; உடன்பாட்டுக்கோட்பாட்டாளரான காம்ட், விஞ்ஞான சோஷலிசக் கருத்தை யுருவாக்கிய மார்க்ஸ், புறநிலை வரலாற்றாளரான டாயின் பீ என்போரெல்லாம் வரலாற்றுப் பொது விதிகளைக் காண முடியும் என்று கருதினர். அவர்கள் கருத்துகளையெல்லாம் தகர்க்கும் முறையில் அவர் பல முறையியல் ஆட்சேபணைகளையும் மதிப்பீடுகளையும் வகுத்தார். அவர் எழுதிய 'வரலாற்றியத்தின் உள்ளீடின்மை' (Poverty of Historicism) என்னும் நூலில் தமது கருத்துகளைக் கூறினார். நிருணயக் கோட்பாடு முற்றிலுமே தவறானது, அபாயகரமானது என்னும் கருத்தைத் தமது 'வெளிப்படைச் சமுதாயங்களும் அவற்றின் பகைஞர்களும்' என்னும் நூலில் விளக்கியுள்ளார். 'சமூகவியலில் முன்னறிவும் முற்கூற்றும்' என்னும் கட்டுரையில் அவர் வரலாற்றியத்தைச் சிக்கறுத்து வேரறுத்தார். இப் பொருள் பற்றிப் பாப்பர் கூறுவதைக் காண்போம் :

'வரலாற்றில் எதிர்காலத்தில் நிகழப் போவனவற்றை முன் கூட்டியே கூறிவிடுதல் இயலும், வானவியலில் இனி நிகழப்போகும் கிரகணங்களைப் பல ஆண்டுகளுக்கு முன்பே கூறமுடியுமாப் போலே' என்பது வரலாற்றியத் தத்துவம். உதாரணமாகப் புரட்சிகள் எப்பொழுது எவ்வகையில் நிகழும் என்று கூறிவிட முடியும் என்பது. இவ்வாறு கூறும் சிந்தனையாளர்களில் மார்க்ஸ் (Marx) மிக முக்கியமானவர் என்று கருதி அவரது கோட்பாடுகளைக் கடுமையான மதிப்பீட்டிற்கு உள்ளாக்குகின்றார் பாப்பர். 'எதிர் கால நிகழ்ச்சிகளின் சூழ்நிலை நமக்கு எவ்வாறேனும் முற்றிலும் தெரியக்கூடுமாயின் அந் நிகழ்ச்சிகள் எவ்வாறு, எங்கு எவ்வகையில்

நிகழும் என்று அறுதியாகக் கூறலாம் என்று கருதுவது ஏற்றுக் கொள்ள முடியாத ஒரு கோட்பாட்டுநிலை. விஞ்ஞான முற்கூற்று களுக்கும், வரலாற்று முற்கூற்றுகளுக்கும் ஓர் அடிப்படையான வேறுபாடு உண்டு; முந்தியது கட்டுப்படுத்தப்பட்ட சூழ்நிலைக்குப் பொருந்துவது; பிந்தியது கட்டுப்படுத்த முடியாத சூழ்நிலையின் பாற்பட்டது. விஞ்ஞானத்தில் காணப்படும் பொது விதிகள் யாவை யும் முற்றிலும் விளக்கமான, தனிப்படுத்தக்கூடிய, அசையாத் தன்மையுடைய, திரும்பத் திரும்ப ஒரே வகையில் நிகழக்கூடிய செயற்பாடுகளின் தன்மையை விளக்குவனவேயாம். ஆனால், சமூக வியல்களில் — சிறப்பாக வரலாற்றில் — அத்தகைய நிலைமைகள் இரா; அவற்றைச் செயற்கையாக உண்டாக்கவும் முடியாது. கிரகணம் நிகழ்வதை ஏன் முற்கூற முடியும் என்றால் சௌரமான (சூரியனை மையமாகக் கொண்ட) ஏற்பாடு நிரந்தரமானது, ஒரே நிலையில் இருப்பது; திரும்பத் திரும்ப ஒரே மாதிரியாக நிகழ்வது; ஆனால், சமுதாய நிகழ்ச்சிகள் அவ்வாறல்லவாதலின் வானவியல் வகை முற்கூற்றுகள் வரலாற்றில் சாத்தியப்பட மாட்டா. ஆதலால் முற்கூற்றுகள், நிலையாக உள்ள அமைப்புகளுக்கும் அவற்றைச் சூழ்நிலையினின்றும் தனிப்படுத்தி நிலைப்படுத்தக்கூடிய வாய்ப்புள்ள அமைப்புகளுக்கும் மட்டுமே பொருந்தும் என்பதா யிற்று. சமுதாய அறிவியலில் மறுநிகழ்வு ஏற்படாது, தனிப் படுத்தவும் முடியாது. ஆதலால் முற்கூற்றுகளை வரலாற்றில் புகுத்துதல் மடமை' என்பது பாப்பர் கருத்து. ஆயினும் வரலாறு பயன்படுதற்கு முற்கூற்றுத் தேவையில்லை என்பதும் அவர் கருத்து.

முற்கூற்றுக் கோட்பாடுகளில் மிகுந்த நம்பிக்கையுடையவரில் மார்க்ஸை முக்கியமாகப் பாப்பர் கருதுகின்றாராயினும், அவர் ஸ்பெங்ளர், டாயின்பீ என்பாரையும் அக் குழுவில் சேர்க்கின்றார். வரலாற்றியத்தைப் பாப்பர் ஏன் எதிர்க்கின்றாரெனில், 'சமூகவியல் களில் நாம் முழுமைகளை வைத்து ஆய்தலில் பயனில்லை; அதாவது குழுக்கள், தேசங்கள், சமூகங்கள், நாகரிகங்கள் முதலியவை நடைமுறை ஆய்விற்குப் பயன்படா. இவற்றை வைத்துக்கொண்டு ஆராய்ச்சிசெய்தால் முடிவுகள் பிறவா; ஏனெனில், இவை அனு பவமுறையில் ஏற்பட்ட பகுப்புகள் அல்ல, கொள்கையளவில் கருதிக்கொள்ளப்பட்ட சில மானதங்கள் (concepts), அவற்றடிப் படையில் எழுந்த சில அடிக்கோள்கள் (postulates): உதாரணமாக 'இடைநிலை வகுப்பு (மத்தியதர வகுப்பு)'. இது நாம் காட்சி

யளவில் அறியக்கூடிய ஒரு குழுவன்று. மானதமாக (conceptually) நாம் இயக்கியல் நிலையில் (idealism) ஏற்படுத்திக்கொண்ட ஒரு வகையினம் (category). ஆகையால் இத்தகைய குழுக்களைவைத்து ஆயும் முறையினைக் கைவிட்டு, வாழ்க்கையில் உண்மையாகக் காணக்கூடிய தனிமனிதர்கள், அவர்கள் செயற்பாடுகள், உறவு முறைகள் என்பவற்றை ஆதாரமாக வைத்து ஆயும் முறைகளை மேற்கொள்ளவேண்டும். வரலாற்றுத் தனியன்கள் தன்னிச்சை யும் சுதந்திர இயக்கமும் உடையவை, பொது விதிகளுக்கு உட் படாதவை என்பது பாப்பர் கருத்துகளின் சாரம். இத் தனியன் கள் ஒன்றோடொன்று காரணகாரியத் தொடர்பால் பிணிக்கப்பட் டிருப்பினும் அவற்றிலிருந்து 'மாறுதவரைவு' ஒன்றைக் காண்டல் என்பது இயலாது என்னும் கருத்துடையர் பாப்பர்.

'அண்மைக்காலத்திலும் தற்காலத்திலும் வரலாற்றியம் இரு உருவங்களில் காணப்படும்; ஒருபுறம் (அதாவது வலப்புறத்தில்) பாஸிஸ்டுகள், இன்னொருபுறம் (அதாவது இடப்புறத்தில்) மார்க் ஸிஸ்டுகள். இனக்கோட்பாட்டாளர்களும் பாஸிஸ்டுகளும் 'ஓர் இனம் இயற்கையிலேயே பிற இனங்களைவிடச் சிறந்தது. அதுவே எதிர்காலத்தைப் பிதுரார்ச்சிதமாக அடையும், வெல்லும், ஆளும் என்று கருதிக் கூறுகின்றனர். அவ்வாறே மார்க்ஸிஸ்டுகள் 'ஓர் இனம்—அதாவது தொழிலாளிவர்க்கம் உலகையாளும்' என்கின் றனர். முந்தியவர்களுக்கு இனக்கோட்பாடு இயற்கைவிதி; பிந்தியவர்களுக்குப் பொருளாதார முதன்மையைக் கருதி வர்க்கங்கள் தம்மிடையே நிகழ்த்தும் போர் தொழிலாளிகளின் முதன்மைக்கு வழிவகுக்கும். இவ் விரு வகையினருமே இம் முடிவு களுக்கேற்பத் தமது வரலாற்றுப் பொருள் விளக்கம் செய் கின்றனர்.' இது பாப்பரின் முடிவான கருத்து.

## (ii) வரலாற்றுச் சார்பியம்

வரலாற்றியம், வரலாற்றுச் சார்பியத்தோடு சேர்த்துப் பெரும்பாலும் எண்ணப்படுகின்றது என்பதை மேலே கண்டோம். சார்பியம் என்பது நமது தீர்மானங்கள் காலத்திற்கும் இடத்திற் கும் பொருந்த அமையும் அல்லது அமையவேண்டும் என்று கூறும் கொள்கை. ஆங்கிலத்தில் இச் சொல் 'Relativism' என்று ஆளும். சார்பியம் இருபொருள்களில் பயன்படுத்தப்படுகின்றது: (1) வர லாற்று நிகழ்முறை முழுவதும் ஒரு பெரிய ஒன்றிய இயக்கமாதலின் அதற்குள் நடைபெறும் எல்லா நிகழ்ச்சிகளும் ஒன்றோடொன்று தொடர்புகொண்டு ஒன்றையொன்று சார்ந்துநிற்பன என்று காணவேண்டும் என்பது; (2) வரலாற்றுப் போக்கைப்பற்றி

யாதொன்றும் முற்கூறவோ, கூறவோ, முடியாதாதலின் எல்லாமே சார்பியல் நிகழ்ச்சிகளேயாம் என்பது. வரலாற்றுத் தனியன்கள் யாவையும் உண்மையிலேயே தனித்தனி 'ஒற்றை'கள், ஒவ்வொன்றிற்கும் தனித் தனிப் பொருளுண்டு என்னும் காரணங்களால் இக் கொள்கை பிறக்கின்றது. ஸர் ஜான் நீல் என்பார் இக் கருத்தைக் கீழ்க்காணுமாறு கூறினர்: 'எல்லாத் தனியன்களும் சுதந்திரமாகவும் ஒன்றற்கொன்று சமமாகவும் பிறக்கவில்லை.' வரலாற்றுளனைப் பொறுத்தவரை வரலாற்றுச்சார்பியம் என்பது கீழ்க் காணும் மூன்று விதங்களில் நிகழும்: (1) எடுத்துக் கொண்ட பொருள், காலம், ஆள் என்பவற்றை விளக்க அமையும் சான்றுகள்; (2) அப் பொருளை எங்ஙனம் விளக்குதல் என்பது—அதாவது வாழ்க்கை வரலாருகவா, சமுதாய இயல் முறையிலா, நிலையங்களின் வரலாற்று வாயிலாகவா—; (3) இவற்றின்மீது வரலாற்றுளன் நிறுவும் பண்பு மதிப்பீடுகள் எத்தகைய என்பது. இவ்வாறு எழுதப்பெறும் நூல்கள் யாவையும் சார்பியச் சார்புடையனவா யிருக்கும். முதலிரண்டு நிலைகளிலும் வரலாற்றுளர் யாவருமே ஒத்துக்கொண்டாலும், மூன்ருவதாகிய மதிப்பீட்டு நிலையில் வேறுபாடு இருந்தே தீரும்.

வரலாற்றில் புறநோக்கு அகநோக்கு வேறுபாடும், வரலாற்றுச் சார்பியமும் தொடர்புடையன. பழைமையை அதன் கண்கொண்டு காணவேண்டும், மதிப்பிடவேண்டும்; அவ்வாறன்றிப் பிற்காலத்தில் வாழ்வோர் அவர்கள் கண்கொண்டு அவர்கள் காலத்துப் பண்பு மதிப்பீடுகளைப் பண்டைக் காலத்திற்கு ஏற்றுவது முறையியலுக்குப் புறம்பானது. எப்போதும் இயற்கைக் காட்சிகளில் பொருள்கள் சேய்மைக்குச் செல்லச் செல்ல உருக் குறைந்துபோய்ச் சிறுமை எய்தும்; ஆனல் வரலாற்றில் பழைமையை ஆராயப்புகும்போது பொருள்கள், வரலாற்றுத் தனியன்கள் என்பவை உருவில் பருக்கின்றன. இது ஒரு காட்சித்திரிபு (visual distortion), அல்லது காட்சி மயக்கம் (optical illusion). இது நீக்கப்பட வேண்டும். பண்டைக் காலத்தாரே பண்டைய நிகழ்ச்சிகளைப்பற்றி எழுதிவைத்தவற்றைப் பிற்காலத்தார் ஆராயும்போது இருவகைத் திரிபுகள் நிகழக்கூடும். ஒன்று, பண்டையோரே அவர்கள் காலத்து நிகழ்ச்சிகளைத் திரிபுற உணர்ந்திருக்கக்கூடும்; இரண்டாவது பிற்காலத்தார் முந்தையோர் எழுதிவைத்தவற்றை அறிந்துகொள்ள முற்படும்போது திரிபுகள் ஏற்படக்கூடும். உதாரணமாக, ஹெரடோட்டஸ் இயற்றிய வரலாற்று நூலில் நாம் நம்பமுடியாத நிகழ்ச்சிகள் பல கூறப் பட்டுள்ளன. இவை ஹெரடோட்டஸ் திரிபுற உணர்ந்து கொண்டமையால் நிகழ்ந்தவையா அன்றி நாம் ஹெர

டோட்டலைத் திரிபுற உணர்கிறோமா என்பது முக்கியமான பொருள் விளக்கப் பிரச்சினை.

வரலாற்றுளன் ஒரு நிகழ்ச்சியை விவரிக்கும்போதும் அதற்குப் பொருள் விளக்கம் தரும்போதும் அவனது முற்கோள்கள் அவற்றை ஒருபாற் சாய்த்துவிடும். இது ஓரளவிற்குத் தவிர்க்க முடியாதது என்பதை வரலாற்றுப் புறநோக்குத் தன்மை என்னும் அத்தியாயத்திற் கண்டோம். உதாரணமாக, இருபதாம் நூற்றுண்டில் வாழும் ஒரு வரலாற்றுளன் பன்னிரண்டாவது நூற்றுண்டுப் பத்திரம் ஒன்றை ஆராய்ந்தால், அப் பத்திரத்திற்கு அவன் தரும் விளக்கம் பத்திரத்தை எழுதினவர்கள் கொண்ட பொருளாக இருக்கவேண்டுவதில்லை; அது வரலாற்றுளன் அதைப் பற்றி என்ன நினைக்கிறுன் என்பதேயாம். ஆதலால், முற்காலத்துப் பத்திரங்களையும் சான்றுகளையும் வைத்து வரலாறு எழுதும் போதும், வரலாற்றை எழுதுபவனுடைய கருத்துகள், நோக்கங்கள், முற்கோள்கள் என்பவை அவ் வரலாற்றில் ஊடுருவி நிற்குமேயன்றி அப் பத்திரங்களையும் சான்றுகளையும் விட்டுச் சென்றுரது கருத்துகளை அவை பிரதிபலிக்கும் என்று கூறமுடியாது. வரலாற்றுளன் தரும் பொருள் விளக்கங்கள் அவனது தேவைகளையும், முற்கோள்களையும் பொறுத்திருக்கும்.

சார்பியத்தை விளக்கப் பல உதாரணங்கள் தரலாம்: ஒரு மலையின் உச்சியிலிருந்து கீழே காண்பான் ஒருவன் பாதாளத்தைப் பார்ப்பது போன்ற தோற்றத்தையும், அதே மலையை அடிவாரத்திலிருந்து காண்பவன் நெட்டுயரத்தில் இருப்பது ஒன்றைக் காண்பது போன்ற தோற்றத்தையும் பெறுவது இயற்கை. ஒரே பொருளை வெவ்வேறிடங்களிலிருந்து காண்பார் வெவ்வேறு காட்சியைக் காண்கின்றனர். இருக்கும் நிலையைப் பொறுத்துக் காட்சி வேறுபடுதல் காண்க.




படம் 9

மேலே காணும் அரைவட்டத்தில் அ, ஆ, இ, ஈ என்று நான்கு இடங்கள் குறிப்பிடப் பெற்றுள்ளன; அவற்றில் 'அ'

என்பது காண்பான் நிற்கும் நிலை; அவன் அவ்விடத்தில் நிற்றலால் 'ஆ' அவனுக்கு முற்றிலும் தெரியும்; 'இ' ஓரளவு தெரியும்; 'ஈ' தெரியவே தெரியாது. இதற்குக் காரணங்கள் மூன்று : (1) 'அ' நிற்குமிடம்; (2) ஆ, இ, ஈ என்பவை அமைந்துள்ள இடங்கள்; (3) இவையாவும் ஓர் அரைவட்டத்தின்மீது அமைந்திருத்தல். இவ்வாறே வரலாற்றிலும் காணும்போது, 20ஆம் நூற்றாண்டில் இருப்பவன் 19ஆம் நூற்றாண்டுச் செய்திகளை நன்றாகவும், 8ஆம் நூற்றாண்டுச் செய்திகளைச் சற்று மங்கலாகவும், கி. மு. 8ஆம் நூற்றாண்டுச் செய்திகளை அரையிருட்டுப் போன்ற நிலையிலும் கி. மு. 30ஆம் நூற்றாண்டுச் செய்திகளைச் சற்றும் அறியாமலும் இருப்பான். மேலே கண்ட விளக்கப் படத்தில் இடத் தூரத்தினால் காட்சி பாதிக்கப்படுகிறது; வரலாற்றில் காலச் சேய்மையினால் அறிவுணர்ச்சி மங்கிக்கொண்டே போய் இருளில் முடிகிறது. இக் காட்சி வேறுபாடு ஒவ்வொரு வரலாற்றாளனும் இருக்கும் நிலைக்கு ஏற்ப மிகுந்தோ குறைந்தோ காணும். இவ்வாறு இருக்கும் இடத்தையும் பார்க்கும் கோணத்தையும் பொறுத்து ஒரு பொருளின் தன்மையும் உருவமும் மாறுதல் இயற்கை என்பது பட்டிக்காட்டான் யானை பார்த்த கதையால் யாவரும் அறிவர். வரலாற்றிலும் ஒவ்வொரு வரலாற்றாளன் ஒரு வரலாற்றுத் தனியனின் ஒரு பகுதியை மட்டும் கண்டு பொதுமை காண முயலும்போது சார்பியற் குற்றம் ஏற்படுகிறது. வரலாற்றாளர்கள், எந்தப் பிரச்சினைக்கும் பல நோக்குநிலைகள் இருத்தல் கூடும் என்பதை மறத்தலால் இக் குற்றங்கள் பிறக்கின்றன; பிற நோக்கு நிலைகளும் தகவுடையவாகலாம் என்று கொள்ளாமல் தன் நோக்குநிலையையே வற்புறுத்தும் பண்பு குற்றமுடைத்து. சிலுவைப் போர்களைப்பற்றிக் கிறிஸ்துவர்கள் கருதுதற்கு எதிர்மாறாக முஸ்லிம்கள் பிறைப் போர்களைப்பற்றி எண்ணக்கூடும் என்பதும், பேரரசு கோட்பாட்டாளர்கள் குடியேற்ற நாட்டு மக்கட்கும் ஒரு நோக்குநிலை இருக்கலாம் என்பதை மறப்பதும் எளிதில் நிகழ்வனவாம்.

பெரும்பாலும் வரலாற்றாளர்கள் வேண்டுமென்றேயோ சில உலகியல் அனுகூலங்களைக் கருதியோ செய்யும் திரிபுகள் நம்மாற் கருதப்பட வேண்டா. அங்ஙனம் செய்வோரை வரலாற்றாளர் என்று கருதவும் வேண்டா. ஆனால் உண்மையாகவே, உள்ளார்ந்த நம்பிக்கை காரணமாக வேறுபட்ட கருத்தையுடையவர்கள் அவ் வேறுபாட்டை வற்புறுத்திக் கூறுதலில் குற்றமிராது. ஒரு காலத்தவர்கள் வேறொரு காலத்தவர்களைத் தகுதி நிருணயிக்கக் கூடாது என்பதும் கோட்பாடாயின், ஒரு நீதிபதி குற்றஞ்சாட்டப் பட்டவனை விசாரிக்க முடியாது. நன்மை தீமை வேறுபாடு

இராது. வரலாற்ருளர் யாவரும் தமது சாய்கோள்களால் பாதிக்கப்படுகின்றனர் என்பது ஒரு வாதம்; இதன் உண்மையை ஒப்புக்கொள்ளலாம். ஆனல் இதிலிருந்து எது பெறப்படா தெனில், எக் காலத்தில் யார் செய்த எதையும் மதிப்பிடும், திறனும் உரிமை வேறு எவருக்குமே இல்லை என்று கூறுதல் தவருனதாம்.

வரலாற்றில் நெடுக நாம் காண்பது மனிதனுடைய அனுபவத் தொகுதிதான். இதனை உணர முயலும் வரலாற்ருளனும் தனது அனுபவத்தை அளவையாக வைத்துத்தான் வரலாற்றை ஆய்கின்ருன். ஆதலால் அவ் வாராய்ச்சியின் முடிவாக அவனுக்கு ஏற்படும் உணர்வுகள் தன் அனுபவத்தின் எதிர்ச் சாயைகளே யாம். வரலாற்ருளன் வரலாற்றில் காணும் வியப்புகள், வெறுப்புகள், விருப்புகள், வேதனைகள் என்பவை அவ் வரலாற்றில் வாழ்ந்தவர்களால் அனுபவிக்கப்பட்டவைதாமா என்று உறுதி யாகக் கூறமுடியாது. உதாரணமாக, ஒரு சர்க்கஸ் காட்சியைக் காண்பவர்கள் சர்க்கஸ்காரர்களுடைய விளையாட்டுகளைப் பெரு வியப்புடன் காண்பராயினும் விளையாட்டுக்காரர்கள் அவ் வியப்பில் மூழ்குவதில்லை. ஏனெனில், விளையாட்டைப் பார்ப்பவர் களுடைய அனுபவங்களும் உணர்ச்சிகளும் விளையாடுபவர் களுடைய அனுபவங்கள், உணர்ச்சிகள் என்பவற்றினின்றும் வேருனவை. சேய்மைப் பொருள்கள் சிறியவையாகவும் அண்மைப் பொருள்கள் பரு வுருவினவாகவும் காணும் இயற்கை யும் காண்க. ஆதலால் நோக்கு நிலைகளும் தீர்மானங்களும் ஒன்று யிருக்கமுடியாது. இதுதான் சார்பியத்தின் சாரம்.

ஆனல், சார்பியம் எத்துணை அபாயகரமான ஒரு கோட்பாடு என்பது எளிதில் விளங்கும். உலகில் பல கோணங்கள், நோக்கு நிலைகள் என்பவையெல்லாம் இருப்பினும் அவையாவுமே வரலாற் ருளர்க்குத் தெரிந்தவைதாமே. எல்லா நோக்கு நிலைகளையும் கண்டு, தனது முடிவுகாணும் ஆற்றலை உட்படுத்தி, நடுநிலை பிறழாது, ஒருபாற் கோடாது சமன்செய்து சீர்தூக்கும் கோல் போல், வேண்டுதல் வேண்டாமையிலாது ஒப்பு நோக்கி உண்மை காண விழைதல் அன்ருே வரலாற்ருளன் கடமை! ஆதலால், சார் பியற் கோட்பாடு பெரும் பிழையுடைத்து என்பது தெள்ளிதின் விளங்கும். வாழ்க்கையில் சில ஆதாரப் பண்பு மதிப்புகள் உள, நன்று என்றும் நன்றே, தீது என்றும் தீதே என்னும் உணர்வுடை யோர் அதாவது நாகரிகம் முதிர்ந்தமக்கள் சார்பியத்தை ஏற்றுக் கொள்ளமாட்டார்கள். ஒழுக்கமுறை முழுமுதன்மையை முற்றிலும் ஏற்றுக்கொண்டு வற்புறுத்தியவர்களில் ஆக்ட்டன்பிரபு

முக்கியமானவர். 'ஒழுக்கம், அறம், நன்று, தீது என்பவை பூகோளத்தில் ரேகைக்கு ரேகை மாறுவனவல்ல. அவை முழுமுதற்றன்மையுடையவை. 'மனிதகுலம் அதன் அறநோக்குகளில் மாறிக்கொண்டே வருகின்றது. ஒரு காலத்தில் நன்றுயிருந்தது இன்று தீதாகக் காணப்படுகின்றது, அறக்கோட்பாடுகள் ரேகைக்கு ரேகை மாறுகின்றன. ஜேம்ஸ் மன்னர் சூனியக்காரிகளைத் தீயிட்டுக் கொளுத்தினர், மாக்கிய வெல்லி என்பார் படுகொலையை நுண்கலையாகத் தீட்டினர், சிலுவைப் போர்வீரர்கள் குற்றமறியாத யூதர்களைக் கொன்றனர், ஹோமர் கூறும் யுலிஸ்ஸிஸ் ஏமாற்றுவேலைகளில் ஈடுபட்டார் என்றால் அவர்கள் இருந்தகாலத்தை நினைந்து அவர்கள் செய்ததும் சரியே என்று நாம் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கூறப்படுகிறது. அறக்கோட்பாடுகளில் நெகிழ்ச்சி, சூழ்நிலைக்கு மனிதன் ஆளாதல், காலத்திற்கும் இனத்திற்கும் அளவற்ற தள்ளுபடி செய்யவேண்டும் என்னும் கொள்கைகள் எல்லாம் ஷிலேகல் காலத்திலிருந்து இன்றுள்ள உண்மைத்தத்துவவாதிகள் காலம்வரை போற்றப்பட்டுவரும் கொள்கைகளாம்' என்று ஆக்டன் பிரபு சார்பியத்தை மறுத்துக் கூறினர்.

இனி ஒரு சார் ஆசிரியர்கள் வரலாற்றில் வேறுபாடு காண்பது தகவுடைத்தே; ஆயினும் அவ் வேறுபாடு அறநெறி யடிப்படையில் அமைதல் கூடாது; அது வரலாற்று முக்கியத்துவம்பற்றி அமைதல் வேண்டும் என்பர். உதாரணமாக ஃபிளிங் (Fling) என்னும் ஆசிரியர் கூறுவார்:' பண்பு மதிப்பு (value) என்பது நன்று, தீது என்பனவற்றையோ, நாம் அவற்றை ஒப்புக்கொள்ளுகிறோமோ அல்லமோ என்பதையோ பொறுத்திருத்தல் கூடாது; வரலாற்றில் விளைவு முக்கியத்துவத்தைப் பொறுத்து அமைதல்வேண்டும். எடுத்துக்காட்டாக, ரோமன் கத்தோலிக்கர்கள் மார்ட்டின் லூதரை ஆதரிக்கமாட்டார்கள்; பிராடஸ்டென்டுகள் ஆதரிப்பர்; ஆயினும் அவ் விருவருக்குமே லூதர் 'வரலாற்றில் சமயச் சீர்திருத்த இயக்கத்தில் முக்கியமானவர் என்னும் அளவிற்குக் கருத்து வேறுபாடு இராது' என்று அவர் விளக்கினர். செங்கிஸ்கான், முகம்மது துக்ளக், அடால்ப் ஹிட்லர் என்போரது செயற்பாடுகளைக் கண்டிப்பவர்களும் அவர்களுடைய முக்கியத்துவத்தை ஏற்க மறுக்கமாட்டார்கள். இன்றேல் வரலாறு என்பது ஒரு சிலர் தாம் ஆதரிக்கும் கொள்கைகளைப் போற்றியவர்களைப்பற்றி வரைதல் தான் வரலாறு என்று எண்ணிவிடக்கூடும். இது மிகவும் தவறான கருத்து; ஏனெனில் அங்ஙனம் செய்தால், வரலாறு 'நிகழ்ந்தது கூறல்'என்னும் உயர்நிலையினின்றும் வழுவி 'விரும்பியது கூறல்'

என்னும் செய்தி விளம்பர நிலைக்கு இழிந்துவிடும். அன்றியும் நன்று, தீது என்பவற்றுள்ளும் பெரிய அளவிற்குக் கருத்து வேறு பாடு இருத்தல் கூடும் என்பதை மேலே கண்டோம்.

ஃபிரூடு (Froude) என்னும் வரலாற்றுளர் இப் பொருள்பற்றிச் சில உறுதியான கருத்துகளைக் கூறினர்: 'கருத்துகள் வேறுபட லாம், நடையுடை பாவனைகள் மாறலாம், சமய நோக்குகள் எழுகின்றன—மறைகின்றன; ஆனல் ஒடுக்குமுறைச் சட்டம் நிரந்தரம் என்னும் கல்லிற் பதித்தது' என்றுர். ஸர் தாமஸ் பிரௌன் என்பார். 'ஒழுக்கம் என்பது திரியும் பான்மைத்து என்று எண்ணவேண்டா; ஒரு காலத்துக் குற்றங்கள் இன்னொரு காலத்திலும் குற்றமாகவே யிருத்தல்வேண்டும் என்பதில்லை; உண்மையான அறிவால் ஏற்றுக்கொள்ளப்பட்ட அறவொழுக்கம் கருத்து வேறுபாடு என்னும் பொருட்டு மாற்றப்படும் என்றும் கருதவேண்டா' என்று வற்புறுத்தினர்.

உண்மை காணற்கு இயைபுக் கோட்பாடு (correspondence theory) என்று ஒரு கொள்கையுண்டு என்பதை மெண்டல் பாம் என்னும் அறிஞர் வற்புறுத்துகின்றுர். இக் கொள்கைப்படி 'ஒரு தனியனின் (fact) தகவுடைமை' (validity), அப் பொருட்கேற்ற கருத்துண்டா, ஒவ்வொரு கருத்துக்கேற்ற பொருளுண்டா என்பன ஆய்ந்து காணப்படும்' என்பது. எந்தச் சொல்லைக் கூறினு லும் அதற்கேற்ற இயற்பியற் பொருள் ஒன்று இருத்தல் வேண்டும், இன்றேல் அக் கருத்துத் தகவிலது. 'வீடு' என்று சொன்னல் ஒரு மனையைச் சுட்டிக்காட்டி இது 'வீடு' என்று கூறல் இயல வேண்டும். இக் கொள்கைப்படி எக் கருத்தையும் நிரூபிக்க அதற்கு இயைந்த பொருளைச் சுட்டிக்காட்ட முடிய வேண்டும். வர லாற்றில் இது இயலுவதின்று. ஏனெனில், பெரும்பான்மை வர லாற்றுத் தனியன்கள் பழைமையைச் சார்ந்தவை. நிகழ் காலத்தில் அவற்றைக் காட்சிக்குப் புலனுகும்படி சுட்டுதல் ஆகாது. டி. ஏ. ஃபிஷர் (D. A. Fischer) என்பார் 'வரலாற்றுச் சார்பியம்' என்பது வரலாற்றுய்விற்கு நேர்ந்த ஒரு சாபக்கேடு' என்பார்.

மேற்கூறிய எல்லாக் கருத்துகளையும் மனத்திற்கொண்டு இஸையா பெர்லின் கூறுகின்றுர்: 'வரலாற்றில் முடிவுகள் காணும்போது நம்மால் இயைந்த முறையிற் காண்கின்றேம்; இதில் சிறிது அபாயம் உண்டு, ஆனல் அதை ஏற்கிறேம்; நாம் செய்தது தவறு என்று உணர்த்தப்பட்டால் அதையும் ஏற்றுக் கொண்டு முடிவுகளை மாற்றிக் கொள்கிறேம். அவசரப்பட்டுச் சில முடிவுகளுக்கு வந்துவிடக்கூடும்; இதையுணர்ந்த மாத்திரத்

திலே நம்மைத் திருத்திக் கொள்ளுகிறோம். நியாயமாக நடந்து கொள்ள முயலுகிறோம், இதில் தவறுகள் நிகழ்கின்றன, திறனாய்விற்கு ஆளாகிறோம். பிற நாட்டு, பிற காலத்துக் கலாசாரம், பண்புமதிப்பு என்பவற்றை மதிப்பீடு செய்யும்போதும் எண்ணிறந்த வேறுபாடுகள் இருப்பினும், அவ் வேறுபாடுகளுக்குப் பொருத்தமான, தேவையான கழிவு ஈந்த பிறகும் எஞ்சி நிற்கக் கூடிய முழுமுதன்மைகளை நினைவிற்கொண்டு இறுதி முடிவுகள் காண்கின்றோம். இவ்வாறு எஞ்சி நிற்கும் பகுதியையே உண்மையாகப் புறநோக்குப்பகுதி என்கின்றோம்.'

விஞ்ஞான ஆய்வுகளில் ஒழுக்கமுறைப் பிரச்சினைகள் எழுவன வல்ல, ஆதலால் விஞ்ஞானிகள் அவற்றில் ஈடுபடுவதில்லை; ஆனால் சமுதாய ஆய்வுகளில், முக்கியமாக வரலாற்றில் அத்தகைய பிரச்சினைகள் ஊடுருவி நிற்றலால் பண்பு மதிப்பீடு ஒதுக்கற்பாலது எனல் கருத்துக் குழப்பத்தால் பிறப்பதேயன்றி வேறன்று.

பகுதி II

# வரலாறு வரைவியலின் வரலாறு

[இப் பகுதியில் வரலாற்றுளர் இயற்றிய நூல்கள், அவர்கள் வாழ்க்கை வரலாறுகள் என்பவை தரப் படாமல், ஐரோப்பாவில் அவ் வியல் எங்ஙனம் வளர்ச்சி யுற்றது என்பதைமட்டும் இது விளக்குகின்றது; பிற விவரங்கள் பகுதி III-ல் தரப்படும்.]

வ—9

# 12. கிறிஸ்துவிற்கு முந்திய கிரேக்க ரோமானியமல்லாத பிற மரபுகள்

வரலாறு வரைவியல் என்பது வரலாற்றினை வரையும் கலை என்று பொருள்படும். செய்திகள் நாளடைவில் நிகழ்ந்துவரும் கால முறையினைத் தோற்றுவது வரலாறு; அவ் வரலாற்றினை வரைந்தோர் (வரலாற்றுளர், வரலாற்றாசிரியர் என்போர்) கை யாண்ட கலை தொடக்க காலந்தொட்டு இன்றுவரை எவ்வாறு வளர்ந்து வந்துள்ளது என்றும் அவ் வளர்ச்சியின் வரலாறும் ஒரு வகை வரலாறேயாம். (1) வரலாறு உண்மை நிகழ்ச்சிகளை மட்டும் கூறவேண்டும்; (2) அவற்றிற்கு அறிவுத்துறை வகையில் பொருள் விளக்கம் தரவேண்டும்; மேலும் (3) அந் நிகழ்ச்சிகளைக் காலவரையறைப்படுத்தவும் வேண்டும்; இம் மூன்று தன்மைகளு மின்றேல் அது வரலாறாகாது. இங்ஙனம் முயன்றுள்ளவர்களையே வரலாற்றுளர் என்போம். இனி வரலாற்றுளர், வரலாற்றாசிரியர் என்னும் இருவகையினர்க்குமிடையே, முந்தியவர்கள் 'Historians' என்று பொருள்பட்டு ஹெரடோடஸ், கிப்பன் போன்ற பேரறிஞர்களைக் குறிப்பதாகவும், பிந்தியவர்கள் வரலாற்றைக் கற்போர்க்கு நூலியற்றுவோராகவும் கொள்ளுவோம்; அன்றியும் இது வரலாற்றைக் கற்பிப்போரையும் குறிக்கும். வரலாற்றுத் தத்துவர்களை முந்திய குழாத்தில் சேர்ப்போம். பள்ளி மாணவர் களுக்காக நூலியற்றுவோரை, அவரும் வரலாற்று நூல்களையே இயற்றுவராயினும், இவ் விரு பிரிவிலும் சேர்க்காமல் வரலாற்று நூலாசிரியர்கள் என்று பிரித்துக் காண்போம்.

இக் கலையினை அறிவுத்துறையின் ஒரு பெரும் பகுதியாக இன்றைக்கு 25 நூற்றாண்டுகளுக்கு முன்பே வளர்த்தவர்கள் கிரேக்கர்கள். ஹெரடோடஸ் என்னும் கிரேக்க வரலாற்றுளரை 'வரலாற்றுத் தந்தை' என்றழைப்பர். இதனால் அவருக்கும் முற் பட்ட காலத்தில் எவ்வகை வரலாறும் இருக்கவில்லை என்றோ, வரலாற்றைப் பற்றி எவ்வகைக் கருத்துகளும் அறிஞரிடையே பரவியிருக்கவில்லை என்றோ பொருளாகாது. கிரேக்க வரலாற் றுளர்கள் காலத்துக்கு முன்பே ஐரோப்பாவில் (ஈண்டு மத்திய மேற்கு நாடுகளை ஐரோப்பிய நாடுகளாகக் கருதுவோம்)

எபிரேயர்கள் முதலியோர் வரலாற்று மரபை ஏற்படுத்தினர்; இம் மரபு விவிலியத்திற் காணப்படும்.

வரலாறு வரைவியல் எண்ணும் எழுத்தும் பயின்ற சமுதாயங் களிலேயே வளர முடியும். தொல்பொருள் இயல் காணும் வர லாறு, வரைவியலின்பாற் படாது. வரலாற்றுளர் சான்றுகளாகக் கொள்ளும் கல்வெட்டுகள் போன்றவையும் வரைவியலின்பாற் படா; அவை வரலாற்றுச் சான்றுகளேயன்றி வரலாருகா. அதே போன்று நாட்குறிப்புகள், தனியார் கடிதங்கள் முதலியவையும் வரலாற்று வரைவுகளாகா. ஆதலால் இலக்கிய மரபு நன்கு வளர்ந்துவிட்ட சமுதாயங்களிலேயே வரலாறு வரைவியல் மரபும் வளர்ந்திருக்க முடியும்; ஆயினும் இதனின்றும் இலக்கிய மரபு காணப்படும் எல்லாச் சமுதாயங்களிலும் வரலாற்று உணர்ச்சி பிறந்திருக்கும் என்ருே அவர்கள் வரலாற்றிலக்கியங்களை உரு வாக்கியிருப்பர் என்ருே கூறமுடியாது, தவிர, கிறிஸ்து அப்தத் திற்கு ஆயிரம் ஆண்டுக் காலத்திற்கு முன்பு தோன்றிய எளிய வர லாறு வரையும் மரபிற்கும் இன்று காணப்படும் மரபிற்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. மிகப் பண்டையோர் காலவரையறைப் படுத்தி உலகியல் நிகழ்ச்சிகளை வரையவில்லை. இதற்கு ஒரு முக்கியமான காரணம் பண்டையோர்க்கு, அதாவது ரோமானியர் ரோம் நகரம் கட்டப்பட்ட ஆண்டினை ஒரு தொடக்க அப்த மாகக் கொள்ளும்வரை அல்லது கிரேக்கர்கள் ஒலிம்பிக் விளை யாட்டுகளை ஆண்டுதோறும் கணக்கிட்டு வைத்தவரை, அப்தம் என்ப தொன்று இல்லை; ஆதலால் காலவரன்முறை யில்லை; மதிப் பீட்டு மரபும் இல்லை. ஆனுல், தற்காலத்தில் அவையெல்லாம் மிக மாறிப்போய் மதிப்பீடு வரலாற்றுளரது ஏனைய முயற்சிகள் யாவற்றையும்விட முக்கியமானதாகக் கருதப்படுகின்றது.

ஆதிகால வரலாறு, சீனர்களைத் தவிர மத்திய மேற்குநாட்ட வர்களாலேயே முதன்முதல் வரையப்பட்டது. மத்திய கிழக்கு என்பது பண்டைய கிரேக்கர், எகிப்தியர், சுமேரியர், பாபி லோனியர், எபிரேயர் என்போரைக் குறிக்கும் என்று கொள்ள லாம். இன்றைக்கு ஆருயிரம் ஆண்டுகட்கு முன்பே வியத்தகு நாகரிகவளர்ச்சியை எய்திவிட்ட எகிப்தியர்கள் தமது பிரமிடு களில் இலக்கியங்களை எழுதிவைத்துள்ளனர்; கதைகளையும் பாடல்களையும் இயற்றிவைத்தனரேயன்றி வரலாறு எழுதிவைக்க வில்லை. அவர்கள் நாட்டில் அக் காலத்தில் பரவியிருந்த புரோகித மரபு வரலாறு இயற்றும் முயற்சிகளைத் தடுத்துவிட்டது; ஒவ் வோரிடங்களில் அரசியல் நிகழ்ச்சிகள் கூறப்படினும் மதிப்பீட்டு முறை மேற்கொள்ளப்படவில்லை. மூன்ரும் தட்மோஸ் என்னும்

எகிப்திய அரசனின் அவையில் இருந்த ஒருவன் அவ் வரசனின் பெருமைகளையும் சாதனைகளையும் குறித்துவைத்தான். ஏ. கி. மு. 275-ல் டாலமி ஃபிலடெல்ஃபஸ் (Ptalemy Philadelphus) என்பான் மானதோ (Manetho) என்னும் எகிப்தியப் புரோகிதனை விளித்து கிரேக்க வரலாற்றுக் கதைகளை எகிப்து மொழியிலாக்குமாறு கட்டளையிட்டான். மானதோ எகிப்திய வரன்முறை யொன்றை யும், எகிப்து நாட்டின் வரலாறு ஒன்றையும் இயற்றினன். அந் நூல்கள் அங்குமிங்கும் சில பகுதிகள் கிடைக்கின்றனவேயன்றி முழுவதும் கிடைக்கவில்லை. கி. மு. 3ஆம் நூற்றாண்டுவரையில் பாபிலோனியர்களும் அஸீரியர்களும் எகிப்தியர்களைப் போலவே வரலாறு ஒன்றும் வரையவில்லை. ஆனல், கி.மு. 3ஆம் நூற்றாண்டில் பெராஸோஸ் (Berossos) என்னும் பாபிலோனியப் புரோகிதர் ஒருவர் 'பாபிலோனியாவின் வரலாறு' என்னும் நூலை இயற்றினர். புராதன காலங்களில் இத்தகைய 'வரலாறு' கள் அரசபரம்பரை ஆளுநர், புரோகிதர் என்போர் பட்டியல்களாகவே அமைந்தன. இப் பட்டியல்களில் சிறிது வரலாற்றுச் செய்திகள் காணப்படினும் இவற்றை வரலாறெனல் இயலாது. பார்ன்ஸ் (Barnes) போன்ற சில ஆசிரியர்கள் தொல் பொருள் இயல் தொல்லெழுத்துகளையும் வரலாறாகக் கணக்கிடுவராயினும் அவற்றை வரலாறெனல் பொருந்தாது என்க. கி. மு. 1100ஆம் ஆண்டுக் காலத்திலேயே ஹிட்டைட்டுகள்—என்போரில் டெலபினஸ் என்னும் ஆசிரியர் ஒரு வரலாற்று நூல் இயற்றினர். உண்மையான வரலாற்று நூல்களை முதன்முதல் இயற்றியவர்கள் எபிரேயர்களே; அவ் வர லாற்றின் பெரும்பகுதி எபிரேய விவிலியத்திற் காணப்படும். விவிலியத்தின் பழைய ஏற்பாட்டின் ஒரு பகுதியை மோசஸ் இயற்றினர் என்று கருதப் பெறுகிறது. அவர் அந் நூலில் தமது வரலாற்றையும் பென்டடூக் (Pentateuch)-ஐந்து ஏடுகள்-என்னும் பகுதியையும் இயற்றினர் என்ப. ஆனல் பழைய ஏற்பாட்டினைப் பிற்காலத்தவர்கள் பலவகைகளில் மாற்றி எழுதியுள்ளனர். ஆகையால் கடவுள் கூற (கி.மு. 13ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த) மோசஸ் எழுதினர் என்னும் புராணக்கதையை நம்புமாறில்லை; கி. மு. பதின்மூராம் நூற்றாண்டிற்கும் கி. மு. ஆறும் நூற்றாண் டிற்கும் இடைப்பட்ட காலத்தில் பல ஆசிரியர்களால் எழுதித் தொகுக்கப்பட்டதே பென்டடூக் என்க. 'பண்டைய எபிரேய ரிடையே, வரலாற்றுப் பெரு நிகழ்ச்சிகள் காரணமாக வரலாற் றிலக்கியம் தோன்றலாயிற்று; உண்மையில் சால், தாவீது என்போர் காலத்தில்தான் எபிரேயர் வரலாற்றிலக்கியம் தோன்றிற்று எனலாம்' என்றார் ஜார்ஜ் ஃபுட் மூர் (George Foote Moore) என்னும் ஆசிரியர். 'ஐந்து ஏடுகள், சாமுவேல் புத்தகம், மன்னர்களைப்பற்றிய முதற் புத்தகம் என்பவை உரைநடையில்

இயற்றப் பெற்ற மிகப் பண்டைய வரலாற்று நூல்களிற் சிறந்தவை என்றுர் பிரெஸ்டெடு (Breasted) என்பார். அபியாதர் (Abiathar) என்னும் யூதப் புரோகிதர் தாவீதுவின் வரலாறு என்னும் நூலை இயற்றினுர்; அம் முன்னேடி எழுதிய அந் நூல் மிகச்சிறந்த முறையில் அமைந்துள்ளது. இவ் வாசிரியர், பிறரைப்போலத் தமது அரசரைப் புகழாது, நிகழ்ந்த விவரங்களை முறையே கூறும் அரிய நூலில் தாவீதுவின் தன்மையை அவர் புறநோக்குவகையில் எடுத்து விளக்கியிருப்பது வியக்கத்தக்கது. 'மெகாபீகளின் முதல் புத்தகம்' என்னும் நூல் (ஏ. கி. மு. 125) எபிரேயர்கள் வரலாற்றை மகா அலெக்ஸாந்தர் பாலஸ்தீனத்தை வென்ற காலத்திலிருந்து ஜான் ஹிர்கானஸ் மன்னரானவரை கூறுகின்றது; அது சமயச்சார்பான நூலாக அமையாமல் உலகியல் அமைப்பில் வரலாற்றை எழுதியுள்ளமை போற்றத்தக்கது. பிளேவியஸ் ஜோசபஸ் (ஏ. கி. பி. 37—105) என்பார் 'யூதர்கள் போர் மற்றும் யூதர் பழைமைகள்' என்னும் நூலை இயற்றினுர். வரலாறு எழுதிய பழைய எபிரேயர்களில் அவரே கடைசியானவர். அவர் கிரேக்க மொழியில் சிறந்த நடையில் தமது நூலை இயற்றினுர். எகிப்தியரான மானதோ, பாபிலோனியரான பெராஸோஸ், எபிரேயரான ஜோசபஸ் என்போர் கிரேக்க வரலாற்று வரைவியல் மரபுகளால் பாதிக்கப் பெற்றுத் தமது நூல்களை இயற்றியமை காணத்தக்கது. யூதர்கள் தமது சமய நோக்கை வரலாற்றிலும் புகுத்தினர். அவர்கள் தமது சமயக்கோட்பாட்டில் ஓர் அவதார புருடர் எதிர்காலத்தில் தோன்றி யூதர்களை வாழவைப்பார் என்று நம்பினர்; ஆதலால் அவர்கள் வரலாறும் நம்பிக்கை மிகுந்த எதிர்காலம் ஒன்றை எதிர்நோக்குவதாயிற்று; அன்றியும் வரலாற்றில் ஒரு பொருண்மையுண்டு என்று நம்புவதும் அவர்களது மரபாயிற்று; இதனைப் பின்பற்றியே கிறிஸ்துவ வரலாற்றுக் கோட்பாடுகளிலும் நம்பிக்கை தொனிப்பதாயிற்று. எகிப்தில் தொல்பொருள்கள் வாயிலாக வரலாற்றுச் சான்றுகள் மிக வுளவேனும் பண்டைய எகிப்தியர்கள் வரலாற்றுநூல்களை எழுதிவைக்கவில்லை. பாபிலோனியர்கள் அமைதிக்கால அருங் கலைகளைப் போற்றி வரைந்தனர்; அசீரியர்கள் தமது மரபுசெய்திகளிலும் கல்வெட்டுகளிலும் இராணுவவெற்றிகளைப் பெரும்பாலும் போற்றினர். பண்டைய பாலஸ்தீனத்தில் வாழ்ந்த எபிரேயர்கள் தாம் முதன்முதலாக உண்மையானதும் முக்கியமானதுமான வரலாற்று நூல்களை எழுதியவர்கள். அவர்கள் விவிலியத்தின் பழைய ஏற்பாட்டில் எழுதிவைத்த கதைகளைப் பிற்காலத்தெழுந்த கிறிஸ்துவ அறிஞர்கள் திறனுய்வு செய்து பல உண்மை வரன்முறைகளைக் கண்டுபிடித்துள்ளனர்.

# 13. பண்டைய ஐரோப்பியச் செம்மரபு

உண்மையான வரலாற்று நூல்களை முதன்முதல் இயற்றியவர்கள் கிரேக்கர்கள்; அவர்களும் வரலாறு வரைவியலை ஒரு சோதனை நிலையிலேயே எழுதிவந்தனர். தற்கால உயர்தர மதிப்பீட்டு மரபுகளை அவர்கள் அறியவில்லை. ஆயினும் வரலாற்றினை பொருள், வகை என்னும் இருதுறையிலும் எழுதும் முறைகட்கு அடிக்கலிட்டவர்கள் அவர்களே என்பதில் ஐயமில்லை. கிரேக்கரது கலாசாரச் செல்வாக்கிற்குட்பட்ட ரோமானியர்களும் அரிய வரலாற்று நூல்களை இயற்றினர். இவ் விரு மரபுகளுக்கும் பொதுப் படையாகச் செம்மரபு (classical tradition) என்று பெயர். பண்டைய கிரேக்கர்களது நோக்கங்கள். முறைமைகள், சாதனைகள் என்பவற்றை 20ஆம் நூற்றுண்டு வரலாற்றுளர்களது சாதனைகளோடு ஒப்பிட்டுத் திறனுய்தல் பயன்தராது; நேர்மையானதுமாகாது. ஆயினும், கிரேக்கர்களுக்கு உண்மையாக வரலாற்று உணர்ச்சி இருந்தது என்பதில் ஐயமில்லை. அவர்கள் இயற்றிய வரலாற்று நூல்களுக்கும் நவீனகால விஞ்ஞான முறை வரலாற்று நூல்களுக்கும்கூடச் சிலப் பொதுப்பண்புகள் உளவாதலின் உலக வரலாறு வரைவியலுக்கு வித்திட்டவர்கள் கிரேக்கர்களே என்பது பெறப்படும்.

லிட்டன் ஸ்ட்ரேச்சி (Lytton Strachey) என்பவர் கூறினர்: 'வரலாற்றுளர்க்கு முதற்கண் இருக்கவேண்டிய தகுதி அறியாமை;' அதாவது அறியாதார்க்கும், அறிய விரும்புவோர்க்கும் அறிந்து கூறுதல் என்னும் பண்பு. கிரேக்கர்கள் அவர்கள் காலத்து முக்கிய நிகழ்ச்சிகளைப்பற்றி அறிந்து கொள்ள விரும்பியவர்களுக்கு அறிவுறுத்த வேண்டியே வரலாற்று நூல்களை இயற்றினர். இந் நிகழ்-முறையில் கிரேக்க வரலாற்றுளர் எப் பொருள்பற்றி எழுத வேண்டும் என்பதைத் தேர்ந்துகொண்டார். ஆர். ஜி. காலிங்வுட் என்பவர், கிரேக்கர்கள் தமது நூற்பொருளைத் தேர்ந்துகொள்வதில்லை என்றுர். ஆயினும், அவர்கள் பெரும்பாலும் உடன் காலத்து நிகழ்ச்சிகளைப் பற்றியே, அவற்றிலும் சிறப்பாக இராணுவ முக்கியத்துவம் பெற்ற நூற்பொருள்களையே எழுத முற்பட்டனராயினும், அவ்வகைப் பொருள்களுள் தேர்ந்தெடுத்து ஒன்றைப்பற்றிப் புனைதற்கு அவர்களுக்கு வாய்ப்பு இருந்தது.

அவ்வாறு தேர்ந்துகொண்ட பொருளைத் தமக்குத் தேவையான அளவிற்குச் சமன்செய்துகொண்டு, விவரங்களைச் சரிபார்த்து, வேண்டுவனவற்றைச் சேர்த்துப் பிறவற்றை நீக்கித் தமது வரலாற்று நூல்களைப் புனைந்தனர். இன்று ஒரு வரலாற்று நூலை இயற்றும் ஆசிரியனும் இதே வழிமுறைகளைத்தான் பின்பற்றுகின்றான்.

தொடக்ககாலக் கிரேக்க வரலாற்றாளர்கள் என்போர் அவர்கள் நாட்டுப் பாணர்களே. ஹோமர் இயற்றிய காப்பியங்களில் சிறிது துப்புரவான வரலாறு காணப்படும். அவர் காலத்துச் சமுதாய நிலைமை அவர் பாக்களில் தெளிவாகத் தெரிகின்றன; ஹோமரை யடுத்து ஹெஸியடு (Hesiod) என்னும் புலவர் ஒருவர் வாழ்ந்திருந்தார். அவர் உலகின் ஐ வகைக் காலங்களைப்பற்றிக் குறிப்பிட்டார்; அவை பொற்காலம், வெண்பொற்காலம், வெண்கலக்காலம், காப்பியக் காலம், இரும்புக்காலம் என்பன. அவர் கருத்தின்படி நாம் இப்பொழுது வாழ்வது ஐந்தாவதும் மிகத் துன்பமயமானதுமான இரும்புக் காலம். இதனை இந்துக்களுடைய நான்கு யுகங்களோடு ஒப்பிட்டுக் காணலாம். ஹெஸியடு கிரேக்கக் கடவுளர்க்கு உயரிய குலமுறை கற்பித்தார்; அதனையொட்டிப் பிற்காலத்தவர்கள் உலகியற் பெருமக்களுக்கும் சீரிய குலமுறை கிளத்தலாயினர்.

உண்மையான கிரேக்க வரலாறு வரைவியல் கி. மு. ஆறும் நூற்றாண்டில் தொடங்கிற்று. 'லோகாகிராபர்' அல்லது 'உரைநடைவரைநர்' என்போர் வரலாறு இயற்றுதற்கு வேண்டிய உரைநடை வாயிலைச் செப்பம் செய்தனர், செய்யுள் வாயிலாக விரிவான வரலாறு வரைதல் எளிதில் இயலாதாதலின். அக்காலத்தில்தான் தெய்விகக் காரணங்களைக் கொண்டு மானுட வரலாற்றை நிருணயித்தல் கூடாது, சமுதாய மூலங்களை உலகியல் கருவிகளால் ஆராய்ந்து காணவேண்டும் என்னும் கருத்துகள் பிறந்தன. இவை விஞ்ஞானமுறை வரலாறு வரைவதற்கு இன்றியமையாத கருத்துகள். 'கருத்துச் சுதந்திரம், விவாத உரிமை என்பவற்றைப் போற்றிய பண்டைக் கிரேக்கர்களுக்கு நாம் பெரிதும் கடமைப்பட்டுள்ளோம்......ஐரோப்பிய விஞ்ஞானம், தத்துவம் என்பவை அயோனியாவில் பிறந்தவை...... புராதனக் கருத்துகளையும் சமய நம்பிக்கைகளையும் அவர்கள் தகர்த்தெறியலாயினர்.' என்றார் பியூரி. பண்டைக் கிரேக்கருள்ளே முதல் வரலாற்றாளர் (காலவகையினனே) என்று கருதக் கூடியவர் ஹெகாடியஸ் (ஏ. கி. மு. 550) என்பவர். அவர் பல நாடுகளில் பயணம் செய்தவர்; அவர் திறனாய்தலில் வல்லுநர்.

பாரசீகர்கள் அயோனியாவைக் கைப்பற்றிய நிகழ்ச்சி கிரேக்கர் களுடைய ஆற்றல்கள் யாவற்றையும் தூண்டின. கீழை மத்திய தரைக்கடற்பகுதியில் வாழ்ந்திருந்த பலதரப்பட்ட மக்கள் வாழ்க்கை, அரசியல், கருத்துகள் என்பவற்றை ஒப்புக்காண்டல் ஓர் அரிய வரலாற்று முயற்சியாயிற்று.

ஹெகாடியஸ் இரண்டு முக்கியமான வரலாற்றுக் கொள்கை களைக் கூறினார்: (1) நிகழ்ந்தது கண்டு கூறல் என்பதே வர லாற்றின் இலட்சியம்; (2) செவிவழியாக வந்துள்ள கட்டுக் கதைகளைக் கூர்ந்து திறனாய்ந்து மதிப்பிட்டு உண்மை காண வேண்டும். 'நான் இப்போது இங்கே எழுதிவருவது நான் உண்மையென்று கண்டறிந்தது; ஏனெனில் கிரேக்கர்களுடைய கட்டுக்கதைகள் கேலிக் கூத்துப் போன்றவை' என்றார் ஹெகாடியஸ். ஹெகாடியஸ் காலத்திற்கும் ஹெரடோடஸ் காலத்திற்குமிடையே இத் திறனாய்வு உணர்ச்சி வலுத்து வளர்ந்தது. லெஸ்பாஸ் நகரத்தைச் சேர்ந்த ஹெல்லானிகஸ் என்பவர் வரலாறு இயற்றத் தொடங்கிய காலத்திலேயே கால வியலின் (chronology) முக்கியத்துவம் உணரப்பட்டுவிட்டது.

இவர்களெல்லாரும் சில தொடக்க முயற்சிகள் செய்து வர லாறு வரையும் மரபினைச் செவ்வனே நிறுவிவிட்டனராயினும், ஹெரடோடஸ் வந்தபிறகுதான் வரலாறு செம்மையாக இயற்றப் படும் மரபு தொடங்கிற்று. பன்னாட்டு உறவுகளால் ஏற்படும் நிகழ்ச்சிகளின் முக்கியத்துவத்தை முதன்முதல் உணர்ந்தவர் ஹெரடோடஸே யாவர்; பயனற்ற சிறு செய்திகளை நீக்கிவிட்டு முக்கியமான செய்திகளை வைத்து வரலாறு வரையும் முறையை அவர் நிறுவினார். வரலாறு வரைதலில் ஓர் இலக்கு, ஒரு நோக்கம் இருக்கவேண்டும் என்று அவர் அறிந்தார். அவரே முதன் முதலில் ஒரு பிரபஞ்ச வரலாறு எழுதினார்; அதாவது எந் நாடு களிலும் காணப்பட்ட எல்லாச் செய்திகளையும் வைத்து வரலாறு வரைய முற்பட்டார். அவர் அரசியல் வரலாறேயன்றிச் சமூக வரலாறும் இயற்றியவர். வரலாற்றுச் சான்றுகளைத் தேடி அவர் பல நாடுகளிலும் நீண்ட பயணம் செய்தார். அவர் பல சான்றுகளை எளிதில் நம்பி, அவற்றைத் தாம் கேட்டறிந்தவாறே எழுதிவைத்தார் என்பது உண்மையே. ஆயினும், அவர் எழுதி வைத்த பல கூற்றுகளின் உண்மைத் தன்மை நாளடைவில் பெரும் ஆராய்ச்சியின் முடிவாக உண்மையே என்று புலப்பட்டு வருவதால் அவர் பொறுப்பற்ற முறையில் எல்லாவற்றையும் எழுதிவைத்து விட்டார் என்று கூறமுடியாது.

ஹெரடோடஸை (கி. மு. 484–425) மிகப் பொருத்தமாகவே, வரலாற்றுத் தந்தை என்று புகழ்கின்றனர்; அது சற்றும் மிகைச் சொல்லன்று. அவர் வரலாற்றுத் துறையில் சாதித்த ஆதாரச் சாதனைகள் பல. முதற்கண் ஒரு நாட்டு வரலாற்றை இன்னொரு நாட்டிற்கும் அதன் வாயிலாக உலகு முழுவதற்கும் அறிவிக்கும் மரபை நாட்டினார். அவர் காலத்திற்குச் சற்று முன்பாக இரு முறை பாரசீகம் கிரேக்க நாட்டைப் படையெடுத்த அரிய வரலாற்றை நிகரற்ற முறையில் அவர் எழுதிவைத்தது வரலாற்றுத் துறையில் மாபெருஞ் சாதனையாம். பண்டைய கிரேக்க வரலாற்றாளர்கள் யாவருமே உடன்கால நிகழ்ச்சிகளையே, அவற்றிலும், படையெடுப்புப் போன்ற இராணுவச் செயற்பாடுகளையே வரலாற்றுப் பொருளாகக்கொண்டு வரைந்தனர் என்பது உண்மையே. ஹெரடோடஸ், தூஸிடிடிஸ், செனபன் ஆகியோர் இம் முறையையே பின்பற்றினர். இதிலிருந்து சிலர் கிரேக்க வரலாற்றாளர்கட்குப் பழமையில் ஈடுபாடு இல்லை என்று கூறுவர். ஆயினும், வருங்காலத்திற்குப் பயன்பட வேண்டியே அவர்கள் தங்கள் நூல்களை இயற்றினர்; அந் நூல்கள் வருங்காலத்தார்க்குப் பழமையைத்தான் வற்புறுத்தி விளக்கி விவரிக்கும் ஆதலால் மறைமுகமாக அவர்களுக்குப் பழமையில் ஈடுபாடு இருந்தது என்றே கூறவேண்டும். ஹெரடோடஸ் பிறந்து ஆறு ஆண்டுகள் ஆவதற்குள் பாரசீகப் போர்கள் முடிந்து விட்டமையால் அவர் உடன்கால வரலாற்றைத்தான் இயற்றினார் என்று கூறமுடியாது. அவர் எழுதியது அண்மைக் கால வரலாறு என்று வேண்டுமாயின் கூறலாம். ஹெரடோடஸ் எழுதிய நூல் படித்து இன்புறத் தக்கது; விவரங்களைத் தெரிவிக்கவும், மக்கள் பண்புகளை விவரிக்கவும், வரலாற்று நிகழ்ச்சிகளை ஆராயவும் மட்டுமின்றிப் படிப்போர்க்கு இன்பம் பயக்கவும் வேண்டி அவர் தமது வரலாற்று நூலை இயற்றினார். இது ஹெரடோடஸிற்கும் தூஸிடிடிஸிற்கும் உள்ள முக்கியமான வேறுபாடு. அன்றியும் தூஸிடிடிஸைப் போலவே அவரும் வரலாற்றைப் புறநிலை நோக்கோடு இயற்றினார். ஸ்பார்ட்டர்களையும் அதீனியர்களையும் வேறுபாடறக் கண்டு வரலாற்று நூலியற்றிய தூஸிடிடிஸைப் போன்றே ஹெரடோடஸும் பாரசீகர்களையும் அதீனியர்களையும் வேறுபாடறக் கண்டு பாரசீகப் போர்களின் வரலாற்றை இயற்றினார்.

ஹெரடோடஸ் முதல் 'வரலா'ற்று நூலை இயற்றினார்; ஆனால் தூஸிடிடிஸ் என்னும் மற்றொரு கிரேக்கர் வரலாற்றுக்குப் புதியதொரு பண்பை உண்டாக்கினார். ஹெரடோடஸைப் போலவே இவரும் படித்தின்புறத்தக்க நூலையே எழுதினார்; அவ்வாறு எழுதும்போதே, தம் காலத்தில் நடந்த, தாம் கலந்துகொண்ட

பெருநிகழ்ச்சியான 'பெலபொனீசியப் போரை'ப் பற்றி அவர் வரைந்தாராதலின், உண்மைக்கு மாறுபடாமல், தம் கருத்துகளைத் திணிக்காமல், வரலாற்றுப் புறநோக்கோடு இரு சாராரையும் ஒப்பநோக்கி வரலாற்றை வரைந்துள்ளார். வரலாற்றில் காரண காரியத் தொடர்பைப்பற்றி அவர் ஆராய்ந்துள்ளார். தூஸிடிடிஸ் முறையியல் பிரச்சினைகளில் ஈடுபட்டு உயரிய வரலாற்று நூலை எங்ஙனம் வரைவது, வரலாற்றின் இலக்கு யாது என்பவற்றையும் ஆராய்ந்துள்ளார். அவர் தாம் எடுத்துக் கொண்ட பொருளோடு தொடர்பில்லாத யாவற்றையும் நீக்கிவிட்டுத் தொடர்புடைய வற்றை மட்டும் வைத்து நூலியற்றினர். அவர் ஹெரடோட ஸைப்போலச் சமுதாயப் பிரச்சினைகளை ஆராயவில்லை; பழைமை யில் ஈடுபடவில்லை; ஹெரடோடஸைப் போல புவியியலின் செல் வாக்கைப் பற்றி ஆராயவில்லை. தூஸிடிடிஸ் முதன்முதல் விஞ்ஞான முறை வரலாறியற்றியவர் என்பர்; அது ஓரளவு உண்மையே. ஆர். ஜி. காலிங்வுட் என்பவர் இவ் விரு வரலாற்று ளர்களையும் ஒப்பு நோக்கி, 'தூஸிடிடிஸ் உளவியல் வரலாற்றுளர்' என்றார்; அதாவது வரலாற்றில் முக்கியமானவர்களின் உள்ளப் பாங்கினை ஆய்ந்து மனோதத்துவ ஆராய்ச்சி செய்து வரலாற்றுச் செயற்பாடுகளின் நோக்கங்களை விவரித்துள்ளார் என்பது. ஹெரடோடஸை வரலாற்றுத் தந்தை என்றவர்கள் வரலாறு வரைவியலில் அவருக்குச் சந்ததிகளேயில்லை என்பதையும் காண வேண்டும்; அதாவது அவரே போல வரலாறியற்றினரில்லை என்பது.

தூஸிடிடிஸிற்குப் பிறகு வாழ்ந்த பொலிபியஸ் என்னும் கிரேக்க வரலாற்றுளர் ரோமானிய வரலாற்றை இயற்றினர். அவர் கடின நடையில் எழுதினர்; ஆனால் புறநோக்கின் தேவை யையும் பெருமையையும் அவரைப் போல வற்புறுத்தினவர்களும் கடைப்பிடித்தவர்களும் இலர். அவர் பகைஞரான ரோமானி யர்களையும் கிரேக்கர்களையும் ஒன்றாகப் பாவித்தார். அவர் வரலாறு என்னும் விஞ்ஞானம் மூன்று விதப் பண்புகளுடையது என்றார். (1) எழுதிவிடப்பட்ட பத்திரங்களைப் பயன்படுத்தி வரலாறு வரைதல், (2) நில அமைப்பியல் (Topography), (3) அரசியல் விவரங்கள். 'நிகழ்ச்சிகளை நிகழ்ந்தவாறு எடுத்துக் கூறிச் செல்லுதல் படிக்க நன்றாயினும் பயனில் செயலாகும்; காரணங்களைக் கூறி நிகழ்ச்சிகளை விளக்கினால் அவற்றிற்குப் பொருள் ஏற்பட்டுப் பயன்படும்' என்றார் அவர். சான்றுகளின் தகவுடை மையைப் பொலிபியஸ் மிகவும் வற்புறுத்தினர். செனபன் என்பார் மற்றொரு கிரேக்க வரலாற்றுளர். அவர் ஸாக்ரடீஸின் மாணவர்களில் ஒருவர். அவர் 'பதினாயிரவரின் தரைச் செலவு'

(The March of the Ten Thousand) என்னும் நூலின் ஆசிரியர்; அவர் நிகழ்ந்தது கூறிய பட்டியல் எழுத்தர்; பெரிய வரலாற்ருளர் எனற்குரியரல்லர்; ஆயினும் அவர் கிரேக்க நடை, கற்போர்க்கு இன்பம் பயப்பது. கி. பி. முதல் நூற்ருண்டில் ரோமானிய வரலாற்றை எழுதிய டயனீஸியஸ் என்பவர் 'வரலாறு என்பது உதாரண முகத்தான் அறிவுறுத்தும் தத்துவம்' என்று முதன்முதற் கூறினுர். சில கிரேக்கர்கள் வாழ்க்கை வரலாறுகள் வாயிலாக நாட்டு வரலாற்றையும், மனிதகுல வரலாற்றையுமேகூட அறிவுறுத்த முடியும் என்று கருதினர். அவ்வாறு கருதியவர்களில் புளூடார்க் என்பவர் மிக முக்கியமானவர். உலகிலேயே வாழ்க்கை வரலாறுகளைத் திறம்பட இயற்றிய ஒரு சிலரில் முதற் கண் வைத்து எண்ணத்தக்கவர் புளூடார்க். அவர் எழுதியவை 'இரட்டை வாழ்க்கை வரலாறுகள்' (சீசரும் அலெக்ஸாந்தரும், சிசரோவும் டெமாஸ்தனிஸுும் என்பது போல). இவை கற்போர் களிக்க இயற்றப்பட்டவையாயினும் ஆழ்ந்து நோக்குவார்க்குப் பல பிரச்சினை விளக்கங்களும் படிப்பினைகளும் தருவனவாம். இந் நூல் முதல் நூற்ருண்டின் தொடக்கத்தில் இயற்றப்பட்டது.

பண்டைய கிரேக்க வரலாற்ருளர்களில் கடைசியானவர் அம்மியானஸ் மார்ஸிலினஸ் என்பவர். அவர் ரோமானியர் மொழியான இலத்தீனில் தமது நூலை இயற்றினுர். கிரேக்கர்கள் ஒலிம்பிக் ஆட்டங்களைக் கணக்கிட்டுக் காலவரையறைப்படுத்தினர். கி. மு. 3ஆம் நூற்ருண்டில் அலெக்ஸாந்திரியாவில் வாழ்ந்த எரடாஸ்தனிஸ் என்பவர் கிரேக்கவரலாற்றைக் காலப் பாகுபாடு செய்து எழுதினுர்.

ரோமானிய வரலாற்ருளர்களில் லிவி (Livi) டாயிடஸ் (Taeitus), சீஸர் (Caesar), சாலஸ்ட் (Sallust), சியூடோனியஸ் டிராங்குவிலஸ் (Seutonius Tranguilus) என்போர் குறிப்பிடத் தக்கவர். சிலர் சீஸரை உயர்தர வரலாற்ருளரில் சேர்க்காமல் நீக்குவர். சீஸர் ஃபிரெஞ்சுப் போர்களைப்பற்றி எழுதிய வரலாற்றில் தம்மைப்பற்றியே குறிப்பாகப் புகழ்ந்து வரைந்துகொண்டார் என்பது அவரைப்பற்றிக் கூறப்படுவது. ஆயினும், அவர் இயற்றிய நூல் ஃபிரான்ஸை ரோமானியர் வென்ற வரலாற்றிற்கு இன்றியமையாதது; அன்றியும் அது மிக உயரிய, அழகிய இலத்தீன் மொழியில் எழுதப்பட்டது. சாலஸ்ட் என்பார் தூஸிடிடிஸைப் பின்பற்றி விஞ்ஞான வரலாற்று நூலியற்றினுர். சியோட்டோனியஸ் இயற்றிய வரலாறு அதன் விவரங்களைக் கோவைப்படுத்தி நல்ல நடையில் எழுதப்பட்டது. லுக்ரிடிஸ் (Lucretius) என்பார் 'இயற்கையின் வளர்ச்சி' என்னும் பெயரிய நூலில் இயற்கையின்

தோற்றம் சமுதாயத்தில் பிரதிபலிக்கும் முறையினை எடுத்துக் காட்டினர். 19ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் காலம்வரை லுக்ரிடிஸின் கருத்துகள் தகவுடையவா யிருந்தன என்பர். பொதுவாக ரோமானிய வரலாற்றுளர்கள் கிரேக்கர்களுடைய மரபைப் பின்பற்றியே இயற்றினராயினும் அவர்களில் ஒருவரும் ஹெரடோடஸ் அல்லது தூஸிடிடிஸ் நிலைக்கு உயரவில்லை.

இனி, செம்மரபு வரலாறுவரைவியலைப்பற்றிச் சில பொதுக் கருத்துகளை ஆய்தல் நன்று. 'பண்டைய இந்தியர்களைப்போலக் கிரேக்க ரோமானியர்களும் வரலாற்றுணர்ச்சி யில்லாதவர்கள்' என்றுர் கார் என்பவர். இதனை லோவித் என்பார் விளக்குகின்றுர்: 'சில தத்துவஞானிகளைத் தவிரப் பண்டையோர் யாவரும் கனவு கள், முற்கூறும் அசரீரிகள், நிமித்தங்கள் என்பவற்றை முற்றிலும் நம்பினர். நிருணயிக்கப்பட்ட எதிர்காலத்தைப் பெரும்பாலோர் நம்பினமையால், தெய்விக வாழ்க்கை விதிகளை யாவரும் நம்பலா யினர்.' பண்டையோர் எதிர்காலத்தை நிமித்தங்கள் வாயிலாக மட்டுமன்றிப் பழைமைக்கு ஒரு பொருண்மையளிக்கும் வாயிலாக வும் கண்டறியமுடியும் என்று எண்ணினர். ஹெரடோடஸ் ஒரு வரைத் தவிர மற்ற கிரேக்க, ரோமானியச் செம்மரபு வரலாற்று ளர்கள் யாவரும் உடன்கால நிகழ்ச்சிகளைப்பற்றியே வரலாறியற் றினர். இப் பொருள்பற்றிப் பல வரலாற்று ஆய்வாளர்கள் விரிவாக எழுதியுள்ளனர். ஆயினும், பண்டைய வரலாற்றினை யியற்றுதற்குத் தேவையான சான்றுகள், பத்திரங்கள் முதலிய குறிப்புகள் பல இலவாதலின் போலும் அவர்கள் உடன்கால நிகழ்ச்சிகளைத் தேர்ந்து அவற்றைத் தமது நூல்களின் கருப்பொருள் களாகக் கொண்டனர். அவர்கள் இரு காரணங்களுக்காக வரலாறியற்றினர் என்று கூறப்படும்: (1) பழைமையைப்பற்றிய தவறுன கருத்துகளை நீக்குதற்கும், (2) புகழ்பெற்ற காரியங் களுக்குப் புகழை நிறுவுவதற்கும் என. மனிதன், குடும்பம், இனம் என்போர்க்குப் பயன்படும், ஈடுபாடுள்ள பண்டைய முக்கியமான நிகழ்ச்சிகளின் பெருமைகளை நிலைநாட்டற்குப் பண்டைய கிரேக்க-ரோமானியர்கள் வரலாறியற்றினர் என்றும் கூறப்படும்; தூஸி டிடிஸ், லிவி என்போர் வரலாறியற்றிய காலங்களில் இதுவே நோக்கமாயிற்று. ஆதலாலேதான் உடன்கால நிகழ்ச்சிகளைப் பற்றி வரைதல் அவர்களால் வேண்டப்பட்டது. ஆயினும் காலிங்வுட் செம்மரபு வரலாறு வரைவியலைப்பற்றிக் கூறுங்கால், 'அது கட்டுக்கதையன்று; சீரிய ஆராய்ச்சியாம், தெளிவான வினுக்களுக்கு ஐயந்திரிபற விடைகாண்டற்கான முயற்சிகள்' என்று கூறினுர்.

பிளேட்டோ போன்ற தத்துவர்கள் வரலாறு வட்டமாகச் சூழவரும் இயல்பிற்று. அதாவது சகடக்கால் போலத் திரும்பத் திரும்ப மறு நிகழும் செய்திகளையுடைத்து என்று கருதினர். பல வகை அரசியல் முறைகளைச் சோதனை செய்து முடிவில் திரும்பத் திரும்ப மன்னராட்சிக்கே மக்கள் வருகின்றனர். பொலிபியசும் இக் கொள்கையை நம்பினர். கிரேக்க வரலாற்றுத் தத்துவத்தை விளக்கவந்த காலிங்வுட் 'அவர்கள் தனியாரின் பண்பு மதிப்பைப் போற்ருமல் வரலாற்றில் தோன்றி மறையும் மனிதர்கள் யாவர்க்கும் பொதுவான சில கருப்பண்புகளைப் போற்றினர்' என்று கூறினர்.

இக் கொள்கை கருப்பண்பியல் (Substantialism) எனப்படும். இக் கோட்பாட்டின்படி எப் பொருளிலும் மாருத்தன்மையுள்ள சாரத்தையே உணரமுடியும் என்பது. ஆனல் மாருத்தன்மை புடையது வரலாறன்று, மாறுந்தன்மையுடையதும் அநித்தமானதும்தான் வரலாற்றில் காணப்படுவது. ஆகையால் கருப்பண்பை முக்கியமாகக் கருதுதல் என்பது வரலாற்று ரீதியில் எண்ணுதல் என்பதற்கு மாருனது என்பது பெறப்படும். லிவி 'ரோமானிய வரலாறு' எழுத முற்பட்டார். இக்கால வரலாற்ருளராஞல் ரோமானிய அரசு அதன் பிற்கால நிலைமையை எவ்வாறு எந் நிகழ்-முறைகள் வாயிலாக, வந்தடைந்தது என்று விளக்குவார், அதன் தோற்றம் வளர்ச்சி என்பவற்றைக் காட்டி. ஆனல் லிவிக்கு ரோமாபுரி ஒரு நாடகத்தின் தலைவிபோல. அந் நகர அரசின் பெருமைகளைக் கூறவே அவர் விழைந்தார். அவருக்கு ரோமாபுரி என்பது மாருத்தன்மையுடைய நிரந்தர அரசு. தொடக்கத்திலிருந்து இறுதிவரை ரோமாபுரி ஓர் உயர்பீடத்தில் அமர்த்தப் பட்டு வருணிக்கப்படுகின்றது... இக் கொள்கையுடையார் வரலாற்று நிகழ்முறையில் ஐயப்பாடுடையர்... கிரேக்கர்கள் கூற்றுப் படி ஆதிக்கம் என்பது ஒரு மனிதனை மாற்றுகிறதில்லை; அது அவன் எத்தகையவன் என்பதைக் காட்டுகின்றது' என்பது காலிங்வுட் கூற்று.

கிரேக்கர்களுடைய வரலாறு வரைவியலின் முக்கியமான அம்சம் யாதெனில் அவர்கள் மானுடத்தில் நம்பிக்கை வைத்தனர்; தெய்விகத்தை மானுடத்தோடு போட்டுக் குழப்பவில்லை. கிரேக்கர்கள் எல்லாவகை வரலாறுகளையும் எல்லாப் பரிமாணங்களிலும் இயற்றினர் என்பார் தாம்ஸன் என்னும் அறிஞர். உண்மையான வரலாறு யாது என்பதை யுணர்ந்து, அதன் விதிகளை நிறுவினர். 'விஞ்ஞானத்தையும், தத்துவ சாத்திரத்தையும் முதன்முதலில் ஐரோப்பியர்க்கு உணர்த்தியதுபோல, கிரேக்கர்களேதாம் உலகிலுள்ளோர் யாவர்க்கும் வரலாறு வரைவியலில் முன்னேடிகளாக விளங்கினர்' என்பதும் தாம்ஸன் கருத்து.

# 14. சமயநோக்குக் காலம்

ஐரோப்பியவரலாற்றில் செம்மரபு தாழ்ச்சியடைந்து வீழ்தற்கும் கிறிஸ்துவ சமயமரபு மேலோங்குதற்கும் அவை ஒன்றற்கொன்று காரணங்களாயின; அன்றியும் பிற புறக் காரணங்களும் உண்டு. கி. பி. மூன்றும் நூற்றாண்டிலிருந்து கிறிஸ்துவசமய மரபு ஓங்கலாயிற்று; அதிலிருந்து இரண்டு நூற்றாண்டுக்கால அளவில் ரோமானியப் பேரரசு மொழிபெயர்தேயத்தார் தாக்குதல்கட்கு உட்பட்டு அழியத் தொடங்கிற்று. ஆதலால் ஐரோப்பியவரலாற்றில் கி. பி. 5ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு செம்மரபு மறைந்தது என்றும், அப்போது சமய நோக்குக் காலம் ஆரம்பித்தது என்றும் கொள்ளலாம். செம்மரபிற்கும் கிறிஸ்துவ சமய மரபிற்கும் உள்ள பகைமை வரலாறறிந்தது. செம்மரபினர் யூதர், கிறிஸ்துவர், முஸ்லிம்கள் போலல்லாமல் பல் லிறை வழிபாட்டினர். அவர்கள் மரபில் கடவுளர்க்கும் மக்கட்கும் இடைவெளி குறைவு. கடவுளரும் பன்முறை மக்களைப்போலப் பழகுவர்: மக்களுடைய பண்பாடுகளிற் சிலவற்றைப் பெற்றவர்கள்: மக்கள் விவகாரங்களில் வெளிப்படையாகத் தலையிடும் பண்பினர். ஆனால் கிறிஸ்துவர்கள் சமயமரபுப்படி கடவுளுக்கும் பாவமன்னிப்பை வேண்டி நிற்கும் மனிதனுக்கும் இடையே நெடுந்தொலைவு உண்டு. கிறிஸ்துவிற்கு முற்பட்ட பல்லிறை வழிபாட்டினர்க்கு மன்னனையும் கடவுளாக வழிபடும் மரபுண்டு. அகஸ்டஸ் சீஸரை அவ்வாறு வழிபட்டனர். ஆதலால், அத்தகையோருடைய சமய நம்பிக்கைக்கும் கிறிஸதவர்களுடைய சமய நம்பிக்கைக்கும் இடையே நெடுந்தொலைவு உண்டு. அன்றியும் பல்லிறை வழிபாட்டினர் கோட்பாட்டின்படி மனிதனுக்குச் சுய நிருணய சக்தியுண்டு; தன் எதிர்காலத்தைத் தானே ஆக்கிக் கொள்ளமுடியும். ஆக்டேவியன் சீஸர் (அகஸ்டஸ்) காலத்தில் வாழ்ந்த ஏசு கிறிஸ்துவும் அவருக்கு ஆறு நூற்றாண்டுகளுக்கு முன்பு இந்தியாவில் வாழ்ந்திருந்த கௌதமபுத்தரும் மக்களது துயரங்களைதற்கு வழி யாது என்று ஆய்ந்தனர். அவ் வாராய்ச்சியின் முடிவாகக் கிறிஸ்து, கடவுள் அருளே அதற்கு மருந்து என்றார்; புத்தர் மனிதனது உள்ளமே அவன் துயர்களைதற்கு ஒரே வழி என்றார்; ஆனால் செம்மரபினர் சமுதாயத் திருத்தங்கள்மூலம் மனிதனது கடினநிலையை மாற்ற முடியும் என்று நம்பியவர்கள். ஆதலால் அவர்களுடைய

தத்துவ நெறியும் மானுட வழியும் ஒன்றாயின. கடவுளைப்பற்றிய ஆராய்ச்சியினும் மனிதனைப்பற்றிய ஆராய்ச்சியே தேவைப்படுவது என்பது கிரேக்க ரோமானியப் பல்லிறை வழிப்பாட்டினர் கருத்தாயிற்று. கிறிஸ்துவ சமய மரபு ஓங்கியபின் மானுடம் பயனற்றுப் போயிற்று.

இம் மாறுதல்கள் ஏற்பட்டபின் ஐரோப்பா 'கிரஸண்டம்' (Chrisendom) என்று பெயர்பெற்றது. அதன்பின் பேரரசரின் அதிகார நிலைக்குமேல் கடவுளின் அதிகாரநிலை ஒன்றுண்டு என்று உணரப்பட்டது. விவிலியமும், அதற்குப் பொருள் கூறுபவரும் (அதாவது போப்பாண்டவரும்) மக்களது வாழ்க்கை நெறிக்குத் தக்க வழிகாட்டிகள். பேரரசரும் இவ் வேற்பாட்டிற்குட்பட்டவரே. ரோமானியப் பேரரசு மொழிபெயர்தேயத்தாரால் வீழ்த்தப் பெற்றபிறகு ஆயிரம் ஆண்டுக் காலத்திற்குப்பின் மார்ட்டின் லூதர் என்பவர் சமயச் சீர்திருத்தத்தைத் தொடங்கியபோது 'மானுடம்' 'செம்மரபு' என்பன ஐரோப்பியரது எண்ணங்கள், வாழ்க்கை அனுபவங்கள் என்பவற்றில் திரும்பவும் புகுந்தன. அக் காலம்தான் ஐரோப்பிய மறுமலர்ச்சிக் காலம் எனப்படுவது. ஆதலால், கி.பி. 6ஆம் நூற்றாண்டிற்கும் 16ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட பத்து நூற்றாண்டுக் காலத்தில் சமய நோக்கு வலுத்திருந்தது. அந் நோக்கிற்கு ஏற்றாற்போலவே அக் கால இலக்கியமும் கலையும் வரலாறு வரைவியலும் அமைந்தன.

செம்மரபு மறைந்து கிறிஸ்துவம் பரவியதும், கிரேக்க-ரோமானிய அறிவியல் மரபில் மிகமுக்கியமான அங்கம் வகித்த பகுத்தறிவு என்பது கடவுள் நம்பிக்கை என்னும் மனப்பான்மையால் மறைப்புண்டது. 'கிறிஸ்துவம் அல்லாத பிற நம்பிக்கைகளைக் கொண்டவர்களுடைய சாதனைகள் என்னும் ஒரு காரணத்திற்காகவே கிரேக்க-ரோமானிய விஞ்ஞானம், தத்துவம், வரலாறு வரைவியல் என்பவை யாவையும் மறக்கடிக்கப்பட்டு நம்பிக்கை சார்ந்த புது மரபுகள் வளரலாயின; இது ஒரு துர்ப்பாக்கியம்' என்றார் ஷாட்வெல் என்னும் அறிஞர். கிறிஸ்துவப் பாதிரிமார்களிலேயும் ஆதி காலத்திலிருந்தவர்கள் பல்லிறை வழிபாட்டாளர் தொடர்பால் அவர்களுடைய இலக்கியம் முதலியவற்றைக் கற்றிருந்தனர்; அவற்றின் செல்வாக்கால் பாதிக்கப்பட்டிருந்தனர். ஆதலால் அவர்களுக்கும் பிற்காலத் தெழுந்த கிறிஸ்துவப் பாதிரிமார்களுக்கும் மிகுந்த வேறுபாடு உண்டு.

கிறிஸ்துவர்கள் பகுத்தறிவினை மொத்தமாக ஒதுக்கிவிடவில்லை; பிளேட்டோவின் கருத்துகளை ஆதாரங்காட்டிப் பகுத்

தறிவின் வரையறைகளை வற்புறுத்தினர். ஆதலால்தான் அவர்கள் காலவாய்ப்பட்ட வரலாற்று நிகழ் முறையைப் பகுத்தறிவால் மட்டும் உணர்ந்துகொள்ள முடியும் என்பதை ஏற்றுக்கொள்வ தில்லை. வரலாற்று அறிவியலுக்கே ஐயப்பாடு என்பது இயல்பாக அமைந்த பண்பு. கிறிஸ்துவர்கள் அதனை ஒதுக்கிவிட்டனர். தொடக்க காலக் கிறிஸ்துவர்களுக்கு வரலாறு என்பது கடவுளும் மனிதனும் சேர்ந்து ஈடுபடும் ஒரு நிகழ்முறை. அவர்கள் வரலாறு படைப்புக் காலத்திலிருந்து தொடங்குகிறது; மனிதன் பாப விமோசனம் பெறும் கட்டமே வரலாற்றின் இறுதிநிலை. ஹிப்போ வினரான செயின்ட் அகஸ்டின் (கி.பி. 354—430) என்பார் தாமியற்றிய 'கடவுள் மாநகர்' (City of God) என்னும் அரிய நூலில் வரலாற்று நிகழ்முறையை நன்று, தீது என்னும் இரண் டிற்குமிடையே நடைபெறும் போராட்டமாக வருணித்தார். வரலாறு, அவர் கருத்துப்படி 'கடவுள் மாநகர்'க்கும் 'சைத்தான் மாநகர்'க்கும் இடையே நிகழும் போரேயாம்.

கிறிஸ்துவர்கள் பல்லிறை வழிபாட்டாளர்களின் பகைவர் களாதலின் வரலாற்றுப் புறநோக்கு அவர்களுக்கு இயலுவதன்று; மற்றும், தேவ வாக்கான சாத்திரங்களுக்குப் பொருள் கூறுதற்கு அவர்களுக்கென ஒரு மீமாம்சை உண்டு. செம்மரபினர் வரலாற் றுச் சான்றுகளை எத்துணைப் புறநோக்கோடு ஆராய முடிந்ததோ அத்துணைப் புறநோக்கோடு கிறிஸ்துவர்கள் அவர்களது சமய மர பில் வளர்ந்துவிட்ட கதைகளை ஆராய முடியாது; அக் கதைகளில் சில நம்ப முடியாதவையாயும் பகுத்தறிவிற்குப் புறம்பானவை யாயும் இருந்ததால் அவற்றிற்குப் புதுப் பொருண்மைகள் காண வேண்டியிருந்தது. உருவக வகையாலும் பொருள் பொதி விளக் கங்களாலும் நம்ப முடியாத கதைகளுக்குப் புதுப் பொருண்மை கண்டனர். கி. பி. ஆறும் நூற்றாண்டில் வாழ்ந்த மகா கிரெகரி என்பார் தமது 'ஜாப் புத்தகத்தின் பேருரை' என்னும் நூலில் இத்தகைய முறையைக் கையாண்டார். பரிசுத்த சாத்திரங் களுக்கு உருவகக் கதை விளக்கங்கள் செவில் இஸிடோர் (கி. பி. 7ஆம் நூற்றாண்டு) என்பாரது நூல்களில் காணப்படும். அவர்கள் வரலாற்றைப் பரிசுத்தமானவை என்றும் தூய்மையற்றவை என்றும் இருவகையாகப் பிரித்தனர்; இவற்றில் முந்தியது சமய வரலாற்றிற்கும் பிந்தியது லௌகிக உலகிற்கும் பொருந்துவன வாகக் கருதப்பட்டன. கிறிஸ்துவ சமய நோக்குக் காலத்தில் சமய சாத்திர ஆராய்ச்சியைத் தவிரப் பிறவகை ஆய்வுகள் தவிர்க் கப்பட்டமையின் பொதுவாகவே அக் காலத்தில் அறிவியல் துறை யில் செயற்பாடுகள் குறைந்தன.

செக்ஸ்டஸ் ஜூலியஸ் ஆஃபிரிகானஸ் (கி. பி. 180—250) என்பார் மனிதகுல வரலாற்றிற்கு ஒரு கால வரையறையமைத்துக் கிறிஸ்துவ மரபிற்கேற்ப அவ் வரைவியலை நிறுவினார். அவர் கணக்குப்படி ஆண்டவன் படைப்புக் காலம் கிறிஸ்து பிறப்பதற்கு 5499 ஆண்டுகளுக்கு முன்பு. யூஸிபியஸ் பாம்பிலஸ் என்பார் இன்னொரு காலவியல் நூலை இயற்றி, அதில் செம்மரபு தத்துவர்கள் காலத்திற்கு மிக முன்பு மோசஸ் வாழ்ந்திருந்தார் என்று நிறுவ முயன்றார். ஆஃபிரிகானஸின் நூலை ஆதாரமாகக்கொண்டு யூஸிபியஸ் தமது காலவியலைக் கணித்தார். கிறிஸ்துவர் வரலாற்றுக்கான வரையறையை எப்போதும் படைப்புக் காலந் தொட்டுக் கணக்கிடுப. அதன் பிறகு வரலாற்றுக் காலம் அவர்களுக்கு ஐந்து பகுதிகளில் அடங்கும்: (1) ஆபிரஹாம் காலத்திலிருந்து டிராய்ப் போர் வரையில்; (2) டிராய்ப் போரிலிருந்து முதல் ஒலிம்பிக் ஆட்டங்கள் வரை; (3) முதல் ஒலிம்பிக் ஆட்டத்திலிருந்து பாரசீக மன்னர் டரையஸ் ஆட்சிக் காலம் வரை; (4) டரையஸ் காலத்திலிருந்து கிறிஸ்து காலம் வரை; மற்றும் (5) கிறிஸ்துவிலிருந்து கான்ஸ்டன்டைன் ஆட்சி முடிய. யூஸிபியஸ் கிரேக்க மொழியில் நூலியற்றினார். யூஸிபியஸின் நிகழ்ச்சிநிரல் குறிப்புகளை இலத்தீனில் மொழிபெயர்த்தவர் ஜெரோம் என்பவர் (கி. பி. 379). இலத்தீன் வரலாறு வரைவியல் மரபிற்கு அவர் செய்த தொண்டு குறிப்பிடத்தக்கது. ஜெரோம் செய்த மொழிபெயர்ப்பை மேலும் செப்பம் செய்தவர் ஜோசப் ஜஸ்டஸ் ஸ்காலிகர் (கி. பி. 1583) என்பவர். யூஸிபியஸ் நூலையொட்டி கி. பி. 7ஆம் நூற்றாண்டில் இஸிடோர் (செவில்) என்பவர் நிகழ்ச்சிக் குறிப்பு நூலொன்று இயற்றினார். செயின்ட் அகஸ்டின் மனித வரலாற்றை ஆறு பகுதிகளாகப் பிரித்தமைத்த பாகுபாட்டினை மேற்கொண்டு இஸிடோர் தமது நூலையும் அவ்வாறே பாகுபடுத்தி எழுதினார். கி. பி. 8ஆம் நூற்றாண்டில் மதிப்பிற்குரிய பீடு என்பார் கிறிஸ்துவ நிகழ்ச்சிகளின் வரன்முறை ஒன்றை எழுதினார்; அவரும் தமது நூலைப் படைப்புக் காலந்தொட்டு அவர் காலம் வரை ஆறு பகுதிகளாப் பிரித்து எழுதினார். கி. பி. ஆறாம் நூற்றாண்டில் எழுதிய டயனீஸியஸ் எக்ஸிகுலஸ் என்பவரே முதன்முதலாகக் கிறிஸ்து வாழ்க்கையை இடையிட்டு வரலாற்றுப் பாகுபாடு செய்தவர். இம் முறையை பீடு கையாண்டு பிறகு யாவருமே மேற்கொள்ளுதற்கு வழி கோலினர். கிறிஸ்துவர் அறிவியல் முறைகள் வரலாற்றிற்கு அவர்கள் நோக்கிலிருந்து ஒருவகை ஒற்றுமை யளித்தது; ஆனால், அது சமயமரபானது. இவ் வொற்றுமையை எய்துதற்கு அவர்கள் உலகியல் நோக்கைக் கைவிட வேண்டியிருந்தது. அவர்கள் இயற்றிய வரலாறுகளில் கார்த்தேஜ் நகரத்துப் பெருவீரர்களையும்

அதினியத் தலைவரான பெரிக்ளியைப்பற்றியும் கேள்வியுறுகிறோ மில்லை. அவ் வகை வரலாற்றில் கிறிஸ்துவ சமயத் தலைவர்கள் முதலிடம் பெறுகின்றனர்.

கிறிஸ்துவப் பாதிரிமார்கள் காலஅட்டவணைகளைத் தவிர ஒரு வகை வரலாறும் எழுதியுள்ளனர்; பல்லிறை வழிபாட்டினர் ரோமானியப் பேரரசின் வீழ்ச்சிக்குக் கிறிஸ்துவர்களே காரணம் என்று குற்றம் சாட்டி வந்தனர். இதனை மறுப்பதற்கென்றே கிறிஸ்துவ சமயமரபினர் சில நூல்களை இயற்றவேண்டியிருந்தது; கிறிஸ்துவ சமயத்தைப் பழிப்பாரிடமிருந்து அதனைக் காக்க வேண்டிய தேவையிருந்தது. அகஸ்டினின் மாணவரான பாலஸ் லூரோஸியஸ் (ஏ. கி. பி. 380—420) என்பார் 'பல்லிறை வழி பாட்டாளரை மறுத்து வரலாற்றின் ஏழு நூல்கள்' இயற்றினர். அவர் மனிதகுலத்தின் ஊழ் இறுதியில் கடவுளால் நிருணயிக்கப் படுகின்றது என்னும் கோட்பாட்டை நிறுவினர். இந் நூலை இயற்றுதலில் அதன் ஆசிரியர், ஹெரடோடஸ் போன்ற வரலாற் றுளரைப் பின்பற்ருது யூஸிபியஸ் போன்ற சமய நூலினரைப் பின்பற்றினர். அவர் நூலில் பல்லிறை வழிபாட்டாளரது சாதனைகள் மறைக்கப்பட்டு அவர்கள் அடைந்த தோல்விகள், துயரங்கள் என்பவைமட்டும் மிகுத்துக் கூறப்பட்டுள்ளன. கிறிஸ்துவ மரபைச் சாராதவர்கள் அங்ஙனம் துயருறுவர் என்று நிறுவுதல் அவர் கருத்து. கிறிஸ்துவரல்லாத குழுவின்மீது வெறுப்பை அவர் நூல் தூண்டிற்று.

கிறிஸ்துவர் வரலாறு வரைவியலில் இருவகைக் குறைபாடுகள் இருந்தன: (1) அது ஓர் இலக்கை மனத்தில் வைத்துக்கொண்டு இயற்றப்பட்டது; அவ் விலக்கு, பல்லிறை வழிபாட்டுச் சமுதாயங் களைப் பழிப்பதும் சிரிப்பதும் ஆம்; (2) அவர்களது கால வரை யறைக் கணக்குகள் சமய மரபை யொட்டி யமைந்தனவேயன்றி உலகியல் கோட்பாடுகளை யொட்டியல்ல. ஆனல், அவர்கள் இயற்றிய சமயத் திருச்சபை அமைப்பு வரலாறுகள் நல்ல முறை யிலும் நம்பத்தக்கவாறும் அமைந்துள்ளன. காசியடோரஸ் என்பார் இயற்றிய 'முவியல் வரலாறு' (Historia Tripatite) என்னும் நூல் இடைக்காலம் முற்றிலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட திருந்திய திருச்சபை வரலாறு. ஸல்பிஷஸ் செவரஸ் இயற்றிய 'புனித வரலாறு' செவ்விய நடையில் இயற்றப்பட்டது. இவ்வகை நூல்களில் மனிதனது வாழ்க்கை கடவுளால் நிருணயிக்கப்படும்

கொள்கை ஏற்றுக்கொள்ளப்படுதலின், அவற்றில் மானுட நோக்கங்கள், உந்துதல்கள், சூழ்நிலைச் செல்வாக்கு என்பவை ஆராயப்படுவதில்லை. இவ்வகை வரலாறு வரைதற்குப் 'பாதிரி மார் வரலாறு வரைவியல்' என்பது பெயர். கிறிஸ்துவர்கள் இயற்றிய வாழ்க்கை வரலாற்று நூல்களில் ஜெரோம் இயற்றிய 'முதல் துறவியான பால் என்பாரின் வாழ்க்கை வரலாறு' மிகச் சிறந்தது. செயின்ட் அகஸ்டின் எழுதிய சுயசரிதம் 'ஒப்புக் கொள்ளுகை' (Confessions) என்னும் பெயரினது. அது உலக இலக்கியத்திலேயே மிகச் சிறந்த சில சுயசரிதங்களில் ஒன்று. கிறிஸ்துவ வரலாறு வரைவியலில் 'ஆதிகாரண, இறுதிக்காரணக் கோட்பாடுகள்' காணப்படுகின்றன என்றூர் காலிங் வுட்.

# 15. வரலாறு வரைவியல் : இடைக்காலம்

ஐரோப்பிய வரலாற்றின் இடைக்காலத்தில், அதாவது புறத்தார் தாக்குதல்களாலும் உள்ளழிவாலும் ரோமானியப் பேரரசு தாழ்ச்சியுறத் தொடங்கிய பின்னும் 15, 16ஆம் நூற்றுண்டுகளிலும் சமயச் சீர்திருத்தத்தாலும் ஐரோப்பிய மறு மலர்ச்சியாலும் தோன்றிய பண்பு மதிப்பு வேறுபாடு தோன்றிய தற்கு முன்பும் ஆக இடைப்பட்ட காலத்தில் கிறிஸ்துவ வரலாற்றுளர்களே யன்றிப் பிறவகை வரலாற்றுளர்களும் இருந்தனர். அவர்கள் சமய மரபிற்குட்பட்டு வரலாறு இயற்றுதவர்கள். அவர்கள் வாழ்ந்த காலம் இருண்டகாலம் என்று தவருகப் பிற்காலத்தாரால் கூறப்பட்டது; ஏனெனில், வரலாற்றுப் புறநோக்கும் உலகாயத நோக்கோடு சமுதாயப் பிரச்சினைகளைக் காண்டலும் அக் காலத்தில் இல்லை என்று பிற்கால விஞ்ஞான அறிவியல் ஆய்வாளர்கள் கருதினமையால் இக் கருத்தும் முற்றிலும் உண்மையானதன்று. ஏனெனில், அப் பத்து நூற்றுண்டுக்காலத்தில் லௌகிக மனப்பான்மையோடும் குறிக்கோள்களோடும் வரலாற்று நூல்கள் இயற்றிஞரும் உளர். அவர்களில் பெரும்பாலோர் அவ் விடைக்காலத்தின் பிற்பகுதியிலேயே வாழ்ந்திருந்தனர். அக் காலத்தில் சமய மரபுவகை வரலாறு வரைவியலும், உலகாயத வகை வரலாறு வரைவியலும் ஒருங்கு சக வாழ்வு வாழ்ந்தன. இடைக்காலத்தில் இவ் விருவகை மரபுகளுக்கும் இடையே மோதல் இயல்பாகவே இருந்துவந்தது. சமய மரபு இடைக் காலத்திற்கும் முற்பட்டது; உலகியல் மரபு அதற்கும் முற்பட்டது. ஆதலால், இவ் விரு மரபுகளும் இடைக்காலத்தில்தான் தோன்றின என்று கருதுதல் தவறுடைத்தாம். அவ் விரு மரபுகளுக்கும் இடையே நிகழ்ந்த மோதல்தான் அக் காலத்தின் சிறப்பான அமிசம். எதிர் மரபினரை (Heretic), தொல் மரபினர் (The orthodox), ஒறுத்தமை (Persecution) இடைக்காலத்தில் வெகுவாக நிகழ்ந்தது. இந் நிகழ்ச்சிகள் செம்மரபு புத்துயிர்பெற்று வந்து மறுமலர்ச்சி ஏற்பட்டு நிலைப்பட்ட காலம்வரை நடந்தன. 18ஆம் நூற்றுண்டில் தோன்றிப் பரவிய அறிவொளிக் காலத்தில்தான் இம் மரபு ஓய்ந்தது.

இக் காலத்தில், லௌகிக மரபில் நூலியற்றியோர், சமய மரபினைப் போற்றியவர்களைவிடச் சிறந்த நூல்களை இயற்றிவிடவில்லை. அதற்கு இரு காரணங்கள் உள: (1) முந்தியவர்கள் பிந்தியவர்களிடம் காணப்பட்ட குறைபாடுகள் யாவற்றையும் பெற்றிருந்தனர்; (2) ஆனால் பிந்தியவர்களுடைய கல்விச் சிறப்பு எதிர் மரபினருடைய கல்வியாற்றலைவிட மிகச் சிறந்தது. சமய மரபினருடைய சில அறிவியற் குழப்பங்களும் மூடநம்பிக்கைகளும் லௌகிக மரபினரிடம் காணப்படவில்லையாயினும் செம்மரபினை அறியாமையால் பண்பாட்டுச் செம்மை அவர்களிடம் இல்லை. ஆயினும், அவர்கள் வாழ்ந்த காலத்தைக் கருதி அவர்கள் சாதனைகளை நாம் மதிப்பிட வேண்டும்.

ரோமானியப் பேரரசின் அழிவு விளைவித்த பலன்களில் மிகப் பெரிது செம்மரபுக் கல்வியின் தாழ்ச்சியே. அதனை வேண்டுமென்று சிலர் தளர்ச்சியுறச் செய்தனர் என்பது ஒரு பாலாக, அதனைப் போற்றுவார் இன்மையாலும் அது நசித்துப் போயிற்று. கிறிஸ்துவத் தொல்மரபினர்க்கு இஃது ஒரு நல்ல வாய்ப்பாயிற்று; ஆதலால் கிறிஸ்துவ மடங்கள் எல்லா வகைக் கல்விக்கும் புகலிடமாகவே, அம் மடங்களிற் கற்றுத் தெளிந்த சாமியார்கள் ஐரோப்பியக் கல்வி மரபின் காப்பாளர்களாயினர். அன்றியும், இடைக் கால ஆசிரியர்கள் ஒரு சிறு எழுத்தறிந்த குழுவினர்; உலகப் பொதுமக்களுக்காக அவர்கள் நூல்களை இயற்றவில்லை. மொத்தத்தில் இந் நிலைமை உருவான பிறகு உலகியல் அறிவியல் மதிப்பீட்டிற்குத் தேவையான ஆராய்ச்சிக் கருவிகள் இலவாயின.

இடைக் காலத்தை இரு பகுதிகளாகப் பிரிக்கலாம்: (1) ரோமாபுரியின் வீழ்ச்சியிலிருந்து சார்லமேன் காலம் வரை; (2) அக் காலத்திலிருந்து மறுமலர்ச்சிக் காலம்வரை. இவற்றில் ஒவ்வொன்றிற்கும் தனிச் சிறப்புகள் உள. இவற்றில் முதற்பகுதியில் காஸடோரஸ் (ஏ. கி. பி. 480—570) 'காத்துகளின் (Goths) வரலாறு' என்று ஒரு நூலையும், புரோசோபியஸ் (ஏ. கி. பி. 500—565) 'தம் காலத்து வரலாறு' ஒன்றையும், பாலஸ்வார்னபிரீடஸ் (ஏ.கி.பி. 730—800) 'லம்பார்குகள் வரலாறு' ஒன்றையும் இயற்றினர். இடைக் காலத்தின் பிற் பகுதியில் சரிதைகளும் வரலாற்று நிகழ்ச்சிப் பட்டியல்களும் இயற்றப்பட்டன. தொடக்கத்தில் இவை நாட்குறிப்புகளாக ஆரம்பித்துப் பிறகு நன்கு அமைக்கப்பட்ட நிகழ்ச்சிக் குறிப்புகளாகப் பரிணமித்தன, சரிதைகள்

(Annals) பெரும்பாலும் ஆண்டுக் குறிப்புகளாகத் தொடங்கின; அவை திருவிழா நாள்கள், விரதங்கள் முதலிய புனித தினங்களைக் காலக் கிரமப்படி எழுதிவைக்கும் மரபில் தோன்றின; இவற்றை ஒருவகைப் பஞ்சாங்கம் எனலாம். இப் பழக்கம் முதலில் இங்கிலாந்தில் தொடங்கிப் பிறகு ஐரோப்பியக் கண்ட நாடுகளுக்குப் பரவிற்று என்ப. சமய மரபிற்கு ஒத்ததும் பயன்படுவதுமான செய்திகளைத் தவிரச் சில முக்கியமான லௌகிகச் செய்திகளும் இப் பட்டியல்களில் மறைமுகமாகக் குறிக்கப்பட்டன. ஆண்டுச் சரிதைகளில் மிக நல்ல முறையில் இயற்றப்பட்டது ரோஜர் (ஹவ்டேன்) என்பாரது 'ஆங்கிலேய வரலாற்றுச் சரிதை' (Annals of English History) என்பது. பிற நிகழ்ச்சிக் குறிப்புப் பட்டியல்கள் ஓரிடத்தைப்பற்றியோ (தல புராணங்களைப் போல) ஒரு நிகழ்ச்சியைப்பற்றியோ (தசாவதாரம், ஜாதகக் கதைகள், திருவிளையாடல்கள் என்பனபோல) குறிப்பனவாம். 'இவற்றின் நோக்கம் இலக்கியப் பண்புடைய நூல்களை இயற்றுதல் அன்று, ஒரு கருத்தை நிறுவவோ மறுக்கவோ எழுந்தன இந் நூல்கள்' என்றார் டவுட் என்னும் ஆசிரியர். நிகழ்ச்சிக் குறிப்பு நூல்கள் உடனிகழ் காலத்துச் செய்திகளை நன்கு விளக்கிக் கூறுவனவாயினும், இறந்த காலச் செய்திகளைச் செம்மையுறக் கூற அவை உதவா. இடைக் காலத்து நிகழ்ச்சிக் குறிப்பு நூல்களில் மிகச் சிறந்தது மதிப்பிற்குரிய பீடு இயற்றிய 'ஆங்கில சாக்ஸானிய நிகழ்ச்சிக் குறிப்பு' (1154 வரை வரலாறு கூறுவது) என்பதேயாம்; 'செயின்ட் ஆல்பன்ஸ் நிகழ்ச்சிக் குறிப்பு' என்பது கி. பி. 1250 முதல் கி. பி. 1422 வரையுள்ள நிகழ்ச்சிகளைக் கூறுகின்றது. ஆட்டோ ஃபிரெயிஸிங் (Otto of Freising) என்பாரது நிகழ்ச்சிக் குறிப்பும், மாத்யூ பாரிஸ் இயற்றிய 'பெரிய குறிப்புகள்' என்பதும் இத்தகைய நூல்களில் பிற சிறந்தவையாம். இவை தவிர 'லண்டன் குறிப்பு', 'ஃபிளாரென்ஸ் குறிப்பு' என்பவை இவ் வகையைச் சேர்ந்தவை.

இடைக்கால வரலாற்றாளருடைய பண்பு மதிப்புகள் வேறானவை; அவர்க்குக் கிடைத்த சான்றுகள் சிலவே; சான்று ஆய்வு முறைகள் இக் காலத்தில் விஞ்ஞான முறையில் வளர்ந்துள்ளதுபோல் அக் காலத்தில் வளரவில்லை. ஆதலால், இன்றைய வரலாற்றுத் திறனாய்வாளன் ஏற்றுக்கொள்ளக்கூடிய வகை நூல்களை அக் காலத்தார் எழுதவில்லை. இடைக்கால வரலாறு வரைவியல் (1) விவாதஞ்சாராக் கோட்பாட்டுக் கூற்றுகள் நிரம்பியும், (2) இலக்கிய நடை செம்மையுறாமலும், (3) விஞ்ஞான

ஆய்வு முறை சாராமலும் விளங்கிற்று. இக் குறைபாடுகள் யாவையும் 19ஆம் நூற்றுண்டுத் தொடக்கத்தில்தான் களைந்து கொள்ளப்பட்டன. இடைக்கால ஆசிரியர்கள் நிகழ்ச்சிக் குறிப்புகள், ஆண்டுச் சரிதைகள், வரலாறு என்பவற்றிடையே வேறுபாடு காணவில்லை. மூலச்சான்றுகள் நன்கு அமைக்கப் பெற வில்லையாதலின் அவர்கள் உடனிகழ் காலத்துச் செய்திகளைப் பற்றியே எழுதினர். இக் குறைபாடுகளுக்கு அவ் வாசிரியர்கள் பொறுப்பாளிகள் அல்லர். அவர்கள் உடனிகழ் காலத்துச் முக்கிய நிகழ்ச்சிகள் (உதாரணமாகச் சிலுவைப் போர்கள்) பற்றியே வரைந்தனர். ஆயினும், நிகழ்ச்சிக் குறிப்புகளாகவும், கோட்பாட்டு மறுப்பு நூல்களாகவும், ஆண்டுச் சரிதை களாகவுமேனும் சில வரலாற்று நூல்களை அவ் விடைக் காலத்தார் இயற்றி வைத்தமை பிற்கால வரலாற்றுளர்கட்குப் பெரிதும் பயன்படுவதாயிற்று.

# 16. வரலாறு வரைவியல்: நவீனகாலம்

## (அ) மானுட காலம்

சிலுவைப் போர்கள் பதினோராம் நூற்றாண்டிலிருந்து தொடங்கி மூன்று நூற்றாண்டுகளில் நடைபெற்றன. இப் போர்களால் ஐரோப்பியக் கிறிஸ்துவர்களுக்கும் மத்திய மேற்கு முஸ்லிம் நாடுகளுக்கும் ஏற்பட்ட மோதல்கள் அவ் விரு பிராந்தியங்களுக்கு மிடையே போக்குவரத்தை மிகுவித்ததோடு கருத்துப் பரிமாறலை யும் உண்டாக்கின. ரோஜர் பேக்கன், மாக்கியவல்லி என்னும் இடைக்கால அறிஞர்கள் கருத்துலகிற்கு ஈந்த மானதச் செல்வங்களால் பல அறிவியல் மாறுதல்கள் தோன்றலாயின. கி. பி. 1453-ல் துருக்கர்கள் கான்ஸ்டான்டிநோபில் நகரத்தைப் போரில் கைப்பற்றிய பிறகு ஐரோப்பிய அறிவியல் மரபு அடிப்படையாக மாறலாயிற்று. அந் நகரத்தில் இருந்த செம்மரபு பயின்ற அறிஞர்கள் துருக்கராட்சிக்கு அஞ்சி ஐரோப்பாவில் மேற்கு, மத்திய பாகங்களில் சென்று குடியேறியதோடு தமது செம்மரபினை ஆண்டும் பரப்பத் தொடங்கினர். இம் மரபின் செல்வாக்கால் ஃபிளாரன்ஸ் நகரத்தில் கலை புத்துயிர்பெற்றது. இவ்வாறு ஐரோப்பாவில் தோன்றிற்று மறுமலர்ச்சி. இம் மறுமலர்ச்சியால் விஞ்ஞானம் பிறந்தது, வினவி அறியும் உணர்வு மேம்பட்டது, புதியதொரு கல்வி—'நவகல்வி'–பரவிற்று, பழைமையைத் தெரிந்து கொள்ளும் அறிஅவா (curiosity) பிறந்தது. இவ் வியக்கத்தால் மூடநம்பிக்கை என்னும் மூடுபனி அறிவொளி என்னும் பரிதியால் நீக்கப்பட்டது. மனிதன் கடவுளைப்பற்றி ஆலோசிப்பதை ஓரளவு தளர்த்திக்கொண்டு மன்பதையைப்பற்றிக் கவலைப்படலாயினன்; அதாவது அறிவியல் சமய மரபுநெறியைவிட்டுச் சற்று விலகி மானுடத்தில் அக்கறை கொள்ளலாயிற்று. இதனை ஒரு பெரும் புரட்சியென்றே கூறலாம்.

சில நவீன மதிப்பீட்டாளர்கள், மானுட கால வரலாற்றாளர்கள்—இடைக்காலச் சமய மரபு சார்ந்த வரலாற்றாளர்கள் கொள்கைகளை ஓரளவும் ஆய்முறைகளைப் பெருமளவும் மேற்கொண்டனர். ஆதலின் மடத்துத் துறவிகள் இயற்றிய வரலாற்

றினும் அவர்கள் இயற்றியவை சிறந்தவையல்ல என்பர். இது பொருந்தாக் கூற்று என்று விடுக்க. ஏனெனில், 13, 14, 15ஆம் நூற்றுண்டு வரலாற்றுளர்கள் 19ஆம் நூற்றுண்டுத் திறனுய்வு முறைகளைக் கற்றுத் தெளிந்திருக்க முடியும் என்று நாம் எதிர் பார்க்க முடியாது. முஸாடஸ், ஜியவன்னி வில்லானி, லியோனுர்டோ புரூனி முதலிய வரலாற்றுளர்கள் அக் காலத்தில் சிறந்து விளங் கினர். அவர்கள் கடவுள் வழிபாட்டைவிட்டு மனித வழிபாட்டில் இறங்கினர் என்று சிலர் குறைபாடு கூறுவதுண்டு. ஆயினும், அத்துணையே அவர்கள் செய்திருப்பினும் அவர்கள் செயற்பாடுகள் ஒரு புரட்சியே என்பதில் ஐயமில்லை.

நவகல்வி என்பது கிறிஸ்துவிற்கு முந்திய பல்லிறை வழிபாட்டு மரபினர் பின்பற்றிய செம்மரபை ஐரோப்பியர்கள் மறுபடியும் தெரிந்து போற்றிய கல்வியாம். கிறிஸ்துவ சமயப் பெரியோரின் வாக்குகளைவிடப் பிளேட்டோ, அரிஸ்டாட்டில் முதலியோர் கருத்துகளில் மிகுந்த ஆர்வங் காட்டிய கல்வியாம் அது. இம் மாறுபாடு அச்சுப்பொறி கண்டுபிடிப்பு, புதுநாடு காண்டல், புராடஸ்டன்ட் சமயச் சீர்திருத்தம் முதலியன நிகழ்ந்திராவிடின், ஸர் வால்ட்டர் ராலே இயற்றிய ‘உலக வரலாறு’ முதலிய நூல்கள் வெளிவந்திரா. அக் காலத்தில் விஞ்ஞான முறை வர லாறு வரைவியல் வளரவில்லை, போற்றப்படவில்லை என்று குறை கூறுவோரும் உண்டு; ஆனுல் அக் காலத்தில்தான் பேக்கன், மாக்கியவல்லி போன்ற அறிஞர்கள் விஞ்ஞானம், உலகியல் முதலிய அறிவுத் துறைகளை வளர்த்துவந்தனர் என்பது காண வேண்டும். மானுடத் துறையினர் ஐரோப்பிய அறிவியற் றுறைக்குப் பெரிய தொண்டு செய்துள்ளனர் என்பதில் ஐயமின்று. இம் மானுட காலம் 18ஆம் நூற்றுண்டு அறிவொளி மரபிற்கு ஒரு தேவைப்பட்ட முன்னேடி என்பதிலும் ஐயமின்று. முற்றிலும் தெய்வ நம்பிக்கை ஒன்றையே போற்றி வந்தவர்கள் பகுத்தறிவுப் பான்மையை முற்றிலும் ஏற்றுக்கொள்ளும் நிலையை அடைதற்கு, மானுடம் என்னும் வாயிலாகவே முன்னேற வேண்டி யிருந்தது; அன்றியும் இன்று முக்கியமாகக் காணப்படும் மதிப் பீட்டு மரபு வளர்தற்கு அதற்கு முன்பு அறிவொளி மரபு திகழ வேண்டியிருந்தது.

இந் நிலையில் இடைக் காலம் மறைந்து போய் நவீன காலம் தொடங்குதற்கு வழிகாட்டியாயிருந்த பல நிகழ்ச்சிகளில் மானுடம் ஒன்று, சமயச் சீர்திருத்தம் ஒன்று; ஆனுல் இவை யிரண்டில், சமயச் சீர்திருத்தம் சமயத்தையே வற்புறுத்திற்று ஆதலின் அது மானுடத்திற்கு நேர் விரோதமான இயக்கம்

என்பது காணலாம்; ஆயினும் சமயச் சீர்திருத்தம் என்னும் தொடரில் சமயத்தைவிடச் சீர்திருத்தம் முக்கியமான நோக்க மாதலின் அதுவும் மறுமலர்ச்சிக்குப் பேராதரவு அளிப்பதாயிற்று. பிறகு வந்த கற்பனை—உணர்ச்சிக் காலம் (Romantic Age) 18ஆம் நூற்றுண்டைய அறிவொளிக் காலத்தெழுந்த சில பண்பு-மதிப்பு களை எதிர்த்து, மாற்றம் விரும்பி எழுந்தது; ஆயினும் இதுவும் 20ஆம் நூற்றுண்டில் எழுந்த ஐயம், மதிப்பீடு என்பவற்றை வற் புறுத்திய நவீன காலம் பிறந்ததும் மாறிவிட்டது.

ஐரோப்பிய வரலாறு வரைவியல் மரபினைக் கீழ்க்கண்ட அட்டவணைமூலம் விளக்கலாம்:

| | | |
|---|---|---|
| 1. | பல்விறை வழிபாட்டாளர் தம் செம்மரபு (—ஏ. கி. பி. 4ஆம் நூற்.) | மதிப்பீடு இலதாயினும் மானுட பரமானது. |
| 2. | இடைக்காலக் கிறிஸ்துவ சமய மரபு (கி.பி. 4ஆம் நூற்.–14ஆம் நூற்.) | கருத்து ஒற்றுமை; எதிர் மரபினை எதிர்த்தல்; நம் பிக்கை உயர்நிலையில் இருத் தல் (இம் மரபு முதல் மர பிற்கு எதிரிடையானது). |
| 3. | இடைக்கால நிகழ்ச்சிக் குறிப்பாளர்கள், மற் றும் ஆண்டுச் சரிதை யெழுதுவோர் (ஷை) | உலகியல் சார்பு; இரண்டாம் மரபினை எதிர்ப்பதன்று; அதன் வேறொரு வகை— அவ்வளவே. |
| 4. | மானுடம் (கி. பி. 14ஆம் நூற்.— 16ஆம் நூற்.) | இடைக் காலக் கிறிஸ்துவ மரபிற்கு எதிரானது; உல கியற் பரமானது; சமய மரபைப் புறக்கணிப்பது; முதல் மரபை ஆதரித்துப் போற்றுவது. |
| 5. | சமயச் சீர்திருத்தம் (கி. பி. 16ஆம் நூற்.— 17ஆம் நூற்.) | இரண்டாம் மரபின் வேறொரு வகை; அதனை எதிர்ப்ப தன்று; ஆதலால் நான்காம் மரபிற்கு எதிரானது. |
| 6. | அறிவொளிக் காலம் (கி. பி. 18ஆம் நூற்.) | 2, 3, 5ஆம் மரபுகளை நேராக எதிர்ப்பது: நான்காம் மரபின் படிப்பினையை ஏற்றுக்கொள்வது. |

| | | |
|---|---|---|
| 7. | கலை–உணர்ச்சிக் காலம் (கி. பி. 18ஆம் நூற். பிற் பகுதியும், கி.பி. 19ஆம் நூற். முதன் முக்காற் பகுதியும்) | இது ஆறும் மரபிற்கு எதிராகப் பிறந்தது; அம் மரபின் சில அமிசங்களைத் திருத்திற்றுயினும், விஞ்ஞான முறை நவீன வரலாறு வரைவியல் மரபினை அரை நூற்றுண்டுக் காலம் மேலும் தள்ளிப் போட்டது. |
| 8. | மதிப்பீட்டுக் காலம் (கி. பி. 19ஆம் நூற். பிற் பகுதியும் கி. பி. 20ஆம் நூற்றுண்டும்) | முதிர் கல்வி, நேரிய ஐயப்பாடு என்பவற்றுல் பிறந்த நோக்கு; ஆறும் மரபின் நிச்சயத் தன்மையை ஆய்ந்து தளர்த்திற்று; ஏழாம் மரபின் பிடிப்பின்மையை மாற்றிற்று. இம் மரபில் ஆய்முறையொன்று தான் முக்கியமாகின்றது. |

மேற் காணப்படும் அட்டவணையிலிருந்து அறிவியலின் எல்லா வகை நிலைகளையும் கடந்து வரலாறு வரைவியல் வந்துள்ளது என்பது காணப்படும்.

## (ஆ) சமயச் சீர்திருத்தம்

மாக்கியவல்லி 'ஃபிளாரென்ஸின் வரலா'ற்றை எழுதத் தொடங்கியபோதுதான் மார்ட்டின் லூதர் கிறிஸ்துவ சமயச் சீர்திருத்தத்தில் ஈடுபடலானுர். பிற் காலத்தில் தவிர்க்க முடியாமல் வரவிருந்த உலகியல் மரபை எதிர்நோக்கித் தமது கோட்பாடுகளை வகுத்துக்கொண்டிருந்தார் மாக்கியவல்லி. லூதரின் முயற்சிகள் சமயத்தில் ஈடுபாட்டை அதே சமயத்தில் மிகுவித்தது. சமயச் சீர்திருத்த இயக்கமும் அது உந்திய எதிர்–திருத்த இயக்கமும் ஒன்றையொன்று பாதித்தனவாயினும் இரண்டும் சமயத்தோடு தொடர்புபட்டனவாதலின் லௌகிக நோக்கைப் புறக்கணித்தன. இறுதியில் மானுடமும் திருத்தத்தை வற்புறுத்திய சமயத் திருத்த இயக்கமும் சேர்ந்து வரலாறு வரைவியற்குப் புத்துயிர் அளித்தன. லூதருடைய இயக்கத்திற்கு இரண்டு பகைகள் இருந்தன: (1) ரோமன் கத்தோலிக்கச் சமய மரபு; (2) லௌகிக மரபு. முந்தியதை எதிர்த்து வெற்றியோடு போராடிய லூதர் பிந்திய பகையைத் தம்மையறியாமலே ஊக்கிவிட்டார்.

வரலாற்றினைச் சமய நோக்கோடு எழுத முற்பட்ட முக்கியமான முயற்சிகள் யாவற்றுள்ளும் இறுதியானது பாஸ்வே (Bossuet) இயற்றிய 'பிரபஞ்ச வரலாறுபற்றிய பிரவசனம்' என்பதுவே. மனித வரலாற்றில் இறைவனது நிருணயத்தை நிரூபிக்க அவர் அரும்பாடுபட்டு எழுதினர். அவர் கோட்பாடு யாதெனில், 'வரலாறு முற்றிலும் இறுதியில் ரோமானியத் திருச்சபையில் வந்து முடியும்' என்பது.

சமய எதிர்-திருத்த இயக்கத்தால் பிறந்த கத்தோலிக்க இயேசு சபைப் பாதிரியார்கள் சமய வரலாறு வரைவியற்குப் பெருந்தொண்டு செய்துள்ளனர். இவ் வியக்கத்தை நடாத்தி வைத்து இயேசு சபையை நிறுவிய லயோலா என்பவர் தமது சுய சரிதையை இயற்றினர். நிகோலோ ஆர்லாண்டினி என்பவர் 'இயேசு சபையின் வரலாறு' இயற்றினர். பிஷப் பர்னெட் என்பவர் 'இங்கிலாந்து திருச்சபையின் சீர்திருத்த வரலாறு' இயற்றினர்; இதில் அவ் வியக்கத்தை ஊக்கிய லௌகிகக் காரணங் களையும் ஆய்ந்து கூறினர். சீர்திருத்த, எதிர்திருத்த இயக்கங்கள் இரண்டுமே வரலாற்றை ஒரு விளம்பர, பிரசாரக் கருவியாக உபயோகித்தன. பிளேவியஸ் என்பாரது 'மாக்டபர்க் சதங்கள்' போப்பாண்டவரது சமயப் போக்கினைக் கண்டித்தெழுதியது. பரோனியஸ் எழுதிய 'சமய அமைப்புச் சரிதைகள்' (12 தொகுதி களில்) மேற்கூறிய முயற்சிக்கு எதிர்ப்பாக எழுந்தது.

## (இ) அறிவொளிக் காலம்

இதனைப் பகுத்தறிவுக் காலம் அல்லது விஞ்ஞானக் கல்வி நலஞ் சார் காலம் என்றும் கூறலாம். 18ஆம் நூற்றுண்டில் முதிர்ச்சி யடைந்து அந்நூற்றுண்டிறுதியிலேயே தன்னியல்பு நீங்கிக் கற்பனை-உணர்ச்சிக் காலத்திற்கு இடம் தந்து மாறியும் மறைந்துவிட்டது அறிவொளிக்காலம். ஐம்பொறி வாயிலாக ஐம்புலன் அறிவுறுத்தும் பகுத்தறிவு சார்ந்த ஒளி ஒன்றே அறியாமையைப் போக்கும் விளக்கம் என்று அக் காலத்து அறிஞர் கருதியமையால் அக் காலம் அறிவொளிக் காலம் என்னும் பெயர்பெற்றது.

17ஆம் நூற்றுண்டில் தோன்றிய விஞ்ஞானக் கண்டுபிடிப்பு கள், நாடுகாணல் முதலிய புதுமுயற்சிகள் செம்மரபுடன் சேர்ந்து நவகல்வி வாயிலாக மக்களுடைய நம்பிக்கைகளையும் அறிவுத்துறை ஈடுபாடுகளையும் சமயச் சார்பினின்றும் மாற்றி உலகியல் மானுடச் சார்பிற்கு மாற்றிய பிறகு மனிதனது அறிவுத் திறனில் அளவிறந்த நம்பிக்கையும் உறுதியும் தோன்றின. மான்டெஸ்க்யூ, ஜீன் போடின் என்போர் வரலாற்றைப் புவியியல் எங்ஙனம் பாதிக்கின்றது என்

பதை ஆராய்ந்தனர்; அதாவது ஊழ், இறைவன் அருள் என்பன வன்றிச் சூழ்நிலை மனித வரலாற்றில் பெரும்பாகம் வகிக்கின்றது என்பது அவர்கள் கருத்து; அதாவது சூழ்நிலையை மாற்றிக் கொள்ளும் தகுதி மனிதனுக்கு உண்டு; அவன் அவ்வாறு செய்து கொண்டு தனது எதிர்காலத்தைத் தானே நிருணயித்துக்கொள்ளத் தடையாதுமில்லை என்பது கருத்தாயிற்று. கோபர்னிகஸ், கலிலியோ, கெப்ளர், நியூடன், ஹார்வி என்போரது வானவியல், கணித, மருத்துவக் கண்டுபிடிப்புகள் இக் கருத்தை வற்புறுத்தின. இவற்றை அடிப்படையாக வைத்து அறிவியற் கருத்துகளையும் கோட்பாடுகளையும் உருவாக்கினர் தேகார்ட், ஃபிரான்ஸிஸ் பேக்கன் என்போர். கிளாரண்டன், பிஷப் பர்னெட் என்போர் சமயச்சார்பு மேலிடாத வரலாறுகளை இயற்றினர்; ஆயினும், அவர்கள் பகுத்தறிவினை ஒரு கடவுளாகக் கொண்டனரில்லை; அம் முயற்சி 18ஆம் நூற்றுண்டைச் சேர்ந்தது. விகோ, ஹியூம், டர்கோ என்போர் இந் நிலவுலகில் இயற்கை நிலையிலும் சமுதாய நிலையிலும் மனிதன் எவ்வாறு முறையே வளர்ச்சியடைந்து வந்துள்ளான் என்பதை வற்புறுத்தி நூலியற்றினர். ஹாப்ஸ், ஸ்பைனோஸா என்போர் விவிலிய மதிப்பீட்டுமுறைகளைப் புகுத்திப் புதுவகை வரலாற்று ஆய்வு முறைகளை அறிஞர்க்கு அறிமுகப்படுத்தினர். இப் புது முறைப்படி விவிலியத்தின் பழைய ஏற்பாடு ஏனைய எந்த வரலாற்று நூலைப் போலவும் மதிப்பீட்டிற்கு உட்படுத்தி ஆராயப் படும் தகைமைத்து என்பதாயிற்று.

18ஆம் நூற்றுண்டு எழுத்தாளர்களான வால்ட்டேர், மான்டெஸ்க்யூ என்பார் வரைவுகளால் நவீனகால வரலாறு வரைவியல் அதன் தொடக்க உருவினைப் பெற்றது. இவர்கள் பகுத்தறிவு அல்லது அறிவொளி மரபு எழுத்தாளரது வரலாறு வரைந்தவர்கள். அவர்களில் மிகப் பெரும்பாலோர் 18ஆம் நூற்றுண்டைச் சேர்ந்தவர்கள். திதெரோ, டி ஆலம்பர்ட் முதலியோர்—கலைக் களஞ்சியர்கள்–மரபு வாயிலாகவரும் செய்திகளைக் கடுமையான மதிப்பீட்டிற்குள்ளாக்க வேண்டும் என்றனர். பாரம்பரிய நம்பிக்கைகளின் உண்மை ஆய்ந்தறியப்படவேண்டுவது என்றனர். இவர்கள் ஒருபாலாக, வால்ட்டேர், ஹியூம், ராபர்ட்ஸன், கிப்பன் என்போரே பகுத்தறிவாளரது மிக முக்கியமான பிரதிநிதிகள் எனலாம். சமய மரபினை முற்றிலும் எதிர்த்து ஒழித்துவிட இவர்கள் விரும்பவில்லையாயினும் மனிதனது கருத்துகளே உலகை இயக்குகின்றன என்னும் கோட்பாடு இவர்களால் வற்புறுத்தி நிறுவப்பெற்றது. அந் நூற்றுண்டிற்கு முற்பட்ட காலத்தவர்களை விட எவ்வளவோ மிகுதியாக வரலாற்றுப் புறநோக்குப் படைத் தவர்கள் இவர்கள். பகுத்தறிவாளரது கோட்பாட்டிலிருந்து சில

கருத்துகள் உருவாயின; உதாரணமாக முன்னியக்கக் கருத்து, வர லாற்றுத் தொடர் வளர்ச்சி என்பன. 'நவ விஞ்ஞானம்' (Science Nuova) என்னும் தமது நூலில் விக்கோ என்பார் 'வரலாற்று நிகழ் முறை வட்டமாகச் சுழன்று இயங்குவது' என்று குறிப்பிட்டார். டர்கோ என்பார் வரலாற்று முற்போக்கு வீழ்ச்சி, எழுச்சி என்ப வற்றின் வாயிலாகவும், நம்பிக்கைகள், நம்பிக்கையின்மை என் னும் மாறிமாறிவரும் கட்டங்களைத் தாண்டி முன்னேறுகின்றது என்றார். கண்டார்செ (Condorcet) என்பவர் கில்லடினை எதிர் நோக்கி நின்றபோதும் 'மனித ஆவியின் முன்னியக்கத்தைப் பற்றிய நம்பிக்கை' என்னும் அரிய நூலை இயற்றினார்; இது நம்பிக் கையின் அரிய உதாரணமாம். டார்வின் என்னும் உயிரியலர் காலத்திற்கு முன்பே ஹெர்டர் என்னும் ஜெர்மானிய அறிஞர் பரிணாமக் கொள்கையை வற்புறுத்தினார். அரசியலமைப்பைச் சீரிய முறையில் திருத்தியமைப்பதால் மனித வாழ்க்கையின் தரத்தையே மாற்ற முடியும் என்னும் நம்பிக்கை மான்டெஸ்க்யூ வின் வரைவுகளில் தொனித்தது. எட்மண்டு பர்க் (Edmund Burke) என்னும் ஆங்கிலேயப் பேரறிஞர் 'சமுதாயமும் அரசும் உயிரியல் வகையில் வளர்ச்சியுறும்' என்று வற்புறுத்தினார்.

பகுத்தறிவுக் காலம் மேற்கொண்ட கொள்கைகளில் முக்கிய மான சில குறைபாடுகள் இருந்தன; அக் காலத்து எழுத்தர்கள் அளவிறந்த தன்னம்பிக்கையும், மனிதனது பகுத்தறிவில் நம்பிக் கையும் கொண்டவர்கள்; இடைக் காலக் கருத்துகளை அவமதிப் போடும் ஏளனத்தோடும் எண்ணியவர்கள்; நம்பிக்கைக் காலத்தை ஒரு காட்டுமிராண்டிக்காலம் என்று கருதியவர்கள். இது கிப்பனது (Gibbon) வரலாற்று நோக்கிலிருந்து தெள்ளிதிற்புலனா கும். ஆதலால், அவர்கள் இடைக்காலத்துச் சமய மரபுகளையும் அம் மரபுகளை உந்திய நோக்கு நிலைகளையும் சரிவரப் புரிந்துகொள்ளும் பொறுமை அவர்களுக்கு இருக்கவில்லை என்பது விளங்கும். அவர் களுக்குத் தங்களது பகுத்தறிவில் அளவிறந்த நம்பிக்கையிருந்த மையால் வரலாறு வரைதலில் தாங்கள் கண்ட இலக்கணத்தை மாற்றவோ சீர்திருத்தவோ முயல வேண்டும் என்று அவர் களுக்குத் தோன்றவில்லை. பதினாறும் நூற்றாண்டிற்கு முற்பட்ட மனித வரலாற்றை ஆய்தலிற் பயனொன்றும் இன்று என்று கருதினார் வால்ட்டேர்; ரோமானியப் பேரரசின் தாழ்ச்சிக்கும் வீழ்ச்சிக்கும் சமயமும் அநாகரிகப் புறத்தார் தாக்குதலுமே காரணம் என்று கண்டார் கிப்பன். 18ஆம் நூற்றாண்டில்தான் மனிதகுலம் இடைக்கால அறியாமை என்றும் இருளிலிருந்து தப்பி அறிவொளி என்னும் விளக்கால் உண்மையறிவு பெற்றது என்பது அவர்கள் கருத்து. அறிவொளியார்கள் தமது பூரணச் சிறப்பை

எண்ணி மகிழ்ந்திருந்தமையால் வரைவியல் முறையைச் செப்பஞ் செய்து பூரணச் சிறப்புறச் செய்தலில் அவர்கள் உள்ளஞ் செல்ல வில்லை. மதிப்பீடு, விஞ்ஞான முறை ஆய்வு என்பவை அவர்கள் அறியாதன. ஆயினும், அவர்கள் காலம் ஒன்று இடையிட்டி ராவிடில் 19ஆம் நூற்றுண்டில் தோன்றிய பிற அறிவியல் நிலைகள் தோன்றியிருக்க முடியாது. கி.பி. 1300-லிருந்து 1800 வரை படர்ந்த ஐந்து நூற்றுண்டுக்காலத்தில் வரலாறு வரைவியலில் மாபெரும் மாறுதல்கள் ஏற்பட்டன என்பது மேற்கூறியவற்றி னின்றும் புலனுகும். மறுமலர்ச்சி, மானுடம், சமயச் சீர்திருத்தம், நாடுகாண்டல், விஞ்ஞான அறிவு வளர்ச்சி, அச்சுப்பொறிக் கண்டுபிடிப்பு, போரில் துப்பாக்கித் தோட்டா வெடிமருந்துப் பயன்பாடு என்பவை தோன்றி வளரவே அக் காலம் கண்ட அறிவியற் புரட்சி பூரணமாயிற்று.

## (ஈ) கற்பனை உணர்ச்சிக் காலம்

18ஆம் நூற்றுண்டின் இறுதிக் காலத்தில் தோன்றிய ஃபிரெஞ்சுப் புரட்சிக் கருத்தூட்டியவர்களில் முக்கியமானவர்களாக, வால்ட்டேர், மான்டெஸ்க்யூ, ரூஸோ என்னும் மூவரையும் குறிப்பிடுவது ஒரு மரபு. இவர்களில் வால்ட்டேரும் மான்டெஸ்க்யூவும் அறிவொளிக் கால வரைவுகளை உருவாக்கியவர்களில் சிறந்தவர்கள் என்பதை மேலே கண்டோம். வால்ட்டேர் திருச்சபையின் குறைபாடுகளை எடுத்துக் கூறினுர்; மான்டெஸ்க்யூ அரசியல் அமைப்பிலும் அதனுல் எழுந்த சமூக நிலையிலும் காணப்பட்ட குறைபாடுகளை விளக்கிக் கூறினுர். ஆனுல், ரூஸோ அவ்வாறு எளிதாக வகைப்படுத்தக்கூடியவரல்லர். அவர் இவ் விரு அறிஞர்களைப்போல அறிவொளி இயக்கத்தை ஆதரித்தாராயினும் கற்பனை உணர்ச்சிக் காலத்திற்கு வித்திட்டவரும் அவரே எனலாம். 'மனிதன் யாண்டும் சுதந்திரனுகப் பிறக்கிருன்; இப்போது எங்கும் கட்டுண்டு நிற்கிருன்' என்று அவர் கூறிய கூற்று கற்பனை-உணர்ச்சிக் கூற்றிற்குச் சிறந்த உதாரணமாகும். ஆதலால், 18ம் நூற்றுண்டின் பிற்பகுதியிலேயே கற்பனை-உணர்ச்சி வித்துகள் விதைக்கப்பட்டமை போதரும். இவை 19ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் பயிராகி அந் நூற்றுண்டின் இடைக் காலத்தில் பெரும் பலனளித்து, அந் நூற்றுண்டின் இறுதிக் காலத்தில் தனது வேகத்தை இழக்க ஆரம்பித்தது.

நாம் மேற்கூறிவந்த காலங்கள் ஒன்றையொன்று ஊக்கியன போல் ஒன்றன்பின் ஒன்றுக அவை நிகழ்ந்துவந்தன என்பதையும் காணலாம். தெய்வ நம்பிக்கைக் காலம் திருச்சபைக் குறை

பாடுகள் காரணமாகச் சமயச் சீர்த்திருத்தத்திலும், தனது மிகைக் கூற்றுகளினுல் மானுடத்திலும் முடிந்தது. நம்பிக்கைக் காலம் பகுத்தறிவுக் காலத்தை உந்திற்று; அவ்வாறே பகுத்தறிவுக் காலம் தனது மிகை நோக்குகளால் கற்பனை—உணர்ச்சிக் காலத்தை ஆக்கிற்று. இவை ஒன்றற்கொன்று எதிரானவை. எதிரானவற்றை உண்டாக்கி முன்னேறுதல் என்பது மனித வாழ்க்கை அனுபவத்திற் கண்ட ஒரு முறை. இதனைக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடலாம்.

| | | | |
|---|---|---|---|
| 1. | கிறிஸ்துவிற்கு முற்பட்ட பல்லிறை வழிபாட்டாளர் செம்மரபு | × | கிறிஸ்துவ சமய மரபு |
| 2. | கிறிஸ்துவ சமய மரபு | × | செம்மரபின் மறுமலர்ச்சி |
| 3. | செம்மரபின் மறுமலர்ச்சி (விஞ்ஞான வளர்ச்சி) மானுடம் | × | அறிவொளி இயக்கம் |
| 4. | அறிவொளி இயக்கம் | × | கற்பனை—உணர்ச்சிக் காலம் |
| 5. | கற்பனை உணர்ச்சிக்காலம் | × | புறநோக்கு மதிப்பீட்டுக் காலம் |

கற்பனை உணர்ச்சிக் காலத்தவர்கள் வரலாற்றில் நிகழ்முறையில் மனிதனது முன்னியக்கப் பரிணமம் அடங்கியுள்ளது என்று நம்பினர். மனித சமுதாயத்தின் தோற்றம், வளர்ச்சி என்பவற்றைப்பற்றிய கற்பனைக் காரணங்களைத் தோற்றுவித்ததோடு வரலாற்று நிகழ் முறைக்கே கற்பனைக் காரணங்களைக் கற்பிக்கும் மரபும் வளர்ந்தது. அறிவொளிக் காலத்து எழுத்தர்களின் மிகு நம்பிக்கையை எதிர்த்த கற்பனை உணர்ச்சியர் ஒரு வகை மறைஞானிகளாகத் (Mystics) திகழ்ந்தனர். வரலாற்றின் பழைமை முற்றிலும் சேர்ந்து ஒரு நாட்டிற்கு, ஒரு மக்களுக்கு ஒரு தன்மையை ஏற்படுத்துகின்றது, அத் தன்மையினின்றும் அவர்கள் தப்புவதற்கில்லை, அவர்கள் இயல்பு இறுகிவிடுவதால் அவர்கள் எதிர்காலமும் அவ் வியல்பிற்கேற்ப அமைந்துவிடும் என்று கற்பனை உணர்ச்சியர் கூறும்போது, அக் கூற்று அறிவொளியின் எல்லையைக் கடந்துவிடுகின்றது. இக் கருத்தினின்றும் பிறந்தது ஒவ்வொரு தேசத்திற்கும் ஒரு தனித்தன்மை உண்டு என்னும் எண்ணம். ருட்யார்டு கிப்லிங் (Rudyard Kipling) இங்கிலாந்து

தேசத்தின் தனிப் பெருமைகளைப் பாடுவதில் பெருவிருப்பும் மிகு திறமையும் கொண்டவர். ஜெர்மானியர்கள் ஆரியகுலத்தைச் சேர்ந்தவர்கள் என்றும் அவர்கள் ஆளப் பிறந்தவர்கள் என்றும் ரோஸன்பர்க், ஹிட்லர் போன்றோர் கருதினர். அவ்வாறே இந்தியர்களும் இந்தியா ஒரு 'புண்ணியபூமி' என்று வற்புறுத்துவர். எபிரேயர்கள் இஸ்ரேல் நாடுதான் கடவுளால் தனிப்பட ஆதரிக்கப்படும் நாடு என்று நம்புவர். இவை யெல்லாம் கற்பனை உணர்ச்சியாற் பிறப்பவை. ஆதலால், இவை பகுத்தறிவிற்குப் புறம்பானவை. இத்தகையோர் கற்பனையால் இயற்கை விரோதமானதும் அனுபவத்திற்குப் புறம்பானவையுமான பல கருத்துகள் உதித்துள்ளன. இத்தகைய கருத்துகள் ஊடுருவி இயற்றப்படும் வரலாறு கற்பனை—உணர்ச்சி வரலாறு எனப்படும்.

ரூஸோவால் உடனடியாக உந்தப்பட்ட வரலாற்றாளர்களைத் தவிர மதாம் டிஸ்டேல் (Madame Destael) என்னும் ஃபிரெஞ்சு எழுத்தாளரைக் கூறவேண்டும். இவர் ஃபிரெஞ்சுப் புரட்சிக்கு (1789) முன் அந் நாட்டில் நிதி அமைச்சராக இருந்த நெக்கர் என்பாருடைய மகள். டிஸ்டேல் வரைவுகளால் மிகுதியும் பாதிக்கப்பட்ட ஆங்கிலேய அறிஞர்களில் முக்கியமானவர் தாமஸ் கார்லைல் என்பார். கார்லைல் ஆங்கிலேய வரலாற்றாளர்களில் முக்கியமான கற்பனை—உணர்ச்சியர். ஸர் வால்ட்டர் ஸ்காட் முதலிய வரலாற்று—நவீன ஆசிரியர்கள் கற்பனை உணர்ச்சித் திறனின் உயர்நிலையை எய்தியவர்கள். விக்டர் ஹியூகோ அலெக்ஸாந்திரே தியூமா, டால்ஸ்டாய் என்போரும் இவ் வகையினரே. ஸ்காட் எழுதிய நவீனங்களால் 18ஆம் நூற்றாண்டு அறிவொளி இயக்கத்தாரின் இடைக்காலத்தைப்பற்றிய சாய் கோள்கள் அகற்றப்பட்டன. ஃபிரான்ஸில் விளங்கிய ஷடோ பிரியான் (Chateau-briand) என்பவரை ஸ்காட்டோடு ஒப்பிடலாம். அவர் இயற்றிய 'ஃபிரான்ஸின் வரலாறு' என்னும் நூலில் தமது நாட்டுப்பற்று முழுவதையும் காட்டியுள்ளார். இவ்வாறு நாட்டுப்பற்று மீதூர வரலாறு இயற்றியவர்களில் அமெரிக்க வரலாற்றை எழுதிய பாங்கிராப்ட், 'டச்சுக் குடியரசின் எழுச்சி' என்னும் நூலினை இயற்றிய மாட்லி என்பாரைக் குறிப்பிட வேண்டும். 19ஆம் நூற்றாண்டில் தலைதூக்கிய தேசியம் பெரும்பாலும் கற்பனை உணர்ச்சியர் வரைவுகளால் தோன்றியது. அவ் வுணர்ச்சி இன்றும் உலகில் ஒரு முக்கியமான சக்தியாக நிலவுகின்றது. அதனைக் கலப்படமற்ற நன்மை என்று கூறிவிட முடியாது. இரண்டு உலகப்போர்களுக்கும் ஒருவிதத்தில் கற்பனையுணர்ச்சியரின் நூல்கள் ஊக்கம் அளித்தன. 'மக்களிடையே ஒற்றுமையுண்டு, யாவர்க்கும் சுதந்திரம் உரிமை' என்று வற்புறுத்திய ரூஸோவிலிருந்து, இனவேற்று

மையை வற்புறுத்தி நூலியற்றிய கோபினோ (Count Joseph Ashm of Gobineau) வரை அவ்வகை ஆசிரியர்கள் யாவரும் கற்பனை உணர்ச்சியரேயாவர். கற்பனை உணர்ச்சி முறை அளவு கடந்த நாட்டுப்பற்றை யூக்கிப் பல போர்களுக்குக் காரணமா யிருந்த போதிலும், அவ் வகை நூல்களை இயற்றுதற்கு வேண்டிய சான்றுகளைத் தேடித் தொகுத்தமை வரலாறு வரைவியலுக்கு மறைமுகமாகவேனும் செய்யப்பட்ட ஒரு தொண்டாகும். மெக்காலே, மிஷலே (Michelet), ஃபிரூடு (Froude), பாங்கிராப்டு, சர்ச்சில் என்போர் மாபெரும் வரலாற்று நூல்கள் இயற்றிய பெரியோராயினும் அவர்கள் ஆய்வு முறைகளும் மாற்றவும் திருத் தவும்பட்டு மதிப்பீட்டு முறை வரலாறு வரைவியல் பிறந்தது. கற்பனை—உணர்ச்சி வரலாற்றுளர்கள் நாட்டுப்பற்று ஒன்றினை மட்டும் பற்றியவர்களல்லர். கட்சிப்பற்று, தலப்பற்று, குடிப் பற்று, மொழிப்பற்று என்னும் பலவகைப் பற்றுகளாலும் உந்தப் பட்டு அம் மரபினர் வரலாறியற்றினர். விக் (Whig) கட்சியை ஆதரித்து மெக்காலே தமது 'ஆங்கிலேய வரலாற்'றினை இயற்றினார் என்பதை யாவருமறிவர். அங்ஙனமே அரசியல் முதலிய கீழ்த் தர உந்தல்களால் வரலாறு வரையும் மரபு இன்னும் சில நாடு களில் நடைபெற்றுவருகின்றதாயினும், பெரும்பான்மை மேலை நாடுகளில் மதிப்பீட்டு முறை வரலாறு வரைவியல் வழக்கில் வந்துவிட்டது.

## (2) அண்மைக்காலமும் தற்காலமும்

19ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் கற்பனை உணர்ச்சிக் கால மரபுகள் சிறிது சிறிதாக மறையலாயின; ஆயினும் அதன் வேறு சில தோற்றங்களும் எல்லா விளைவுகளும் இன்றுவரை உலக இலக்கியத்தையும் அறிஞர் கருத்துகளையும் ஏதாவது ஒரு விதத்தில் பாதித்து வருகின்றன. அக் காலத்தில் அத்தகைய வரலாறு வரை யும் மரபிற்கு எத்தகைய தேவை யிருந்திருப்பினும், வரலாறு என்பது புறநோக்கோடு விஞ்ஞான முறையில் ஆய்ந்து உண்மையை அறிந்து கூறுவதுதான் என்று கருதும் இக் காலத்திற்குச் சிறிதும் பொருந்தாது என்பது வெளிப்படை. ஜெர்மானிய வரலாற் றறிஞரான ராங்கே என்பார் வரலாற்றின் இயல்பு இப்படித்தான் இருக்கவேண்டும் என்று வரையறுத்துவிட்டபிறகு, 'நன்கு அழகாக எடுத்துக் கூறப்படும் உண்மையே வரலாறு' என்பது ஏற்றுக் கொள்ளப்பட்ட பிறகு, கற்பனை உணர்ச்சிமுறை வரலாறுகளுக்கு இடமில்லை. ஆயினும், இந் நிலை மிக எளிதில் எய்திவிடவில்லை; பல சோதனைகளுக்கு ஆளாகிய பின்பே இம் முறை ஒரு முழுமை பெற்றது.

அண்மைக்கால, தற்கால வரலாறு வரைவியல் மரபின் ஒரு முக்கியமான அமிசம் யாதெனில், வரலாற்றின் தத்துவத்தை ஆராய்தல் என்பது; மற்றொன்று வரலாற்றில் முன்வரைவு யாதேனும் உளதா என்று ஆய்தல். குரோச்சே, காலிங்வுட் முதலிய வரலாற்றுத் தத்துவர்கள் வரலாறு வரைவியற்குப் புதிய பரிமாணம் அளித்துள்ளனர். விஞ்ஞானிகள் பரப்பு, அகலம்—நீளம் என இருபரிமாணம் உடைத்து என்றும், கன அளவையுள்ள பொருள்கட்கு அகலம், நீளம், உயரம் என மூன்று பரிமாணங்கள் உள என்றும், இவை வரலாற்று வாயிலாகக் காணும்போது காலம் என்னும் நான்காம் பரிமாணம் உடன்கூடுகின்றது என்றும் கூறுவர். இவை நான்கும் கூடியதே வரலாற்றுத் தனியன்-நிகழ்ச்சி, ஆள் அல்லது நிலையம். ஆயினும் மதிப்பீடு என்பதொன்றின்றேல் அத் தனியன்களுக்குப் பொருண்மை பிறவாது. பொருண்மை பெறுதற்காகச் செய்யப்படும் மதிப்பீடு ஐந்தாம் பரிமாணம் ஆகின்றது. இக் கருத்தைப் புதிதாகப் புகுத்தியது அண்மைக்கால மதிப்பீட்டுமுறை.

ஊக்கத்தோடு எழுதப்படும் தேசிய வரலாறுகளின் கவர்ச்சி தேய்ந்துபோய், தல வரலாறுகளும் பிரபஞ்ச வரலாறுகளும் சமுதாய வரலாறுகளும், மதிப்பீட்டு நூல்களும், வரலாறு வரைவியல் நூல்களும் இயற்றப்படலாயின. வரலாற்றுக்கும் பிற அறிவியல் துறைகட்கும் இடையேயுள்ள பிரிவினைகள் தகர்க்கப் பட்டுத் தருக்கம், தத்துவம், பொருளாதாரம், சமூகவியல் முதலிய துறைகளோடு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டு, கணிதம் புள்ளியியல் முறைகளை மேற்கொண்டு நூலியற்றும் மரபுகளும் மலிந்தன. மதிப்பீடு மிகுந்து தேசியக் கவர்ச்சி மட்டுப்பட்டதன் விளைவாக, கிப்பன், மெக்காலே, கார்லைல், மிஷலெ, ஃபிரூடுபோன்ற ஆசிரியர்களுடைய வரலாற்றுமுறை மாறிப்போய் ராங்கேயின் விஞ்ஞானமுறை வரலாற்றுத் தத்துவம் மிகுந்து புதுமுறை வரலாறு வரைவியல் உருவாகியுள்ளது. இதனால் நல்லபலன்களும் உள; சில வருந்தத்தக்க நஷ்டங்களும் உண்டு. அளவிற்கு மிஞ்சிய சான்றுகள் வளர்ந்துவிட்டமையால் அவற்றைக்கொண்டு முற்கால நூல்கள்போல் இப்போது இயற்றுதல் இயலாது. மதிப்பீட்டின் அருமையை உணர்ந்து புறநோக்கின் இன்றியமையாமையை ஏற்றுக்கொண்டு நூலியற்றுங்கால் கற்போர் இன்புறும் வகையில் நன்னடையில் இயற்றப்படும் நூல்கள் எழுதப்படுதலே உயர்தர வரலாற்றுளர்களுடைய இன்றைய நோக்கம். ஆதலால் பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் தோன்றி இதுகாறும் நடைபெற்றுவரும் வரலாறு வரைவியல் காலத்தை மதிப்பீட்டுக் காலம் அல்லது திறனாய்வுக்காலம் என்று கூறலாம்.

வரலாற்றிற்கு ஒரு தத்துவம் காணவேண்டும் என்பதே தற்கால வரலாறு வரைவியலின் முக்கிய நோக்கமா யிருந்து வருகிறது. வரலாற்றுத் தத்துவம் நான்குவகைப்படும். (1) வரலாற்றிற்கு ஒரு பொருண்மை உண்டு என்று காணுதல்; ஏனெனில் வரலாற்று நிகழ்ச்சிகள் யாவையும் முன்னதாகவே ஏதோ ஒரு சக்தியால் நிருணயிக்கப்பட்டுவிட்டது என்று நம்புவதால்; (2) இதுகாறும் வரலாற்று நிகழ்ச்சிகள் ஏதோ சில விதிகளுக்கு உட்பட்டு நிகழ்ந்து வந்துள்ளவை போல நடைபெற்றுள்ளன; எதிர்காலத்திலும் அவை அதேமுறையில் நடைபெறும் தன்மையுடைய தென்று நம்பும் பான்மை; (3) வரலாற்று நிகழ் முறையில் சில காரணகாரியத் தொடர்புகள் உள, அவற்றை நாம் உள்ளபடி புரிந்துகொண்டால் வரலாற்று நிகழ்ச்சிகளின் தன்மையை யறிவதோடு, அவற்றின் பொருண்மையையும் புரிந்துகொள்ளலாம்; (4) வரலாற்றுத் தனியன்களை ஒரு பொதுமையின் பகுதிகளாகத் தான் புரிந்துகொள்ளலாமே யல்லாமல் அவற்றைத் தனிப்படுத்திப் பொருள் காண முடியாது. வரலாற்றிற்கே யொரு தன்மையுண்டு; அது அறிவின் இன்னொரு பெயர். இவ்வாறு கருதியவர் ஹேகல். வரலாற்றைத் தத்துவமாகவோ, ஒழுக்க நெறியியலாகவோ மட்டும் கருதிவிட முடியாது. வரலாற்றுக்குப் பழைமையை ஆய்ந்து கண்டுபிடித்தல், வரலாற்று நிகழ்ச்சிகளுக்குப் பொருள் விளக்கம் கூறுதல், வரலாற்று இறுதி இயல்பைப்பற்றிய ஆய்வுகள் நடத்தல் என்பவையெல்லாம் வரலாற்றுத்தத்துவத்தில் அடங்கும். 19ஆம் நூற்றுண்டிறுதியில் இக் கோட்பாடுகள் யாவும் திரண்டு மதிப்பீடு, திறனாய்வு என்னும் துறைகளில் பெரிய முன்னேற்றங் கண்டது; அன்றியும் திறனாய்விற்கும் சில விதிகள், முறைகள் காணப்பெற்று ஆய்வு முறைகளே ஒரு கலையாகவும் ஆயின. வரலாற்றிற்கும் விஞ்ஞானத்திற்கும் உள்ள உறவு, வேறுபாடு, வரலாற்று அறிவினை ஒருமுகப்படுத்துதல் முதலிய பிரச்சினைகள் முக்கியமாயின. 'வரலாற்றுளனது ஆய்வுப் பொருள் மட்டும் விஞ்ஞானியின் ஆய்வுப் பொருளினின்றும் வேறுனது என்பதன்று; அவர்களுடைய ஆய்வு முறைகளும் தற்கோள்களும்கூட வேறுனவை என்பதும் தற்காலக் கருத்துகளில் ஒன்று. இவை வேறுபட்டவையல்ல என்னும் கருத்து காம்ட் (Comte) முதலிய உடன்பாட்டுக் கோட்பாட்டாளர்களால் நிறுவப் பெற்றது. ஆனால் கே. ஆர். பாப்பர் (Popper) முதலியோர் காரண காரியத் தொடர்பு வரலாற்றிற்குப் பொருத்தமானதா அன்று என்பதைப்பற்றியும் விஞ்ஞானமுறை ஆய்வு வரலாற்று ஆய்வுக்கு ஏற்றதா என்பதைப்பற்றியும் ஆய்ந்து காம்ட் கண்ட முடிவிற்கு நேர்மாறுன முடிவிற்கு வந்துள்ளனர். காரல்மார்க்ஸ்,

ஸ்பெங்ளர், டாயின்பீ போன்றோருடைய நிருணயக்கோட்பாடு களையும் உண்மைக்கும் வரலாற்று நிகழ்முறைக்கும் புறம்பானவை என்று பாப்பர் தமது 'வரலாற்றியத்தின் உள்ளீடின்மை' என்னும் நூலில் நிரூபித்துள்ளார்.

தற்கால வரலாற்றுளர்கள் கீழ்க்கண்டவைபோன்ற பிரச்சினை களில் ஈடுபடுகின்றனர்: (1) வரலாற்றில் புறநோக்கு இயலுவதா? (2) வரலாறு ஒரு விஞ்ஞானமா? (3) வரலாற்றுளர்கள் பழைமையை அனுபவிக்க முடியுமா? (4) எதிர்காலத்தைப் பற்றி வரலாற்றுளர்கள் ஏதேனும் நிருணயமாகக் கூற முடியுமா? இக் கேள்விகளுக்குச் சரிவர விடை கூற முடியாமல் விவாதம் இன்றும் தொடர்ந்து நடந்துகொண்டிருக்கிறது. எல்லாவற்றையும்விடக் கடினமான பிரச்சினை யாதெனில், வரலாற்றுளர் 'உண்மை'யைக் கண்டுபிடிக்க முடியுமா? என்பது. அதற்கும் முந்திய கேள்வி, 'உண்மை' என்பது யாது? என்பது. இவை சுத்தமான தத்துவ விசாரக் கேள்விகள் அல்ல; வரலாற்றுளர்க்குப் பெரிதும் வேண்டிய கேள்விதாம். வரலாற்றுளர் உண்மையின் முழுமையையும் ஆராய்கின்றாரா, அதன் ஒரு பகுதியை மட்டும் ஆய்கின்றாரா? என்பது இக் கேள்வியின் ஒரு முக்கியமான பகுதி. இதில் வரலாற் றுளரைப் பற்றி ஒரு ஐயமும் நிகழ்தற்கு இடனுண்டு; அதாவது 'உண்மை' என்னும் பெயரில் வரலாற்றுளர் தம்முடைய சொந்தக் கருத்துகளைப் பிரசாரம் செய்கிறாரா? அன்றிப் புறநோக்கோடு பேசுகிறாரா என்னும் ஐயம் இருத்தலும் இயல்பே. இத்தகைய கடினமான பிரச்சினைகளைப் புறக்கணித்தற்கு எளிய வழியாக வரலாற்றுச் சார்பியத்தைக் கூறிவிடுவர். வரலாறு ஓரளவு உண்மையைத்தான், அல்லது ஒருவகை உண்மையைத்தான் கூற முற்படுகின்றது; ஏனெனில், அறிவு என்பது ஒரு பெரும் பிண்டம்; அதன் பகுதியாகப் பல அறிவியல்கள் விளங்குகின்றன; அவ்வகை அறிவியல்களில் வரலாறும் ஒன்று; ஆதலால் அதனிடம் முழு உண்மையை எதிர்பார்ப்பதே தவறாகும் என்பது, இந் நிலைமையை வேறொருவிதமாகச் சமாளிப்பதாகும்.

வரலாற்றிற்கு விளக்கம் கூறுதல் என்பது தற்கால வர லாற்றாய்வாளர்கள் கவனத்தைப் பெரிதும் ஈர்க்கின்றது. வர லாற்று விளக்கத்தின் தன்மை யாது? அதன் முறை, அமைப்பு என் பவை யாவை? அதனை எத்தகைய தருக்கமுறை நிருணயிக்கின்றது? அது விளக்கத்தோடு நிற்கவேண்டுமா, அன்றிப் பொருள் விளக்கம் தரவும், காரண—காரியத் தொடர்புகளை ஏற்படுத்தவும் முற்பட வேண்டுமா? என்னும் கேள்விகள் இந் நிலையில் அன்னார்க்கு வேண்டுபவை. இந் நிலையில்தான் வரலாற்றாய்வின் முறையியற்கும்

பிற அறிவியல் துறைகளின் ஆய்வு முறைகளுக்கும் ஒப்புமை, வேற்றுமை காண வேண்டிய தேவை யேற்படுகிறது. விளக்கத் திற்கும் முற் கூற்றிற்கும் இடையே உள்ள வேறுபாடும் காண வேண்டும்: இதனைக் காண்டற்கு அவ் விரு சொற்களின் பொருள் விளக்கம் தேவை. விளக்கம் என்பது அறியாததை அறியப்படுத்துத லன்று; இல்லாததை உற்பத்தி செய்தலன்று; மறைவானதை வெளிக்கொணர்தலுமன்று; ஆனால் புரியாததைப் புரியவைத்தல் தான். நிகழ்ந்துவிட்டதற்கு விளக்கம் தரலாம்; நிகழாததற்கு விளக்கம் தரமுடியாது, ஆதலால் விளக்கம் என்பதும் முற்கூற்று என்பதும் எதிரிடைச் சொற்கள். எதிர்காலத்தின் போக்கை எவ் வகையிலும் முற்கூறமுடியாது என்பதற்கு இரு காரணங்கள் உள: (1) முன்பு கூடி வந்த காரணக் கூட்டம் மறுபடியும் நிகழாது; அவ்வாறு நிகழுவதாயினும் நிகழுமோ என்பதைக் கூறமுடியாது; (2) எதிர்காலத்தில் புதுத் தனியன்கள் புகுந்து நிகழ்ச்சிமுறையை மாற்றிவிடுமா விடாதா என்பதை முன்கூட்டியே சொல்லவும் முடியாது. இவ் விரு காரணங்களால் வரலாறு பழைமையை ஆய்த லோடு நிற்றல்வேண்டும் என்பதாகின்றது. அன்றியும் விளக்கத் திற்கும், பொருள் விளக்கத்திற்கும் வேறுபாடு உண்டு. விளக்கம் புறநோக்கோடு செய்ய முடியும்; அது நிலைமையை விவரித்தலோடு நிற்கக் கூடும். ஆனால் பொருள் விளக்கம் (interpretation) வர லாற்றுளனது அக நிலை நோக்கினின்றும் பிரிக்கமுடியாது.

நவீன காலத்தில் வரலாற்று ஆய்வினைப்பற்றிப் பல அரிய ஆய்வுகள் நடைபெற்றுள்ளன வாயினும், வரலாற்று முறையிய லுக்கும், விஞ்ஞான முறையியலுக்குமுள்ள வேறுபாட்டினைச் செவ்வனே தெளித்து, வரலாற்று முறையியலை வரையறுத்தவர் ஒருவருமிலர்.

நவீன கால வரலாறு வரைவியல் முழுமை வரலாற்றிலும் (Total History) பரு வரலாற்றிலும் (Macro History) சிறு வர லாற்றிலும் (Micro History), புற வரலாற்றிலும் (Meta History) ஈடுபடுவதோடு 'வரலாற்றை நிருணயிப்பவன் தலைவன்' என்பது போன்ற பழைய கோட்பாடுகளைத் திரும்பவும் ஆராயும் பான்மை யொன்றுண்டு. அப் பழைய கோட்பாடுகளுக்குப் புது விளக்கங் கள் தரப்படுவதோடு தவறு, பொருந்தாது என்று ஒதுக்கிவிடப் பட்ட கொள்கைகள் புத்துயிர்பெற்றுத் தகவுடையன என்று நிறுவவும் படுகின்றன. 'தலைவன்' பெருமையைக் குறைத்துச் சூழ்நிலை, வரலாற்றுச் சக்திகள் என்பவற்றை உயர்த்திக்கூறும் 'கூட்டாண்மைக்கோட்பாட்'டின் வேகம் குறைக்கப்பட்டுத் 'தனிப் பெருந்தலைவன்' வரலாற்றை யியக்கும் சக்திகளில் ஒன்று என்று

வெட்ஜ்வுட், ரபேல் ஆல்டமிரா போன்ற ஆசிரியர்கள் நூல்கள் இயற்றியுள்ளனர். வெட்ஜ்வுடின் 'ரிசெலியும் ஃபிரெஞ்சு அரசும்' என்னும் நூலையும், ஆல்டமிரா இயற்றிய இரண்டாம் ஃபிலிப் என்பதையும், ஜி. பி. கூச் (Gouch) இயற்றிய மகா ஃபிரெடரிக், மரையா தெரியா, மகா காதரின் முதலியவற்றையும் காண்க. இம் முடிபினை ஏற்றுக்கொள்ளாத காரல் லாம்ப்ரெக்ட் (Karl Lamprecht) என்பார் 'தனிப் பெரியோனைக் கூட்டங்கள் ஆட்டி வைக்கின்றன' என்றார். வரலாற்றுச் சக்திகளை எதிர்த்துத் தனியார் யாதொன்றும் செய்ய இயலாது என்னும் கருத்தை ஹென்றி ஸீ (Henri See) என்பாரும் கூறினர். வரலாற்று நிகழ்ச்சிகளை அரசியலை மையமாக வைத்துக் கணக்கிடாமல் சமுதாயப் பொருளாதாரக் கூறுகளை வைத்துப் பேசவேண்டும் என்பது ஒரு பெருவழக்காகியுள்ளது; ஆயினும் சமுதாய சக்திகளை இயக்குவார் அரசியலார் ஆதலின் இக் கருத்து முற்றிலும் தகவுடைத்து எனற்கில்லை. ஆல்டமிரா முதலியோர் வரலாற்றில் எப் பகுதியையும் புறக்கணிக்காமல் நேரிய வரலாறுகளை இயற்றி வழிகாட்டியுள்ளனர். கருத்து வரலாறு, இராணுவ வரலாறு, சமய வரலாறு தல வரலாறு என வரலாறு பலவகையாகப் பிரித்து ஆராயப்படுகின்றது. நவீன காலத்தில் வரலாற்றின் நோக்கங்கள் மிகப் பரந்துள்ளனவாதலின் பல்லியல் ஆய்வுகளில் (Multi disciplinary discussions) வரலாற்றிற்கு முதன்மையான இடம் உண்டு.

# 17. ஐரோப்பா

## (அ) இங்கிலாந்து நீங்கலாகப் பிறநாடுகள்

ஐரோப்பிய வரலாறுவரைவியல் கிரீஸ் நாட்டில் கி. மு. ஆரும் நூற்ருண்டில் தொடங்கிற்று. ஹெகாடியஸ் (Hecataeus) (கி. மு. 550 பி.) என்பாரே வரலாறு என்று சொல்லக்கூடிய ஒரு நூலை முதன்முதலில் இயற்றினர் எனலாம். அவர் கிரேக்கக் கட்டுக்கதைகளை நம்பாதவர்; பழைமையில் 'உண்மை' என்று தாம் கண்டவற்றை மட்டும் ஏற்றுக்கொள்பவர். ஆயினும், அவரை மதிப்பிடும்போது அவர் வாழ்ந்த காலத்தை நினைப்பில் வைத்துக் கொள்ளுதல் நன்று. அவரும் நிரூபிக்கப்படாத செய்திகளை நம்பி வரலாறு எழுதியவரே. அவர் மிகவும் பெரிய கல்விமான்: ஆயினும், அவர் காலத்து வாழ்ந்திருந்த ஹெராக்ஸிடஸ் என்பவர் அவரைப் பற்றிக் குறிப்பிடும்போது, 'மிகுந்த கல்வியிருப்பினும் பொது அறிவு அமைவதில்லை என்பதற்கு ஹெகாடியஸ் ஓர் உதாரணம்' என்று கூறினர்.

ஹாலிகர்னஸிஸ் என்னுமிடத்தில் பிறந்த ஹெரடோடஸ் (ஏ. கி.மு. 484–425) ஆதென்ஸையும் கிரீஸையும் காத்த மாரதான் போர் நிகழ்தற்கு ஆருண்டுகள் முன்பு பிறந்தவர். அவருக்கு நான்கு வயது நிரம்பியபோது பாரசீகப் பேரரசரான ஸர்ஸீஸ் கிரீஸைப் படையெடுத்துத் தாக்கினர். அவர் வாழ்க்கை பாரசீக-கிரேக்கப் போர்கள் என்னும் சூழ்நிலையில் தொடங்கிற்று; அவர் எழுதிய மிகப் பெரிய வரலாற்று நூல் 'பாரசீகப் போர்கள்' என்பது. அவர் நெடுகப் பயணம் செய்தவர். ஆதென்ஸ் நகரைத் தமது வாழிடமாகக் கொண்டவர். அவர் நூலில் உலகில் படித்த எந்த மனிதனும் அறிந்துவைத்துக்கொள்ளவேண்டிய அரிய செய்திகளையெல்லாம் அணிபெறத் தொகுத்துக் கூறியுள்ளார். அவர் நூலை 9 பாகங்களாகப் பிரித்து வைத்தவர்கள் பிற்காலப் பதிப்பாசிரியர்கள். அவர் நூல் படிப்போர்க்குப் இன்பம் பயப்பது. 'பாரசீகப் போர்கள்' என்னும் தமது நூலை மூன்று பகுதிகளாக அவர் பிரித்தார். முதற்பகுதியில் பாரசீகத்தின் எழுச்சியும், இரண்டாம் பகுதியில் டரையஸ் கிரீஸைப் படையெடுத்தமையும், மூன்றும் பகுதியில் ஸர்ஸீஸ்

படையெடுத்தமையும் கூறப்படுகின்றன. அவர் வெற்றுச் செய்திகளை நம்புபவரல்லராயினும் பிறர் சொல்லக் கேட்டவற்றைத் தயங்காமல் எழுதிவைத்தவர். அவ்வாறு அவர் செய்ததை அவரே ஒப்புக்கொள்கிறார். 'நான் கேள்விப்பட்டதை எழுத வேண்டும் என்பது என் கடமை என்று நான் கருதுகிறேன்; ஆனால் அதையெல்லாம் நம்ப வேண்டுவது என் கடமையன்று' என்கிறார் அவர். அவரை 'வரலாற்றின் தந்தை' என்றழைப்பர். அப் பெயர் அவருக்குச் சிஸரோவால் அளிக்கப்பெற்றது. அவரை 'பாரசீகப் போர்களின் ஹோமர்' என்று ஒரு வரலாற்றாசிரியர் வருணித்துள்ளார். மனித குலத்தின் பண்டைய செயற்பாடுகளைக் கோவைப் படுத்தி அழகாகத் தற்காலத்தார்க்கும் எதிர்காலத்தார்க்கும் பயன்படும் வகையில் கூறவேண்டியது வரலாற்றாளன் கடமை என்னும் கோட்பாட்டினை நன்கு கடைப்பிடித்த முதல்வர் அவர். அவரது சாதனைகளையும் தூஸிடிடிஸ் என்னும் இன்னுமொரு கிரேக்க வரலாற்றாளரின் சாதனைகளையும் ஒப்பிட்டுக் காண்பது பயன்தருவதாம். இருவரும் புகழ்பெற்ற வரலாற்றாளர்களாயினும் ஹெரடோடஸ் காப்பியச் சிறப்போடும், சமுதாய விவரங்களை விளக்குகின்ற முறையிலும் தமது நூலை இயற்றினார். தூஸிடிடிஸ் (கி.மு. 456–396) என்பார் விஞ்ஞான முறை வரலாறு எழுதியவராகப் புகழப் பெறுவார். அவர் ஹெரடோடஸ் காலத்திற்குப் பிந்தியவர். ஆதென்ஸ்–ஸ்பார்ட்டா இரு நகரங்களுக்குமிடையே நிகழ்ந்த பெலாபொனீசியப் போரின் (கி. மு. 431–404) வரலாற்றை வரைந்தவர். மாரதான் போரை வென்ற மில்டயாடிஸ் என்பார்க்கு உறவினர்; பெலபொனீசியப் போரில் கலந்து கொண்டவர். ஆதலால் அரசியலும் போரியலும் நன்கு அறிந்திருந்த தூஸிடிடிஸ் அப் போரைப்பற்றி எழுத முற்பட்டதில் வியப்பில்லை. அவரும் ஹெரடோடஸும் இருவேறு வகை வரலாறுகளை வரைந்துள்ளனர். இருவரும் ஏறத்தாழ உடனிகழ் காலப் போர்களைப்பற்றி வரலாறு வரைந்துள்ளனரேனும் ஹெரடோடஸ் பல வேறு செய்திகளையும் சேர்த்துச் சுவைபட எழுதினார்; தூஸிடிடிஸ் நிகழ்ச்சிகளுக்குக் காரணங்களை ஆய்ந்து கூறி அப் போரில் பங்கு கொண்டவர்களது மன இயல்புகளை ஆய்ந்து, அரிய சொற்பொழிவுகளைத் தமது நூலில் சேர்த்து 'உண்மை' தவறாத முறையில் எழுதினார். அவரை விஞ்ஞான முறை வரலாற்று வரைவியற்கு வழிகோலியவர் என்பது மரபு. காலிங்வுட் என்னும் அறிஞர் அவரை 'மனோதத்துவ அல்லது உளவியல் வரலாற்றாளர்' என்று வருணித்தார்; ஏனெனில், வரலாற்றில் முக்கிய நிகழ்ச்சிகளை நடத்தியவர்களின் உளப்பாங்குகளை அறிந்து அவர் நூலியற்றியமையால். ஹெரடோடஸும் தூஸிடிடிஸும் இருபெரும் வர

லாறு வரைவியல் மரபுகளின் ஆதிகாலப் பிரதிநிதிகள் எனின் மிகையாகாது.

தூஸிடிடீஸின் நூலில் எட்டுப் பகுதிகள் உள்ளன. அது பெலபொனீசியப் போரின் ஆதிகாரணங்களேயும் உடனடிக் காரணங்களேயும் கூறி ஆசிரியரது வரலாற்றைப்பற்றிய தத்துவக் கருத்துகளேயும் கூறுகின்றது. கடைசிப்பகுதி கி. மு. 411ஆம் ஆண்டுச் செய்திகளோடு நின்றுவிடுகிறது. அவர் நூலில் குறை காண்பவர்கள், அவர் பிறர் கூற்றுகள், சொற்பொழிவுகள் போலத் தாமே எழுதிச் சேர்த்துவிட்டமையை முக்கியமாக எடுத்துக் காட்டுவர். அம் மரபு இக் காலத்தில் ஏற்றுக்கொள்ளப்படாதாயி னும், அப் பேச்சுகளிலும் சொற்பொழிவுகளிலும் உண்மைக்குப் புறம்பானவை கலவாதவரையில் அப் பழக்கம் பெருங் குற்றமன்று என்று பிறர் கூறுவர். கால வரன்முறைப்படுத்தித் தமது நூலே இயற்றிய வகையில் தூஸிடிடீஸ் ஹெரடோடஸுக்குச் சிறந்தவர். ஆயினும், எல்லா அமிசங்களேயும் உடன்சேர வைத்துப் பார்க்கும் போது ஹெரடோடஸின் வரலாறே மிகச் சிறந்த முயற்சியாகக் காணப்படும். பியூரி, ஹியூம் என்னும் வரலாற்ருளர்கள் இப் பெரு மையை தூஸிடிடீஸிற்கே யளிப்பர். 'வரலாறு என்பது இன்றைய நிலையை யடைவதற்கு முக்கியமாக அடி எடுத்துக் கொடுத்தவர் தூஸிடிடீஸ்தான் என்ருர் பியூரி. 'தூஸிடிடீஸ் இயற்றிய நூலின் முதல் பக்கத்திலிருந்துதான் வரலாறு வரைதல் என்னும் நூலே தொடங்குகின்றது' என்ருர் ஹியூம். ஆனுல் தூஸிடிடீஸ் அரசியல், இராணுவ விவகாரங்களேப்பற்றி மட்டும் எழுதினுர்; ஹெரடோடஸ் சமூக விவரங்களேயும் சேர்த்து எழுதினுர் என்பது அவ் விருவருக்குமிடையே பெரியதொரு வேறுபாட்டை யுண்டாக்குகின்றது.

செனபன் (கி. மு. 430—354) என்பார் ஸாக்ரடீஸின் மாணவர்களில் ஒருவர்; அவர் பண்டைய கிரேக்க வரலாற்ருளர் களில் முக்கியமானவர்களுள் ஒருவர். அவர் தாமே கலந்து கொண்ட, ஓரளவு முதன்மைதாங்கி நடத்தியும் சென்ற, 'அனபேஸிஸ்; 'கடபேஸிஸ்' என்னும் பாரசீக இராணுவத் தரைச் செலவு நூலே இயற்றியமையும் 'ஹெல்லனிகா' என்னும் இன்னெரு நூலே இயற்றியமையும் கிரேக்க வரலாற்ருளர்களில் ஒருவராக அவரை ஆக்குகின்றன. பதினுயிரம் கூலிப் பட்டாளத்தாரைப் பாரசீகத்திற்குள் இட்டுச் சென்ற கதை ஒரு நவீனம் போலச் சுவை பயப்பதாம். அவர் இயற்றிய 'கைரொபீடியர்' என்னும் நூல் பாரசீகப் பேரரசரான கைரஸ் (Cyrus) என்பார் வாழ்க்கை வரலாற்றைக் கூறுவது. 'ஹெல்லனிகா'வில் அவர், கிரேக்க வர

லாற்றைத் தூஸிடிடிஸ் விட்ட இடத்திலிருந்து தொடங்கி கி. மு. 362 வரை வரைந்துள்ளார். அக் காலக் கிரேக்க வரலாற்றிற்கு அது ஒரு முக்கியமான சான்று நூலாம். செனபன் நூல் இலக்கியச் சுவை ததும்ப இயற்றப்பெற்றது என்பது எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பெற்றது; ஆயினும், பெரும்பான்மை மதிப்பீட்டாளர்கள் அவரை ஹெரடோடஸ், தூஸிடிடிஸ் என்பார்க்கு அடுத்தபடியாகவே வைத்து எண்ணுவர்.

செனபனுக்குப் பிறகு வந்த கிரேக்க வரலாற்றுளர்களில் பொலிபியஸ் (Polybius—கி. மு. 198—117) மிக முக்கியமானவர். அவர் மெகலாபோலிஸைச் சேர்ந்தவர். அவர் கிரேக்கரேயாயினும் ரோமானிய வரலாற்றையே எழுதினுர்; ஆயினும், அவர் கிரேக்க மொழியிலேயே எழுதினுர். செனபனுக்கும் பொலிபியஸுக்கும் இடைப்பட்ட காலத்தில் கிரேக்கவரலாறு மாஸிடோனியப் பேரரசின் வரலாருகவே திகழ்ந்தது. அது மகா அலெக்ஸாந்தரையும் அவரது உலகச் சாதனைகளையும் அளவின்றிப் புகழ்ந்த உடனிகழ் காலத்தவர்களால் இயற்றப்பட்டது. இவ்வாறு எழுதியவர்களில் காலிஸ்தனிஸ், நியார்க்கஸ் என்பவர்கள் முக்கியமானவர்கள்; இவர்கள் அலெக்ஸாந்தருடன் இருந்தவர்கள். செனபன் கைரொபீடியாவில் தொடங்கி வைத்த 'வரலாற்றுக் கற்பனை-உணர்ச்சித் தொடருரை வரலாறு வகை அலெக்ஸாந்தரைப்பற்றிப் புகழுரை வரலாறு எழுதியவர்களால் மேலும் பின்பற்றப்பட்டுப் பூரணச் சிறப்பு அடைந்தது. இவ்வகை வரலாறுகள் எழுதி ஒய்ந்த பிறகே பொலிபிஸஸ் தமது அரிய நூலை இயற்றினுர். அவர் தூஸிடிடிஸினுல் நிறுவப்பட்ட வரலாறு வரைவியல் மரபை மேற்கொண்டு எழுதினுர். 'ரோமானியப் பேரரசின் விரிவும் அரசியல் அமைப்பு வளர்ச்சியும் (கி. மு. 146 வரை)' என்னும் பொருள்பற்றியே அவர் தமது நூலை இயற்றினுர். அவர் நேர்மையான புறநோக்கோடு வரலாற்றை இயற்றிய கிரேக்கர்களில் தூஸிடிடிஸிற்கும் சிறந்தவராகக் கருதப்படவேண்டியவர். அவர் ரோமானியர்களையும் கார்த்தஜீனியர்களையும் சமமாகக் கருதி வரலாறு இயற்றியவர். அன்றியும் அவ்வாறு இயற்றுதலே முறை என்னும் கொள்கையை வெளிப்படையாகவும் தமது நூலில் எடுத்துரைத்தார். அவர் தமது நூலில் போர்களையும் வெற்றிதோல்விகளைப்பற்றி மட்டும் எழுதவில்லை; ரோமானியருடைய அரசியல் இலக்குகள், இராணுவ முறைகள் என்பவற்றைப்பற்றியும் எழுதினுர். அவர் தலைவர்களுடைய பண்புச் சிறப்பினை வருணிப்பதில் வல்லுநர். அவரும் காரண காரியத் தொடர்புகளை எடுத்துரைத்து வரலாற்றை வரைதலில் விருப்புடையவர். அவர் கையாண்ட நடை இலக்கியச் சிறப்பற்றது. இதனையே ஒரு சிறந்த அமிசமாகவும் சில

மதிப்பீட்டளார் கருதுவர். விஞ்ஞான முறை வரலாறு வரைவியல் இவ்வாறு அமைய வேண்டும் என்பதை ராங்கேக்கு முன் பொலிபியஸ்தாம் தெளிவாக எடுத்துரைத்தார் என்பது ஷாட்வெல் என்பாரின் கருத்து. கிரேக்க மொழியில் வரலாறு இயற்றிய கிரேக்கர்களில் கடைசியான முக்கியமானவர் பொலியியஸ் தாம் என்பதில் ஐயமில்லை.

ரோமானிய வரலாற்றுளர்களை ஆய்தற்கு முன்பு கெரொனீயாவைச் சேர்ந்த புளூடார்க் (ஏ. கி. பி. 50—125) என்பாரது 'ஒப்புமை வாழ்க்கை வரலாறு'களை ஆராய்தல் வேண்டும். அவர் 46 ஒப்புமை வாழ்க்கை வரலாறுகள் இயற்றினுர். அவரைவிட அருமையாக வரலாற்றுப் பெரியோரின் வாழ்க்கை வரலாறுகளை இயற்றினுர் ஒருவருமிலர். தீவியஸ், ரோமுலஸ், டெமாஸ்தனிஸ், சிஸெரோ,—அலெக்ஸாந்தர், சீஸர் என்பார் போன்ருேருடைய வாழ்க்கை வரலாறுகளை அவர் இயற்றினுர்.

அறையன் (நிகொமீடியர்—ஏ. கி. பி. 95—175) என்பார் 'பிதீனியா', 'கீழைநாடுகளில் டிராஜானின் இராணுவ நடவடிக்கைகள்', 'மகா அலெக்ஸாந்தர் வரலாறு' என்னும் நூல்களை இயற்றியதோடு 'இண்டிகா' என்னும் தொகுப்பு நூலையும் பதிப்பித்தார். சந்திரகுப்தமௌரியர் அவைக்களத்துத் தூதராக வந்திருந்த மெகாஸ்தனிஸ் இயற்றிய 'இந்தியாவைப் பற்றிய குறிப்புக'ளையும் இவ் 'இண்டிகா'வில் அறையன் சேர்த்தார். அலெக்ஸாந்திரியரான அல்பியன் (கி. பி. 116—170) என்பார் ரோமானியப் பேரரசர்கள் ஆட்சியில் ஓர் அதிகாரியாக அலுவல் பார்த்தவர். அவர் ரோமாபுரியுடன் தொடக்கத்திலிருந்து டிராஜான் இறந்தவரை ரோமானியப் பேரரசின் வரலாற்றை இயற்றினுர். டியோகாசியஸ் (ஏ. கி. பி. 155—235) என்பார் ரோமானிய செனேட்டில் ஓர் உறுப்பினர், ஒரு தளபதி, ஒரு மாநில ஆளுநர். அவர் 80 பகுதிகளில் ரோமானிய வரலாறு ஒன்றை இயற்றினுர்; அந் நூல் ரோம் நகரம் நிறுவப்பட்ட காலத்திலிருந்து அவர் காலம்வரையில் உள்ள வரலாற்றைக் கூறுகின்றது. அவ் வரிய நூலில் 36-லிருந்து 50 பகுதிகள் வரை மட்டும் எஞ்சியுள்ளன. இதற்கிடையே டாலமி என்பாரும், 'பெரிப்ருஸ்' என்னும் நூலின் ஆசிரியரும் இந்திய மாக்கடல் வாணிபம், புவியியல் என்னும் பொருள்கள்பற்றி நூலியற்றினர்.

கிரேக்க வரலாற்றுளர்களில் கடைசி முக்கியமானவர்—அதுவும் இலத்தீன் மொழியில் எழுதியவர்—அம்மியானஸ் மார்யெலினஸ் (ஏ, கி. பி. 330—401) என்பவரே. அவர் நூலைக் கற்போரில் பெரும்

பாலோர் இத்தாலியர்களாயிருந்தமையின் அவர் இலத்தீனில் தமது நூலை இயற்றினார். அவரது பெருவரலாற்று நூல் ரோமானியப் பேரரசைப் பற்றியது. அவரும் ஹெரடோடஸைப் போல நெடுகப் பயணஞ் செய்தவர். அவர் தமது நூலை 31 பகுதிகளில் இயற்றியிருந்தாராயினும் அவற்றில் முதல் 13 பகுதிகள் கிடைக்கப் பெறவில்லை. அவர் கீழை ரோமானியப் பேரரசின் வரலாற்றை கி. பி. 378 முடிய வரைந்தார். அவரது நூலிலிருந்து ஏராளமான அரிய வரலாற்றுச் செய்திகளைப் பிற்கால ஆசிரியர்கள் பயன்படுத்தினர். கிப்பன்கூட அவரது நூலை வெகுவாகப் பயன்படுத்தியுள்ளார்.

இனி இலத்தீன் மொழியில் வரலாரியற்றிய ரோமானிய வரலாற்றுளர்களிற் சிறந்தவர் ஜூலியஸ் சீஸர் (கி.மு. 100—44). ரோமானியர் யாவருள்ளும் சிறந்தவர்; அரிய சொற்பொழிவாளர்; நிகரற்ற எழுத்தாளர்; அரசியலர், தன்னிகரற்ற போர் வீரர். அவரது திறமை அவர் இயற்றிய நூலிலும் தெளிவாம், அவர் இயற்றிய நூல்கள் 'காலிக் (ஃபிரெஞ்சு) போர்கள்' 'உள் நாட்டுப் போர்கள்' என்பவையாம். இவற்றில் இவரே ஈடுபட்டிருந்தார். எனவே நிகழ்ச்சிகளில் ஈடுபட்ட பெரியோர்கள் அந் நிகழ்ச்சிகளைத் தாமே இயற்றிய நூல்கள் யாவற்றுள்ளும் சீஸரது நூல்களே சிறந்தவை என்பது அறிஞர் கருத்து. அவர் நூல்களை 'நிகழ்ச்சிகளின் உரை நூல்கள்' (commentaries) என்று பெயரிட்டார். ஃபிரான்ஸ் நாடு அக் காலத்தில் கால் (Gaul) எனப்பட்டது. அந் நாட்டை வென்ற முதல் ரோமானிய வீரரான சீஸர் அவ் வெற்றியின் விவரங்களைத் தமது 'காலிக் உரை நூலி'ல் விவரித்தார்; ஜெர்மானியரைப் பற்றிய நூலை 'ஜெர்மானிய உரை நூல்' என்றார். அந் நூலில் ஜெர்மன் மக்களின் பழக்க வழக்கங்களையும், உடை பாவனைகளையும் விளக்கினார். அவர் தாம் எழுதிய நூல்களில் போர், அரசியல் என்பவையேயன்றி, கால், பிரிட்டன் முதலிய நாடுகளின் புவியியல், கப்பல்கள், பாலங்கள், தற்காப்பு வசதிகள் என்னும் விவரங்களைப்பற்றியும் எழுதினார். ஆனால், எங்கும் தம்மைப்பற்றியும் தமது தளபதிகளைப்பற்றியும் உயர்த்தியோ தாழ்த்தியோ எழுதிக்கொள்ளவில்லை. ஆயினும், தமது வெற்றிச் செயற்பாடுகளை மையமாக வைத்து நூல் எழுதியதையே ஒரு குற்றமாகச் சில ஆய்வாளர்கள் கூறுவர்; அது சற்று மிகைக்கூற்று எனப்படல் வேண்டும். பிற்காலத்தில் வின்ஸ்டன் சர்ச்சில் இரண்டாம் உலகப் போரின் வரலாற்றை இயற்றியமை நினைவு கூரத்தக்கது. கி.மு. 50-ல் தமது நூல்களை வெளியிட்டதற்குச் சில காரணங்கள் சீஸருக்கு இருந்தன. அக் காலத்தில்தான் அவரது அரசியல் எதிர்காலம் நிருணயிக்கப்பட விருந்தது.

மூத்த கேட்டோ (Cato, the Elder) என்பார் ரோமானிய வரலாற்றை அந் நகர் நிறுவப்பட்ட காலத்திலிருந்து அவர் காலம் வரையில் எழுதினர்; அதற்கு 'தோற்றங்கள் (Origines) என்பது பெயர். அந் நூல் இலத்தீன் மொழியில் இயற்றப்பட்டது. அவர் வரலாறு இத்தாலிய வரலாறு எனலே பொருந்துவதாம்.

சீசரின் உடன்காலத்தவரான சிஸரோ (கி. மு. 106—43) வரலாற்று இலக்கியத்திற்கு வெகுவாகப் பொருள் ஈகை செய்ய வில்லையாயினும், வரலாறு வரைவியலைப்பற்றி உயர்தரக் கருத்து களைக் கூறியுள்ளார். அவர் ரோமாபுரியில் வாழ்ந்த ஒரு சிறந்த வழக்கறிஞர். வரலாறு இயற்றுதற்குச் சீரிய விதிகளை அவர் வகுத்தார். (1) வரலாற்றுளன் நிகழாததைக் கூறக் கூடாது; (2) மெய்ம்மையை மறைக்கக் கூடாது; (3) எப்போதும் ஒரு பாற் கோடல் ஆகாது, பகைமை உணர்ச்சி கொள்ளல் ஆகாது. இவையெல்லாம் ஒழுக்கமுறைக் கோணத்திலிருந்து கூறப்பட்டன வேயன்றி, நேரிய மதிப்பீட்டு முறைகளைப்பற்றி அவர் ஒன்றும் கூறவில்லை. இதனால் சிஸரோ போன்ற பேரறிஞர்களும் அக் கால மதிப்பீட்டு வரையறைகளைக் கடந்து யாதொன்றும் கூற முடிய வில்லை என்பது போதரும். அவர் தாம் கான்ஸலாக இருந்த ஆண்டு நடந்த நிகழ்ச்சிகளைப்பற்றிக் கோவைப்பட எழுதிவைத் துள்ளார். சிஸரோ பேச்சுத் திறமையில் நிகரற்றவராயினும், வரலாறு வரைதற் கலையில் சிறப்புறவில்லை. இந் நிலையில் அவரைக் காட்டிலும் சீஸர் மிகச் சிறந்த வரலாறு வரைவியலர் என்பதில் ஐயமில்லை.

ரோமானியக் குடியரசு காலத்து வரலாற்றுளர்களில் முக்கிய மானவர், கடைசியில் வாழ்ந்த சாலஸ்ட் (Sallust கி. மு. 86—34) என்பவர். அவர் இத்தாலியில் சபைன் மாநிலத்தில் பிறந்தவர். அவரது தனி வாழ்க்கையைப்பற்றி நாம் சிறிதும் அறியோம். கி. மு. 52-க்குப் பிறகு அவர் அரசியலில் ஈடுபட்டுச் சிஸரோவிற்கு எதிராகப் போட்டியிட்டு, பிளெப்புகளின் (The Plebs) டிரிபியூனுகத் (Tribune) திகழ்ந்தார் என்பதை யறிவோம். அரசியலிலிருந்து விலகிய பிறகு தமது பொழுதை வீண்போக்க விரும்பாமல் வரலாறு வரையத் தொடங்கியதாக அவர் கூறுகிறார். அவர் எழுதிய முக்கியமான வரலாற்று நூல் கி. மு. 78 முதல் 67 வரை உள்ள 'ரோமானிய வரலாறு' என்பது. அவர் தமது நூலில் ரோமானியப் பேரரசின் எதிர்காலத்தைப்பற்றி நம்பிக்கை யோடு எழுதவில்லை என்று சில மதிப்பீட்டாளர்கள் குற்றம் சாட்டுவர். அவர் கேட்டோ, ஜுகர்த்தா ஆகிய போர்களைப் பற்றி நன்கு விவரித்துள்ளார். அவர் கூறுவதுபோல் அக் கால

ரோம் சீரழிவு நிலையில்தான் இருந்தது. அவர் தமது சொந்த அனுபவங்களை ரோமாபுரியின் அனுபவங்களாகக் கூறுகிறார் என்பது அவர்மீது சுமத்தப்படும் இன்னொரு குற்றச்சாட்டு. ஆயினும், அக் காலத்தில் ரோமில் நடைபெற்ற செனட் ஆட்சியின் சீர்கேடு ஐயுறத்தக்கதன்று. தூஸிடிடிஸைப் போல, சாலஸ்டும் தமது நூலில் வரலாற்றுப் பெருமக்களின் சொற்பொழிவுகளைத் தாமே எழுதிச் சேர்க்கும் இயல்பினர். அவர் இலத்தீன் நடை, சூத்திரம்போல் சுருங்கக்கூறும் வகையினது; ஆயினும் பெரிதும் விளங்கவைக்கவில்லை என்பது ஒரு சாரார் கூற்று. அவர் கால வரையறைகளை அதிகமாகப் பொருட்படுத்தாமையால் அவர் இரண்டாந்தர வரலாற்றாளர் என்று சிலரால் மதிப்பிடப் படுகிறார்.

லிவி (Livy—கி. மு. 59–கி. பி. 17) என்பார் பாடுவா நகரினர்; அவர் பள்ளியாசிரியத் தொழிலினர்; மிக அழகாக வரலாற்றுக் கதைகளைச் சுவைப்படக் கூறும் சமர்த்தர் என்று பலராலும் மெச்சப்படுபவர். அவரும் ரோமானிய வரலாற்றினைத் தொடக்ககாலம் தொட்டுத் தம் காலம் வரை விரிவாக எழுதினார். அவரது வாழ்க்கை விவரங்கள் நமக்கு அதிகமாகத் தெரியா. அவர் அகஸ்டஸ் சீஸர் காலத்தவர். ரோமானிய வரலாற்றில் 770 ஆண்டுக் கதையை 142 பகுதிகளில் இயற்றினார். அவரது வரலாற்று நூலின் பிற்பகுதிகள் சில கிடைக்கவில்லையாயினும், எஞ்சிய பகுதிகள் மிகவும் பயனுள்ளவை. அவர் நடை மிகச் சிறந்தது. 'லிவி ரோமாபுரியைப் புகழவும், அதன் பெருமையைக் கூறவும், தேசியத் தற்பெருமையைத் தூண்டவும், நாட்டுப் பற்றைக் கொளுவவும் அந் நூலை யியற்றினார்' என்பது பார்ன்ஸ் (Barnes) என்னும் ஆய்வாளர் கருத்து. அவர்தாம் அகஸ்டஸ் ஆட்சிக்காலத்தை ஒரு பொற்காலம் என்று கூறும் மரபினை ஏற் படுத்தியவர். உண்மை வரலாற்றினை எழுதுங்கால், கற்போர் இன்புறுமாறும் எழுத முடியும் என்பதை நிறுவிய ஒரு சில பெரிய வரலாற்றாளர்களில் லிவியும் ஒருவர்.

குவின்டஸ் கர்ட்டியஸ் ரூஃபஸ் (Rufus) என்பார் மகா அலெக்ஸாந்தரின் வாழ்க்கை வரலாற்றைப் பத்துப் பகுதிகளில் இயற்றினார். ஜெர்மானியப் போர்களைப்பற்றி முப்பது பகுதி களில் வரலாறியற்றிய மூத்த பிளினியின் வரலாற்று நூல்கள் இக் காலத்தில் கிடைக்கவில்லை.

ரோமானிய வரலாற்றாளர்களில் கடைசியில் திகழ்ந்தவர், மிக முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவர் டாஸிடஸ் (ஏ. கி. பி. 55–120) என்பவர். அவரது வாழ்க்கையின் சில பகுதிகளின் சில விவரங்கள்

இளைய பிளினி வாயிலாகக் கேள்வியுறுகிறோம். டாசிடஸ் கி. பி. 77-ல், பிரிட்டனில் ரோமானிய கவர்னராக இருந்த ஜூலியஸ் அக்ரி கோலா என்பாரின் மகளை மணந்தார். அவர் ரோமாபுரியில் பல பொது அலுவல்களை மேற்கொண்டு பார்த்தவர். கி. பி. 97-ல் அவர் கான்ஸலாகவும் இருந்தார்; கி. பி. 112—113-ல் ஆசியாவில் புரோ-கான்ஸலாகவும் இருந்தார். அவர் வாழ்நாளின் பிற் பகுதியை வரலாற்று நூல்கள் இயற்றுதலில் செலவிட்டார்.

டாசிடஸ் கவர்னர் அக்ரிகோலாவின் வாழ்க்கை வரலாற்றினை இயற்றினார். ஆனால், அவரது முக்கியமான வரலாற்று நூல் 'ஜெர்மானியா' என்பது. அதில் அக் கால ஜெர்மானியரின் பொது நிலையங்கள், பழக்கவழக்கங்கள் முதலியவை விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. அவரது வரலாற்று நூல்கள் நீரோ காலத் திற்குப் பிறகும் (கி. பி. 68) டொமினிஷியன் காலம் வரையிலும் (கி. பி. 96) உள்ள கதையை விவரிக்கின்றது; அகஸ்டஸ் காலத்தி லிருந்து நீரோ காலம்வரை ஆண்டுச் சரிதைகள் எழுதினார். ரோமாபுரியைச் சேர்ந்த வரலாற்றுளர்களில் மிகச் சிறந்தவர் களில் டாசிடஸ் ஒருவர். அவர் வரலாற்று உணர்ச்சி மிகுந்தவர்; குடியரசு நிலையங்களைப் போற்றியவர். அவர் தம் காலத்து விவரங் களை எழுதுங்காலத்து முற்றிலும் புறநோக்கோடு எழுதினார் என்று கூறமுடியாதாயினும், அவர் நூல்கள் இலக்கியப் பண்பு மிக்குக் கற்பார்க்குக் களிப்பூட்டும் வகையில் அமைந்துள்ளன. வரலாற்றுப் பெருமக்களின் பண்புகளை ஆய்ந்து விளக்கும் கலையில் அவர் நிகரற்று விளங்கினார். டாசிடஸின் வரலாற்று உணர்ச்சியை விளக்குதற்கு அவர் வரைவுகளிலிருந்து கீழ்க்கண்ட பகுதியை மேற் கோளாகக் காட்டலாம். 'கிரேக்கர்கள் சுதந்திரத்தையும் சுதந்திரத்தை வெறியாட்டமாக மாற்றியவர்களையும் தண்டிக் காமல் விட்டனர்; அவர்கள் சொற்போர்கள் நிகழ்த்தினர். நம் மிடத்தேயும் இறந்தாரைப்பற்றி அவதூறு பேசும் உரிமை முற்றிலும் உள்ளது... புருடஸூம் காஷியஸூம் இன்று உயிரோடு இல்லை... அவர்களுடைய சிலைகள்தாம் நகர்களை அலங்கரிக் கின்றன; அவர்களை வென்றவர்களும் அச் சிலைகளை அகற்றவில்லை... ஒவ்வொருவருக்கும் வருங்காலம் வரலாற்றில் உரிய இடத்தை யளிக்கின்றது... கவனிக்காமல் புறக்கணிக்கப்பட்டவை மறக்கப் படுகின்றன; ஆத்திரத்தோடு அவற்றைத் தாக்கினால் அவற்றிற்குப் பெருமை ஏற்பட்டுவிடுகிறது.

டாசிடஸ் தவிரச் சில இரண்டாந்தர வரலாற்றுளர்களும் ரோமில் இருந்திருக்கின்றனர். சியோடோனியஸ் டிராங்குவிலஸ் (கி. பி. 75—160) என்பார் அகஸ்டஸ் காலத்திலிருந்து பிளேவி

யர்கள் காலம் வரையுள்ள சீஸர்களின் வரலாற்றை இயற்றினார். லுக்ரிடிஸ் (கி. மு. 95—55) என்பார் ஓர் இலத்தீன் கவி; அவர் பிரபஞ்சத்தின் பரிணாமத்தை விவரித்து எழுதினார்.

இஃதோடு செம்மரபு வரலாறு வரைவியல் முடிகின்றது. அக் காலத்திலிருந்து பகுத்தறிவு போற்றப் பெற்ற அறிவொளிக் காலம் தொடங்கிய வரை இடையிட்ட காலம் கிறிஸ்துவ சமய மரபு வரலாறு வரைவியற் காலமாயிற்று. இக் காலமும் இருவகைப் படும். முதற்பகுதியில் சமயமரபும் பிற்பகுதியில் நம்பிக்கை, ஐயுறவு, மானுடம் யாவையும் கலந்த ஒரு மரபும் பெரும் பான்மை நிகழ்ந்தன.

கிரெகரி (டூர்ஸ்பிஷப்—538–594) 'பிராங்கியர்கள் வரலா'ற்றை இயற்றினார். அவ் வரலாறு அவர் காலத்து வரலாறு. அதில் பிராங்கியர் சமுதாயத்தில் அக் காலத்தில் திருச்சபையின் செல்வாக்கு வளர்ந்துவந்தமை விவரிக்கப்பட்டுள்ளது. 'அந் நூலில் பிராங்கியர் கலாசாரம் இடைக் காலத்திலிருந்து பிற் காலத்திற்கு எவ்வாறு மாறிற்று என்பது நன்கு விளக்கப்பட் டுள்ளது.' செவிலைச் சேர்ந்த இஸிடோர் என்பார் 'விஸிகாத்தியர் கள், வாண்டல்கள் என்பாருடைய வரலாறு' ஒன்றை யியற்றினார். அயின்ஹார்டு (ஏ. கி. பி. 770—840) என்பவர் சார்லிமேன் காலத்தவர், அவருடைய நண்பர்; அவர் 'சார்லிமேன் வாழ்க்கை வரலாறு' இயற்றினார். வரலாற்றுப் பெருமகன் ஒருவனின் வாழ்க்கை வரலாறு என்னும் முறையில் அது மிகச் சிறந்து விளங்கு கின்றது.

ஃபிரான்ஸைச் சேர்ந்த இடைக்கால வரலாற்றாளர்களில் பொவேயைச் சார்ந்த வின்ஸெண்ட் (1199—1264) என்பார் 'வரலாற்றுக் கருத்துகள்' என்னும் நூலை 31 பகுதிகளில், 3793 அத்தியாயங்களில் இயற்றினார். அந் நூலிலுள்ள விவரங்கள் பல் வேறிடங்களிலிருந்து தொகுக்கப்பட்டனவாயினும், தொகுத்து அளித்திருக்கும் முறை போற்றத்தக்கது. அதில் படைப்புக் காலத்திலிருந்து செயின்ட் லூயி வரை உள்ள 'வரலாறு' சேர்க்கப் பட்டுள்ளது. ஜீன் பிராயிஸார்ட் (ஏ. கி. பி. 1337—1410) என் பவர் ஒரு கவி; நிகழ்ச்சிக் குறிப்பாளரும்கூட. அவர் 'பிரான், பிளாண்டர்ஸ், ஸ்காட்லாந்து, ஸ்பெயின் நாடுகளின் நிகழ்ச்சிக் குறிப்புகள்' என்னும் நிகழ்ச்சிக் கோவையை இயற்றினார். 'நடை யிலும் வருணனைத் திறனிலும், ஷேக்ஸ்பியர் ஒருவரையே அவருக்கு நிகராகக் கூறலாம்' என்பது மாஸன் (Masson) என்னும் மதிப்பீட்டாளர் கருத்து. நூற்றாண்டுப் போரின் மிக நல்ல உட

னிகழ் காலத் தொடருரை அவரியற்றியதே. ஃபிலிப் டிகமைன்ஸ் (1445—1509) என்பார் திறமை மிக்க ஃபிரெஞ்சு வரலாற்றுளர். அவரியற்றிய 'வாழ்க்கை நினைவுகள்', இடைக்கால வரலாறு வரைவியல் நவீன கால வரலாறு வரைவியலாக மாறியதை நன்கு எடுத்துக்காட்டுகின்றது. பதினோராம் லூயி எட்டாம் சார்லஸ் என்பாருடைய ஆட்சிக் காலங்கட்கு அவர் நூல் சிறந்த சான்று நூலாகும். அவர் நூலைப் பெரிதும் புகழ்ந்து எழுதியுள்ளார் ஹாலம் (Hallam) என்னும் ஆங்கிலேய வரலாற்றுளர்.

ஆல்பர்டினஸ் முஸாடஸ் (1261—1330) ஓர் இத்தாலியர். அவர் 'ஹிஸ்டோரியா அகஸ்டா' என்னும் நூலை இயற்றினர். அதில் குவெல்புகள் கிபெலின்கள் என்பாரிடை நிகழ்ந்த பூசல்களை நன்கு புறநோக்கோடு விவரித்துக் கூறியுள்ளார். இத்தாலிய இடைக் கால வரலாற்றுளர்களில் கியோவன்னி பில்லானி என்பாரே மிகச் சிறந்தவர் என்று கூறலாம். அவர் ஃபிளாரன்ஸின் நிகழ்ச்சிக் குறிப்புகள் வரைந்தார். அதில் ஃபிளாரன்ஸின் வரலாறு ஆதிகாலத்திலிருந்து 1346 வரை கூறப்பட்டுள்ளது. 'உண்மை' 'நிகழ்ந்தது கூறல்' என்னும் சீரிய பண்புகளின் உறைவிடமாக அவர் விளங்கினர். ஃபிளாரன்ஸ் நகரத்தை அவர் வருணித்துள்ள முறை மிகவும் போற்றத்தக்கது. லாம்பர்ட் என்பவர் (11ஆம் நூற்றுண்டினர்) 'ஜெர்மனிக்கும் போப்பாட்சிக்கும் இடை நிலவிய உறவுகள்' பற்றிய வரலாற்றை இயற்றினர். அந் நூலில் அவர் போப்பாட்சியை ஆதரித்து எழுதியமை அக் கால இயல்பைக் காட்டுகின்றது. ஆட்டோ, பிரெயிஸிங் பிஷப் 'நிகழ்ச்சிக் குறிப்பு' ஒன்றையும் 'பேரரசர் முதலாம் பிரெடரிக்கின் செயற்பாடுகள்' என்னும் நூலையும் இயற்றினர். முதலிற் கூறிய நூலில் 'தெய்வமாநகர்', 'சைத்தான் மாநகர்' என்று நகர்களைக் கற்பித்துக்கொண்டு இவற்றிடை யுறவை எழுதினர். இரண்டாவது கூறிய நூலில் 12ஆம் நூற்றுண்டு ஐரோப்பிய வரலாறு நன்கு எடுத்துக்கூறப்படுகின்றது. 'அவரது தத்துவத்தைப்பற்றி யார் எதைக் கூறினும், இடைக்கால ஜெர்மனியில் உலக வரலாற்றுப் போக்கை உள்ளபடி உணர்ந்து எழுதியவர் அவர் ஒருவரே' என்னும் கருத்து ஏற்றுக்கொள்ளத் தக்கதே.

நிகோலோ மாக்கியவல்லி (1469—1527) என்பார் நவீன கால வரலாறு வரைவியலைத் தொடக்கிவைத்தவர் எனலாம். அவர் ஓர் இத்தாலியர்; ஃபிளாரன்ஸ் நகரத்தினர். தமது 25ஆம் வயதில் அரசாங்க அலுவலை மேற்கொண்டவர், ஃபிளாரன்ஸ் குடியரசு வீழ்ந்து மெடிசிகளின் ஆதிக்கம் ஓங்கியவுடனே, சிறைப் படுத்தப் பெற்றுர். கார்டினல் மெடிச்சி போப் பத்தாம் லியோ

என்னும் பெயரில் போப் பதவியை ஏற்றுக்கொண்டபோது, அவர் விடுதலை பெற்றுத் தம் சொந்த ஊருக்குத் திரும்பினர். அவர் மானுட காலத்தின் பிரதிநிதி; இக் காலம் மறுமலர்ச்சிக் காலத்தின் தொடக்க காலம். இடைக்காலச் சமய மரபை அரசியலினின்றும் துணிந்து பிரித்தவர் அவர்; அரசியலை உண்மையாகவும் முழுமை யாகவும் உலகியல் விவகாரமாக விளக்கிய முதல்வர் அவர். அவர் 'ஃபிளாரன்ஸின் வரலா'ற்றை எட்டுப் பகுதிகளில் இயற்றினர். பொலிபியஸ், லிவி என்பாருடைய வரலாற்று நூல்களை நன்கு பயின்றவர் அவர். அரசியல் துறையில் வரலாற்று நிகழ்ச்சிகளின் காரணகாரியத் தொடர்புகளை அவரைப் போல நன்கு அறிந்து நூலியற்றவர்கள் பிறர் இலர் எனலாம். இத்தகைய கருத்தை மறுத்து ஷெவில் என்பார் 'மாக்கியவல்லி ஒரு வரலாற்றுளரே யல்லர்' என்று உரைத்தார்; அன்றியும் இம் முடிவிற்கு வருவதற்கு மாக்கியவல்லியின் 'ஃபிளாரன்ஸ் நகர வரலாறே' காரணம் என்றும் கூறினர். மாக்கியவல்லி ஐக்கிய இத்தாலி என்னும் கொள்கை கொண்டவர்; அவர் போப்பாட்சியை ஆதரிக்கவில்லை; ஏனெனில், அது இத்தாலிய ஐக்கியத்திற்கு ஓர் இடையூறு என்பது அவர் எண் ணம். அவர் வரலாறு வரைவியற்குச் செய்த சிறந்த பொருளீகை, இடைக்கால இயற்கைக்குப் புறம்பானவற்றில் நம்பிக்கை கொள்ளும் மரபினைப் புறக்கணித்து உலகியல் நிலையில் வைத்து வரலாறியற்றியமையே. அவரது அரசியல், வரலாற்றுத் தத்துவங் கள் அவர் இயற்றிய 'கோமகன்' (Prince) என்னும் நூலில் தெள்ளி தின் எடுத்துக்கூறப்பட்டுள்ளன. அந் நூலில் உலகாயதக் கருத்துகளை மட்டும் உட்கொண்டு ஆதிக்கத்தால் அதிகாரத்தைச் செலுத்துபவர்களுக்கு வேண்டிய வழிதுறைகள் வகுக்கப்பட் டுள்ளன. ஆதிக்கத்தின் தன்மை, ஆதிக்கம் செலுத்துபவர்களின் தன்மை என்பவற்றை விஞ்ஞான முறையில் விளக்கியவர் மாக்கிய வல்லி. அவர் இயற்றிய வரலாற்று நூல்கள் யாவற்றையும் விட 'கோமகன்' என்னும் அச் சிறு நூலே உலகப் புகழ் படைத்தது.

பிரான்ஸெஸ்கோ கிச்சியார்டினி (1483-1540) என்பவர் மாக்கியவல்லியின் உடன் காலத்தவர். அவரும் 'ஃபிளாரன்ஸ் நகரத்து வரலா'ற்றினை இயற்றினர். அந் நூல் வரலாறு என்னும் முறையில் மாக்கியவல்லியின் நூலைவிடச் சிறந்தது. அவர் மாக்கிய வல்லிபோலத் தமது நூலில் ஆங்காங்கு அரசியற் கருத்துகளைக் கூறிக்கொண்டே செல்வது போலச் செய்வது இல்லை. அவர் சிறிது நகைச்சுவையோடு அழகுபெற எழுதுவார். அவர் நூலை மிகுதி யாகப் புகழ்வோரும் உளர், 'அவர் ஃபிளாரன்ஸ் வரலாற்றை இயற்றியபோதுதான் நவீன கால வரலாறுவரைவியல் பிறந்தது' என்று பியூடர் என்பார் கூறினர். கிச்சியார்டினி 'இத்தாலிய

வரலாறு' ஒன்றையும் இயற்றினுர்; இதுவே முழு இத்தாலியைப் பற்றியும் முதன்முதலாக இயற்றப்பட்ட வரலாறு. காம்டன் (Camden), கிளாரண்டன் என்போர் காலத்திற்கு முன்பு உயர்தர வரலாறு வரைந்த பெருமை கிச்சியார்டினி யுடையதே.

மாக்கியவல்லி, கிச்சியார்டினி என்பாருடைய வரலாற்று முயற்சிகளை ராங்கே மிகவும் கண்டித்தார்; அவர்கள் இரண்டாம் நிலைச் சான்றுகளை வைத்தே நூலியற்றிவிட்டனர் என்பது அவருடைய குற்றச்சாட்டு. ஆயினும் 16ஆம் நூற்றுண்டு வரலாற்றுளர்களிடம் 19ஆம் நூற்றுண்டு மதிப்பீட்டு முறைகளை எதிர் பார்ப்பது தவறு என்பது வெளிப்படை.

மானுட காலத்தில் பல அரிய வரலாற்று வாழ்க்கை வரலாறுகளை இயற்றினுரும், சுய சரிதைகளை இயற்றினுரும் உளர். அவர்களில் கியோவன்னி பொக்காச்சியோ (1313—1375) என்பவர் புகழ் பெற்ற டாண்டே (Dante) யின் வரலாற்றை இயற்றினுர். சியார்ஜியோ வாஸவி (1511—1574) என்பவர் 'மிகப் புகழ்பெற்ற ஓவியர்கள், சிற்பிகள், கட்டடக் கலைஞர்கள்' என்பாரது வாழ்க்கை வரலாற்று நூல் ஒன்றை இயற்றினுர். இது மிக அருமையான கலை வரலாறு. மானுட காலத்தில் வரலாற்று நூல் இயற்றிய மிக முக்கியமான ஜெர்மானியர் பூவண்டார்ப் (Pufendarf—1632-94) என்பவர். அவர் 'ஸ்வீடன் வரலாறு', 'பத்தாம் சார்லஸ் குஸ்டபஸ் வரலாறு' 'பிரெடரிக் வில்லியம் பெருவாக்காளர்' முதலிய நூல்களை இயற்றினுர், அவர் ஒன்றித்த ஜெர்மனியின் பெருமித வரலாற்றை இயற்றினுர். 'அவர் ஜெர் மானியப் பேரரசின் சார்பில் நூலியற்றினுரேயன்றி அப் பேரரசைப்பற்றிய நூலியற்றவில்லை' என்றுர். இம் மதிப்பீடு உண்மையானதே.

ஹியூகோ குரோஷஸ் (1583—1645) என்பார் ஹாலந்து நாட்டைச் சேர்ந்த சிறந்த வரலாற்றுளர். அவர் காத்தியர், வாண்டல்கள், லம்பார்குகள் என்பாரைப்பற்றியும் 'பெல்ஜிய, போலந்து வரலாறு' ஒன்றும் இயற்றினர். அவர் மாக்கியவல்லியைப்போல உலகியல் கோணத்திலிருந்து வரலாற்றைநோக்கினுர். ஹாலந்து நாட்டின் உலகியல் முன்னேற்றம் சமயப்போர்களில் தனிப்பட்டது என்று அவர் கூறினுர். குரோஷஸ் வரலாற்றுளர் என்பதைவிடப் பன்னுட்டுச் சட்ட முறையை ஓர் அறிவியலாக அமைத்தவர் என்பதற்கே பெரும்புகழ் படைத்தவர். குரோஷஸுடன் இணைந்த புகழுடையர் ஜீன் போடின் (1530—1596) என்பவர். அவரும் பன்னுட்டுச் சட்டவியலை ஆய்ந்து அவ்

வறிவியற்குப் பொருளீகை செய்தவர். 'வரலாற்றை எளிதில் உணர்ந்து கொள்ளும் முறை' என்பதொரு நூலை அவர் இயற்றினார். பொருள் விளக்க நோக்கிலிருந்து வரலாற்று முறையியலைப்பற்றிய நூல் ஒன்றை முதன்முதல் இயற்றியவர் அவரே. அவர் வரலாற்றைப் புவியியல் எவ்வாறு பாதிக்கிறது என்பதை விளக்கினார்; அவ்வகையில் அவர் மாண்டெஸ்கியூ, பக்கிள் என்பார் கருத்துகளை முற்கூறினார். அவர் கோட்பாட்டின்படி மனித வரலாற்றினை மூன்று நிலைகளாகப் பிரிக்கலாம்: (1) கீழை நாட்டு மக்கள் வரலாறு; (2) மத்தியதரை நாட்டு மக்கள் வரலாறு; மற்றும் (3) வட ஐரோப்பியர்களின் எழுச்சி என. இவ்வாறே ஹேகலும் மூன்றுவித வரலாற்றுக்கால நிலைகளைக் கூறினார் என்பது நினைவுகூரற்பாலதாம்: (1) கீழைநாட்டு, (2) கிரேக்க, ரோமானிய மற்றும் (3) நவீனகால ஜெர்மானிய என.

செயின் சைமன் (டியூக்) (1675—1755) என்பவர் போர்பானியர் ஆட்சியில் ஃபிரான்ஸ் என்னும் அரிய நூலை இயற்றினார். அவர் நூலில் ஆங்காங்குச் சில விவரத் தவறுகள் காணப்படினும், மொத்தத்தில் மிகப் புகழ்பெற்ற நூலாக அது விளங்கிற்று என்பதில் ஐயமில்லை. அந் நூல் அதனைக் கற்றோரை அறிவியல் மயக்கத்தில் ஆழ்த்திற்று என்றார் கூச் (Gooch).

இந் நிலையில் மானுடகாலம் முற்றிற்று. அதனைத் தொடர்ந்து சமயச் சீர்திருத்த காலமும், எதிர்—திருத்தகாலமும் நிகழ்ந்தன. இக் காலத்தில் மறுபடியும் சமயமும் அதனைத் திருத்துதலும் மக்களுடைய கவனத்தைப் பெரிதும் ஈர்த்தன. மானுட நோக்குகள் சற்றுத் தளர்வுற்றன. அக் காலத்தில் சமயச் சார்பான பல நூல்கள் இயற்றப்பெற்றன. ராபர்ட் பார்ன்ஸ் (1495—1550) என்னும் ஆங்கிலேயர் 'ரோமானியப் போப்புகளின் வரலாறு' ஒன்று இயற்றினார்; அந் நூலில் அவர் இடைக்காலத்தில் ஐரோப்பாவில் நிகழ்ந்த கேடுகள் யாவற்றிற்கும் போப்புகளே காரணம் என்று விளக்க முயன்றுள்ளார். முன்பொரு காலத்தில் ஐரோஸியஸ் என்பார் பல்லிறை வழிபாட்டாளரே எல்லாக் கேடுகளுக்கும் காரணம் என்று எழுதிய முறையை நேர்மாற்றி பார்ன்ஸ் திருச்சபையைக் குற்றஞ் சாட்டி நூலியற்றினார். 'ஸ்காட்லாந்து நாட்டில் சமயச் சீர்திருத்தம்' என்னும் நூலை ஜான்நாக்ஸ் (Jhon Knox) என்பவர் இயற்றினார். அதில் சிறந்த கருத்துகளையும் சமயவாதங்களையும் சிறந்த நடையில் எழுதியுள்ளார். பிளேஷியஸ் என்பார் தொகுத்த 'மாக்டபர்க் சதங்கள் (Magdeburg centuries) என்னும் தொகை நூல் கத்தோலிக்க மதத்தை எதிர்த்துச் சமயச் சீர்திருத்தக் கோணத்திலிருந்து தொகுக்கப்பட்டது. 'சமயச்

சீர்திருத்த வரலாறு' ஒன்று புலிஞ்சர் (Bullinjer—1504-75) என்பவரால் இயற்றப்பெற்றது: அந் நூலில் சீர்திருத்த இயக்கத்தின் தொடக்க வரலாறு எழுதப்பெற்றுள்ளது. அவர் புராடஸ்டன்டாயினும், சமயத் திருத்த இயக்கத்தைப்பற்றிப் புறநோக்கோடு எழுதினர்.

மேற்கூறிய வரலாற்றுளர்கள் திருச்சபையை எதிர்த்து அல்லது ஆதரித்து நூல்கள் இயற்றினர். போஸ்வே (Bossuet—1627-1704) என்னும் வரலாற்றுளர் கத்தோலிக்கத் திருச்சபையை முற்றிலும் ஆதரித்து நூலியற்றினர். 'புராடஸ்டன்ட் திருச்சபையாரிடையே காணப்பெறும் வேறுபாடுகள்' என்பதொரு நூலை அவர் இயற்றினர். திருச்சபையைப் பிளப்பதால் ஒருவருக்கும் நன்மையில்லை; 'நாத்தியம் வளர்வதற்கு அது ஒரு காரணமேயன்றிப் பிறிதன்று' என்னும் கருத்தை அவர் கூறினர். அவர் 'பிரபஞ்ச வரலாறு பற்றிய பிரவசனம்' என்னும் நூலை மூன்று பகுதிகளில் இயற்றினர்; அதன் முதற்பகுதி 'படைப்புக் காலந்தொட்டுச் சார்லிமேன் காலம்வரை' எனவும், இரண்டாம் பகுதி 'சமய இயக்கங்களைக் கடவுள் இயக்குதல்' எனவும், மூன்றும் பகுதி 'கடவுள் திருவுளத்தால் அரசுகளின் எழுச்சியும் வீழ்ச்சியும்' என்னும் பெயரிலும் இயற்றப்பட்டது. வரலாற்றிற்கு சமயச் சார்பான பொருள் விளக்கம்தரும் முயற்சிகளில் போஸ்வேயுடையதே கடைசியானது. கி. பி. 18ஆம் நூற்றுண்டின் இடைப் பகுதியில் வால்ட்டேர் என்பார் 'தேசத்தின் பழக்க வழக்கங்கள் பற்றிய கட்டுரை' என்னும் நூலியற்றியபோது சமயச் சார்பான வரலாற்றுப் பொருள் விளக்கங்கள் தரும் முயற்சி இற்றது.

இடைக்காலம் முடிந்து நவீனகாலம் 17ஆம் நூற்றுண்டில் தொடங்கிவிட்டது எனலாம். நாடு காண்பவர்கள் நாடுகளைக் கண்டுவிட்டனர்; விஞ்ஞானக் கண்டுபிடிப்புகள் பல்கின. பகுத்தறிவு போற்றப்படலாயிற்று. இதற்கிடையே நாடுகண்ட செய்திகளைக் கூறும் பயண நூல்கள் பல இயற்றப்பட்டன. 13ஆம் நூற்றுண்டில் மார்க்கோபோலோ என்னும் இத்தாலியர் சீனு, இந்தியா முதலிய நாடுகளிற் சுற்றிவிட்டு வந்து எழுதிவைத்த பயணநூல் உலகப் புகழ்பெற்றது. கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்த பிறகு, நியூட்டன், ஹார்வி, கெப்ளர் முதலியோருடைய விஞ்ஞானப் பொருளீகைகள் மனிதகுலத்திற்குக் கிடைத்த பிறகு, புதுவகை வரலாறு வரைவியல் மரபு ஏற்பட்டதில் வியப்பில்லை. எரனெ தேகார்ட் என்னும் ஃபிரெஞ்சு அறிஞர் 'முறையியல் பிரவசனம்' என்னும் நூலில் வரலாற்றிற்குத் தனிப்பட்ட ஒரு முறை இன்று, விஞ்ஞான முறை தவிர

வேறு முறைகளே இல்லை என்று வற்புறுத்தினுர். வரலாற்றுல், இறந்தகால நிகழ்ச்சிகளை உள்ளபடி, நிகழ்ந்தபடி எடுத்துரைக்க முடியாது; அதற்கான சாத்தியக் கூறுகள் அதனிடம் இல்லை என்பதும் அவர் கருத்து. கியோவன்னி பாடிஸ்டா விக்கோ (1668—1744) என்பார் ஓர் இத்தாலியச் சட்டவியலர். அவர் வரலாற்று அறிவியற்கு அரிய பொருளீகை செய்தார். அவர் நேபிள்ஸ் நகரத்தவர். பிளேட்டோ, டாசிடஸ், பேக்கன், குரோஷஸ் என்போரால் பயனடைந்தவர். அவர் 'நவீன விஞ்ஞானம்' என்னும் நூலைக் கி. பி. 1725-ல் இயற்றினுர். அவர் தேகார்ட்டைக் கண்டித்து 'எல்லாவற்றையும் கணிதமுறைப்படி ஆராய்ந்துவிட முடியும் என்று கருதுதல் தவறு' என்றுர். சமுதாயம் பல படிகள் வாயிலாகச் சுழன்றுசுழன்று வரும் ஒரு தோற்றம் என்னும் கொள்கையினர் அவர். அவர் கருத்துப்படி 'வரலாற்றுராய்ச்சிக்கும் பிறவியல் ஆய்வுகளுக்கும் அடிப்படை வேறுபாடு உண்டு; வரலாற்று இயக்கங்களைத்தாம் மனிதன் புரிந்துகொள்ள முடியும், விஞ்ஞான உலகு கடவுள் சிருஷ்டியால் ஏற்பட்டது, அதன் ஆதிகாரணங்களையும் இயல்புகளையும் மனிதன் காண முடியாது; பண்டைக்காலக் கட்டுக்கதைகள் நிலையிலிருந்து நவீனகால மதிப்பீட்டு முறை மிகவும் உயர்ந்து வேறுபட்டது' என்பன வரலாற்றிற்குரிய கொள்கைகள். விஞ்ஞான முறை ஆய்வு வரலாற்று முறை ஆய்வினின்றும் அடிப்படையாக வேறுபட்டது என்று அவர் கூறிய கருத்து புரட்சிகரமானது; இக் கருத்துப் பிற்காலத்தில் காம்ட் முதலியவர்களால் மேற்கொண்டு விளக்கப்பெற்றது.

மான்டெஸ்கியூ (1689-1755) ஒரு ஃபிரெஞ்சுத் தத்துவர்; சட்ட நிபுணர்; வரலாற்றுளர். 'ரோமானியர் பெருமைக்கும் வீழ்ச்சிக்கும் காரணங்கள்' என்னும் நூலே அவரியற்றிய வரலாற்று நூல்களுட் சிறந்தது. பேரரசு அளவிற்கு மிஞ்சி வளர்ந்துவிட்டமையே அதன் வீழ்ச்சிக்குக் காரணம் என்பதை அவர் எடுத்துக்காட்டினுர். ஏனைய அறிவொளிக் கால வரலாற்றுளர்களைப்போல அவரும் அரசியல், மனித வரலாறு என்னும் துறைகளினின்றும் சமயத்தைப் பிரித்தார். அவர் இங்கிலாந்தில் இருந்ததுபோலவே ஃபிரான்ஸிலும் கட்டுப்படுத்தப்பெற்ற முடியரசு இருந்தாலன்றி அரசியல் வளர்ச்சியும் மக்கள் நலனும் கைகூடா என்று கூறினுர். இவ்வகையில் வரம்பிலா ஆட்சி நடத்திய போர்பன்களை எதிர்த்துக் கிளம்பிய ஃபிரெஞ்சுப் புரட்சிக்கு அவர் ஒரு காரணம் என்று கருதப்படுவார்.

பகுத்தறிவு வாத வரலாற்றுளர் மரபினை முக்கியமாகத் தலைமை தாங்கி இயக்கியவர் ஃபிரான்ஸிஸ் ஆருவா (Francis

Arouet) என்பவர்; அவரை 'வால்ட்டேர்' என்னும் பெயரால் உலகறியும். அவர் காலம் 1697–1778. பகுத்தறிவுவாதிகள் விஞ்ஞானத்தின் இறுதியுண்மையை நம்பினர்; இடைக்காலச் சமய நோக்கினை மறுத்து நீக்கினர். இடைக்காலத்தில் நாகரிகமும் கலாசாரமும் ஒருசேர அசையாமல் நின்றுவிட்டன என்பது அவர்கள் கருத்து. மான்டெஸ்கியூவைப் போல வால்ட்டேரும் உடனிகழ் காலத்து ஆங்கிலேயப் பண்பாட்டைப் போற்றியவர். அவர் இலக்கியர்; வரலாற்றுளர்; தத்துவர். அவர் வரைவுகளில் கடும் மதிப்பீடும், கூரிய நகைச்சுவையும் காணப்பெறும். அவர் மகா பிரெடரிக், மகா காதரின் என்னும் ஆட்சியாளர்களின் பேராதரவையும் பெருமதிப்பையும் பெற்றவர். அவர் முதன் முதலில் ஸ்வீடன் மன்னரான பன்னிரெண்டாம் சார்லஸ் என்பாரது வரலாற்றை இயற்றினர். ஆனல், அவரது வரலாற்று நூல்கள் யாவற்றிலும் சிறந்தது, 'பதினன்காம் லூயியின் காலம்' என்னும் நூலேயாம். அதனைத் 'தற்கால நவீன வரலாறுகளில் முதன்மையானது (காலத்தால்)' என்று புகழ்வர். ஃபிரெஞ்சுப் பண்பாடும் அவர்களுடைய மாபெரும் மன்னரின் சாதனைகளும் அழகாக எடுத்துக்கூறப்பட்டுள்ளன. வால்ட்டேர் பதினன்காம் லூயியின் அருங்குணங்களை ஆதரித்துக் குறைபாடுகளை மறைக்காமல் எடுத்துரைத்தார், அவர் 'தேசங்களின் பழக்க வழக்கங்களைப்பற்றிய கட்டுரை' ஒன்று எழுதினர். அவரே 'வரலாற்றுத் தத்துவம்' என்னும் தொடரை முதன்முதல் எடுத்தாண்டவர். அவர் தொடக்கிவைத்த பகுத்தறிவு முறை வரலாறு வரைவியல், வேறு பல உயரிய வரலாற்றுளர்களால் பின்பற்றப்பட்டது. அவர்களில் டேவிட் ஹியூம், வில்லியம் ராபர்ட்ஸன், எட்வர்டு கிப்பன் என்பவர்களைக் கூறவேண்டும்.

'தொல்லாட்சியைக் (ancient regime) கண்டித்து எழுதிய ஃபிரெஞ்சு முப்பெரும் ஆசிரியர்களுள் ரூஸோவும் ஒருவர். அவர் பகுத்தறிவுக் காலத்திற்கும் கற்பனை—உணர்ச்சிக் காலத்திற்கும் இடைப்பட்டவர். அவர் அவ் விரு காலத்தின் பண்புகளையும் தம்முள் அடக்கியவர். திருச்சபை, அரசகுலம், பிரபுக்கள் குழாம் என்பவற்றின் மிகைஆதிக்கத்தை எதிர்த்து, மனிதனின் இயற்கைப் பண்பின் தனிச் சிறப்பை எடுத்துக்கூறிய பெருமை அவருடையது. அவர் கொடுங்கோல், தன்னுட்சி, வரம்பிலாக் கோன் ஆட்சி என்பவற்றை வெறுத்தார். அவர் வரலாற்று நூல்களை இயற்றவில்லையாயினும், பல வரலாற்றுளர்களுடைய கருத்துகளை உருவாக்கிய பெருமையுடையர்.

பிரீட்ரிக் ஷில்லர் (1759—1806) என்பார் ரூஸோவின் கருத்துகளால் பாதிக்கப்பட்டவர். அவர், 'ஸ்பானியர் ஆட்சியை

எதிர்த்து நெதர்லாந்தவர்கள் செய்த புரட்சி' 'முப்பதாண்டுப் போர்' என்னும் பொருள்கள்பற்றி நூலியற்றினார். 'டச்சுக் காரர்கள் வரலாறு' அவர்தம் திறமை முழுதும் ஈடுபடுத்தி எழுதிய நூல். 'முப்பதாண்டுப் போர்' என்னும் நூலில் குண்டபஸ் அடால்பஸ், வாலன்ஸ்டீன் என்போரின் வீரச்செயல்கள் கற்பனை—உணர்ச்சிப் பண்போடு வருணிக்கப்பட்டிருக்கின்றன. பகுத்தறிவு மரபினின்றும் கற்பனை—உணர்ச்சி மரபிற்கு மாறிய தன்மை இவரது நூல்களில் காணக்கிடக்கின்றது.

இம்மானுவேல் காண்ட் (Kant—*1724-1804*) என்பார் ஜெர்மானியத்தத்துவர்களில் ஹேகலுக்கு நிகராகக் கருதப்படுபவர். அவர் கணிதம், தத்துவம், சமயவியல் என்னும் துறைகளில் பேரறிஞர். கி. பி. *1784*-ல் அவர் 'பிரபஞ்ச வரலா'ற்றைப் பற்றிய கட்டுரையொன்று இயற்றி வெளியிட்டார். அவர் முதற் காரணக் கோட்பாட்டை வைத்து வரலாறு இயக்கத்தை விளக்க முடியும் என்று கருதினார். சமுதாய நிலையங்களை ஆக்கவும் அவற்றிற்கு உடன்படவும் மனிதனுக்குச் சில இயல்புத் தன்மைகள் உள என்பது அவர் கருத்து. 'சட்டப்படி நியாயத்தைப் பரிபாலித்தற் பொருட்டு ஓர் அமைக்கப்பட்ட சமுதாயத்தை நிறுவுவதே' மனிதனின் முக்கியமான செயற்பாடு என்றார் அவர்.

ஜொஹன் காட்பிரைடு ஹெர்டர் (Johan Gottfried Herder—*1744-1803*) என்பவர் வரலாற்றுத் தத்துவத் துறை ஆய்வுகளைத் தொடக்கியவர்களில் ஒருவர். அவர் சமயவியல் கற்றவர்; காண்ட்டின் அறிவியற் செல்வாக்கிற்குட்பட்டவர்; ஆயினும், பிற்காலத்து அப் பெருந் தத்துவரோடு பல சர்ச்சைகளில் ஈடுபட்டார். 'மனித குல வரலாற்றின் தத்துவத்தைப்பற்றிய கருத்துகள்' என்பது அவர் வரலாற்றுத் தத்துவத்தைப்பற்றி இயற்றிய முக்கியமான நூல். அவர் ஒவ்வொரு தேசத்தவர்க்கும் தனித் தன்மையுண்டு; அத் தன்மை புவியியல் காரணங்களால் நிருணயிக்கப்படுகின்றது என்னும் கொள்கையர்; தேசியப் பண்பாடு, தன்மை என்பன போன்ற கருத்துகளையும் அவர் வற்புறுத்தினார். மனிதகுல நாகரிகம் என்பது வளருந் தன்மைத்து; மலருந்தகையது; பழைமையை எண்ணிப்பார்த்து வருங்காலத்தைத் துல்லியமாக்கிக் கொள்ளமுடியும் முதலிய கற்பனை—உணர்ச்சிக் கருத்துகளை அவர் ஊக்கினார். அவர் 'புறத்தேயுள்ள சூழ்நிலைகளின் செயற்பாடுகளும், மனிதகுலத்தின் அக உந்தல்களான தன்மைகளும் ஒன்றையொன்று, பாதித்து இறுதியில் உருவாக்குவதே வரலாற்று நிகழ் முறை' என்று கருதினார்.

டர்கோ (Turgot—1727-1781) என்னும் ஃபிரெஞ்சுப் பகுத்தறிவாளர் 'மனித உள்ளத்தின் வரலாற்று முன்னியக்கத்தைப் பற்றிய பிரவசனம்' என்னும் நூலில் மனிதன் சமயமரபு, மூட நம்பிக்கைகள் என்னும் நிலையிலிருந்து பகுத்தறிவு, விஞ்ஞான முறைக் கருத்துகள் என்னும் நிலைக்கு மாறுதல் வரலாற்று நிகழ் முறையின் பகுதி என்றார். அவர் கூறியவை காம்டின் சமயமரபு, தத்துவ, விஞ்ஞானமென்னும் மூவகைப் பாகுபாட்டை யொத்திருந்தன. டர்கோவையே 'வரலாற்றுத் தத்துவத்தின் தந்தை' என்று கருதவேண்டும் என்கிறார் மதிப்பீட்டாளர் கூச் (Gooch). கவுன்ட் கிளாடு ஹென்றி டி செயின்ட் சைமன் (1760—1825) என்பார் டர்கோவின் கருத்துகளைச் சற்று மாற்றி 'சமய மரபினின்றும் விஞ்ஞான உடன்பாட்டு அறிவியல் துறைக்கு மாறும் இயக்கம்' வரலாற்றின் முக்கியமான அமிசம் என்றார். அவர் கருத்துப்படி சமுதாய வளர்ச்சியை ஒரு தனிமனிதனின் உயிரியல் வளர்ச்சியோடு ஒப்பிடலாம். வரலாற்று நிகழ் முறையில் புரட்சிகள் முதலிய பெருமாறுதல்களும் நிகழ்ச்சிகளும் ஏற்படுவதை மனிதன் உடல் வளர்ச்சி நிகழ்முறையில் வளர்ச்சிக்கால மாறுதல்களோடு ஒப்பிடலாம் என்பது அவர் கருத்து.

அந்துவான் நிகோலஸ் கண்டார்ஸெ (1743-1794) என்னும் ஃபிரெஞ்சு அறிஞர் கணிதத்தில் வல்லுநர்; ஃபிரெஞ்சுப் புரட்சியில் கலந்துகொண்டவர். அவர் 'மனிதன் உள்ளத்தின் முன்னியக்கத்தைப்பற்றிய வரலாற்று உரு' என்னும் அரிய நூலை இயற்றினார். அவர் 1794-ல் அவரது அரசியல் பகைஞர்களால் சிறையிருத்தப் பெற்றார். அவர் சிறையிலேயே நஞ்சுண்டு இறந்தார்.

கண்டார்ஸெ தனியாரின் திறமைகள் திரண்டு சமுதாய முன்னியக்கத்தை ஆக்குகின்றன என்னுங் கருத்துடையர். அவர் முன்னியக்கத்தில் மிகுந்த நம்பிக்கையுடையவர். அவர் வரலாற்றைப் பெரு வீரர்கள் ஆக்குகின்றனர் என்னும் கொள்கையை மறுத்துப் பொதுமக்களும் வரலாற்றை யுருவாக்குகின்றனர் என்று கருதினார். இவ்வகையில் அவர் மார்க்ஸின் கருத்தை ஓரளவு முற் கூறினார் எனலாம்; ஆயினும் அவர் கம்யூனிசத்தைப் போன்ற கோட்பாடுகளை எண்ணியதாகத் தெரியவில்லை, வால்ட்டேர், டர்கோ என்போர் கருத்துகளோடு அவர் கோட்பாடுகள் ஓரளவு ஒத்திருந்தன.

கோத்தே (Goethe) (1749—1832) என்பவர் மாபெரும் ஜெர்மானியக் கவி. அவர் மனித வரலாற்றைப்பற்றிய நம்பிக்கையற்ற கோட்பாடுகளைக் கொண்டவர்; 'துருவித் துருவி ஆராய்ந்தாலும்

வரலாற்றில் நாம் காண்பது என்ன? மனிதனைத் துயரக்கடலில் ஆழ்த்தும் கதையையே காண்கிறோம், மக்கள் அச்சத்தாலும் துன்பத்தாலும் என்றுமே வருந்தியவர்கள்' என்றார் அவர். வலராறு என்பது அர்த்தமற்றது என்று ஒரு கருத்தையும் அவர் தெரிவித்தார். அவர் ஷில்லர் என்பார்க்கு எழுதிய ஒரு கடிதத்தில் 'நெப்போலியன் போன்றாரது எழுச்சியை வரலாறு விளக்க முடிய வில்லை' என்று குறிப்பிட்டார்.

ஹேகல் (ஜார்ஜ் வில்லியம் பிரெடரிக்—1770-1831) என்பார் ஜெர்மானியத் தத்துவர்களுள் கான்ட்டிற்கு நிகராகக் கருதக் கூடிய தகுதியுடையவர். அவர் பெர்லின் பல்கலைக் கழகத்தில் தத்துவப் பேராசிரியராகப் பல்லாண்டு அமர்ந்திருந்தார். மாண வர்களுக்கு வகுப்பறையில் போதிக்கும் திறன் குன்றியவராயினும் அவருடைய ஆராய்ச்சிக் கட்டுரைகளைக் கற்றற்கே பல மாண வர்கள் அவரைச் சூழ்ந்திருந்தனர். அவர் வரலாற்றுத் தத்துவத் தைப்பற்றிச் சொற்பொழிவுகள் ஆற்றினார். அவர் விவாதக் கோட்பாட்டை உருவாக்கியவர். அக் கோட்பாட்டின்படி, நிறுவுகை (thesis) எதிர் நிறுவுகை (anti thesis), சம நிறுவுகை (synthesis) என்னும் முறையில் வரலாற்று நிகழ்முறை செயற்படு கின்றது. அதாவது வரலாற்றில் எந்த ஒரு நிலையும் அதற்கெதி ரான இன்னொரு நிலையைப் பிறப்பிக்கின்றது. இவ் விரண்டின் மோதலால் பிறப்பது சம நிறுவுகை அல்லது மூன்றாவதொரு நிலை. அந் நிலை பிறகு தானே ஒரு நிறுவுகையாகித் தனது எதிர் நிறுவுகை யைத் தோற்றுவித்து அவ்விரண்டின் மோதலால் மற்றுமொரு சம நிறுவுகையை உருவாக்குகின்றது. இவ்வாறே வரலாறு உருவாகிக் கொண்டு வருகின்றது: இது ஹேகலின் விவாதக் கோட்பாட்டின் சுருக்கம். இது கார்ல் மார்க்ஸால் பயன்படுத்திக்கொள்ளப்பட்ட ஒரு கொள்கை. டாயின்பீ சவால் (Challenge), எதிரேற்றல் (Response) என்னும் இருவகை நிகழ் முறைகளும் வரலாற்றுப் போக்கை நிருணயிக்கின்றன என்றபோது ஏறத்தாழ விவாதக் கோட்பாட்டை யொத்த ஒரு கொள்கையையே விவரித்தார்.

ஹேகல் கருத்துப்படி வரலாறு 'அறிவு' டைய ஒரு நிகழ்முறை; இன்னுங் கூறப்போனால் வரலாறு ஒன்றற்குத்தான் அறிவுண்டு; தனி மனிதர்க்கு இல்லை. அன்றியும் 'தேசம்' என்பதுதான் வரலாற்றின் 'ஒற்றை' (unit). தலைவர்கள் தேசிய சக்திகளால் இயற்றப்பட்டவர்கள்; இயக்கப்படுபவர்கள்; அவர்கள் தாமே இயங்குபவர்களல்லர். தலைவர்கள் தேசிய சக்திகளின் கருவிகளே யாவர். இவ்வாறு ஹேகல் தேசத்தை உயர்த்திக் கூறியது கூட்டாண்மைக் கோட்பாட்டாளர்களான மார்க்ஸ், ரோஸன் பெர்க் என்பார்க்கு வழிகாட்டியாக அமைந்தது.

ஸிமாண்டி டி ஸிஸ்மாண்டி (1773—1842) என்பார் ஸ்விட்ஜர் லாந்துக்காரர். அவர் இடைக்காலத்து இத்தாலியக் குடியரசு களின் வரலாற்றை யியற்றினர்; அந் நூலில் அந் நகர-அரசுகளின் சுதந்திரப் போக்கை வற்புறுத்தி வரைந்தார். 'படைமானியக் காலத்துத் தாழ்நிலையிலிருந்து வளர்ந்தது இத்தாலிய மானுடச் சுதந்திர தாகம் என்பது ஸிஸ்மாண்டியின் கருத்து. அவர் 'ஃபிரஞ்சுக்காரர்களது வரலாறு' ஒன்றையும் இயற்றினர், அதுவே முதன்முதல் இயற்றப்பெற்ற 'ஃபிரான்ஸின் முழுவரலாறு'. ஷட்டோ பிலோன் (1768—1848) என்பார் 'புரட்சிபற்றிய கட்டுரை' யொன்று இயற்றினர். ஃபிரெஞ்சுப் புரட்சி நோக்கி லிருந்து அந் நூல் இயற்றப்பட்டது; ஃபிரெஞ்சுப் புரட்சி என்பது வரலாற்றில் தவிர்க்கமுடியாததொரு நிகழ்ச்சி என்பது அவர் கருத்து; அன்றியும் அந் நூலில் அவர் கிறித்துவ சமயத்தையும் திருச்சபை அமைப்பையும் தாக்கினர்; ஆயினும் கி. பி. 1799-ல் அவருடைய கருத்து புரட்சிகரமான மாறுதலடைந்தது. அவர் கிறித்து சமயத்தைப் பெரிதும் ஆதரிக்கலாயினர். 'தியாகிகள்' என்று அவர் இயற்றிய நூலில் கிறித்துவசமய குரவர்களின் பெருமையைப் பாராட்டி எழுதினர். ஃபிரெஞ்சு நாட்டுக் கருத் துலகில் கற்பனைக் கலை மரபினை யுருவாக்கியவர் என்பது அவர்க் குரிய புகழ்ப் பெயர்களில் ஒன்று.

மதாம் ஸ்டேல் (1766-1816) என்பவர் ஃபிரெஞ்சுப் புரட்சிக் காலத்திற்கு முன்பு அந் நாட்டில் நிதி அமைச்சராக இருந்த நெக்கர் (Necker) என்பாரது மகள். அவள் வரைவுகள் ரூஸோ வின் செல்வாக்கால் பிறந்தவை. அவள் வரைவுகளின் செல்வாக் கால் ஆங்கிலேயத் தத்துவ அறிஞரான கார்லைல் கருத்துகள் பல உருவாயின. அவள் 'ஜெர்மானிய வரலாறு' ஒன்று இயற்றினள். தியரி (Thierry—1795–1856) என்பார் 'நார்மானியர் இங்கி லாந்தை வென்ற வரலா'ற்றை எழுதினர்; அன்றியும் மொரோ விஞ்சியர் ஃபிரான்ஸில் ஆண்ட காலத்துக் கதைகளையும் தொகுத்து வரைந்தார். அவர் பிரபுக்கள் குலத்தின் செல்வாக்கை எதிர்த் தார்; அவர் இடைநிலை வகுப்பாரையும், குடியரசு கோட்பாட்டை யும் ஆதரித்தார்.

ஜூல்ஸ் மிஷலெ (Jules Michelet—1798-1874) இயற்றிய 'ஃபிரான்ஸின் வரலாறு' புகழ் மிக்க நூலாகும். அவரை ஆங்கி லேய வரலாற்றுளரான எட்வர்டு கிப்பனோடு ஒப்பிடுவர். அந் நூலை அரிய வரலாற்றிலக்கியமெனக் கூறலாம். அவர் தமது நூலில் ஃபிரெஞ்சுப் புரட்சிக் கோட்பாடுகளை ஆதரித்தார்; அந் நூலினை, உரைநடையில் இயற்றப்பட்ட வரலாற்று இலக்கியம்

என்பர்; அதில் ஃபிரெஞ்சுப் புரட்சியை 'மனித சுதந்திர நாடகம்' என்று அவர் வருணித்தார். 'அகஸ்டின்தியரி வரலாற்றை யொரு தொடருரையாகக் கருதினர். கிஸோ அதனை ஒரு விரிவான விளக்கமென்பார்; ஆனல், நான் அதனை ஒரு மறுபிறப் பென்பேன்' என்ருர் அவர். 'அவரது ஃபிரான்ஸ் வரலா'ற்றில் அவர் கையாண்ட நடை அவரை ஃபிரெஞ்சு வரலாற்ருளர்களில் முதல்நிலைக்கு உயர்த்திற்று. அந் நூலில் திருச்சபையின் தீமைகளை மட்டுமன்றி அச் சபையையே கண்டித்தார். மிஷலேயை இலக்கியச் சிறப்புடைய கற்பனைத்திறன் சார்ந்த அரிய வரலாறு இயற்றிய வராகக் கருதலாம்; இவ்வகையில் அவர் தாமஸ் கார்லைலோடு ஒப்பிடத்தக்கவர்; ஆனல் அவ் விரு வரலாற்ருளரிடையே முக்கிய மான வேறுபாடு யாதெனில், கார்லைல் பொதுமக்களை அறிவில் லாத வெறுங் கூட்டமாகக் கருதினர்; ஆனல், மிஷலேக்குப் பொது மக்களது நிருணய சக்தியில் மிகுந்த நம்பிக்கையுண்டு.

ருஷ்யாவில் கற்பனைக் கலைவகை வரலாற்று வரைவியல் மரபு நிகோலாஸ் கரமயின் (1766–1826) என்பாரால் மிகுதியும் போற் றப்பட்டது. அவர் 'கி. பி. 1611 வரை ருஷ்ய வரலாற்'றினை இயற்றினர். அதில் ருஷ்யருடைய கீழைநாட்டுப் பண்புகளை வற் புறுத்தியும், கீழை ஐரோப்பியக் கிறித்துவத் திருச்சபையின் தனித் தன்மையைப் போற்றியும் அவர் நூலியற்றினர். அவர் மேனடு களின் அறிவியல் சாதனைகளைக் கண்டித்து மதிப்பீடு செய்தார்.

ஜோஹான் காட்லிட் ஃபிக்டெ (Johan Gottliet fickte, 1762—1814) என்னும் ஜெர்மானியத்தத்துவர் வரலாற்றின் நிகழ் முறையை ஐந்து காலங்களில் பகுத்தமைத்தார்: (1) அறியாமைக் காலம் (இக்காலத்தில் இயற்கை உந்துதல்கட்கு உட்பட்டு மக்கள் செயற்படுவரேயன்றி, பகுத்தறிவினல் செயலாற்ற மாட்டாத வராவர்); (2) ஆதிக்கக்காலம்; ஆதிக்கம் செலுத்தும் அதிகாரி களின் சக்திக்குக் குருட்டுத்தனமாகப் பெரும்பான்மை மக்கள் ஆட்பட்டு நிற்கும் காலம்; (3) பகுத்தறிவு, பகுத்தறிவின்மை ஆகிய இரண்டினிடையே வேறுபாடு காணமல், அவ் வேறுபாட் டினைப் பொருட்படுத்தாமல் இருக்கும் காலம்; (4) விஞ்ஞானக் காலம்; (5) கலைக்காலம். ஏனைய மாந்தரினும் ஜெர்மானியர் சிறந்தவர் என்னும் கற்பனைக் கருத்தில் அவருக்கு நம்பிக்கை உண்டு. இத்தகையோர் கருத்துகளால் பிற்காலத்தில் ஹிட்லர் முதலியோருடைய 'ஜெர்மானிய ஆரியச் சிறப்பு'க் கொள்கைக்கும் வழிபிறந்தது எனலாம்.

வில்லியம் பிரெடரிக் ஷிலெகல் (1772—1829) என்பார் 'வரலாற்றுத்தத்துவம்' என்னும் நூலை இயற்றினர். அதில் அவர்

கிறித்துவக் கோட்பாட்டையே வரலாற்றுத் தத்துவமாகக் கூறினர். ஆதியில் தோன்றிய தர்சனத்திலிருந்து, இடையில் தோன்றிய கிறிஸ்து வாழ்க்கை வழியாக, இறுதியில் நிகழவிருக்கும் மானுட குல மோட்சம் வரையில் நிகழ்வனயாவையும் வரலாற்று நிகழ்முறையின் மூன்று முக்கியக் கட்டங்கள் என்னும் கருத்து அவரது வரலாற்றுத் தத்துவமாக அமைந்தது.

பிரான்ஸ்வா லாரென்ட் (1810—1887) என்பார் 'மனிதகுல வரலாற்றுக் கட்டுரைகள்' என்னும் நூலைப் பதினெட்டுப் பகுதிகளில் இயற்றினர். அந் நூலைப் பிரபஞ்ச வரலாறு எனலாம். அவர் விஞ்ஞான வல்லுநராயினும், சமய நோக்கிலிருந்தே வரலாற்று நிகழ்ச்சிகளின் பொருண்மையைக் கண்டார்; பகுத்தறிவு, அறிவொளிக் காலங்களிலும் அவர் சமயப் பொருண்மையையே கண்டார்; அப் பொருண்மையின் முக்கியமான பகுதி ஊழ்வினைக் கோட்பாடு. நிருணயிக்கும் ஊழ்வினையொன்று வரலாற்றையியக்குவதாக அவர் கண்டார். அவர் தேசியத்தின் தேவையையும் கூறினர்.

ஹீன்ரிக் வான் டிரீஷ்கெ (Heinrich Von Treitschke) (1834—1896) 'பத்தொன்பதாம் நூற்றுண்டு ஜெர்மானிய வரலாற்'றை இயற்றினர்; அந் நூலை மெக்காலே, மிஷெலெ முதலியோர் வரலாறுகளுக்குச் சமமாகக் கருதலாம். தற்கால ஜெர்மனி உருவாதற்குக் காரணமாயிருந்த சக்திகளை அவர் விளக்கினர்.

அகஸ்டு காம்ட் (Auguste Comte—1798-1857) என்னும் ஃபிரெஞ்சு அறிஞர் ஒரு கணிதத்தத்துவர். அவர் அறிவொளி இயக்கத்தில் ஈடுபட்டவர். 'உடன்பாட்டுக் கோட்பாட்டுத்தத்துவம்' என்னும் மிக முக்கியமானதொரு நூலை அவர் இயற்றினர். அது ஆறு பகுதிகளில் வெளியாயிற்று. உடன்பாட்டுத் தத்துவம் என்பது அனுபவ முறையில் கண்டதே உண்மை, சோதனை முறையில் காணப்பட்டதே உண்மை என்னும் கோட்பாடு. இம்முறை விஞ்ஞானம், கணிதம் முதலிய அறிவியல் துறைகளுக்கேயன்றி வரலாறு முதலிய மானுடத்துறைகளுக்கும் பொருந்தும் என்பது அக் கோட்பாட்டின் தற்கோள். காம்ட்டின் 'சமுதாயக் குழு' ஹேகலின் 'தேசம்', மார்க்ஸின் 'உழைப்பாளிக்குழு' என்பவை யொன்றேடொன்று தொடர்புடையவை. ஆங்கிலத்தில் 'ஸோஸியாலஜி' (Sociology) என்னும் சொல் 'சமுதாயவியல்' என்பதற்குப் பரியாயமாகும்; அச் சொல்லை முதன்முதல் ஆண்டவர் காம்ட் தாம். ஆன்ம தத்துவம், சமய மரபு என்பவையெல்லாம் அழிந்து போனபின் உடன்பாட்டுத் தத்துவமே வரலாற்றில் எஞ்சிநிற்கும் என்பது அவர் கருத்து.

வில்லியம் டில்த்தி (1833—1911) என்னும் ஜெர்மானிய அறிஞர் ராங்கேயின் செல்வாக்கிற்குட்பட்டு வரலாற்றுத் தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபட்டார். அவர் 'மானுட ஆராய்ச்சிகள்' என்னும் நூலில் வரலாற்றுத் தத்துவத்தை ஆய்ந்தார். அவர் விஞ்ஞான ஆய்வுகளின் முறையியலுக்கும் வரலாற்று ஆய்விற்குரிய முறையியலுக்கும் உள்ள வேறுபாட்டினை நிறுவினர். அவர் கோட்பாடுகளை ஆய்வதில் இருவகை நிலைகள் உள என்று கண்டார். (1) தனியன்களைச் சேகரித்து அமைத்தல்; (2) அவற்றிற்குப் பொருள் கண்டு பொதுக் கொள்கைகளை நிறுவுதல். வரலாற்றுப் பிரச்சினைகளை ஆய்ந்து உணர்தல் என்னும் நிகழ் முறையின் தன்மையினை விளக்கிய பெருமை டில்த்திக்கு உண்டு. ஒரு பொருளைப் புறநிலை வகையான் உணர்தலும், அதற்கு ஒரு பொருண்மை கற்பித்தலும் என இருவகை அறிநிலைகள் உள என்று அவர் கண்டார். அன்றியும் பழைமைக்குப் புத்துயிர் அளிக்கும் திறமை ஒரு வரலாற்றுளனுக்கு இயல்பில் அமைந்து கிடத்தல் வேண்டும் என்று அவர் கூறினர். வரலாற்றுச் சான்றுகளில் அமைந்து கிடக்கும் விவரங்களுக்கும் அவற்றை வரலாற்றுளன் மதிப்பீடு செய்வதற்கும் இயற்கையிலேயே ஒரு தொடர்பு உண்டு. மதிப்பீடு என்பதே ஒரு கலையாக வளர்தற்கு டில்த்தி பெரிதும் உதவினர். ஓர் ஆசிரியனது படைப்புகளை அவனைக் காட்டிலும் அவனை மதிப்பிடுவோன் நன்கு உணரவும் அறியவும் முடியும் என்னும் கருத்து வளர்தற்கும் அவர் கொள்கைகள் உதவின.

லியோ டால்ஸ்டாய் (1828—1910) 'போரும் காதலும்' என்னும் அரிய வரலாற்று நவீனத்தை இயற்றியவர். அதில் வரலாறு பற்றிய பல கருத்துகளை அவர் கூறியுள்ளார். அவர் கொள்கைப்படி மனிதர்கள், நிலையங்கள் என்பவற்றைவிட வரலாற்றுச் சக்திகளே மிக முக்கியமானவை. வரலாற்றுப் பெருமக்கள் சில சக்திகட்கு உட்பட்டுத்தாம் இயங்குகின்றனர் என்னும் கருத்து, கண்டிப்பான மதிப்பீட்டிற்கு ஆளாகக் கூடியது. அவர் வரலாற்று நிருணயத் தன்மைக்கும் மனிதனது சுய நிருணயத்திறமைக்கும் ஒரு வகைத் தொடர்பு கற்பித்தல் அவருடைய சாதனைகளில் ஒன்று. 'அவர் வரலாற்றுக் கோட்பாடு யாதெனில், மிகச் சிறு சிறு நிகழ்ச்சிகளில் அநந்தம் சேர்ந்துதான் வரலாற்று நிகழ்முறையாகின்றன' என்பது, டால்ஸ்டாய் தவிர்க்க முடியாமைக் கோட்பாட்டிற்கும் சுதந்திரத் துணிவாற்றலுக்கும் உள்ள தொடர்பினையும் விளக்கினர். அதாவது, புறநிலை நோக்காற் காணும்போது மனிதனுக்குச் சுதந்திரத் துணிவாற்றல் இலதென்பதும், அகநிலை நோக்கற் காணும்போதுதான் அஃதுளதாம் என்பதும் அவர் கோட்பாடுகள்.

பெனடெட்டோ குரோச்சே (*1866—1952*) என்பார் ஓர் இத்தாலியத் தத்துவர். அவர் மதிப்பீட்டாளர்; வரலாற்றிலும் தொல் பொருளியலிலும் அக்கறை கொண்டவர். அவருக்கு வரலாறே மிக உயர்தரத் தத்துவம். 'வரலாறு என்பதே வரலாற்றுளன் தன் மனத்தில் பழைமைக்குப் புத்துயிர் அளித்தல், மறுபடியும் உண்டாக்குதல்: பழைமைக்குப் பொருண்மை நிகழ் காலத்தில்தான் உண்டாகிறது; நிகழ்வு இறப்பை விளக்க முயல்வதுதான் வரலாறு' என்பவை அவர் கருத்துகள். வரலாறு விஞ்ஞானத்தைவிடக் கலையையே பெரிதும் ஒக்கும் என்றுர் அவர். விஞ்ஞானத் தனியன்களைப்பற்றிய கூற்றுகள் உண்மையும் அல்ல, பொய்ம்மையும் அல்ல; அவை பயனுடையவை—அத்துணையே, என்பதும் அவர் எண்ணம். ஆங்கிலேய வரலாற்றுளரான ஆர். ஜி. காலிங்வுட் என்பவர் அவரைப் பின்பற்றியவர்.

நைபூர் (Niebuhr, *1776—1831*) என்பவர் ஒரு டேனிஷ் வரலாற்றுளர்; அவர் ஜெர்மன் மொழியில் நூல்களியற்றிஞர். தற்கால விஞ்ஞான முறை வரலாறு வரைவியற் கோட்பாடுகளை ராங்கேக்கு நிகராக நிறுவிய பெருமை நைபூருக்கும் உண்டு. அவர் இயற்றிய மாபெரும் நூல் ரோமானிய வரலாறு. இவரது முன் மாதிரியின் செல்வாக்கிற் குட்பட்டவர்களில் ராங்கேயும் மாம்ஸனும் முக்கியமானவர்கள் எனில் இவரது பெருமையைக் கூற வேண்டா. பெரும்பான்மை ஜெர்மானிய வரலாற்றறிஞர்களைப் போல இவரும் வகுப்பறையில் பாடம் நடத்துமுறையை நன்கு கல்லாதவராயினும் மதிப்பீட்டு வரலாற்றுளர் என்னும் முறையில் மிகச் சிறந்தவர். அவரது 'ரோமானிய வரலாறு' என்னும் நூல் மெக்காலே முதலிய சிறந்த வரலாற்றுளர்களால் வரவேற்கப் பட்டது. 'ஓர் உண்மையான வரலாற்றுளர் என்பவர், தமது நூலை இயற்றி முடித்த பிறகு 'யானறிந்த அளவில் எனது நூலில் உண்மையென நான் காணுதது ஒன்றும் இல்லை என்று கூறும் நிலையில் இருத்தல் வேண்டும்' என்பது அவர் கருத்து. மயினிகெ என்னும் இன்னுமொரு ஜெர்மானிய அறிஞர் வரலாற்று இலக்கியல்களைச் சீரிய முறையில் ஆய்ந்தார். எட்வர்டு மேயர் (Meyer, *1855—1930*) என்பார் 'தொல்லுலக வரலாறு' ஒன்றினை இயற்றிஞர். 'இதுவரை உலகு கண்ட வரலாற்றுளர்கள் யாவருள்ளும் அவரே சிறந்தவர்' என்று பார்ன்ஸ் என்பவர் கூறுதல் சற்று மிகைக் கூற்றேயாயினும், அதில் பெரிய அளவு உண்மையுண்டு. அவர் கிரேக்க நாட்டு வரலாற்றினைச் சிறந்த முறையில் இயற்றியுள்ளார். 'ஐரோப்பிய வரலாறு ஈஜியன் கடலில் தொடங்குகிறது' என்பது அவரது புகழ்பெற்ற வாக்கியங்களில் ஒன்று.

தியடோர் மாம்ஸன் (1817—1903) ரோமானிய வரலாற்றினை இயற்றினர் யாவருள்ளும் மிகச் சிறந்தவர் எனில் அது மிகையன்று. அந் நாட்டு வரலாற்றை இயற்றும் முறையில் ஒரு புரட்சியே அவர் செய்தார் என்ப. அவர் இத்தாலிய வரலாற்றினை மூலச் சான்றுகளைக்கொண்டு விரிவாக இயற்ற வேண்டி, ரோமானியக் கல்வெட்டுகளை ஆய்ந்து தொகுத்தார். அவரது ரோமானிய வரலாறு மூன்று பகுதிகளில் இயற்றப்பெற்றது. கிரேக்க வரலாற்றிற்கு குரோட் (Grote) செய்த தொண்டு ரோமிற்கு மாம்ஸனால் செய்யப்பட்டது. மாம்ஸன் ஜூலியஸ் சீஸரையே வரலாற்றுப் பெருமகனாகக் கருதி வருணித்துள்ளார். 'பூரணச்சிறப்புடைய பெருமகன் சீஸரே' என்பது அவர் கருத்து. ஸாம்னேட், நேபிள்ஸ் கல்வெட்டுகளை அவர் பதிப்பித்தார், 'ரோமானியப் பொதுச் சட்டங்களைப்பற்றிய நூல் ஒன்று இயற்றினார். தியடோஸியஸின் சட்டத் தொகுப்பிற்கு ஒரு பதிப்பு ஒன்றும் அவரால் கொண்டுவரப்பட்டது. அவரது வரலாறியற்றும் சிறப்பு, அவர்தம் சட்ட அறிவிற்கும் நிபுணத்துவத்திற்கும் நிகரானது. 'தவறின்மை, எழுத்துச் சிறப்பு, கருத்துப் பெருமை' என்பவை அவரது வரைவுகளின் சிறப்பு அமிசங்கள்.

லிய பால்டுவான் ராங்கே (Ranke, 1795—1886) என்பார் 19ஆம் நூற்றாண்டு ஐரோப்பிய வரலாற்றாளர்கள் யாவருள்ளும் பெரும்புகழ் பெற்றவர். நைபூர், மாம்ஸன் என்னும் பெரியோர்கள் உள்பட ராங்கேக்கு அடுத்தபடிதான் என்று பிற்காலத்தார் கருதும் நிலையை எய்தியவர் அவர். அவர் தொடக்கத்தில் தத்துவம், சமயவியல் என்பன கற்றுத் தெளிந்தார். வரலாற்றில் நிகழ்ந்தது கூறல் என்பதே மிகச் சிறந்த உயர்பண்பு என்பது அவர் கருத்து. இயல்பாகவே எப் பிரச்சினையையும் புறநோக்காற் காணும் தன்மை அவருக்கு உண்டு. பொதுமை வகையால் நூலியற்றுவாரையும், இரண்டாம் நிலைச் சான்றுகளையும் அவர் மதித்தார் அல்லர். முதனிலைச் சான்றுகளைக்கொண்டு மட்டும் வரலாறியற்றப்படுவதோடு, அச் சான்று மூலங்களையும் தெளிவாக எடுத்துக்காட்டல் வேண்டும் என்பார் அவர். அவர் இங்கிலாந்து, ஃபிரான்ஸ், பிரஷ்யா, ஜெர்மனி முதலிய நாடுகளின் வரலாற்றை இயற்றினார்; அவர் 'போப்பாண்டவர்களின் வரலாறு' ஒன்று இயற்றினார்; அந் நூல் கலையுலகில் ஒரு வரலாற்றாளன் எய்திய சிறந்த சாதனை எனப்படும். அவர் 1880-ல், 85 வயதெய்திய பிறகு 'உலக வரலாறு' ஒன்று இயற்றுதற்குத் திட்டமிட்டு அதனைச் செய்தும் முடித்தார். 'வரலாற்றில் பொது இயக்கங்கள் என்பவை முக்கியமானவையாயினும், அவற்றிற்குப் பொருண்மையும் சக்தியும் அளித்தற்குப்

பெருமக்கள் தேவை' என்று அவர் கூறிய கருத்து, கார்லைலின் வர லாற்றுப் 'பெருமகன் கொள்கை'யை ஓரளவு ஆதரிக்கின்றது. அவர் நிகழ்ந்தது நிகழ்ந்தவாறே கூற முயன்றார்; பண்டைய 'உண்மை'களை எடுத்துக்கூறும்போது தற்காலச் சாய்கோள்களை அவற்றில் புகுத்தக்கூடாது என்பதைப் பிறருக்கு எடுத்துக் கூறிய தோடு தாமேயும் கடைப்பிடித்தவர்; உடனிகழ்காலச் சான்று களைக் கொண்டே வரலாறு இயற்றப்படல் வேண்டும் என்னும் கொள்கையினர்; வரலாறியற்றுதலை ஒரு 'விஞ்ஞானக் கலை'யாக உருவாக்கியவர். வரலாற்றாளர் என்று கூறிக்கொள்ளும் நம் யாவ ருக்கும் அவர் தலைவராக விளங்குகின்றார்' என்றார் கூச் (Gooch). ஆனால் அவரது 'உலக (பிரபஞ்ச) வரலாற்றினை எட்வர்டுட்மேயர் கடுமையாக எதிர் மதிப்பிட்டார். புறநோக்கினைப் பெரிதும் ஆதரித்த ராங்கே 'தாமேயும் சமயச் சீர்திருத்த இயக்கத்தைப் பற்றி ஆயும்போது லூதரைக் கதோலிக்க சமயத்தாருக்கு எதிராக ஆதரித்தார்; ஆதலால், புறநோக்கு என்பது முற்றிலும் தவிர்த்துக் கொள்ள முடியாத ஒரு மனநிலை என்பதாயிற்று; அதை அவரும் அறிந்தேயிருந்தார். அகநோக்குச் சற்றேனும் இருந்தே தீரும் என்னும் விவாதத்தைக் கிளப்ப வேண்டாம்; அது யாவரும் அறிந்ததே. ஆனால் புறநோக்கின் தேவையை யுணர்ந்து மேலும் மேலும் புறநோக்கினை வளர்த்துக்கொள்ள முயலவேண்டும். ஸர் வால்ட்டர் ஸ்காட் போன்ற 'வரலாற்று நவீன'ங்களை இயற்றியாரையும் அவர் கடிந்து கடுமையாக எதிர்த்தார்; அவர்கள் வரலாற்றின் தன்மையைக் கெடுத்துவிட்டனர் என்று குற்றம் சாட்டினார். அத்தகைய நூலியற்றுதல் 'இலக்கியத்திற்கு ஒரு வெற்றியே யாயினும், வரலாறு வரைவியலின் பெருநஷ்டம்' என்பது அவர் கருத்து.

ராங்கே, கருத்தரங்குகளை அமைத்து ஆங்கு நடைபெறும் ஆய்வுகள் வாயிலாகப் பாடங்கற்பித்தல் என்னும் முறையைப் பிரபலப்படுத்தினார். உலகு முழுதும் நாளடைவில் அம் முறை யைக் கைப்பற்றலாயிற்று. அவருக்கு வைட்ஸ், வான்ஸிபல் என்னும் அரிய மாணவர்கள் இருந்தனர். அவர்கள் பிற்காலத்தில் பெரு வரலாற்றாளர்களாக விளங்கியவர்கள். வைட்ஸ் ஜெர்மா னிய ஆதாரச் சட்ட வளர்ச்சி வரலாற்றினை இயற்றினார்; ஸிபல் 'ஜெர்மானியக் கோனாட்சியின் தொடக்கம்பற்றிய வரலாறு' ஒன்று இயற்றினார்; அன்றியும் முதற் சிலுவைப் போரைப்பற்றிய ஒரு நூலும், ஃபிரெஞ்சுப் புரட்சியைப்பற்றிய ஒரு நூலும் அவர் இயற்றினாராயினும், 'ஜெர்மானியப் பேரரசின் நிறுவனம்' என்று அவர் இயற்றிய நூலே மிகச்சிறந்தது எனலாம். அந் நூலில் அவர் பிஸ்மார்க்கைப் மிகப் புகழ்ந்தார்.

ஆஸ்வால்டு ஸ்பெங்ளர் (1880—1936) என்னும் ஜெர்மானிய வரலாற்றுத் தத்துவர் 'மேனடுகளின் தாழ்ச்சி' என்று ஒரு நூலை இயற்றினர். அது 1914-ல் தொடக்கப் பெற்று 1924-ல் பூர்த்தியா யிற்று. அது உடனேயே ஒரு பெருவரலாற்றுச் செந்நூலாகப் புகழ் பெற்றது. அவரது கொள்கை தவிர்க்க முடியாமைக் கோட்பாட் டோடு தொடர்புடையது. 'காரண—காரியத் தொடர்பினை விதி வெல்லும்; நாகரிகம் இறந்துபோயினும், பண்பாட்டின் விளைவுகள் மிஞ்சும்' என்பன அவரது கருத்துகள். அவர் ஒரு நிருணய வாதி; எதிர்காலத்தில் மேனடுகளின் ஊழ் இத்தன்மைத்தாம் என்று அவர் உறுதியாகக் கூறியதிலிருந்து அவர் கோட்பாடு விளங்கும். பல வேறுபட்ட பண்பாடுகள் அவ்வப்போது தோன்றி மறையும் தன்மையை விளக்க முயல்வதே அந் நூலின் கருத்து. பண் பாடுகள் திருகு-சுருள் முறையிலோ, வட்டமாகவோ இயங்குவன என்ருர் அவர். வரலாற்று நிகழ்முறையைப் பண்டைய, இடைக் கால, நிகழ்காலம் எனப் பிரித்தல் அவர்க்கு உடன்பாடன்று. விஞ் ஞான ஆய்வு முறை வரலாற்று ஆய்விற்குப் பொருந்தாது என்பதும் அவர் கருத்து. மேனுட்டுப் பண்பாடு அழியும் நிலையில் இருப்பதையும் அதன் அழிவைத் தவிர்க்க முடியாது என்றும் அவர் கருதினர்; அவர் ஜெர்மானியத் தோல்விகளை மேனுட்டின் அழிவாகவே உருவகித்துக்கொண்டார். அவர் செல்வாக்கால் டாயின்பீயின் கருத்துகள் உருவாயின என்னும் கருத்தை அவ் வாங்கிலேய வரலாற்றுளர் ஏற்றுக்கொள்வதில்லை. ஸ்பெங்ளர் கருத்துகளின் செல்வாக்கு அவரோடு நின்றுவிட்டது.

கார்ல் ஹீன்ரிக் மார்க்ஸ் (1818—1883) என்பார் ஒரு ஜெர் மானிய யூதர். அவர் 'விஞ்ஞான சோஷலிஸ'த்தின் தந்தை. இளவயதில் பெர்லினிலும், பிறகு லண்டனிலும் கல்வி பயின்ருர். சட்டம் பயில எண்ணியிருந்தவர் பிறகு அவ் வெண்ணத்தைக் கை விட்டு, வரலாறு, தத்துவம் என்னும் அறிவியல் துறைகளில் நாட்டம் செலுத்தினர். ஹெகல் என்னும் தத்துவரின் கருத்துகள் மார்க்ஸை மிகவும் பாதித்தன. அவர் 1845-லிருந்தே தொழி லாளர் இயக்கங்களை அமைத்து நடத்தத் தொடங்கினர். ஆதலால் அவர் பல நாடுகளைவிட்டுக் கடத்தப்பட்டார். அவர் பொருளா தாரம், சமூகவியல், வரலாற்றுத் தத்துவம் என்னும் பல துறை களில் கற்ருய்ந்து நூலியற்றினர். வரலாற்று நிகழ் முறை பொரு ளாதார உறவுகளால் நிருணயிக்கப்படும் என்பது மார்க்ஸின் கொள்கை. அவர் ஒரு நிருணயவாதி. வரலாறு என்பது ஆதி கால அடிமைநிலை, படைமானிய நிலை, முதலாளித்துவ நிலை, சோஷலிஸ நிலை என்பவை வாயிலாக அரசியல்—பொருளாதார —சமுதாய வீடுபேற்றினை யடையும் நிகழ்முறை என்று அவர்

கருதினர். அவரும் எங்கெல்ஸ் என்னும் பொருளாதார அறிஞரும் சேர்ந்து இயற்றிய நூல்கள் பொதுவுடைமைத் தத்துவத்தை விளக்கும் சாத்திரங்களாகக் கருதப்படுகின்றன. மார்க்ஸ் பெரும்பாலும் பொருளாதார—சமுதாயப் பிரச்சினைகளைப்பற்றியே நூலியற்றினராயினும், வரலாற்று நிகழ்முறையே பொருளாதார முறையியலால் உந்தப்படுவது என்று கூறிய அவர் கூற்று அவரை ஒரு நிருணயவாதியாக்கிற்று. வர்க்கப் போரின் இயக்கத்தால் தான் வரலாறு இயங்குகின்றது என்பது மார்க்சியம். விவாதக் கோட்பாட்டினை ஹெகலிடமிருந்து பெற்றுக்கொண்டு அதனைத் தமது கருத்துகளுக்கியைய மாற்றிக்கொண்டவர் மார்க்ஸ். அவரது கருத்துகள் ருஷ்ய கம்யூனிஸ்ட் புரட்சியை நடத்திய லெனின் முதலியோரை ஊக்கின. நிருணயவாதம் எல்லாமே அனுபவ முறையிலும் தருக்க ரீதியிலும் நிலைபெருது என்னும் பொது மதிப்பீட்டால் மார்க்சியம் அடிபட்டுப் போகின்றது. மார்க்ஸ் எழுத்துகளில் சமயம், தெய்வம், அறம் என்னும் கோட்பாடுகட்கு இடமில்லை; ஆதலால் அஃது ஓர் உலகாயதக் கோட்பாடு. அவர் வரலாற்றிற்கு நேரிடையாகப் பொருளீகை யொன்றும் செய்திலராயினும், அவர் கருத்துகள் வரலாற்றின் போக்கையே புரட்சிகரமான முறையில் மாற்றிவிடும் சக்தி வாய்ந்தவையாக இருந்தன.

பர்க்கார்ட் (Burckhard, *1818—1897*) என்னும் சுவட்ஜர்லாந்து அறிஞர் ராங்கேயின் மாணவர். அவர் 'மறுமலர்ச்சிப் பண்பாடு' பற்றிய நூல் இயற்றினர். இன்றும் அதுவே அப்பொருள்பற்றிய நூல்கள் யாவற்றுள்ளும் சிறந்ததாக விளங்குகின்றது. 'கிரேக்க நாகரிக வரலாறு' ஒன்றும் அவரால் இயற்றப்பட்டது. அவரது முன்நோக்கு லோவித் என்பவரால் புகழப்பெற்றது. 20ஆம் நூற்றுண்டு உலகு, சர்வாதிகாரிகளால் ஆளப்பெறும் என்று அவர் கூறியதை ஓர் உதாரணமாக எடுத்துக் காட்டுவர். பார்க்கார்ட்டின் உதாரணத்தைப் பின்பற்றி ஸைமண்ட்ஸ் (*1840—93*) என்னும் ஆங்கிலேய அறிஞர் 'இத்தாலியின் மறுமலர்ச்சி' என்னும் பொருள்பற்றி அரிய நூல் ஒன்று இயற்றினர்.

## (ஆ) இங்கிலாந்து

இங்கிலாந்தில் வரலாறு வரைவியல் நார்மானியர் வெற்றிக்குப் (*1066*) பிறகுதான் வளர்ந்ததெனினும் கி. பி. ஏழாம் நூற்றுண்டில் பெரு மதிப்பிற்குரிய பீடு (*672—735*) இயற்றிய 'ஆங்கிலேய மக்களின் சமய மரபு வரலாறு' ஐந்து பாகங்களில் இயற்றப்பட்டதை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். அவர்

அவ் வரிய நூலைப் பெரிய ஆராய்ச்சிக்குப் பிறகே இயற்றினர் அந் நூலில் சமயம், திருச்சபை முதலியவற்றைப் பற்றியே யன்றி அக் காலச் சமுதாயப் பழக்க வழக்கங்களைப்பற்றிய பல விவரங் களும் காணப்படும். அவர் கூறியுள்ள விவரங்கள் முற்றிலும் நம்பத் தக்கவையே. கி. பி. 12, 13ஆம் நூற்றாண்டுகளுக்குப் பிறகு இலத்தீன் மொழியில் பல நிகழ்ச்சிப் பட்டியல் நூல்கள் இயற்றப்பட்டன. அவற்றில் 'ஆங்கில—சாக்ஸானியர் நிகழ்ச்சிப் பட்டியல்' என்பதே முக்கியமானது; அஃது 1154 வரையுள்ள நிகழ்ச்சிகளைத் தொகுத்து ஆங்கில—சாக்ஸானிய மொழியில் கூறு கின்றது. அப்போது தொடங்கிய வரலாறு வரைவியல் உண்மை யான ஆங்கிலேய தேசியவரலாறு வரைவியலின் தொடக்கநிலையே யாம். கி. பி. 12ஆம் நூற்றாண்டைய முக்கியமான நிகழ்ச்சிப் பட்டியல் வரைவார் சிமியன் (டர்ஹம்) என்பவர். அவரிடம் பயின்ற அறிஞர்களில் ரிச்சர்டு (ஹெக்ஸம்) என்பவர் 'கொடிப் போர்' (Battle of the Standard) என்னும் வரலாற்றை இயற்றினர். ஏட்பர் (பன்னிரண்டாம் நூற்றாண்டினர்) அவர் காலத்து வர லாற்றை ஆறு பகுதிகளில் இயற்றினர்; அது கி. பி. 1112 வரை யுள்ள கதையைக் கூறிற்று. அந் நூலைத் தொடர்ந்து மாம்ஸ்பரி வில்லியம் என்பவர் அக் கால இங்கிலாந்து வரலாற்றை இயற் றினர். அவர் நடை சீரிது; அவர் முடிவுகள் செம்மைய. மான் மத் ஜாப்ரே (1100—1154) என்பவர். 'ஆங்கிலேய அரசர்களின் வரலாறு' என்னும் நூலைச் சுவைபட இயற்றினர். அவர் நூலில் பண்டைய பிரிட்டனின் மன்னர்களைப்பற்றி அறிகிறோம். அவர் லீயர் மன்னன், ஸிம்பலின், ஆர்தர் அரசர் என்போரைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். அதே நூற்றாண்டைச் சேர்ந்த நியூபர்க் வில்லியம் என்பார் கி. பி. 1066-லிருந்து 1198 வரையுள்ள பிரிட்டன் வரலாற்றை எழுதினர். அதில் மான்மத் ஜாப்ரேயின் நூலைக் கண்டனம் செய்தார்.

பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த மடத்து வரலாற்றாளர் கள் குழுவில் மாத்யூ பாரிஸ் என்பாரை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். அவர் வரலாற்றுத் தனியன்களை ஆய்ந்து தொகுத் தார்; அன்றியும், பொதுவிவகாரங்களை மதிப்பீட்டுக் கண்கொண்டு கண்டார். அக் காலத்தில் ஆங்கிலச் சட்ட நூலான 'ஆங்கில ஆதாரச் சட்டமும் பொதுச் சட்டமும்' என்னும் அரிய நூலை இயற்றிய ஹென்றி (பிராக்டன்) என்பவர் மூன்றாம் ஹென்றி மன்னரின் ஆட்சிவரலாற்றை இயற்றினர். அவருடைய சட்ட நூலைப் பிற்காலத்து வந்த சட்ட நூலாசிரியர்களான போலக், மெய்சிட்லண்டு என்பார் பெரிதும் போற்றிப் புகழ்ந்தனர்.

16, 17ஆம் நூற்றுண்டுகளில் நாடுகண்டவர்களின் குறிப்பு களைக்கொண்டு பல நூல்கள் இயற்றப்பெற்றன. அவற்றில் ஹாக்லூயிட், பர்ச்சாஸ் என்பாரது வரைவுகள் முக்கியமானவை; மற்றும் புகழ் பெற்றவை, ஆங்கில அரசி முதலாம் எலிஸபெத் காலத்தில் பல வரலாற்று நிகழ்ச்சிக் குறிப்பு நூல்கள் தோன்றி விளங்கின. அவற்றை இயற்றியோரில் எட்வர்டுஹால், ரபேல் ஹாலின் ஷெட், ஜான்ஸ்பீடு என்பாரை முக்கியமாகக் குறிப்பிடு தல் வேண்டும். அந் நூற்றுண்டுகளில் ஆங்கில நாடு ஒரு தேசமாக ஒருமைப்பட்டு வந்தமையால் அவ்ர்கள் வரைவுகளில் நாட்டுப் பற்று மிகுதியும் காணப்பட்டது. எலிஸபெத் காலத்து நிகழ்ச்சிக் குறிப்புகள் வரைந்தோரில் வில்லியம் காம்டென் (1551—1623) என்பவர் மிகச்சிறந்தவர். அவர் இயற்றிய 'எலிஸபெத் வரலாறு' குறிப்பிடத்தக்கது. அவர் 'பிரிட்டானியா' என்று இன்னு மொரு நூலியற்றினுர். அவர் தமது நூல்களை இலத்தீன் மொழி யில் இயற்றினுர். காம்டெனைத் தவிர ஜான்ஃபாக்ஸ் (John Foxe), ஸர் தாமஸ்மோர், ஜார்ஜ் காவன்டிஷ், ஸர் ஜான் ஹேவர்டு என்போரையும் வளர்ச்சியுற்றுவந்த ஒரு வரலாறு வரைவியல் மரபின் பிரதிநிதிகளாகக் கருதுதல் வேண்டும். ஸர் தாமஸ்மோர், காவன்டிஷ், ஹேவர்டு என்போரின் வரைவுகள் பிரிட்டிஷ் வர லாறு வரைவியற்கு நவீனகால அடிப்படையொன்றை அமைத்தன என்று கூறலாம். ஜான் லேலண்டு (John Leland, 1506—1552) என்பார் வரலாறு வரைவியற்றுறையில் மேற்கொண்ட முயற்சிகள் வியக்கத்தக்கனவாயும் நோதக்கனவாயுமிருந்தன. அவர் வரலாற்றுத் தொல்பொருள்களை அரிதிற் றேடித் தொகுத் தார். அவர் தமது முயற்சிகளைப்பற்றி இயற்றிய நூல் 1546-ல் முதன்முதல் பதிப்பிக்கப் பெற்றதாயினும் அது முற்றுப்பெறவே யில்லை. அவர் தமது முயற்சிகள் பயனளிக்காமற் போனமை பற்றி வருந்தி, வருத்த மேலீட்டால் பித்துப் பிடித்து இறந்து போனுர். அவர் தொகுத்த விவரங்களை 171012-ல் பிற்காலத் தார் மறுமுறை வெளியிட்டனர்.

ஷேக்ஸ்பியர் முதலிய எலிஸபெத்-கால நாடகாசிரியர்கள் பல வரலாற்றுப் பொருள்களை உள்ளீடாகக்கொண்டு அரிய நாடகங்கள் இயற்றினர். இவையும் பிற்காலத்து ஸ்காட் முதலி யோர் இயற்றிய வரலாற்று நவீனங்களும் இலக்கியத்துறையில் வரலாறு வரைவு முயற்சிகள் எனத்தக்கவை.

17ஆம் நூற்றுண்டில்தான் வரலாறு வரைவியற்கலை ஆங்கில மொழியில் முழுமையான உருப்பெற்றது. பேக்கன் இயற்றிய 'ஏழாம் ஹென்றியின் ஆட்சிக்கால வரலாறு' 1622-ல் பதிப்பிக்கப்

பெற்றது. அதன் நடை சீரிது என்பதோடுகூட, வரலாற்று நோக்கும் புதுமைவகையான் இயன்றது. அவர் இயற்றிய 'புதுமுறை' (Novum Organum) என்னும் சீரிய நூல் 1620-ல் வெளியாயிற்று. அதில் விஞ்ஞான, தத்துவ ஆய்வு முறைகள் புதிய முறையில் விளக்கப்பட்டுள்ளன.

பேக்கன் புகழ் அவரது வரலாற்று நூல்களைப் பொறுத்த தன்று. கி. பி. 1649-ல் ஹெர்பர்ட் பிரபு (ஷெர்பரி) என்பார் 'எட்டாம் ஹென்றியின் வாழ்க்கையும் காலமும்' என்னும் ஒரு நூலை இயற்றினர். அந் நூலில் அவர் முதனிலை ஆதார மூலங்களைப் பயன்படுத்தினர். தாமஸ் மோன் பவர் 'லாங் பார்லிமென்'டின் செயலாளராக இருந்தவர். அவர் கி. பி. 1641-ல் தொடங்கிய 'இங்கிலாந்துப் பாராளுமன்றத்தின் வரலாறு' என்ெருரு நூலை இயற்றினர். அதே காலத்தில் ஸ்பாட்டிங் வுட் என்பவர் 'ஸ்காட்லாந்துத் திருச்சபையின் வரலாறு' என்னும் நூலை ஆக்கினர். எட்மண்டு ஸ்பென்ஸர் என்னும் கவிஞர் 'அயர்லாந்தின் தற்கால நிலைபற்றிய ஒரு நோக்கு' என்னும் நூலை இயற்றினர். அதில் அவர் விஞ்ஞான மதிப்பீட்டு முறையைக் கைவிட்டுத் தொடருரையாக அகநோக்கோடு பல கருத்துகளைக் கூறினர்.

ஸர் வால்ட்டர் ராலே என்னும் புகழ் பெற்ற ஆங்கிலேயர் ஓர் அதிசய மனிதர். அவர் கருத்துலகிலும் செயலுலகிலும் நிகராகப் புகழ் பெற்றவர். அவர் தமது 50 ஆம் வயதில் உலக வரலாற்றை இயற்றத் தொடங்கி ஓரளவு வெற்றியும் கண்டார். அந் நூல் 'படைப்புக் கால'ந்தொட்டு கி.மு. 130 வரையுள்ள வரலாற்றைக் கூறுகின்றது. அதனை ஒரு வரலாற்று நூல் என்று கூறுவதினும் அரிய இலக்கியம் என்று கூறுதல் பொருத்த முடைத்தாம்.

அடுத்து நாம் கருத வேண்டுபவர் எட்வர்டுஹைடு, (கிளாரண்டன் பிரபு—1609–1647) என்பார். அவரை 'ஆங்கில வரலாறு வரைவியலின் தந்தை' என்று கூறலாம். அவர் ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகத்திற் பயின்று சட்டப்படிப்பை மேற்கொண்டு சட்ட நிபுணரானார். அவர் எழுதிய வரலாற்று நூல், இங்கிலாந்தில் 17ஆம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் நிகழ்ந்த உள்நாட்டுப் போரைப் பற்றியது. அது 'பெருங்கலகத்தின் வரலாறு' என்று பெயர் பெறும். அவர் முதலாம் சார்லஸ், இரண்டாம் சார்லஸ் என்னும் இரு ஆங்கில மன்னர்களின் நண்பர்; கிராம்வெல் கட்சியை எதிர்த்தவர்; உள்நாட்டுப் போரில் பங்கு கொண்டவர். மன்னர் கட்சி தோற்றதும் ஹாலந்துக்குச் சென்று தங்கியிருந்து மன்னராட்சி திரும்பவும்

ஏற்பட்ட பிறகு இரண்டாம் சார்லஸ் மன்னரோடு இங்கிலாந்திற்குத் திரும்பினர். அவர் தமது நூலை இரு கட்சிக்கும் பொதுவாகவே எழுதினர். அந் நூலில் தமது வாழ்க்கை வரலாற்றையும் சேர்த்தே எழுதினர். அதில் பல முக்கியமான வரலாற்றுப் பெருமக்களின் வாழ்க்கைச் சரிதங்கள் நன்கு இணைக்கப்பட்டுள்ளன. அவர் அந் நூலில் அக் கலகத்திற்குக் காரணமான சமயக் கருத்துகளையும் காரணங்களையும் விவரித்துக் கூறவில்லை என்பது அந் நூலைப்பற்றிய பொதுவான ஒரு மதிப்பீடு. ஆனால், அரசியல் காரணங்கள் முன்னுக்கு நின்றமையால் அவற்றை வைத்துக் கிளாரண்டன் பிரபு அந் நூலை இயற்றியதைப் பெருங் குறைபாடாகக் காணவேண்டுவதின்று; அன்றியும் நவீனகாலக் கோட்பாடுகளை அடிப்படையாகக்கொண்டு முதன்முதல் இயற்றப்பட்ட நூலாதலின் அதனைத் தற்கால ஆய்வு முறைகளைக்கொண்டு திறனாய்தல் தக்கதன்று. ‘பெருங்கலகத்தின் வாலாறு’ என்னும் அந் நூல் ஆங்கில வரலாற்று நூல்களில் முன்னணியில் நிற்பது; வரலாறு என்னும் வகையில் ஏற்புடைத்து, இலக்கியம் என்னும் முறையில் இன்புறுத்துவது என்று கூறுதல் பொருந்தும்.

17ஆம் நூற்றாண்டு இங்கிலாந்தில் நாட்குறிப்பு எழுதி வைத்த இருவரைப்பற்றிக் கருதுவோம். இந் நாட்குறிப்புகள் வரலாற்று முக்கியத்துவம் உடையவாதலால், ஈண்டுக் கருதப்படல் வேண்டும்; அவை உலகப் புகழ்பெற்ற நாட்குறிப்புகள். ஜான் எவலின் (1620—1706), ஸாமுவேல் பெப்பிஸ் (1633—1703) என்பாரே அவ் விருவர்; இவர்களில் முந்தியவர் பொது வாழ்க்கையில் ஈடுபட்டவர், பிந்தியவரது நாட்குறிப்பிலிருந்து அக் கால ஆங்கிலேயத் தனி மனிதர் ஒருவரின் அக வாழ்க்கையின் விவரங்கள் விளக்கமாகப் புலனாகின்றன. ஆங்கில நாட்டுச் சமுதாய வாழ்க்கையை அந் நாட்டு வரலாற்றின் ஒரு பகுதியாக அறிய விரும்புவோர் பெப்பிஸின் நாட்குறிப்பைப் பயன்படுத்தியேயாக வேண்டும். அக் குறிப்புகள் கற்க இன்பம் பயப்பவை. தனி மனிதர் வாழ்க்கையின் அக உண்மைகளைப் படம் பிடித்தாற்போற் காட்டுபவை. பெப்பிஸின் நாட்குறிப்பு உலகிலேயே மிகப் புகழ் பெற்றது எனலாம்.

இவர்களையடுத்து டேவிட் ஹியூம் (David Hume) என்பவரையறிதல் வேண்டும். ஹியூம் (1711—1776) ‘இங்கிலாந்து வரலாறு’ ஒன்றை இயற்றினர். அவரைப் பெருவரலாற்றாளர் வரிசையில் முதற்கண் வைத்தல்வேண்டும். கிளாரண்டனுக்கு அடுத்தபடியாகக் காலக்கிரமத்தில் வைத்து எண்ணத்தக்கவராயினும், பதினெட்டாம் நூற்றாண்டில் தோன்றிய அறிவொளி வரலாற்றாளர்

களில் அவரே காலத்தால் முந்தியவர். 1724-ல் வால்ட்டேர், 'இதுவரை ஆங்கிலேய வரலாறு வரைவியல் மரபில் சிறந்த ஆசிரியர் ஒருவரும் தோன்றவில்லை. அவர்களுடைய வரலாற்றை ராபின் (Rapin) என்னும் ஃபிரெஞ்சுக்காரர் இயற்ற வேண்டியிருந்தது' என்றார். ஆயினும், வால்ட்டேரின் செல்வாக்கே ஆங்கிலேய அறிஞரிடையே மிகுவதாயிற்று. அதன் விளைவாகவே டேவிட் ஹியூம் என்னும் தத்துவ-வரலாற்றாளர் இங்கிலாந்தில் தோன்றினார் எனலாம். இங்கிலாந்தில் அறிவொளி இயக்கத்தைத் தோற்றுவித்தவர் — அதாவது வரலாற்றாளரிடையே — டேவிட் ஹியூம்தாம் என்பதில் ஐயமில்லை.

ஹியூம், மற்றும் அவரது உடன்கால வரலாற்றாளரான ராபர்ட்ஸன் என்போர் இருவரும் ஸ்காட்லாந்தினர். ஹியூம் முதற்கண் ஒரு தத்துவரேயாவர். அவர் ஜூலியஸ் சீஸர் காலத்திலிருந்து ஏழாம் ஹென்றி வரை இங்கிலாந்தின் வரலாறு' என்னுமொரு நூலை இயற்றினார். அவர் தமது நூலை இயற்றுதற்கண் மிகுதியாகவோ ஆழ்ந்தோ வரலாற்று மூலங்களைப் பயன்படுத்தவில்லை யாயினும், அந் நூல் வெளியானவுடனேயே பெரும் புகழ் எய்தியது. அவர் வரலாற்று நோக்கில் தேவையான புற நோக்கை மேற்கொண்டதோடு, வரலாற்றுச் சார்பியத்தையும் வரலாற்றியத்தையும் புறக்கணித்தார். அவரது வரலாறு செவ்விய இலக்கிய நடை, பெருந் தத்துவநோக்கு, அறிவொளி நிலையினின்று வரலாற்றுத் தனியன்களைக் காண்டல் முதலிய தன்மைகளால் சிறப்புற்றது. அறிவொளி இயக்கத்தைத் தோற்றுவித்தவர்கட்கும் அதனைப் பின்பற்றியவர்கட்கும் பகுத்தறிவு என்பதே எப் பொருளைக் காண்பதற்கும் ஏற்ற கருவியாயிற்று; சமயமும், நம்பிக்கையும் அவர்களால் போற்றப்படவில்லை. அறிவொளி இயக்கத்தில் அகப்பட்டுக்கொண்ட ராபர்ட்ஸன், கிப்பன் போன்ற ஆங்கிலேய வரலாற்றாளர்கட்கும் இக் கூற்றுப் பொருந்தும்.

வில்லியம் ராபர்ட்ஸன் (1721—1793) என்பாரும் ஒரு ஸ்காட்லாந்தினர்; அவர் வரலாற்றுத் தனியன்களை உள்ளபடி எடுத்துரைக்கப் பெருமுயற்சி யெடுத்துக்கொண்டவர். அவரது நூலின் சிறப்பைக் கண்டுதான் கிப்பனும் தமது வரலாற்று நூலை எழுதப் புகுந்தார் என்று கூறுவர். அவர் பெரும்பாலும் அரசியல் வரலாற்று விவரங்களையே வரைந்தார். அவர் இயற்றிய நூல்களில் 'ஸ்காட்லாந்து வரலாறு' (1759), 'பேரரசர் ஐந்தாம் சார்லஸ் ஆட்சியின் வரலாறு' (1769), அமெரிக்க வரலாறு' (1777—1794), 'பண்டைய இந்தியாபற்றிய ஒரு கட்டுரை' (1791)

என்பவற்றைக் குறிப்பிட வேண்டும். அவரது 'ஐந்தாம் சார் லஸு'க்கு நிகரான வரலாற்று நூல் கிப்பன் வரைந்த நூலைத் தவிரப் பிறிதொன்றில்லை.

எட்வர்டு கிப்பன் (1737—1794) ஆங்கிலேய வரலாற்றுளர்கள் யாவருள்ளும் சிறந்தவர்; உலகம் கண்ட மாபெரும் வரலாற் றுளர்கள் எல்லோரினும் இணையற்றவர் என்றும் சிலர் கருதுவர். அவர் இளமையில் தாயை இழந்தவர்; இவரது தந்தை கண்டிப் பான தன்மையுடையவர்; தம் விருப்பப்படியே எல்லா விஷயங் களிலும் தம் மகன் நடந்துகொள்ள வேண்டும் என்று வற்புறுத்து பவர். கிப்பன் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் சேர்ந்து பயின்று ராயினும், அப் பல்கலைக்கழகத்தால் அவர் மிகுந்த பயனடைய வில்லை. அவர் முதலில் ஆங்கிலிகத் திருச்சபையைச் சேர்ந்தவரா யிருந்தும், பிறகு ரோமன் கத்தோலிக்கத் திருச்சபையைச் சார்ந்தார்.

கிப்பன் சுவிட்ஸர்லாந்திலுள்ள லாசேன் நகரில் சில காலம் தங்கியிருந்தார். அங்கு ஃபிரெஞ்சுத் தத்துவரான வால்ட்டேரின் தொடர்பு அவருக்கு ஏற்பட்டது. அதன் பிறகு அவர் கத்தோ லிக்க மதத்தினின்றும் விலகினுர்.

கி. பி. 1758-ல் லாசேனிலிருந்து திரும்பிவந்த கிப்பன் இலத் தீன் மொழியை நன்கு பயின்றுர்; அப்பொழுதே அவர் தொல் வரலாற்றில் ஈடுபடத் தொடங்கினுர். 1764-ல் சிறிது காலம் ரோமாபுரியில் தங்கியிருந்தபோது அப் புராதன நகரத்தின் பழைய கட்டடங்களின் இடிகரைகளைக் கண்டு வியப்புற்ற கிப்பன், 'ரோமானியப் பேரரசின் தாழ்ச்சியும் வீழ்ச்சியும்' என்னும் பொருள் பற்றி வரலாறு எழுத வேண்டும் என்று தீர்மானித்தார். கி. பி. 1774-லிருந்து 1782 வரை பிரிட்டிஷ் பாராளுமன் றத்திலும் அரசாங்கத்திலும் உறுப்பினராக அலுவல் பார்த்தார். ஆயினும், தாம் இயற்றப்போகும் பெருவரலாற்று நூல் வரை தற்குத் தேவையான கல்வியை எப்போதும் மேற்கொண்டிருந் தார். 1776-ல் அவரது 'ரோமானியப் பேரரசின் தாழ்ச்சியும் வீழ்ச்சியும்' என்னும் நூலின் முதற்பகுதி வெளியாயிற்று; அந் நூல் வெளியான உடனேயே கிப்பன் உலக வரலாற்றுளர்களில் முதலிடம் வகிக்கத் தகுதியுடையவர் என்பது நிறுவப்பெற்றது.

கிப்பன் அறிவொளி மரபின் சிறந்த பிரதிநிதி என்பது அப்போதே தெளிவாயிற்று. அவருடைய நூலில் குற்றங்கண்டு கண்டித்தவர்கள் இருவகையில் அதனைக் கண்டனம் செய்தனர். முதற்கண், அந் நூலில் கிறித்துவ சமய மரபினை ஏளனம் செய்யும்

வகையில் அவர் எழுதினர் என்பது; அடுத்து பைசாண்டியப் பேரரசரான கீழை ரோமானியப் பேரரசைப்பற்றி விரிவாக அவர் எழுதவில்லை என்பது. அறிவொளி நோக்கினின்றும் நூலி யற்றுவாரை அதற்குப் புறம்பான நோக்கால் கண்டனம் செய்தல் முறையுடைத்தா என்பது ஆய்தற்குரியது. சமய நம்பிக்கையில் நம்பிக்கையில்லாத அறிவொளி மரபைச் சேர்ந்த கிப்பன் கிறித்துவ சமயத்தைப்பற்றி அம் முறையில் எழுதியதில் வியப் பில்லை; அன்றியும் பைசாண்டியத்தைப் புறக்கணித்தார் என்றல், அவர் தாம் எழுதிய நூலில் பல்வேறு பகுதிகளை எந்த முறையில் அமைத்துக்கொண்டு எவ்வளவு வரையறுத்து எழுதவேண்டும் என்று நிருணயித்துக் கொள்ளும் உரிமை ஒவ்வோர் ஆசிரியருக்கும் உளதாதலின் அவ்வகையிலும் அவர் நூலில் குற்றங்காண்டல் தக்கதன்று என்க. அவரியற்றிய ரோமானிய வரலாற்று நூல் நடையிலும், பொருளிலும், ஆராய்ச்சித் திறனிலும் மூலங்களை எடுத்தாண்ட பெருமையிலும் நிகரற்று நிற்கின்றது.

பண்டைய கிரேக்க, ரோமானிய வரலாறுகளை வரைதலில் இங்கிலாந்தில் 19ஆம் நூற்றுண்டில் தோன்றிய அக்கறைக்குக் கிப்பன் இயற்றிய நூல் காரணமாக விளங்கவில்லை. ஜெர்மானிய வரலாற்றுளர்களான நைபூர் முதலியோரின் உதாரணங்களால் உந்தப் பெற்ற தாமஸ் ஆர்னல்டு, சார்லஸ் மெரிவேல், ஜார்ஜ் லாங், திரல்வால், ஜார்ஜ் குரோட் என்பாரது முயற்சிகள் பெரு வெற்றியடைந்தன. இத் துறையிலும் அந் நூற்றுண்டில் ஜெர் மானிய உதாரணமே முக்கியமாக விளங்கிற்று. மேற்கூறிய அறிஞர்கள் இயற்றிய நூல்களில் சார்லஸ் மெரிவேல் ஏழு பகுதி களில் தமது 'ரோமானிய வரலா'ற்றினை இயற்றினர்; திரல்வால் தமது 'கிரேக்க வரலாற்றை எட்டுப் பகுதிகளில் இயற்றினர். ஆயினும், இவர்கள் யாவரிலும் குரோட் என்பாரே மிகச் சிறந்து விளங்கினர்.

ஜார்ஜ் குரோட் (1794—1871) கிரேக்க வரலாற்றை மிக விரிவாகப் பன்னிரண்டு பகுதிகளில் இயற்றினர். அவர் கல்வித் துறையில் மிகவும் உயர்ந்த நிலைகளை வகித்தவர். இலண்டன் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராகவும், பிரிட்டிஷ் மியூஸி யத்தின் நிருவாகிகளில் ஒருவராகவும் அவர் இருந்துள்ளார். குரோட் லிபரல் கொள்கைகளில் ஈடுபாடுடையவர். பண்டைய அதீனிய மக்களாட்சியே வரலாறு கண்ட மிகச் சிறந்த ஆட்சி என்பது அவர் கருத்து. அதனைத் தமது நூலில் தெளிவுற எடுத்துக்கூறினர். அவரது கிரேக்க வரலாறு ஆதிகாலந்தொட்டு அலெக்ஸாந்தர் காலம் முடிய அந் நாட்டு வரலாற்றைக் கூறு

கின்றது. 18ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த தொல் வரலாற்றுய் வாளர்களின் ஆராய்ச்சிகள் 19ஆம் நூற்றுண்டில் புதுவகை வர லாற்று நூல்களை இயற்றுதற்கண் பெரும்பயன் அளித்தன. இனி, வரலாறு என்பது அரசியலார், அவர்கள் செயற்பாடுகள் என்பவையேயன்றிச் சமூக இயக்கங்கள், நிலையங்களின் தோற்றம் வளர்ச்சி, பொருளாதார உளவியல் உந்தல்கள் என்னும் கோணங்களிலிருந்தும் வரலாறு வரைவியல் மரபு தொடங்கிற்று. மதிப்பீட்டு முறைகள் மாறியதோடுகூட அவை விஞ்ஞான முறையில் புறநோக்கு வகையிலும் மேற்கொள்ளப்பட்டன. 'ஆங்கில-சாக்ஸானியர்களின் வரலாறு' இயற்றிய ஷாரான் டர்னர் (1767—1847) நிலையங்களின் வரலாற்றை இயற்றுதலில் ஒரு சிறந்த முன்னேடியாக விளங்கினுர்.

குரோட்டின் அறிவியல் செல்வாக்கிற்குட்பட்ட ஸர் ஜார்ஜ் வில்லியம் காக்ஸ் என்பவர் தாமும் ஒரு கிரேக்க வரலாற்றை இயற்றினுர். இருபது நூற்றுண்டு கிரேக்க வரலாற்றை ஏழு பகுதி களில் இயற்றியவர் ஜார்ஜ் ஃபின்லே (1799—1875) என்பார். இந் நிலையில் ஃபிரீமனின் (freeman) 'சிசிலி வரலாறு' ராபின்சனின் 'கீழை உலகின் ஐம்பெரும் முடியாட்சிகள்', மில்மனின் 'யூதர் வரலாறு' என்பவற்றைக் குறிப்பிடுதல் வேண்டும். 'இத்தாலியும் அந் நாட்டைப் படையெடுத்தாரும்' என்னும் ஒரு நூலை எட்டுத் தொகுதிகளில் தாமஸ் ஹாட்கின் இயற்றினுர்.

இனி ஹென்றி ஹாலம் (1777—1859) என்பாரைப் பற்றிக் காண்போம். அவர் 'இடைக்கால ஐரோப்பா' என்னும் ஒரு நூலை இயற்றினுர். அதில் இடைக்காலம் ஓர் இருண்ட காலம் என்னும் கருத்தை அவர் வலியுறுத்தியுள்ளமையை அவரது மதிப் பீட்டாளர்கள் எதிர்த்து விமர்சனம் செய்தனர். ஹாலம் ஒரு தருக்க சாத்திரி அல்லது விஞ்ஞானி போலத் தமது நூலை வகுத் தார். அதில் ஒரு கலைஞருக்கு இருக்க வேண்டிய நோக்குக் காணப் படவில்லை என்பது உண்மையே. 'பழைமையைப் பற்றிய அறிவு அவருக்குப் பூரணமாக உளதாயினும் அதனைப் பற்றிய உணர்வு அவருக்கு மிகக் குறைவு' என்பதொரு கருத்து.

ஹாலமின் புகழ் அவரியற்றிய 'ஏழாம் ஹென்றியின் காலந் தொடங்கி பிரிட்டிஷ் அரசியல் சட்ட வளர்ச்சி வரலாறு' என்னும் நூலைப் பொறுத்தேயுள்ளது. அந் நூலிலிருந்தும் அவரது பிற வரை வுகளினின்றும் வெளிப்படும் ஓர் உண்மை யாதெனில், ஹாலம் புரட்சிகரமான கருத்துகளைக் கூறுபவரல்லர், மிதமான, நடுநிலைக் கருத்துகளைக் கொண்டவர் என்பது. எட்டாம் ஹென்றி என்னும்

டியூடர் மன்னரை ரோமன் கத்தோலிக்கப் பிணைப்பினின்றும் இங்கிலாந்தை விடுவித்தவர் என்று ஒரு புறம் புகழினும், கொடுங் கோலர் என்று இன்னொரு புறம் இகழ்வார்; பதினேழாம் நூற்றாண்டில் அந் நாட்டில் நடந்த உள்நாட்டுப் போரை வேண்டாத போர் என்று ஒரு பால் கூறி, மன்னரது பரம்பரைத் தன்னாட்சியை எதிர்த்த பாராளுமன்றத்தைப் புகழ்வார். இவ்வாறு நடுநிலைக் கோட்பாடுகளைக் கூறியமை அவரது சிறப்பியல்பு. ஆயினும், பொதுவாக அவர் மன்னனது சிறப்புரிமைகளை எதிர்த்துப் பாராளு மன்றத்தின் உரிமைகளை ஆதரித்தே எழுதினார். அவர் கிராம் வெலை நெப்போலியனோடு ஒப்பிட்டு ஓர் அரசியல் குற்றவாளி யாக வருணித்தார். இங்ஙனம் இவர் கிராம்வெலைக் குறை கூறிய பான்மை இங்கிலாந்து வரலாற்று மரபு கார்லைல் காலம் வரையில் நடைமுறையில் இருந்தது. ஹாலம் இயற்றிய இம் மாபெரும் அரிய நூல் வெளியான உடனேயே பெரும் புகழ் பெற்றுவிட்டது. இன்றுவரை அப் புகழ் மங்காமல் இருந்துவருகிறது. ஆங்கிலப் பாராளுமன்றத்தின் வரலாற்றை இயற்றியவர்களில் தாமஸ் எர்ஸ்கின் மே என்பாரைக் குறிப்பிட வேண்டும். அவரது நூல் (1854) 'பாராளுமன்ற நடைமுறைகள்' என்று பெயர்பெறும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் பல சீரிய வரலாற்றாளர்கள் தோன்றினர். அவர்களில் பலர் விக் (Whig) கொள்கையினர்; வேறு பலர் டோரி (Tory) கொள்கையினர். விக் கோட்பாடுடையவர்களில் ஹாலம் சிறந்து விளங்கினாராயினும், இங்கிலாந்து வரலாற்றை விக் கோணத்திலிருந்து திறம்பட இயற்றிப் பெரும் புகழ் படைத்தவர்களில் மெக்காலேயே முதன்மையானவர்; இவருக்கு நிகர் பிறர் ஒருவருலமிர். தாமஸ் பாபிங்டன் மெக்காலே (1800—1858) இங்கிலாந்தில் லீஸ்ட்டர் ஷயரில் கி. பி. 1800-ல் ஜாக்ரி மெக்காலே என்பவருடைய மகனாய்ப் பிறந்தார். இவர் தந்தையார் அடிமைநிலை யொழிப்புப் போராட்டத்தின் முன்னணியில் நின்றவர். இவர் செல்வந்தர் குடும்பத்தில் பிறந்தவர்; உயர்தரக் கல்வி பயிலும் வாய்ப்புப் பெற்றவர். இயற்கையிலேயே நுண்ணறிவும் அபார நினைவாற்றலும் படைத்தவர். இவர் நினைவாற்றல் மிகுதியால் நூல்களை விரைவில் படித்துவிடுவார்; படித்த நூல்களை எழுத்துப் பிசகாமல் நினைவிலிருத்தித் திருப்பிக்கூறும் திறமை பெற்றவர். அன்றியும் செய்யுளே யாயினும் உரைநடையே யாயினும் ஆக்க இலக்கிய மாயினும் திறனாய்வாயினும் இலக்கியமாயினும் வரலாறாயினும் அவர் எழுதிய யாவையும் கற்றார்க்குச் சுவை பயப்பவை யாயின. பிற சிறார், ஆதாரப் பள்ளியில் சேர்ந்து நெடுங்கணக்குக் கற்றுக் கொண்டிருந்த வயதில் இவர் ஸ்காட் முதலிய பெருங் கவிஞர்

களைப் போலக் காவியம் இயற்றினர். மில்ட்டனுரின் 'சுவர்க்க நீக்கம்' (Paradies lost) என்னும் இதிகாஸம் முற்றிலும் மறைந்து போயினும் அடி பிறழாமல் தம்மால் திரும்ப எழுதிவிட முடியும் என்றார் அவர். இந் நினைவாற்றலேயன்றி அவர் வரைவுகள் யாவையும் செஞ் சொல்லால் அணிபெற்றன. ஆங்கில இலக்கியத் தாய் அவருக்கு ஏவல் கேட்டனள். ஷேக்ஸ்பியர், விவிலியம், மெக்காலேயின் கட்டுரைகள் என்னும் மூன்று நூல்கள் அம் மொழியில் இயற்றப் பெற்ற நூல்களில் யாவராலும் விரும்பிக் கற்கப்பட்ட மூன்று சிறந்த நூல்கள் எனப்படும்.

அவர் தமக்கு எட்டு ஆண்டுகள் நிரம்புமுன் 'உலக வரலாறு' ஒன்றை இயற்றி வைத்தார். தொல் ரோமானியக் கதைகளைச் செய்யுள் வடிவில் வடித்தார். அவர் உரைநடையில் முதன்முதல் இயற்றிய நூல் மில்ட்டனுரைப் பற்றிய அரிய கட்டுரை. கிளைவ், வாரன் ஹேஸ்டிங்ஸ் என்பாரைப்பற்றி அவர் எழுதிய கட்டுரை கள் இந்திய வரலாற்றோடு தொடர்புடையவை. அவர் 1830-ல் பாராளுமன்ற உறுப்பினரானார். அவரது சொல்லாற்றல் அவர் இலக்கியச் செம்மைக்குக் குறைந்ததன்று. லார்டு பென்டிங்கு இந்தியாவில் கவர்னர் ஜெனரலாக இருந்த காலத்தில் அவர் சட்ட உறுப்பினராக அமர்ந்திருந்தார். இந்தியாவில் ஆங்கிலக் கல்வி; குற்றச்சட்டம் என்பவற்றிற்கு அடிப்படையிட்டவர் அவர். அவருடைய அறிவாற்றல், சாதனைகள் முதலியவற்றை முழுதும் அறிந்துகொள்ளாத சிலர் அவரை உள்ளபடி மதிப்பிடத் தெரி யாமல் மயங்குவர்.

மெக்காலே வரலாற்றுத்துறையில் பலப்பல நூல்களை யாத்தா ராயினும் அவரது மிகச் சிறந்த புகழ்பெற்ற நூல் 'ஆங்கில வரலாறு' என்பதே. பியூரிட்டன் புரட்சியிலிருந்து நான்காம் ஜார்ஜ் காலம் வரையிலுள்ள ஆங்கிலேய வரலாற்றை எழுத விரும்பிய மெக்காலே அவ் வரலாற்றை மிக விரிவாக எழுதிவிட்ட மையால் அது அரை நூற்றாண்டு வரலாறாகவே நின்றுவிட்டது. ஆயினும், 17ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியின் வரலாற்றினை மிகச் சிறந்த இலக்கிய நடையில், விக் கட்சியினரின் கோணத்திலிருந்து எழுதப்பட்டது அந் நூல் ஒன்றே. இந் நூலின் பெருமையால் கிப்பனுக்குச் சமமான புகழை அவர் எய்தினர். விக் கோணத்தி லிருந்து நூலியற்றியமையும், மூலங்களைச் செவ்வனே பயன்படுத் தாமையும், நினைவாற்றலை மிகுதியாகப் பயன்படுத்தியமையும் அவர்மீது சுமத்தப்படும் குற்றச்சாட்டுகளாம். இவை யாவையும் உண்மையேயாயினும் அவரது 'இங்கிலாந்து வரலா'ற்றின் புகழ் என்றும் நிலைத்திருக்கும். விக் கட்சியின் கருத்துகளை மெக்காலே

முதலியோர் தமது வரலாற்று நூல்கள் வாயிலாகப் பரப்பியது போல டோரிக்கட்சிக் கருத்துகளை அவ்வாறு கூறியவர்களில் ஆர்ச்சி பால்டு ஆலிஸன் என்பவரைக் குறிப்பிட வேண்டும். இராணுவ வரலாற்றை எழுதியவர்களில் 'தீபகற்பப் போர் வரலாறு' இயற்றிய ஸர் வில்லியம் நேப்பியர் முக்கியமானவர். இ. ஏ. ஃபிரீமன் (1823—1892-ன்) 'நார்மானிய வெற்றி வரலாறு' குறிப்பிடத்தக்கது. ஆங்கிலேயரை ஒரு தேசத்தினராக ஆக்கிய பெருமை ஜெர்மானியப் படையெடுப்பாளர்களைச் சாருமேயன்றி நார்மானிய வெற்றியால் அது விளையவில்லை என்பது அவர் கருத்து.

அடுத்து, தாமஸ் கார்லைல் என்னும் வரலாற்றுளரது நூல்களைக் கருதவேண்டும். கார்லைல் (1795—1881) ஆங்கிலேய வரலாற்றுளர்களில் தலைசிறந்த மூவரான கிப்பன், மெக்காலே, கார்லைல் என்பாரில் ஒருவர். அவர் ஒரு தத்துவர். எமர்ஸன் முதலிய அறிஞர்களால் வியந்து பாராட்டப்பட்டவர். அவர் எழுதிய நூல்களுக்கு வரலாற்றியற் பெருமை, இலக்கியப் பெருமை, தத்துவக் கருத்துப் பெருமை என்பவை யாவையும் உண்டு. அவரது கருத்துகள், இலக்கிய நடை என்பவை இரண்டுமே மதிப்பீட்டாளர்களால் பலவகையாக விமர்சிக்கப்பட்டுள்ளன. அவரது நண்பரான ஜான் ஸ்டுவர்ட் மில் அவர் நூல்களை எவ்வளவு பெருமையோடு போற்றினரோ அவ்வளவு அவற்றை இழித்துக் கூறினரும் உண்டு. கார்லைல் இயற்றிய நூல்களில் ஃபிரெஞ்சுப் புரட்சி, வரலாற்றுப் பெருமக்களும் அவர்களை வழிபடுதலும், மகா ஃபிரெடரிக், கிராம்வெலின் கடிதங்களைப் பதிப்பித்தமை என்பவை சிறப்பாகக் கருதப்படும். இவை யாவற்றினும் சற்றும் ஐயத்திற்கு இடமின்றி 'ஃபிரெஞ்சுப் புரட்சி'யே மிகச் சிறந்த நூல். அப் புரட்சியின் வரலாற்றை அவரைப் போலத் திறமையோடு எடுத்தாண்டவர் வேறொருவருமிலர். வரலாற்றுப் பெருமக்கள்தாம் வரலாற்றை உருவாக்குகின்றனர் என்னும் கருத்தை வலியுறுத்திக் கூறிய கார்லைல் அப் புரட்சிக் காலத்தில் பெரும் பங்கேற்றவர்களைப்பற்றிப் பண்புச் சித்திரங்களை வரைந்துள்ளமை வியக்கத் தக்க முறையில் அமைந்துள்ளது. கார்லைலின் 'ஃபிரெஞ்சுப் புரட்சி' நூல் வெளியான உடனேயே உலகப்புகழ் பெற்றது. அப் புகழ் இன்று வரை மங்கவில்லை. அது என்றும் நின்றுநிலவும் தகைமைத்து. மில் கூறியவாறு அந் நூல் 'உரை நடையில் எழுதப்பட்ட ஒரு காவியம்'. அவர் கிராம்வெலின் கடிதங்களைப் பதிப்பித்தமையால் அக் காப்பாளரின் (Protector) பெருமை நன்கு வெளியாயிற்று. சிலர் கார்லைலை மெக்காலேயோடு ஒப்பிடுவர்; இவ் வொப்புமை ஏற்றுக்கொள்ளத் தக்க

தன்று; ஏனெனில், அவ் விரு வரலாற்றுளர்களுடைய இலக்கிய நடை, வரலாற்றுத் தத்துவம் என்பவையெல்லாம் மிக வேறுபட்டவை.

கார்லைலை அடுத்து ஜேம்ஸ் ஆன்டனி ஃபிரூடு (1818—1894) என்பவர் 19ஆம் நூற்றுண்டு ஆங்கில வரலாற்றுளர்களிற் புகழ் பெற்றவர். அவர் கார்லைலின் வாழ்க்கை வரலாற்றை இயற்றினுர். ஆக்ஸ்ஃபோர்டு இயக்கத்தின் ஆதாரமாக இருந்த நியூமன் என்பாரோடு அவர் தொடர்புகொண்டிருந்தார். அவர் இங்கிலாந்து வரலாற்றை வுல்ஸியின் வீழ்ச்சியிலிருந்து ஸ்பானிய ஆர்மடாப் போர்வரை இயற்றினுர். அந் நூலில் ஃபிரூடு டியூடர்களைப்போற்றி ஸ்டூவர்ட்டுகளைக் குற்றங்கண்டார்; ஆங்கிலச் சமயச் சீர்திருத்தத்தை ஆதரித்துப் புகழ்ந்தார். அவர் எட்டாம் ஹென்றியைப் பற்றி எழுதியுள்ளமை, மெக்காலே நீங்கலாகப் பிற வரலாற்றுளர் யாவருடைய வரைவுகளிலும் மிகச் சிறந்தவை. வரலாற்றுப் பெருமக்களை வழிபடுதல் வரலாற்றுளர் செயற்பாலதன்று என்னும் கருத்துடைய மதிப்பீட்டாளர்கள் ஃபிரூடின் இங்கிலாந்து வரலாறு கார்லைலின் செல்வாக்கால் பீடிக்கப்பட்டது என்பர். அவர் நூல் பன்னிரண்டு பகுதிகளில் இயற்றப்பெற்றது. ஃபிரீமன் என்னும் இன்னுமொரு வரலாற்றுளர் ஃபிரூடைக் கண்டித்து மதிப்பிட்டார்; அவர் கருத்துப்படி ஃபிரூடு மூலங்களைச் சரிவர ஆராயவில்லை; உண்மையைச் சான்றுகொண்டு நிறுவ முற்படவில்லை. இக் குற்றச்சாட்டுகளை ஃபிரூடு பெருந்தன்மையோடு நிராகரித்தார். அவரது '16ஆம் நூற்றுண்டு ஆங்கில மாலுமிகள்' என்னும் நூல் புகழ் பெற்றது. வரலாற்றை இலக்கிய வகையில் எழுதும் மரபு ஃபிரூடோடு முடிவுற்றது எனலாம். ஆயினும் இருபதாம் நூற்றுண்டிலெழுந்த ஜார்ஜ் மெக்காலே டிரெவிலியன் அம் மரபைப் போற்றினுர், அதனை யொட்டித் தமது அரிய நூல்களை இயற்றினுர்.

ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகத்தில் நவீனகாலப் பேராசிரியராக நியமிக்கப்பட்ட வில்லியம் ஸ்டப்ஸ் (1825—1901) என்பாரும் சட்ட நிபுணரான மெயிட்லண்டு என்பாரும் ஆங்கிலேய ஆதாரச்சட்ட வரலாற்றைத் திறம்பட இயற்றும் மரபிற்கு அணி பெற வழிவகுத்தவர்கள். ஸ்டப்ஸ் முதலாம் எட்வர்டு காலம் வரையுள்ள சாசனங்களையும் பத்திரங்களையும் தொகுத்து அவற்றினின்றும் முக்கியமானவற்றைத் தேர்ந்தெடுத்துப் பதிப்பித்தார்; ஆங்கில ஆதாரச்சட்ட வரலாற்றை முழுமையாக இயற்றினுர். அவர் வரலாற்றிற்கு ஒரு தத்துவம் உண்டு என்று நம்பவில்லை; ஆதலால் பக்கிள் போன்ற ஆசிரியர்களுடைய வரலாற்று

வரைவுகளை அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. ஜெர்மானியரான ராங்கேயைப் பின்பற்றிய ஸ்டப்ஸை ஜெர்மானியர்கள் மிகவும் புகழ்ந்தார்கள். ஜான் ரிச்சர்டு கிரீன் (1837—1883) என்பாரும் ஜெர்மானிய மரபைப் போற்றியவர். 'ஆங்கில மக்களின் சுருக்க வரலாறு' என்பது அவர் இயற்றிய புகழ்பெற்ற நூல். அது இன்றும் பலரால் சுவையோடு கற்கப்படுகின்றது.

இதற்கிடையே ஸர் ஹென்றி மெயின், ஃபிரெடரிக் ஸீபாம் என்பவர்கள் கிராம ஆட்சி முதலிய பொருள்கள்பற்றிப் பல நூல்கள் இயற்றினர்.

சாமுவேல் ராயன் கார்டினர் (1829—1902) முதலாம் ஜேம்ஸ் ஆட்சியிலிருந்து 'இங்கிலாந்து வரலாறு' என்னும் நூலைப் பத்துப் பகுதிகளில் '1603-லிருந்து 1640வரை இங்கிலாந்து வரலாறு' என்னும் பெயரில் வெளியிட்டார்; இஃதன்றி 'பெரிய உள்நாட்டுப் போரின் வரலாறு' என்னும் நூலையும் இயற்றினர். 'இங்கிலாந்தின் நாகரிகம் பற்றிய வரலாறு' என்னும் நூலை பக்கிள் (1821—1862) இயற்றி வரலாறு வரைவியற்குப் புதியதொரு நெறி வகுத்தார். அவர் இயற்கையாகச் சமுதாயத்தில் ஏற்படும் மாறுதல்களை 'விதிக'ளாகக் கருதினர். உலகியல் முன்னேற்றமே நாகரிகத்தின் அளவை என்று அவர் கருதியதும் பலரால் கண்டிக்கப்பட்டது. ஆனால், அவர் தமது நூலை இயற்றுவதில் மிகுந்த பிரயாசை எடுத்து முயற்சி மேற்கொண்டமையால் அவர் உடல்நலம் கெட்டது. பக்கிளைப் போலவே ஆங்கிலேயரது அறிவியல் மரபினைப்பற்றிய நூல் ஒன்றை லெக்கி (1838—1903) என்பாரும் இயற்றினர். லெக்கி 'பகுத்தறிவியல் வரலாறு' இயற்றினர்; அப்போது அவருக்கு வயது இருபத்தேழேயாம். 'அகஸ்டஸ் காலத்திலிருந்து சார்லமேன் காலம்வரை ஐரோப்பிய நல்லொழுக்க வரலாறு' என்னும் நூல் அவருக்கு அழியாப்புகழை யளித்தது; அன்றியும் அவர் '18ஆம் நூற்றாண்டு இங்கிலாந்து வரலாறு' என்னும் நூலை எட்டுப் பகுதிகளில் வெளியிட்டார். அவர் காய்தல் உவத்தலின்றி வரலாறு வரைந்தார்.

ஸர் ஜான் ராபர்ட் ஸீலி (1834—1895) என்பார் 1869-ல் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்து நவீனகால வரலாற்றுப் பேராசிரிய ராக அமர்ந்தார். 'அவர் இங்கிலாந்தின் ஆட்சி பரவிய வரலாறு' இயற்றினர். இது மிகச் சிறந்த வரலாற்று நூல் என்று கூற முடியாதாயினும், இதுதான் ஸீலிக்கு மிகுந்த புகழ் அளித் துள்ளது. இவர் பல வரலாற்று நூல்களை இயற்றவில்லை; ஆயினும் பியூரி என்பாரைப் போல இவரும் வரலாறு ஒரு விஞ்ஞான

அறிவியற்றுறை என்னும் கருத்துடையர். இக் கருத்தினை ஜி. எம். டிரெவிலியன் வெகுவாகக் கண்டித்தார்.

மாண்டெல் கிரெய்ட்டன் (1843—1901) என்பார் சமயச் சீர்திருத்தக் காலத்துப் போர்களின் வரலாற்றினை எழுதினார். அவர் வரலாற்று உண்மையொன்றையே உளத்திற் கொண்டு விருப்பு வெறுப்பின்றி நூலியற்றினார். அவர் நல்லொழுக்கப் பிரச்சினைகளில் ஈடுபடவில்லை. 'நல்லோரெல்லாம் நல்லோரு மல்லர்; தீயோரெல்லாம் தீயருமல்லர்' என்னும் நல்லொழுக்கச் சார்பியற் கொள்கையைக் கூறியவர் அவர். நன்மை, தீமைகட்கு முழுமுதற்பண்பு உண்டு என்று கருதிய ஆக்டன் பிரபுவிற்கும் அவருக்கும் கருத்துவேறுபாடுகள் மிகுந்தன.

ஆக்டன் பிரபு (1834—1902) என்பார் ஸர் ஜான் ஸீலியை அடுத்துக் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்து வரலாற்றுப் பேராசிரியராக அமர்ந்தார். அவர் பேரறிஞர். அவர் வரலாற்று நூல் ஒன்றும் இயற்றவில்லை. அவர்தம் மாணவர்கட்கு ஆற்றிய உயர்நிலைச் சொற்பொழிவுகள் பிறகு சேர்த்து நூல்களாகப் பதிப்பிக்கப்பட்டன. அம் முறையைச் சேர்ந்தவையே 'நவீனகால வரலாற்றுச் சொற்பொழிவுகள்', ஃபிரெஞ்சுப் புரட்சிபற்றிய சொற்பொழிவுகள்' என்னும் நூல்கள். அவர் வகுப்புகளில் உயர்நிலை மாணவர்கட்கு மிக அருமையாகச் சொற்பொழிவாற்றுவார். 'கேம்பிரிட்ஜ் நவீனகால வரலாற்று வரிசை' என்னும் நூல் வரிசைகளை அவர் திட்டமிட்டு அவற்றின் பதிப்பைத் தொடக்கி வைத்தார். அவர் நல்லொழுக்கக் கோட்பாட்டின் முழுமுதன்மையில் முழு நம்பிக்கை வைத்தவர்; புறநோக்குக் கொள்கையை முற்றிலும் ஆதரித்தவர். பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்த கிளாஸ்ட்டன் அவருடைய நெருங்கிய நண்பர். அவர் லிபரல் கொள்கையினர். பிரபுப் பட்டம் பெறுமளவிற்கு அவரது புகழ் ஓங்கியிருந்தது.

ஆக்டனையடுத்துக் கேம்பிரிட்ஜில் வரலாற்றுப் பேராசிரியராக அமர்ந்தவர் பியூரி (1861—1927) என்பவர். அவர் தொல் கிரேக்க, ரோமானிய வரலாறுகளை நன்கு பயின்றவர். அவர் இயற்றிய கிரேக்கவரலாறு இன்றுவரை அவ் வரலாறு கற்போரால் விரும்பிப் படிக்கப் பெறுவது. அவர் பேராசிரியர் பதவி ஏற்கும் போது ஆற்றிய உரையில் 'வரலாறு ஒரு விஞ்ஞானமே; கலையன்று, இலக்கியமுமன்று' என்று கூறியது இன்றுவரை ஒரு முடிவில்லாத விவாதத்தைக் கிளப்பிவிட்டிருக்கிறது. அவர் இயற்றியன 'முன்னியக்கக் கருத்து', 'கருத்துச் சுதந்திரத்தின் வரலாறு'

என்னும் நூல்கள். அரிய கிப்பனுடைய 'ரோமானியப் பேரரசின் தாழ்ச்சியும் வீழ்ச்சியும்' என்னும் செவ்விலக்கியத்தை அவர் திறம் படப் பதிப்பித்தார்.

ஜேம்ஸ் பிரைஸ் பிரபு என்பாரின் 'அமெரிக்கக் குடியரசு', 'புனித ரோமானியப் பேரரசு', 'நவீனகால மக்களாட்சிகள்' என்னும் நூல்கள் யாவராலும் சுவையோடும் பயனோடும் படிக்கப் பெறுவன. அவரேபோல் எச். ஏ. எல். பிஷர் பிரபு இயற்றிய 'ஐரோப்பிய வரலாறு' 'நெப்போலியன்' முதலிய அருமையான நூல்கள் உலகப் புகழ் பெற்றவை. வரலாற்றுப் பரிணாம இயக்கத்தில் ஒரு பொருண்மை இருப்பதாகப் பலர் கூறுவதை அவர் ஏற்றுக்கொள்ளவில்லை.

ராபின் ஜார்ஜ் காலிங்வுட் (1883—1943) என்பார் ஆங்கில அறிஞர்களுள் முக்கியமான வரலாற்றுத் தத்துவர். அவர் இத்தாலிய அறிஞரான குரோச்சே என்பாரது கருத்துகளை ஓரளவு பின்பற்றினார். வரலாறு என்பது வரலாற்றாளன் மனத்தில் பழைமை புத்துயிர் பெறும் நிகழ்ச்சியே என்பது அவர் கூற்று. வரலாறு விஞ்ஞானம், இலக்கியம், தத்துவம் முதலியன போன்ற அறிவியல் துறை அன்று, அதற்குத் தனிப்பட்ட ஒரு தன்மையுண்டு என்றார் அவர். வரலாற்றை உளவியற் கோணத்திலிருந்து கண்டவர் காலிங்வுட். அவர் இயற்றிய முக்கியமான நூல் 'வரலாறு என்னும் கருத்து' என்பது.

இனி, நாம் கருதவேண்டுவது இருபெரும் வரலாற்றார்களே: (1) ஜி. எம். டிரெவிலியன் (1876—1962); (2) டாயின் பீ (1889—1976). இவர்களில் டிரெவிலியன், மெக்காலேயின் சகோதரி பேரன்: ஸர் ஜார்ஜ் ஆட்டோ டிரெவிலியன் மகன். கேம்பிரிட்ஜில் வரலாற்றுப் பேராசிரியரா யிருந்தவர்; விக் கொள்கையினர். வரலாறு இலக்கியம்போல் இயற்றப்பட வேண்டுவது என்னும் கருத்தினர். அவர் இயற்றிய நூல்களில் 'ஆன் அரசிகாலத்து இங்கிலாந்து', 'காரிபால்டியும் இத்தாலிய ஐக்கியமும்,' 'இங்கிலாந்து வரலாறு', 'இங்கிலாந்து சமுதாய வரலாறு' என்னும் நூல்கள் பெரும்புகழ் பெற்றவை. அவர் வரலாற்றின் தன்மையைப்பற்றிய கருத்துகள் அவரது கட்டுரை நூல்களில் காணப்படுவன.

டாயின் பீ பலவகையிலும் வரலாற்று அனுபவம் பெற்றவர். ஆதியில் கிரேக்க இலக்கியம் பல்கலைக்கழகங்களில் போதித்தவர். இங்கிலாந்து அரசு வெளியுறவுத் துறையில் உயர் அலுவல் பார்த்

தவர். அவர் இயற்றிய மாபெரும் நூல் 'வரலாற்றுப் பாடம்' (Study of History) என்பது. இது பல தொகுதிகளில் வெளியானது. அவர் ஒரு வரலாற்றுத் தத்துவர். அவரது தத்துவம் இந் நூலில் அமைந்துகிடக்கின்றது. அவர் கருத்துப்படி வரலாறு நாட்டு வரலாருகக் கற்கப்படுதல் கூடாது; அது பண்பாட்டு வரலாற்றின் தோற்றம், வளர்ச்சி, வீழ்ச்சி, அழிவு என்னும் நிலைகளில் உணரப் படவேண்டுவது. உலகினையே தேசங்களாகப் பிரித்துக் காணுமல் கலாசாரப் பிராந்தியங்களாகப் பிரித்து உணர்தல்வேண்டும். இவையெல்லாம் ஏதோ சில காரணங்களால் உருவாகின்றன. சில உந்தல்கள் இவற்றைத் தாக்குகின்றன. அத் தாக்குதல்களை எதிர்த்துச் சமாளிக்கக் கூடியவை தப்பிப் பிழைத்துத் தழைக் கின்றன; பிற அழிகின்றன என்று உயிரியல் கோட்பாடான பரிணமக் கொள்கையைப் பின்பற்றித் தமது கருத்துகளை உருவாக் கினர். அவரை மதிப்பீட்டாளர்கள் நிருணயவாதி என்று கூறு வராயினும் அவர் அதனை மறுப்பார். அவருக்கு ஊழ்வலியில் நம்பிக்கையுண்டு என்பதின்று; தெய்வ சக்தியில் நம்பிக்கை கொண்டவர் என்பதே. மனிதனுக்குச் சுய நிருணயத் திறமை இல்லை என்று அவர் கூறவில்லை. சுய நிருணய சக்தியைப் பயன் படுத்தி அவன் தனது எதிர்காலத்தை நிருணயித்துக் கொள்ளலாம் என்பதே அவர் கோட்பாடு. ஆயினும், பாப்பர் முதலிய விமர் சகர்கள் அவரை நிருணயவாதிகள் குழுவில்தாம் சேர்ப்பர்.

# 18. ஆசிய நாடுகளில் வரலாறு வரையும் வரன்முறை

## (அ) சீன

ஆசியாவிலேயே வரலாற்றுணர்ச்சி மிக்கவர்கள் என்று சீனர்களைக் குறிப்பிடலாம். மிகச் சிறந்த வரலாற்றுளர்கள் சிலர் அந் நாட்டில் தோன்றியமை அவர்கள் வரலாற்றிற் பொறிக்கப் பட்டுள்ளது. கிறிஸ்து தோன்றுவதற்குப் பல நூற்றாண்டுகட்கு முன்பே அவர்கள் வரலாற்றுக் குறிப்பு எழுதிவைக்கும் மரபினை மேற்கொண்டிருந்தனர். அவர்கள் குறிப்புகளை ஆய்ந்தால் இன்றைக்கு 5000 ஆண்டுகட்கு முன்பிலிருந்து அவர்கள் வரலாற்றை வரிசைப்படுத்த முடியும்; அவர்கள் அவ்வாறு செய்தும் உள்ளனர்.

அவர்கள் அறிவியல் மரபில் தத்துவம், ஒழுக்கநெறி, காப்பியங்களுக்குத் தேவையான கற்பனை என்பன ஒரு புறமும், வரலாற்றிற்குத் தேவையான ஆய்வுமுறை இன்னொரு புறமுமாக வளர்த்து வந்துள்ளனர். முந்தியது கன்பூசியஸ் போன்ற பண்டைய சீனத் தத்துவர்கள் வளர்த்தது, பிந்தியது பல பேரறிஞர்களால் கோவைப்படுத்தப்பட்டு வளர்ந்தது. சீனர்கள் தமது கல்வியை ஐந்து வகையாகப் பாகுபாடு செய்து அவ் ஐவகையில் வரலாற்றையும் ஒன்றாகச் சேர்த்தனர். புராதனகாலச் சீனர்கள் தமது வரலாற்று நூல்களைச் செவ்விய பண்டைய சீன மொழியில் எழுதி வைத்தனர்; பொதுமக்கள் எளிதில் படித்துப் புரிந்து கொள்ள முடியாத நிலையில் அவை அமைந்துவிட்டன. வரலாற்றை அவ்வாறுதான் கடின நடையில் எளிதில் புரியாத வாறு எழுத வேண்டும் என்று அவர்கள் கருதினர். இக் கருத்து கி. பி. 1911 வரையில் தொடர்ந்திருந்தது.

மிகப் பண்டைய சீன வரலாற்றிலக்கியம் பழமொழிகளாகவும் நாட்டுக் கதைகள் போலவும் அமைந்தன. இப் பழமொழிகளில் சீனரின் அநுபவ அறிவு பதிந்திருந்தது. அதன் பிறகு பல நூற்றாண்டுகளாக அவர்கள் அரிதின் முயன்று சேர்த்து எழுதி

வைத்துள்ள வரலாறுகளுக்கு இணையானவை பண்டைய ஆசியாவில் காண்டற்கரிது. லாட்டுரெட் என்னும் வரலாற்றுளன் இந் நிலையில் சீனர் அறிவியல் மரபினையும் இந்துக்களின் அறிவியல் மரபினையும் ஒப்புப்பார்த்து 'இந்துக்களைப் போலல்லாமல் சீனர்கள் மிகுதியாக வரலாற்றுணர்ச்சி படைத்து விளங்கினர்' என்று கூறுகிருர்.[1]

வூ—டி என்னும் சீனப் பேரரசன் காலத்தில், ஸூமாஷின் என்ெருரு வரலாற்ருளர் இருந்தார்; அவர் ஏ. கி. மு. 145-ல் பிறந்தார். அவர் தந்தையார் ஸூமாடான் என்பவர்; அவர் அரசவையில் சோதிடராகப் பணிபுரிந்தவர். சிறுவனுயிருக்கும் போதே ஸூமாஷின் பண்டைக்காலக் கதைகளைக்கேட்டு மனப் பாடம் பண்ணிவைத்திருந்தார்: பிற்காலத்தில் அவர் வரலாறு எழுதியபோது இவற்றை வெகுவாகப் பயன்படுத்திஞர். அவர் பல நாடுகளில் பயணம் செய்தார்; அவர் தந்தை காலத்திற்குப் பிறகு அரசவையில் சோதிடர் அலுவலில் அமர்ந்தார்; அமர்ந்து சீனப் பஞ்சாங்கத்தை அக் கால நவீன முறைப்படி சீர்திருத்தி அமைத்தார். அவர் இயற்றிய வரலாற்று நூலுக்கு ஷி—சி என்பது பெயர்: அது 'வரலாற்றுக் குறிப்புகள்' என்று பொருள் படும். ஷி—சியில் சீன வரலாறு தொடக்ககாலத்திலிருந்து ஸூமாஷின் காலம்வரை இயற்றப்பட்டது. அதில் முக்கியமான அரசியல் விவரங்களேயன்றி, வரலாற்றில் சிறப்புற விளங்கியவர் களின் வாழ்க்கைக் குறிப்புகளும், போர்களின் பட்டியல்களும், பொருளாதார வரலாறு அறிதற்கு வேண்டிய புள்ளிவிவரங்களும், நாட்குறிப்புகளும் பிறவும் இடம் பெற்றுள்ளன. இந் நூலையே சீன வரலாற்றின் ஆதார நூலாக அறிஞர் கருதுவது முற்றிலும் பொருந்துவதே. அதில் ஆசிரியர் பிறர்வாயிலாகக் கேட்டறிந்த விவரங்களோடு தாமே கண்டறிந்தவற்றையும் பயன்படுத்தி யுள்ளார். அந் நூல் கி.மு. 2ஆம் நூற்ருண்டின் இறுதியிலும் முதல் நூற்ருண்டின் தொடக்கத்திலும் இயற்றப்பட்டது. பிற் காலத் தெழுந்த வரலாற்றறிஞர்கள் பலர் அந் நூலில் பல திருத்தங்கள் செய்துள்ளனர்.

ஸூமாஷினைக் கிரேக்க வரலாற்ருளரான ஹெரடோடஸிற்கு ஒப்பிட்டு, அவரை 'ஆசியாவின் வரலாற்றுத் தந்தை' என்பதுண்டு. இருவரும் அவ்வவர் நாட்டில் முதன்முதல் சிறந்த பெரிய வரலாற்று நூல்களை இயற்றியவர்கள்; இருவரும் வெகுவாகப் பயணம் செய்து அனுபவம் எய்தியவர்கள்.

[1] Latourette : The Chinese, their History and Culture, 1951.

ஸு-மாஷீன் காலத்திற்குப் பிறகு இயற்றப்பட்ட சீன வரலாற்று நூல்கள் அவர் நூலை அடியொற்றி இயற்றப்பட்டன. ஸோ-ஷு-வான் என்பது ஒருவகைச் சீன வரலாற்று நூல். அதில் செய்திகள் காலவரையறைப்படி அமைக்கப்பெற்று விவரிக்கப் படும். அத்தகைய செய்தித்தொகுப்பு அல்லது நிகழ்ச்சிக் குறிப்பு களில் ஸுமா-குவாங் என்பவர் (கி.பி. 1019—1086) இயற்றிய தியூ-ஷி-துங்சியான் என்னும் நூல் சிறந்தது. இந் நூலில் சௌ பரம்பரை ஆட்சிக்காலத்திலிருந்து ஸுங் பரம்பரை ஆட்சிக்காலம் வரையுள்ள வரலாறு கூறப்பட்டுள்ளது. அதாவது கி.மு. 5ஆம் நூற்றாண்டிலிருந்து ஆண்ட ஐந்து ஆட்சிப்பரம்பரையினர் காலத்து நிகழ்ந்தவை இதிற் காணலாம். சுமாகுவாங் என்பவர் ஓர் அரசியலர்; அவர் அரசியலில் ஈடுபடாமல் இருந்தபோது இந் நூலை இயற்றினர். யுவான்-சூ என்னும் வரலாற்றாளர் தாம் இயற்றிய நூலிற்கு 'துங்-சீன் சிஷிபென்மோ' என்று பெயரிட்டார். அதற்குப் 'பிரபஞ்சக் கண்ணாடியில் பதிப்பிக்கப் பெற்ற வரலாற்று நிகழ்ச்சிகளின் மூல காரணங்களும் விளைவுகளும்' என்பது பொருள். இதிலிருந்து சீன வரலாற்றாளர்கள், நிகழ்ச்சிகளின் காரண-காரியத் தொடர்பை நம்பினர் என்பது புலனாகும். சீனரும் இந்துக்களைப் போலப் பெரு நூல்களுக்குக் 'கண்ணாடி' என்று பெயரிட்டமை குறிப்பிடத்தக்கது. பல வடமொழி நூல்கள் 'தர்ப்பணம்' (கண்ணாடி) என்று பெயர்படைத்தவை.

அரசியல் வரலாறுகள் தவிர, சீனர் வாழ்க்கையின் பல்வேறு அம்சங்களைப்பற்றியும் விரிவாகக் கூறும் பல வரலாற்று நூல்களை யும் அவர்கள் இயற்றினர். அவற்றில் சில சீனா முழுவதைப் பற்றியும் கூறும்; சில அந் நாட்டின் சில பகுதிகளைப்பற்றிக் கூறுவன. அவை புவியியல் முதலிய செய்திகளைக் கூறுகின்றன. சில நூல்கள் சீனாவில் வாழ்ந்துவந்த சீனரல்லாதாரைப் பற்றிப் பேசுகின்றன; சில சீனாவின் வெளிநாட்டு விவகாரங்களை விவரிக் கின்றன. மொத்தமாகச் சீனர் தொகுத்துள்ள விவரணப் பட்டியல்களில் 5000 கிடைத்துள்ளன. சீனரின் அரசியல் நிருவாக நுணுக்கங்கள் இந் நூல்களில் எடுத்துக்கூறப்படுகின்றன; அந் நாட்டு ஆட்சி நிருவாக அமைப்பு விரிவாக விவரிக்கப்பட்டுள்ளது. இவ் வாதார நூல்களை வைத்து அவற்றிற்கு மேலும் பல வழி நூல்கள் சீனராலேயே யாக்கப்பெற்றுள்ளன. வரலாறு வரை வியலில் சீனர் புகுத்திய முக்கியமான, வரவேற்கத்தக்க புதுமை 'வரலாற்றுத் திறனாய்வு' என்பது.

தற்கால அறிவியல் அளவைகளைக்கொண்டு கணிப்பினும், சீனர் இயற்றியுள்ள வரலாறுகள் முதல்தரமானவை என்பதில்

ஐயமின்று. அந் நாட்டாரால் இயற்றப்பெற்றுக் குவிக்கப்பட்டுள்ள அரிய வரலாற்று நூல்கள் அளவிறந்து கிடத்தலாலேயே சீன வரலாறு கற்போரது பிரச்சினைகள் மிகுகின்றன. நமது உடன்காலச் சீனுவில் இன்று போற்றப்பட்டு வரும் வரலாறு-வரைவியல்-கோட்பாடுகள் பொதுஉடைமைக் கருத்துகளால் செல்வாக்குற்றவை. இருப்பினும், அதில் தேசியமும் மிகுதியாகக் கலந்திருப்பது காணலாம்.

## (ஆ) முஸ்லிம் நாடுகள்

இவ்வாறு கூறுங்கால், முஸ்லிம்கள் வாழும் எல்லா நாடுகளையும் குறிக்கலாமாயினும், அவை பெரும்பாலும் மத்திய கிழக்கு நாடுகளையே குறிப்பதாகக் கொள்வோம்; அதுவே இஸ்லாமின் பிறப்பிடமாதலின். இடைக்காலத்தில் ஐரோப்பிய நாடுகளில் கிறிஸ்துவ சமயத் தொடர்புடைய ஒருவகை வரலாறு இயற்றப் பெறுவது மரபாயிற்று. அதாவது வரலாறு முழுவதையும் கிறிஸ்துவ சமயநோக்கை வைத்துப் பொருள் கூறுதல் என்பது. இஸ்லாம் பரவிய நாடுகளிலும் அத்தகைய முயற்சியொன்று தொடங்கிற்று. ஆனால், அங்கு இஸ்லாம் நோக்கு முக்கியமாயிருந்தது. அம் மதம் உதித்த அரேபியாவில் மகம்மது நபி பிறத்தற்கு முன்பே நாட்டில் எண்ணிறந்த குடிகள் பல்கியிருந்தன. அவை எக்காலமும் தம்முள் பகைத்துப் போராடி வந்தன. இந் நிலையில் குலச்சண்டைகளைத் தொடர்ந்து நடத்துவதற்குப் பழைமை நினைவு வேண்டும்; பழைமையைப் போற்ற வேண்டும். இத் தொடக்கத்திலிருந்து வரலாற்றின் சிறப்பும் முக்கியத்துவமும், வரலாறு எழுதிவைத்தலின் தேவையும் அவர்களுக்குப் புலனாயின. ஆயினும், நபி தோன்றிய காலத்திற்குப் பிறகுதான் பெருவாரியாக வரலாற்று நூல்கள் முஸ்லிம்களால் இயற்றப் பெறலாயின. எப்போதும் ஒரு பெரிய மதம் நிறுவப்பட்டவுடன் அதனைச் சார்ந்தோர், அம் மதக்கொள்கைகளைப் பரப்புதற்கும், உண்மையென்று நிரூபித்தற்கும் சமய இலக்கியங்களை இயற்றுவர். இவற்றில் பல மதத்தை நிறுவினரைப்பற்றியும், அவர் காலத்து நிகழ்ச்சிகளைக் குறிப்பனவாயும், அம் மதம் வளர்ந்து வந்துள்ள முறையினை விவரிப்பனவாயும் அமையும். பௌத்த மதம் நிறுவப்பட்ட பிறகு 'வமிசங்'களும் 'ஜாதக'ங்களும் பௌத்தரின் இலக்கியங்களாக வளர்ந்தன. அவ்வாறே இஸ்லாம் நிறுவப்பெற்ற பின்பும் முஸ்லிம்களின் வரலாற்று நூல்கள் பல இயற்றப்பட்டன. அவற்றிற் பல சமயத் தொடர்புடையவை; சில உண்மையிலேயே தருக்க ரீதியில் விஞ்ஞான முறையில் இயற்றப்பட்டவை.

இடைக்காலத்தில் ஐரோப்பியக் கிறிஸ்துவக் கண்கொண்டு வரலாற்றை ஆய்வார் போல ஒரோஸியஸ் என்பவர் கிறிஸ்துவரல்லாதாரைப் பழித்து ஒருவகை வரலாறு இயற்றியதுபோல, முஸ்லிம்களும் இஸ்லாம் கண்கொண்டு வரலாற்றை யாராயத் தொடங்கியதில் வியப்பில்லை. காலிபுகள் என்னும் முஸ்லிம் பேரரசர்கள் தமது அதிகாரத்தின் தகுதியை உலகினர்க்குக் கூறுதற்குத் தம் வமிசாவளி (குலமுறை) களைத் தயாரிப்பதற்காகத் தம் அவைக்களங்களில் வரலாறெழுதுவோரையும், நிகழ்ச்சிக் குறிப்பு வைப்போரையும் அமர்த்தியிருந்தனர். இதிலிருந்து முஸ்லிம் அரசர்கள் அவைக்களங்களிலெல்லாம் பெரும்பாலும் நிகழ்ச்சிக் குறிப்பாளர்கள் அலுவல்பார்த்து வந்ததன் காரணம் புலனும். அவர்களிற் பெரும்பாலோர் தமக்கும் மகம்மது நபிக்கும் வமிசத் தொடர்புண்டு என்று நிறுவுவதற்குப் பல ஆராய்ச்சிகளை நிகழ்த்திக் குலமுறைகளை வெளியிடவேண்டி யிருந்தது. இம் முயற்சி வரலாற்று ஆராய்ச்சி முயற்சியே. முகம்மதுவிற்கு முற்காலத்தில் மத்திய மேற்கு நாடுகளில் பரவியிருந்த வாய்மொழிக் கதைகள் இப்பொழுது ஏட்டில் இடம்பெறலாயின. அன்றியும் இஸ்லாம் வெற்றியோடு பல நாடுகளில் பரவிய வரலாற்றை எழுதிவைப்பதில் முஸ்லிம்களுக்குப் பெருமை யிருந்தது; வெற்றி வீரர்களின் செயற்பாடுகளையும், வெல்லப்பட்ட முஸ்லிமல்லாத மக்களின் 'பாப'ச் செயல்களையும் குறித்து வைப்பதற்காக முதற்கண் தோன்றியது இஸ்லாமிய வரலாறு வரையும் மரபு.

கி.பி. 750 வாக்கில் நிறுவப்பெற்ற அப்பாஸிது கலீபு வமிச ஆட்சி தொடங்கிய பிறகே முஸ்லிம்கள் பெரிதும் வரலாறு வரையும் முயற்சியில் ஈடுபடலாயினர். தொடக்கத்தில் அவர்கள் வாழ்க்கை வரலாறுகள், கதைகள், நாட்டு நடப்புகள் வமிசாவளிகள், மரபு செய்தித் தொகுதிகள் என்பவற்றையே எழுதிவைத்தனர். மகம்மது நபியின் வாழ்க்கை வரலாற்றை இபன் இஷாக் என்பவர் விரிவாக எழுதிவைத்தார் (கி.பி. 8ஆம் நூற்றாண்டு). இதுவே இஸ்லாமியரின் முதல் வரலாற்று முயற்சி; அவரையடுத்து இபன் ஹிஷாம் என்பவர் தாமியற்றிய 'மகம்மது நபியின் சரிதை' யில் இபன் இஷாக் நூலிற் கண்ட பல செய்திகளைச் சேர்த்துக் கூறினர். இவ்வாறு தொடங்கியது இஸ்லாமியர் வரலாற்று முயற்சி.

முஸ்லிம்கள் தமது வரலாற்று நிகழ்ச்சிகளைத் தாம் அறிந்து வைத்திருந்த ஹிஜிரா சகாப்தத்தை அடிப்படையாகக்கொண்டு எழுதினர் ஆதலின் அவை தவறின்றி அமைந்தன. கிறிஸ்து சகாப்தம் தொடங்கிய காலம் நான்கு ஆண்டு முன்பின்னாக

ஐயத்திற் கிடனுயிருப்பதுபோ லல்லாமல் ஹிஜிரா (அதாவது மகம்மது நபி மெக்காவிலிருந்து மெதினுவிற்கு ஓடின நாள்) நன்கு வரையறுக்கப்பட்ட நாள். இதை வைத்து நிகழ்ச்சிக்குறிப்புகள் எழுதப்பட்டமையின் முஸ்லிம் வரலாறுகளில் பெரும்பாலும் தவருன நாட்கணிப்புகள் இருப்பதில்லை. தொடக்ககால முஸ்லிம் வரலாற்று முயற்சிகள் இஸ்லாம் பரவிய வெற்றிக் கதையைக் கூறுவதில் முனைந்திருந்ததோடு அவ்வாறு அச் சமயம் ஆசியா-ஐரோப்பா—ஆஃபிரிக்கா என்னும் மூன்று கண்டங்களில் பரவுவது வரலாற்றின் நிருணயிக்கப்பட்ட ஒரு திட்டம் என்றும் நம்பினர்.

அல்பிர் தௌஸி (935—1020) என்பார் ‘மன்னர்கள் கதை’ என்னும் நூலைப் பாரசீக மொழியில் இயற்றினுர்; பிற்கால அரபு வரலாற்ருளர்களுக்கு இந் நூல் ஒரு முன்னேடியாயமைந்தது. அப்பாஸிது கலீபின் அவைக்களத்திலிருந்த அல்-வசீதி (747—823) என்பார் ‘நபிகள் இட்ட போர்களின் வரலாறு’ என்று ஒரு நூலையியற்றினுர். ஒன்பதாம் நூற்ருண்டைச்சேர்ந்த அல்பல்தூரி என்பவர் ‘நாடுகளை வென்றமை’ என்னும் தமது நூலில் தொடக்க கால முஸ்லிம் சாதனைகளைத் தொகுத்துக் கூறினுர். இஸ்லாம் பரவிய வரலாற்றை யறிதற்கு இந் நூல் ஓர் ஆதார நூலாக அமைந்துள்ளது. தின்வாரி என்பவர் அதேசமயத்தில் ‘அராபியா மற்றும் பாரசீக வரலாறு’ என்னும் நூலை இயற்றினுர். ‘பாக்தாதும் அங்கு ஆண்ட கலீபுகளும்’ என்னும் நூலை அபிதகீர் என்பவர் (9ஆம் நூற்ருண்டு) எழுதினுர். பாக்தாது கலீபுகளின் வரலாற்றினை யறிதற்கு இந் நூல் இன்றியமையாதது.

அல்-தஹாரி (838—923) என்பவர் ஒரு பெரிய வரலாற்ருளர். அவர் பெரிய கல்விமான்; நெடிது பயணம் செய்தவர். ‘புனித அடியார்கள் மற்றும் மன்னர்கள்’ என்னும் சிறந்த நூலை அவர் இயற்றினுர். அவர் திரட்டி வைத்திருந்த ஏராளமான செய்திகள் பிற்கால வரலாற்ருளர்கள் பலர்க்கும் பயன்பட்டன. அவர் மிகவும் எளிய நடையில் தமது நூலை இயற்றினுர்; ஆதலால், மிக அரிய சீரிய நடையில் தமது வரலாற்று நூலை யியற்றிய லிவி என்னும் ரோமானிய வரலாற்ருளரோடு இவரை ஒப்பிடுதல் பொருந்தாது.

அல்-மஸுஊதி (பத்தாம் நூற்ருண்டினர்) ஒரு கலைக்களஞ்சியம் எனத்தக்கவர்; அவர் ஒரு சிறந்த வரலாற்ருளர். அவர் இயற்றிய நூலுக்குப் ‘பொன் மைதானங்கள்’ என்று பெயர்; அந் நூலில் அரசர்கள், நிகழ்ச்சிகள், வமிசாவளிகள் என்று பிரித்து அவற்றின் வரலாற்றைக் கூறுகின்ருர். அவர் நூலில் சமுதாய வரலாறும்

ஓரளவு கூறப்படுகின்றதாதலின், அவர் ஒரு புது முறை வரலாற்று மரபிற்கு அடிகோலினுர் எனலாம். இவரை 'அரபுகளின் ஹெர டோடஸ்' என்று புகழ்வர்; இவ் வுவமையில் ஒப்புமையைவிடப் புகழ்ச்சியே அதிகம்.

இபன் மிஸ்கா வைகி (பத்தாம் நூற்ருண்டினர்) என்பவர் 'தேசங்களின் அனுபவங்கள்' என்ெருரு நூலை யியற்றினுர். அவர் விருப்பு வெறுப்பின்றி உண்மையை எடுத்துரைத்தவர். அவரை இபன் கால்தூனுக்கு அடுத்தாற்போல் சிறந்த முஸ்லிம் வரலாற்ரு ளராகக் கருதலாம். அலி ஆல்-தனூகி (அதே நூற்ருண்டினர்) 'வரலாற்ருளர்களின் தொகுப்புகள்' என்னும் நூலை எழுதினுர். 12ஆம் நூற்ருண்டில் அலிஹஸன் 'டமஸ்கஸின் வரலாறு' இயற் றினுர்; 'முஸ்லிம் எகிப்தின் வரலாறு' என்னும் நூலை இயற்றிய மர்ரிஸி என்பவர் கி. பி. 1360—1442 வரை வாழ்ந்தவர். அபுல் டாஜ் அல் இஸ்ப ஹானி (897—967) 'உலக வரலாறு' என்னும் நூலை வரைந்தார். 1160—1232 வரை வாழ்ந்த அபு ஆல் அதிர் என்னும் ஆசிரியர் வரலாற்றுத் தத்துவங்களை நன்கு உணர்ந்தவர்.

1185—1234 வரை வாழ்ந்த பஹா ஆல்-தின் என்பார் ஸாலடின் என்னும் சாரசானியரின் வாழ்க்கை வரலாற்றை அரிய முறையில் எழுதினர். பன்னிரண்டாம் நூற்ருண்டைச் சேர்ந்த யாபுட் 'அறிஞரான முஸ்லிம்கள் அகராதி' என்ெருரு தொகை நூலை ஆக்கினுர். இபன் கல்லிகான் (1211—1282) 900 இஸ்லா மியப் பெரியார்களின் வாழ்க்கை வரலாற்றுத் தொகுப்பு ஒன்றை 'வாழ்க்கை வரலாற்று அகராதி' என்னும் நூல் வாயிலாக வெளி யிட்டார்.

அல்பிரூனி (973—1048) என்பவர் மம்மூது கஜனியின் அவைக்களத்தை அலங்கரித்தவர்; அவர் இந்தியாவில் சில காலம் தங்கி இந்தியக் கலாசாரம்பற்றி ஆராய்ந்தார். அவர் வான வியல் வல்லுநர். அவர் கிதாப்-உல் ஹிந்த் (1030) என்னும் நூலை இயற்றினுர். அவர் இந்துக்களது கலாசாரப் பெருமையைப் போற்றினுராயினும் அவர்களது சில குறைபாடுகளை வெளிப் படையாகக் கூறத் தயங்கவும் இல்லை. இந்துக்களுக்கு வரலாற் றுணர்ச்சியில்லை என்ருர் அவர்; தங்களைவிடச் சிறந்தவர்கள் உலகில் எங்குமே இல்லை என்று அவர்கள் எண்ணுகின்றனர் என்று கூறினுர். முஸ்லிம அல்லாதாரது வரலாற்றை நல்லமுறையில் ஒரு முஸ்லிம் ஆராய்ந்ததற்கு அவர் நூல் ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

இபன் கால்துன் (1332—1406) அரபு வரலாற்ருளர்கள் யாவருள்ளும் மிகச் சிறந்தவர். அவர் வரலாற்றை எழுதுவதோடு

கூட அதன் பொருண்மையையும் ஆராய முற்பட்டார். இடைக் கால வரலாறு வரைவியலில் அவர் ரோஜர் பேக்கனை நிகர்த்தவர் என்று பார்ன்ஸ் என்னும் ஆசிரியர் கூறுகின்றார். வரலாறு அரசியல் பிரச்சினைகளைப்பற்றி ஆராய்வதோடு சமுதாயப் பிரச் சினைகளையும் ஆய்தல் வேண்டும் என்பது இபன்கால் தூனின் கருத்து. அவர் இயற்றிய நூல் 'முகத் தமத் பில் தாரிக்' என்பது. அதில் வரலாற்றுத் தத்துவங்களைப்பற்றிய தமது கருத்துகளை அவர் கூறுகின்றார். சமூகத்தின் தொடக்கம், நாகரிகத்தின் தோற்றம் என்பவற்றை ஆய்தலும் வரலாற்றின் கடமை என்பது அவர் கருந்து. அவரை 'வரலாறு என்னும் விஞ்ஞானக் கலையைத் தோற்றுவித்தவர் என்று கூறலாம்' என்று பிஸிண்ட் என்னும் ஆசிரியர் கூறுகிறார். இபன்கால் தூன் இயற்றிய நூல் ஏழு பகுதிகளிலானது.

அபு சையது (1332—1406) என்னும் டுனீஷ்யாக்காரர் தைமூரின் வாழ்க்கை வரலாற்றை வரைந்தார். சமுதயாக் குழுக் களின் தோற்றம், வளர்ச்சி, வீழ்ச்சி என்பவற்றையும் வரலாற்று ளர்கள் ஆராய்தல் வேண்டும் என்று அவர் கருதினர்.

## (இ) இந்தியா

### 1. வரலாற்று மரபின் பரிணமம்

வரலாறு வரையும் மரபு சில நாடுகளில் செவ்வனே வளர்ந்து வந்துள்ளது; வேறு சில நாடுகளில் பிற துறைகளில் இலக்கியச் செம்மை இருப்பினும் வரலாற்றுத் துறையில் தலைசிறந்த முயற்சி கள் சற்றுமில்லாமல் போயின. இத்தகைய இருவகைப் பண் பாடுகளில் முந்தியது சீன, கிரீஸ் போன்ற நாடுகளிலும் பிந்தியது இந்தியாவிலும் காணப்படும். இந்திய இலக்கியம் என்பதில் ரிக்வேதம் ஆதியாக மாபெரும் இலக்கியச் செம்மைபெற்ற வட மொழி, அதற்கு ஏறத்தாழ நிகரான செவ்விலக்கியமாய தமிழ், மற்றும் பிற பிராந்திய இலக்கியங்கள் யாவையும் சேர்த்தே எண் ணினும் மேற்கூறிய முடிவு காணப்படும். இக் கூற்றினையும் கருத் தையும் சிலர் ஏற்றுக்கொள்வதில்லை. அவர்கள் வெவ்வேறு நிலை களில்நின்று இம் மறுப்பை நிறுவ முயல்வர். சிலர் 'வரலாற்று இலக்கியங்கள் பண்டைய, இடைக்கால இந்தியாவில் இந்திய சுதேச மொழிகளில் மிகுதியாக இருந்தன; ஆனால் அவை எக் கார ணத்தாலோ அழிந்துபட்டன—ஒருவேளை புறத்தார் படை யெடுப்புகளால் அந் நாசம் ஏற்பட்டிருக்கக்கூடும்' என்பர்: இக் கூற்று ஏற்றுக்கொள்ளத்தக்கதாக இல்லை. ஏனெனில் பகைஞர்கள் பிற இலக்கியங்களையெல்லாம் விட்டுவிட்டு—கவிதை

நாடகம், சமயம் போன்ற இலக்கியங்கள் மிகுதியாக இன்றும் காணக்கிடைக்கின்றன—வரலாற்று இலக்கியத்தை மட்டும் பொறுக்கி எடுத்து அழித்திருப்பார்கள் என்பது விந்தையாக உள்ளது; வேறு சிலர் 'பண்டைய இந்தியாவில் மன்னர் அவைகளில் வரலாற்றுக் குறிப்புகள் வைக்கச் சூதர், மாகதர், கணக்கர் முதலிய அலுவலர் இருந்தனர்; அவர்கள் எழுதிவைத்திருந்த குறிப்புகள் இன்று காணப்படாமையால் அவை அழிக்கப்பட்டிருக்கவேண்டும்' என்பர். அவை அழிக்கப்பட்டிருக்கும் என்று கூறுவதைவிட அவை அழிந்திருக்கும் என்று கூறுதலே பொருத்தமுடைத்து; ஏனெனில், மராட்டியர் ஆட்சியில் அவர்களது அவைக்கள அலுவலர்கள் எழுதிவைத்திருந்த குறிப்புகள் கிடைக்கின்றன. அவற்றை அவர்களது பகைவர்களான முஸ்லிம்களும் அழித்ததாகத் தெரியவில்லை. ஆதலால், பண்டைய வரலாற்றுக் குறிப்புகள் போதிய பாதுகாப்பு இன்மையால் இயற்கைக் காரணங்களால் அழிந்துபோயிருக்கவேண்டும். தவிர இத்தகைய வரலாற்றுக் குறிப்புகளை வரலாற்று இலக்கியம் என்று கூறல் தகாது; அவை வரலாற்று மூலமாகப் பயன்படக் கூடுமேயன்றி வரலாற்று இலக்கியம் என்று கருதப்படா. இன்னும் சிலர் கூறுவர்; 'ஏராளமான வரலாற்றுக் குறிப்புகள் பண்டைய நாடக, கவிதை இலக்கியங்களில் கிடைக்கின்றன; ஆதலால் அவர்களுக்கு வரலாற்று உணர்ச்சி இருந்ததோடு வரலாற்று நூல்களை இயற்றும் மரபும் இருந்தது என்பது விளங்கும்; அன்றியும் அளவிறந்த கல்வெட்டுகளும், செப்புப் பட்டயங்களும் கிடைக்கும் நாட்டில் வரலாற்றோடு தொடர்புடைய செய்திக்குவியலை நம் முன்னோர்கள் ஈட்டிவைத்தனர் என்பதில் ஐயமில்லை' என்பர். ஆனால், ஈண்டும் நாம் காணவேண்டியது யாதெனில், கல்வெட்டுகளும் செப்பு முதலிய பட்டயங்களும் வரலாறு இயற்றுதற்கண் பயன்படும் மூலங்களேயன்றி அவையே வரலாறாகிவிடா. இந்திய இலக்கியத்திலும் வரலாற்று நூல்கள் உள என்று பெருமிதத்தோடு கூறிக்கொள்ளுதற்காக இவற்றிடையே உள்ள வேறுபாடு மறைக்கப்படும். இது நேரிதன்று. தவிர 'வரலாறு' என்னும் சொல்லுக்கு மேனாட்டார் கூறும் பொருள் வேறு, யாம் கூறுவது வேறு என்று கூறி 'இதிகாசம்' என்னும் சொல் வரலாற்றையே குறிக்கும் என்று கூறுதல் தருக்க ரீதிக்குப் புறம்பானதாம். எச்சொல்லையும் ஒரே பொருளில்தான் ஒரு விவாதத்தின்போது பயன்படுத்த வேண்டும். இதிகாசம் என்பது 'இங்ஙனம் நிகழ்ந்தது' என்று பொருள்படுமாயினும், பாரத, இராமாயணம் ஆகிய புராணக் கதைகளை வரலாறு எனல் பொருந்தாக் கூற்றாம். தெய்வங்களையும், அசுரர்களையும், அரக்கர்களைப் பற்றியும் இதிகாச, புராணங்கள்

கூறுவனவாதலாலும், வரலாறு மக்கள் வரலாருக மட்டும் நிகழ்ச்சிக்கு மாறுபடாமல் கூற வேண்டுமாதலாலும் அவை வரலாறு எனப்படா.

தவிர உலகியல் நோக்கிலிருந்து வரலாறு வரையப்படும்; புராணங்கள் ஆன்மிக தெய்விக நோக்கிலிருந்து பேசுவன. இவற்றிடையே மிகப்பெரும் அடிப்படைவேறுபாடு காணப்படும். அன்றியும், சகாப்தங்கள் பலவாக இருந்தமையாலும் அவற்றை ஒன்ருேடொன்று தொடர்புபடுத்தவில்லை யாதலாலும் இந்திய வரலாற்றின் கால வரன்முறையை அவர்கள் வரைவுகளின்றும் காண முடியாது. மேற்கூறிய பல காரணங்களால் பண்டைய இடைக்கால இந்திய இலக்கியங்களில் வரலாற்றிலக்கியம் மட்டும் காணப்படவில்லை என்பது தெள்ளிதின் விளங்கும். இடைக்கால இந்தியாவில் முஸ்லிம்களே பாரசீக மொழியில் வரலாற்று நூல்களை இயற்றினர். இந்துக்கள், பௌத்தர்கள், சைனர்கள் என்போர் அம் முயற்சியில் மிகுதியாக ஈடுபடவில்லை. அவர்களுள்ளும் பௌத்தர்கள் தங்கள் சங்கங்களின் வரலாற்றைப் பிற்காலத்தார் உணர்ந்து அதற்குத்தக ஒழுகுதல் வேண்டிச் சில நூல்களை இயற்றினர். அவை மகா வமிசம் போன்றவை. இந்துக்கள் இம் மரபைப் பின்பற்றித் தங்களது சமயம், மடங்கள் முதலியவற்றின் மரபுகள், நிகழ்ச்சிகள் ஆகியவற்றை இயற்றினர். இவற்றை ஆச்சாரிய பரம்பரைகள், கோயில் ஒழுகுகள், மடங்கள் வெளியிட்ட பிரச்சார நூல்கள் என்பவற்றில் காணலாம். அன்றியும், புராணங்களிலும் சில பாரம்பரியங்கள் கூறப்படுகின்றன. அவை பெரும்பாலும் நம்பக்கூடியவைவையே யாயினும், இறந்தகால நிகழ்ச்சிகளை எதிர்கால வாய்பாட்டால் கூறுகின்றன. புராணங்களிடையேயும் இப் பாரம்பரியப் பட்டியல்களில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. அவை தேவதைகளின் செயற்பாடுகளையும் மக்களின் ஆக்கங்களையும் சேர்த்துக் குழப்புகின்றன. புராணங்கள் சமயத்துறையில் பயன்படும் அளவிற்கு உலகியல் மானுடத் துறையில் பயன்படுவதில்லை. 'மூலங்களை ஆராய்தல் கூடாது' என்று நமது மொழிகளில் வரும் பழமொழிகள் நமது முன்னோர்களுக்கு வரலாற்று நடைமுறையில் நம்பிக்கையில்லை என்பதைக் காட்டும்.

பண்டைய இந்திய இலக்கியங்களில் வேதங்கள், சங்க இலக்கியங்கள் என்னும் இலக்கியங்கள் அரிய வரலாற்றுச் செய்திகளைத் தருகின்றனவாயினும் அவை எச் செய்தியையும் காலவரையறைப் படுத்தி ஒழுங்கான முறையில் கூறுவதில்லை. அரசியற் செயற்பாடுகள், மக்களின் வாழ்க்கை நெறிகள் என்பவற்றைப் பற்றியும்

கூறுவதில்லை. அவற்றை வைத்துக்கொண்டு அவற்றிடைக் காணப்பெறும் பலவகை முரண்பாடுகளைக் களைந்து இக் கால வரலாற்றுளர்கள் அக் கால வரலாற்றை யுணர்தல் வேண்டும் என்பதே நிலை. அன்றியும் இலக்கியங்களிற் கண்ட செய்திகளைப் பிற சான்றுகளைக்கொண்டு சரிபார்த்த பிறகே ஏற்றுக்கொள்ள முடியும் என்னும் நிலையும் உண்டு. பாணர், பில்ஹணர், கல்ஹணர் என்பார் மூவரும் இடைக்கால வரலாற்றின் சிற்சில பகுதிகளைப்பற்றி நூலியற்றியுள்ளனர்.

இவர்களில் கல்ஹணர் நீங்கலாகப் பிறர் காப்பியங்கள் போலத் தமது நூல்களை இயற்றினர். பில்ஹணர் ஆறும் விக்கிர மாதித்தரையும் பாணர் ஹர்ஷணையும் காப்பியத் தலைவர்கள் போல் தமது காப்பியங்களில் வைத்து எழுதினர். அன்றியும் தமது தலைவர்களுக்கு ஏற்றங் கற்பிக்கவேண்டி வரலாற்றுச் செய்திகளைத் தமது தேவைகளுக்கேற்பப் பயன்படுத்துவராயினர். ஆனால் கல்ஹணர் (கி. பி. 12ஆம் நூற்றாண்டு) உண்மையிலேயே ஒரு நல்ல வரலாற்றுளர். அவர் காஷ்மீரத்தின் வரலாற்றினை விரிவாக இயற்றினார். அவருக்கு வரலாற்று உணர்ச்சியும் வரலாறு வரையும் திறனும் ஏற்பட்டதற்கு காஷ்மீர்ப் பிரதேசம் சீனாவுடனும் கிரேக்க நாட்டுடனும் கொண்டிருந்த தொடர்பே யாம்.

இடைக் கால இந்திய வரலாற்றை அக் கால மூலங்களை வைத்து நாம் இயற்ற வேண்டுமாயின், சுல்தான்கள் அவைக் களங் களில் இருந்த வரலாற்றுளரின் வரைவுகளை வைத்தே எழுத வேண்டி வரும். அவைக்கள வரலாற்றுளர்களை அமர்த்திக் கொள்ளுதல் அக் கால முஸ்லிம் மன்னர்களின் மரபு. ஆதலால் மம்மூது கஜனி, அலாவுதீன் கில்ஜி முதலியோர் காலத்திலிருந்து அவுரங்கசீப் காலம் ஈறாக வாழ்ந்திருந்த பல முஸ்லிம் வரலாற்றுளர் களின் வரைவுகளைப் பயன்படுத்த வேண்டுவது இடைக்கால இந்திய வரலாற்றை ஆய்வார் யாவரும் மேற்கொள்ளவேண்டிய அவசியமான ஆய்முறையாம்.

18ஆம் நூற்றாண்டிலிருந்து இந்திய வரலாறு வரைவியலின் வரலாறே மாறிவிடுகின்றது. அப்போதிலிருந்து இந்திய ஆட்சியைச் சிறிது சிறிதாகக் கைப்பற்றிவந்த ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனியாரின் அன்றாட நிருவாகக் குறிப்புகள் விரிவாகவும் நம்பத்தக்கவையாகவும் சமகாலத்தவையாகவும் அமைந்தமையின் அவை வரலாற்றுளரின் பெருமதிப்பிற்குரியவை; அவர்களால் மிகுதியாகப் பயன்படுத்தப் பெறுபவை. கிழக்கிந்தியக்

கம்பெனியின் ஆட்சி முற்றுப்பெற்று பிரிட்டிஷ் பாராளுமன்றமே இந்திய ஆட்சியை மேற்கொண்டதிலிருந்து இத்தகைய குறிப்புகளும் பிற அரசியல் அறிக்கைகளும் அளவினும் முக்கியத்துவத்திலும் மிகுவன ஆயின. அன்றியும் நவீனகால வரலாறு வரையியல் மரபு 18ஆம் நூற்ருண்டில் மேளுட்டில்தான் உருவாயிற்று என்பது யாவரும் கண்டது. அம் மரபு இந்தியாவிலும் அக்காலத்தே புகுந்தது. இராபர்ட் ஆர்ம் என்பார் (இராபர்ட் கிளைவ் காலத்தவர்) கர்நாடகப் போர்களைப்பற்றி இயற்றிய நூலிலிருந்து இன்று காணும் இந்தியாவில் எழுந்துள்ள வரலாற்று இலக்கியங்கள் யாவையும் இந்தியாவின் தற்கால வரலாறு வரைவியல் முயற்சிகளாம்.

2. வரலாற்ருளர்கள்

இம் முயற்சியில் பங்கு கொண்ட இந்து, முஸ்லிம், இந்திய வரலாற்ருளர்களைப்பற்றிக் கீழே காண்போம்:

ஹர்ஷவர்த்தனருடைய அவைக்களப் புலவரான பாண பட்டர் (ஏ. கி. பி. 590—647) வடமொழியில் வல்லுநர்; அம் மொழியில் செய்யுள் யாத்தலும் உரைநடைக் காப்பியங்கள் இயற்றுதலும் அவர்க்கு எளிதில் இயன்றன. அவர் காதம்பரி என்னும் கடின நடைக் கதையை எழுதியதோடு, ஹர்ஷரைப் பற்றிய வரலாற்றினை ஹர்ஷசரிதம் என்னும் நூலாக இயற்றினர். இந் நூலில் அவர் வரலாற்றுப் புறநோக்குக் கண்ணேடு அக் கால நிகழ்ச்சிகளைக்கண்டு எழுதியதாகக் கூறமுடியாது; தமது தலைவரை ஒரு காப்பியத் தலைவராக்கி அச் சரிதத்தை இயற்றினரேயன்றிப் பிறிதன்று எனலாம். இவ்வாறே வாக்பதி என்பார், கனேஜி மன்னரான யசோவர்மன் (ஏ. கி. பி. 730—770) என்பாரது வெற்றிகளைக் கூறுமுகத்தான் 'கௌடவஹோ' என்னும் நூலை இயற்றினர். கல்ஹணரைப்போல பில்ஹணர் என்பாரும் காஷ்மீரர். ஆயினும் பில்ஹணர் மேலைச் சாளுக்கிய மன்னரான ஆரும் விக்கிரமாதித்தர் அவைக் களத்தில் இருந்த புலவர். அவரியற்றிய நூல் 'விக்கிரமாங்கதேவ சரிதம்' என்பது. அதில் வரலாற்று விதிகள் யாவற்றையும் மறந்து தமது புரவலனை எவ்வாற்ருனும் புகழ்ந்து வரைதல் வேண்டும் என்னும் ஒரே நோக்கோடு இயற்றினராதலின் வரலாற்றுச் சான்ருக அந் நூலைக் கொள்ளுதல் சீரிதன்று. வங்காளத்தைச் சேர்ந்த சந்தியாகார நந்தி என்பார் (ஏ. 1075—1130) இரண்டாம் மகிபாலர், இராமபாலர் என்பார் காலத்து வங்காள வரலாற்றை இயற்றினர். அந் நூல் 'இராமசரிதம்' என்று பெயர் பெறும். அது இராமபாலரது சரிதமாயிருத்தலோடு ஸ்ரீராமச்சந்திரரின் வரலாருகவும்

அமைந்தது. ஆதலால் அது ஒரு முழு அளவுச் சிலேடை எனலாம். இதனையே அந் நூலின் ஒரு சிறப்பு அமிசமாகக் கருதுவாரும் உளர். வரலாற்றுக் குறிப்புகளைக் கால வரன்முறைப்படுத்தி எழுதிய பெருமையில் கல்ஹணருக்குச் சற்றும் குறைந்தவரல்லர் சந்தியாகார நந்தி.

கி. பி. 1148-ல் கல்ஹணர் (காஷ்மீரைச் சேர்ந்தவர்) 'இராஜ தரங்கிணி' என்னும் காஷ்மீர வரலாற்றை எழுதத் தொடங்கி இரண்டாண்டுகளில் பூர்த்திசெய்தார். அவர் முற்கூறிய வரலாற் றுளர்களைப் போல ஓர் அந்தணர். அவர் அரசின் ஆதிக்கத்தைப் போற்றினார். அந்தணர் தனிச்சிறப்புகளையும் உரிமைகளையும் ஆதரித்தார். மகளிர் சமுதாயத்தில் கீழ்நிலையில் இருத்தல் வேண் டும் என்னும் கருத்தினர் அவர். அவர் வரலாறு வரைவியலைப் பற்றிச் சில உண்மையான அரிய கருத்துகளைக் கூறியுள்ளார். 'உண்மை விவரங்களை உள்ளவாறு கூறுபவரே வரலாற்றுளர்' என்று அவர் கூறியது இன்றும் பலரால் சிந்திக்கப்படவேண் டியது. அவர் முதல் நூல்களையும் பிற சான்றுகளையும் நன்கு கற்று ஆய்ந்து அவற்றைப் பயன்படுத்தி எழுதுபவர்; அன்றியும் கல்வெட்டுகள், நாணயங்கள் என்னும் வரலாற்று மூலங்களையும் அவர் நன்கு பயன்படுத்தினார்; அங்ஙனம் மூலச்சான்றுகளைக் கலவாமல் வரலாறியற்றிய ஹேமேந்திரர் என்பவர் குறைபட வரலாறியற்றினார் என்று அவரைக் கண்டித்தார்.

பதினைந்தாம் நூற்றாண்டில் காஷ்மீரத்தை யாண்ட சைன்-உல்-அபிதின் என்பார் ஜீனராஜர் என்பாரைக்கொண்டு காஷ்மீர வரலாற்றை இயற்றுவித்தார். ஜீனராஜர், ஜயசிம்மர் காலத்திலிருந்து சைன்-உல்-அபிதின் காலம் வரையிலான காஷ்மீர வரலாற்றை இயற்றினார். அவர் கி. பி. 1434-ல் இறந் தார். அவரது மாணவரான ஸ்ரீஹரபண்டிதர் அவர் பூர்த்தி செய்யாது விட்டுச்சென்ற வரலாற்று நூலைத் தொடர்ந்து எழுதினார். அவர் ஒரு வரலாற்றுளரென்பதோடு ஓர் இசைப் புலவருங்கூட. வரலாற்று நூல்கள் செவ்விய இலக்கிய நடையில் இயற்றப்பட வேண்டும் என்பது அவர் கருத்து.

பிராஜ்யவேட்டர், சுகர் என்னு மிருவர் காஷ்மீர நாட்டின் பிற்கால வரலாற்றை இயற்றினர்; இவர்களில் முந்தியவர் காஷ்மீர வரலாற்றை கி. பி. 1489 முடியவும், பிந்தியவர் அதனைத் தொடர்ந்து அக்பர் ஆட்சி முடியும் வரையிலும் இயற்றினர். இவையெல்லா நூல்களுமே இராஜதரங்கிணி என்றே பெயர் பெறும். இவற்றை நம்பத்தக்க சான்றுகளாகக் கொண்டே பிற் காலப் பாரசீக வரலாற்றுளர்கள் தமது நூல்களை இயற்றினர்.

தமிழ்மொழியில் சேக்கிழார் இயற்றிய பெரிய புராணம், சயங்கொண்டாரது கலிங்கத்துப்பரணி போன்ற நூல்கள் அரசியல், சமுதாய வரலாற்றுச் செய்திகளைக் கூறுகின்றன. விஜய நகரத்து கங்காதேவி என்பாள் தனது கணவனை குமாரகம்பணரின் வெற்றிகளை வருணித்து எழுதிய காப்பியநூல் 'மதுரா விஜயம்' எனப்படும்; அதனை 'வீர கம்பராஸ சரித்திரம்' என்றும் கூறுவர். அது வடமொழிக் காப்பிய இலக்கணத்தோடு விளங்குகின்றது; ஆயினும் பொதுப்படையாக வரலாற்று நிகழ்ச்சிகளை, அதாவது விஜயநகர மன்னர்கள் தென்னாட்டை வென்று கைக்கொண்ட வரலாற்றினை நன்கு எடுத்துக்கூறுகின்றது. அதிலுள்ள உயர்வு நவிற்சிகள் அக் கால இலக்கிய மரபை யொட்டியவை என்க.

'ஜயநாகர்' என்பவர் இயற்றிய 'பிருத்விராஜ விஜயம்' என்னும் நூல் சகமான அரசரான பிருத்விராஜரின் வரலாற்றினை வடமொழியில் கூறுகின்றது. அது கி. பி. 1192-ல் இயற்றப்பட்டதாக இருக்கலாம். சந்த் என்பார் ஒருவர் பிருத்விராஜர் வரலாற்றை 'பிருத்திவிராஜ ராயஸா என்னும் பெயரில் இயற்றினார்; இது இந்திமொழியில் இயற்றப்பட்டது. ராந்தம் போரில் (ரணஸ்தம்பபுரி) ஆண்டுவந்த ஹம்மீரரின் (1282—1301) வெற்றிகளைப் போற்றும் ஹம்மீர மகா காவியம் ஜயசந்திரஸூரியால் இயற்றப்பட்டது; குமாரபாலரைப்பற்றிய குமாரபால சரிதம் ஹேமசந்திரரால் எழுதப்பட்டது.

இடைக்காலம் கழிந்து நவீனகாலம் வருதற்கு இடைப்பட்ட நூற்றாண்டுகளில் இந்தியப் பிராந்திய மொழிகள் பலவற்றிலும் வரலாற்று இலக்கியங்கள் பல எழுந்தன. அவை செய்யுள் உருவில்—உதாரணமாகத் தமிழ் மொழியில் இயற்றப் பெற்ற அம்மானைப் பாடல்கள், கும்மி முதலியன—அமைந்தவையாயினும் வரலாற்று விவரங்களைச் செவ்வனே கூறுகின்றன.

இடைக்காலத்தில்—அதாவது கி. பி. பத்தாம் நூற்றாண்டிலிருந்து, கஜனி மம்மூது படையெடுப்புக் காலத்திலிருந்து, 18ஆம் நூற்றாண்டு முடிய—ஏராளமான வரலாற்று நூல்கள் முஸ்லிம் வரலாற்றாளர்களால் பாரசீக மொழியில் இயற்றப்பட்டன. கிரேக்கர்கள், சீனர்கள் என்போரைப்போல முஸ்லிம்களும் வரலாறு வரைவியல் மரபினைப் போற்றியவர்கள். இந்தியாவில் அவர்கள் வரலாற்று இலக்கியம் வளர்வதற்குப் பல துறைகளிலும் பல வகைகளிலும் முயன்றனர். பாபர், ஜஹாங்கீர் போன்றவர்கள் நாட்குறிப்புகள் வைத்தனர்; அபுல்பசல், பிர்தூஸி, அமீர் குஸ்ரு போன்றவர்கள் வெவ்வேறு வகை

வரலாறுகளை இயற்றினர். குல்பதான் பேகம் முதலியோர் அரச வமிசத்தினராயிருப்பினும் அக் குல மன்னர்கள் வரலாற்றை எழுதினர். சில வரலாற்றுளர்கள் ஆட்சியிலிருந்த சுல்தானின் வெகுளிக்கு அஞ்சி அரசு விரும்பும் வகையில் நூல்கள் இயற்றினர். சிலர்—பிற்காலத்தில் நூலியற்றியவர்கள்—சற்றுத் துணிந்து மதிப்பீடுகளை மேற்கொண்டனர். பதௌனி, அபுல்பசல் போன்றோர் ஒரே ஆட்சியைப்பற்றி வெவ்வேறு கருத்துகளைத் தெரிவித்தனர். இன்னும் சிலர் அவைக்களப் புறக்காட்சிக்கென ஒருவகை வரலாறும் தமது மனச்சாட்சிக்கெனப் பிறிதொருவகை வரலாறும் என இயற்றிவைத்துக் கொண்டனர். முஸ்லிம் மன்னர்கள் நாட்குறிப்பு வைக்கும் மரபினை இந்தியாவில் பிரபலப் படுத்தினர். இவ் வகையில் தோன்றிய மிக முக்கியமான நாட் குறிப்பு புதுச்சேரியைச் சேர்ந்த ஆநந்தரங்கம் பிள்ளையின் (18ஆம் நூற்றாண்டு) நாட்குறிப்பு. இது வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தது.

முஸ்லிம் வரலாறு வரைவியற்கு இந்தியாவில் மிகப் பண்டைய எடுத்துக்காட்டு 'சச் நாமா' என்பது. இந் நூல் 12ஆம் நூற்றாண்டில் பாரசீக மொழியில் இயற்றப்பட்டது; இது அராபி யர்கள் சிந்துவை வென்ற வரலாற்றைக் கூறுவது. அமீர்குஸ்ரு (1252—1325) என்பார் ஒரு துருக்கர். அவர் பால்பன் காலத்தி லிருந்து கியாஸுதீன் துக்ளக் காலம்வரை வாழ்ந்தவர். அவர்கள் ஆட்சிக் கால வரலாற்றை அவர் எழுதினார். ஜலாலுதீன் கில்ஜியின் வெற்றிகளை அவர் தமது 'மிப்தஹுல் புரு' என்னும் நூலில் வரைந்தார்; துக்ளக் நாமாவில் கியாஸுதீன் துக்ளக் ஆட்சியின் தொடக்க காலச் செய்திகளைக் கூறினார்; 'தாரிகி அலை' என்னும் நூலில் அலாவுதீன் கில்ஜியின் தென்னாட்டு வெற்றிகளைக் குறித்தார்; இவ் வெற்றிகளை அவர் நேரில் கண்டவர். அவர் செய்யுளியற்றுதலில் வல்லுநர்; உயர்தரக் காப்பிய நடையில் எழுதுவது அவருக்குக் கைவந்த கலை. இந்தியாவில் வாழ்ந்த பாரசீகப் புலவர்கள் யாவரிலும் அவரே சிறந்தவர் என்ப.

மௌலனா ஸிபா உதீன் பரணி (1286—1359) மகம்மது பின் துக்ளக்கின் அவைக்களத்தில் செல்வாக்கோடு வீற்றிருந்தவர்; ஆனால், அத் துக்ளக்கினை யடுத்து ஆட்சிக்கு வந்த பிரோஸ்ஷா அவரது செல்வம், செல்வாக்கு இரண்டையும் பிடுங்கிக் கொண்டார். அவ் வரலாற்றுளர் தமது 73ஆம் வயதில் ஏழ்மை நிலைக்கு இழிந்து இறந்தார். பரணி முஸ்லிம் தத்துவம், சாத்திரம், சட்டம் என்பவற்றில் மிக வல்லுநர்; வரலாறு கற்றலால் வரும் அறிவியற் சிறப்புகளை நன்கு உணர்ந்தவர்; சமய இலக்கியத்திற்கும் வரலாற்று இலக்கியத்திற்கும் இடையே உள்ள ஆதார வேறு

பாட்டினை அறிந்து கூறியவர். அவர் இயற்றியவையாக எட்டு நூல்கள் குறிக்கப்படுவதுண்டு. ஆனால் அவற்றில் இரண்டு நூல்களே எஞ்சி நிற்கின்றன: (1) தாரிகி பிரூஸ் ஷாஹி; (2) படா வாய் ஜகன்தாரி. முந்திய நூலில் மகம்மது பின் துக்ளக்கின் ஆட்சி வரலாறு விரிவாகக் கூறப்படுகின்றது. அவை யெல்லாம் நேரிற் கண்டவர் கூறுவது. அவர் அம் மன்னனைப் பற்றிக் கூறியவையே இன்று நாம் அவரைப்பற்றிக் கொண்டுள்ள கருத்துகளின் அடிப்படை, பிரூஸ்ஷாவைப்பற்றிப் பிற்கால வரலாற்றாளர்கள் கொண்டுள்ள கருத்துகளும் அவர் வரைவுகளி னின்றும் பிறந்தவையே. அவர் அலாவுதீன் கில்ஜியின் நிருவாகத் தைப்பற்றி விரிவாகவும் வியப்போடும் எழுதுகின்றார். பரணி ஸுன்னிப் பிரிவினராதலின் ஷியாக்களுக்கு எதிராகவும் அவரது நூல்கள் அமைகின்றன. அவர் தம் உடனிகழ் காலத்துச் செய்தி களைப்பற்றி எழுதியமையால், அவர் நூல்களில் தவிர்க்க முடியாத படி பெருமளவிற்கு அகநோக்குக் காணப்படும். ஆயினும், இடைக் கால வரலாற்றாளர்கள் வரிசையில் அவர் முன்னணியில் வைத்து எண்ணத்தக்கவர்.

மின்ஹாஜ் ஸிராஜ் கில்ஜி ஆட்சிக் காலத்து அரசியல் வரலாற்றை 'டபாகத் நாஸிரி', என்னும் பெயரில் இயற்றினார். வரலாற்று நூல் என்னும் வகையில் இது மிகச் சிறந்ததென்று கூற முடியாதாயினும் இதில் வரலாற்றாளர்க்குப் பயன்படக் கூடிய செய்திகள் மிக உள்ளன. இந் நூல் ஆங்காங்குச் சிதறிக்கிடக்கும் பல செய்தித் துணுக்குகளைச் சேர்த்து ஆக்கியது போன்றது. அப்துல்லாபின் பஸ்லுல்லா வாஸப் என்பார் பாரசீக மங்கோலி யர்களின் வரலாற்றை எழுதினார். அது முக்கியமாகப் பாரசீக வரலாறேயாயினும் இந்தியாவைப்பற்றிப் பல குறிப்புகள் அதன் கண் உள. அலாவுதீன் கில்ஜியின் தென்னாட்டுப் படையெடுப் பைப்பற்றி அவர் நூலில் காணப்படும் குறிப்புகள் வரலாற்று ளர்க்கு மிகப் பயனுடையவை.

இபன் பதூதா (1304—1378) வட ஆஃப்பிரிக்காவிலுள்ள டாஞ்சியரைச் சேர்ந்தவர். அவர் ஓர் அராபியர்; 1333-ல் இந்தியாவிற்கு வந்து சேர்ந்தார். டெல்லியில் இருந்தபோது அவர் மகம்மது பின் துக்ளக்கின் நெருங்கிய நண்பராயிருந்தார்; எட்டாண்டுக் காலம் அவர் டெல்லியில் காஸியாக அலுவல் பார்த்தார். அத் துக்ளக் மன்னர் மனநிலை எப்போதும் ஒரு படித் தாக இராதாதலின், ஒரு சில காலம் இபன் பதூதா அவருடைய ஆதரவை இழந்தார்; சிறைப்படுத்தப்பட்டார். ஆயினும் மிக விரைவிலேயே சுல்தான் அவரை ஆதரிக்கத் தொடங்கினார். அதன்

பிறகு அவர் தென்னாடு போந்து, அங்கு மதுரையில் சுல்தானு யிருந்த ஜலாலுதீன் அஸன்ஷாவின் மகளை மணந்து சில காலம் தங்கி யிருந்துவிட்டுத் தமது பயணங்களை மேற்கொண்டார். அவர் 1349-ல் மொராக்கோவிற்குத் திரும்பிச் சென்றார். அங்குத் தமது 'ரேலா' (பயணங்கள்) என்னும் நூலை இயற்றினார். அதில் அவர் உடனிகழ் காலத்தில் இந்திய நிகழ்ச்சிகள் பலவற்றைப் பற்றி விரிவாகக் குறிப்பிட்டுள்ளார். மகம்மது பின் துக்ளக்கைப் பற்றி அவரது கூற்றுகள் பரணியின் வரலாற்றுக் கூற்றுகளோடு பெரிதும் ஒத்துள்ளன. மதுரைச் சுல்தானியத்தின் வரலாற்றைக் கற்பார்க்கு இபன் பதூதாவின் குறிப்புகள் மிகப் பயன்படுவன.

பிரூஸ்ஷா ஆட்சி நன்கு வருணிக்கப்பட்டுள்ளது. அந்தச் சுல்தானே புடுஷ்டி பிரூஸ் ஷாஹி என்னும் நூலை இயற்றியுள்ளார். அதில் தமது ஆட்சிவரலாற்றை விவரித்துக் கூறுகின்றார். தமது அமைதிக்காலச் சாதனைகளை வெற்றிகளாக அவர் குறிப்பிடுவது நோக்கத்தக்கது. பெயர் தெரியாத ஓர் ஆசிரியரால் ஸிராடி பிரூஸ் ஷாஹி என்னும் நூல் இயற்றப்பெற்றது. அந் நூலின் ஆசிரியர் உடனிகழ்காலத்தவராதலின் அவர் கூற்றுகள் நம்பத் தக்கவையே எனலாம். பிரூஸ்ஷாவின் ஆட்சியோடு தொடர்பு பட்ட அரசியல் நிருவாகம், பொதுமக்களது வாழ்க்கைநிலை என்னும் விவரங்கள்பற்றி இந் நூல் பேசுகின்றது. இவ் விரு நூல்கள் தவிர ஷாம்ஸி ஸிராஜ் அபீப் என்பவர் தாரகி பிரோஸ் ஷாஹி என்னும் நூலை இயற்றினார். இந் நூல் பிரோஸ்ஷாவின் ஆட்சி முடிந்து கால் நூற்றாண்டு கழித்து எழுதப்பெற்றது. இதனைப் பரணியின் தாரிகி பிரோஸ்ஷாஹியின் தொடர்ச்சி என்று கருத லாம். பிற நூல்களில் காணாத அளவிலும் வகையிலும் அவர் நூலில் பிரோஸின் ஆட்சிக்காலத்திய நாட்டு நடப்புகள் விவரிக்கப் பட்டுள்ளன.

குவாஜா அப்துல் மாலிக் இஸாமி என்பவர் பாமனி வமிசத்தை நிறுவிய அலாவுதீன் ஹஸன் பாமன் ஷாவால் ஆதரிக்கப்பட்டவர். அவர் புரூ—உஸ்—ஸலாடின் என்னும் நூலை இயற்றினார். இவர் மகம்மது பின் துக்ளக் ஆட்சியைப்பற்றி மிகக் கடுமையாக எழுதினார். அலாவுதீன் பாமன் ஷாவின் பாமனி ஆட்சியைப்பற்றிய வரலாறு நம்பத்தக்கதாம். இபன்பதூதா, பரணி, இஸாமி என்னும் மூவரின் நூல்களும் ஏறத்தாழ ஒரே காலத்தின் வரலாற்றினை எழுதிவைத்திருப்பது தற்கால வரலாற் றாளர்கட்கு ஒரு நல்லூழ் என்றே கூறவேண்டும்.

தக்காணத்தில் ஆட்சிபுரிந்த முஸ்லிம் அரசகுலங்களைப்பற்றிய வரலாறுகளை சையிது அலி டபாடபா, பெரிஷ்டா என்னும் இரு

வரும் இயற்றினர். டபாடபா என்பார் கி. பி. 1580-ல் இந்தியா விற்கு வந்து கோல்கொண்டா அரசவையில் அலுவலில் அமர்ந் தார். அவர் புர்ஹானி மாயிர் என்னும் நூலை இயற்றினூர். இந் நூல் பெரிஷ்டா முதலியோரின் வரலாறுகளைப் பின்பற்றியது. பெரிஷ்டா என்பவர் அகமது நகரில் ஆண்ட நைஜாம் ஷாஹி குலத்தவர் ஆட்சியைப்பற்றிய நூலியற்றினூர்; அவர் தமது நூலில் பொதுவாக இந்திய முஸ்லிம் ஆட்சியைப்பற்றியே எழுதினூர். அவர் இந்தியாவில் ஏற்றத்தாழ்வோடு அமைந்த ஒரு வாழ்வை நடத்தினூர். அவர் நூல் தாரிகி பிரிஷ்டா என்று பெயர்பெறும். அவர்தாம் வரலாற்றுத் தனியன்களை அவற்றின் உண்மை யொன்றைக் கருதியே பயன்படுத்தியதாகக் கூறிக்கொள்கிறூர். தாரிகி பிரிஷ்டா பன்னிரண்டு பகுதிகளில் முகவுரை, முடிப்புரை யுட்பட உள்ளது. இந் நூல் கஜனிகள் ஆட்சி தொடங்கி கி. பி. 1609 வரையுள்ள வரலாற்றைக் கூறுகின்றது. விசயநகரத்தைப் பற்றிச் சற்று விரிவாகக் கூறுபவர் பிரிஷ்டா தாம். விசயநகரத் தைப் பற்றிக் குறிப்புகள் இயற்றிய வேறொரு வெளிநாட்டார் அப்துர்ரஸாக் (1413—1482). அவர் பாரசீகர், இரண்டாம் தேவராயர் ஆட்சிக்காலத்தில் இந்தியாவிற்கு வந்தவர். அவர் பாரசீக வரலாறு ஒன்று இயற்றினூர். அதிலேயே விசயநகரத்தைப் பற்றியும் பெருமையோடு பேசுகின்றூர். அவர் வரைவுகளையும் பிரிஷ்டாவின் கூற்றுகளையும் சேர்த்துப் படித்தால்தான் விசய நகரத்தைப்பற்றிய நிதானமான ஒரு மதிப்பீடு கிடைக்கும்.

இனி மொகலாயர் ஆட்சி இந்தியாவில் தொடங்கிய பிறகு பல அரிய வரலாற்றுளர்கள் தோன்றி அக் கால வரலாற்றை விளக்கினர். அவர்களில் பலர் மன்ன ரவைக்களத்திலிருந்து எழுதியவர்கள்; சிலர் அரச பரம்பரையைச் சேர்ந்தவர்கள்; வேறு சிலர் தங்கள் வாழ்க்கைக் குறிப்புகளை எழுதிவைத்தவர்கள். பாபர் தமது வரலாற்றை இயற்றினூர். அதில் தம் வாழ்க்கையின் ஏற்றத் தாழ்வுகளையும், வெற்றி தோல்விகளையும் குறித்ததோடு தாம் கண்ட நாடுகளைப்பற்றியும் அறிந்த செய்திகளைப்பற்றியும் நுண்ணறிவோடு புகன்றூர். அந் நூலுக்கு பாபர் நாமா அல்லது துஸுகிபாபுரி என்று பெயர். அதில் அவர் வாழ்க்கையில் 18ஆண்டு வரலாறு கூறப்படுகின்றது. அவருடைய ஒன்றுவிட்ட சகோ தரரான மிர்ஸா ஹைதர் என்பவர் இயற்றிய தாரிகி ரஷிதி என்னும் நூலில் காணப்படும் விவரங்களும் அவரது மகளான குல்பதான் பேகம் என்பார் இயற்றிய நூலின் (ஹுமாயூன் நாமா) செய்திகளும் சேர்ந்து அக் கால அரசியல் வரலாற்றை நாம் உணர உதவுகின்றன.

மொகலாயர் ஆட்சிக் காலத்தில் வாழ்ந்த வரலாற்றுளர்களில் மிகச் சிறந்தவர்களில் ஒருவராகக் கருதப்படுபவர் அபுல் பசல். இவர் அக்பர் அவைக்களத்தை அலங்கரித்தவர். இவர் அக்பர் நாமா, அயினி அக்பரி என்னும் இரு நூல்களை இயற்றினுர். இந் நூல்களில் முதலாவது அக்பருடைய வாழ்க்கை, ஆட்சிமுறை முதலியவற்றைப்பற்றிக் கூறுகின்றது; இரண்டாவது அம் மன்னர் காலத்து நிருவாக முறை, பொருளாதார நிலை, பொதுமக்கள் வாழ்க்கைத் தரம் முதலிய பல உடனிகழ் காலத்து விவரங்களைக் கூறுகின்றது. அபுல் பசல் பாரசீகமொழி வல்லுநர், அவர் அக்பரோடு மிக நெருங்கிப் பழகியவர்; அப் பேரரசரைத் தெய்வத்திற்கு நிகராகக் கருதி வருணித்துள்ளார். அக்பரைப்பற்றி அவரளவிற்கு வேறு ஒருவரும் விவரங்களைக் கூறவில்லை யாயினும் அவர் அக்பருடைய நற்குணங்களை மிகுத்துக் கூறி அவரது சிறுமைகளை மறைத்துவிட்ட பான்மையால் அவரது வரலாற்று நூல் ஒருபாற் கோடியதாகக் கொள்ளப்படும். பதௌனி முதலியோரின் வரலாறுகளையும் அபுல் பசலின் விளக்கங்களையும் உடனோக்கியே அக்பரது சாதனைகளையும் பண்புகளையும் மதிப்பிட வேண்டும். அவர் தமது நூலை நன்கு காலவரையறைப்படுத்தி எழுதியுள்ளார். அயினி அக்பரி என்பது அக்பர் நாமாவின் மூன்றும் பாகம் என்று சொல்லலாம்.

அப்துல் காதர் பதௌனி என்பவர் அக்பர் அவைக்களத்திற்கு 1574-ல் வந்தவர். தொடக்கத்தில் அம் மன்னரது ஆதரவைப் பெற்றிருந்தாராயினும், அபுல் பசல் அவைக்களத்திற் சேர்ந்தபின், இவரது செல்வாக்குக் குறைந்தது. அவர் வரலாற்றுக் கலையைப்பற்றி உயர்வாகவும் விஞ்ஞான முறையிலும் விளக்கினுர். பேரரசரான அக்பரைப்பற்றித் துணிந்து சிலவற்றை அவர் எழுதினுர். அதற்காக அவர் அஞ்சவில்லை, வருந்தவில்லை. கடவுளறியத் தாம் உண்மையைக் கூறியுள்ளதாக அவர் கூறுகிருர். அவர் தபகடி அக்பரி, முண்டகாபுல் தவாரிக் என்னும் இரு நூல்களை இயற்றினுர். அவை இரண்டுமே அக்பர் ஆட்சியைப் பற்றித்தாம் குறிக்கின்றன.

குவாஜா நிஜாமுதீன் என்பவர் 1551-ல் பிறந்தவர்; அவர் தந்தை பாபரிடம் அலுவல் பார்த்தவர். அவர் ஹுமாயூனுக்குப் பேராதரவாக இருந்தவர்; அக்பர் படையில் சேர்ந்து தொண்டாற்றியவர். அவர் தகபடி அக்பரி என்னும் அரிய நூலை, 1593-ல் எழுதி முடித்தார். இந் நூல் ஒன்பது பாகங்களில் உள்ளது. அவர் பரணி, அபீப், அபுல்பசல் முதலியோர் இயற்றிய நூல்களைப் பின்பற்றினுர்.

அக்பரையடுத்து மொகலாயப் பேரரசரான ஜஹாங்கீர் தமது வாழ்க்கைச் செய்திகளை நாட் குறிப்பாக எழுதிவைத்தார். முஸ்லிம் அரசர்கள் இயற்றியுள்ள நாட் குறிப்புகள் யாவற்றுள்ளும் இதுவே சாலவும் சிறந்தது. அவர் சிறந்த எழுத்தாளர், திறமையும் சாமர்த்தியமும் மிக்கவர்; எதை எவ்வாறு சொல்ல வேண்டும் என்னும் இங்கிதம் அறிந்து கூறுபவர் என்பவையெல்லாம் இந் நாட்குறிப்பாற் புலனாம். இவை 1605-லிருந்து 1617 வரையுள்ள காலத்தோடு தொடர்புடையவை. ஜஹாங்கீருடைய ஆட்சியை ஆய்வார்க்கு அவரது நாட்குறிப்பே ஆதாரச் சான்றாகும்.

பாதுஷா நாமா என்னும் நூலை இயற்றிய மிர்ஸா அமீனா என்பாரது மகன் மிர்ஸா மகம்மது காஸிம் என்பவர். அவர் இயற்றிய நூல் ஆலங்கீர் நாமா என்பது; அவர் அவுரங்கசீபின் அவைக் களத்தில் இருந்தவர். அப் பேரரசர்தாம் அவரைத் தமது அவைக்களத்து வரலாற்றாளராக நியமித்தார். பதினோராண்டு வரலாறு எழுதிய பின் பேரரசர் உத்தரவுப்படி அவர் வரலாறு எழுதும் வேலையை விட்டுவிட்டார். அவுரங்கசீப் அப்போது பிற கலைகளைப்போல வரலாற்றின்மீதும் வெறுப்புக் கொண்டு அதனை மேற்கொள்வார்க்குத் தடைவிதித்தார்.

மகம்மது ஹஷிம் காபி கான் 'தாரிகி காபிகான்' என்னும் அரிய நூலை இயற்றினார். அதில் கோரி படையெடுப்புக் காலந் தொட்டு 1733 வரையுள்ள வரலாறு மிக விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இந் நூலின் மூன்றாம் பகுதி அவுரங்கசீபின் ஆட்சியை நன்கு விளக்குகின்றது. அவர் தமது நூலை அவுரங்கசீபிற்குத் தெரியாமலே எழுதினார். காபி என்றால் மறைக்கப்பட்டது என்று பொருள். ஆதலால் பேரரசர் அறியாமல் மறைத்து இயற்றப் பட்ட நூலின் ஆசிரியர் காபிகான் எனப்பட்டார். அவர் தமக்கு முன்பு வரலாறு இயற்றிய சாதிக் கான், அபுல் பசல் மாமுஸி என்பாரது நூல்களை முற்றிலும் மேற்கொண்டார். அவர் நூலிலிருந்து அவுரங்கசீப் காலத்துத் தக்காணத்து விவகாரங்கள் நன்கு புலனாகின்றன.

சச் நாமாவை இயற்றியவர் தொடங்கிக் காபிகான் ஈறாக மேற்கூறிய வரலாற்றாளர்கள் இடைக்கால இந்தியாவில் எழுந்த முஸ்லிம் வரலாறு எழுதியவர்கள். அவர்கள் நூல்கள் இல்லையேல் முஸ்லிம் இந்தியாவின் வரலாறு மிகப்பெரும்பாலும் நமக்குக் கிடைத்திராது. ஐரோப்பிய கால இந்திய வரலாறு வரைவியற் கோணத்திலிருந்து பார்க்கும்போது முஸ்லிம் வரலாறு வரைவியல் மிகச் சிறந்ததாகக் காணப்படாதாயினும், அதன் உண்மையான

சிறப்பை யுணர்தற்கு அதனை முஸ்லிம் காலத்திற்கு முற்பட்ட இந்து, பௌத்த எழுத்தாளர்களது வரலாறு வரைவியற் சாதனை களோடு ஒப்பிட வேண்டும்.

இந்தியாவில் ஆங்கிலேயர் தொடர்பு ஏற்பட்ட பிறகுதான் சரியான வரலாறு வரைவியல் மரபு தோன்றியது. இம் மரபு 15ஆம் நூற்றாண்டிலேயே ஆரம்பித்துவிட்டது. முஸ்லிம் ஆட்சி, முக்கியமாக மொகலாயர் ஆட்சி தொடங்கிய காலத்திலேயே அரசாங்க அலுவல் பத்திரங்கள், கடிதங்கள், உத்தரவுகள், தஸ் தாவேஜுகள் என்பவை மிகுதியாகக் குவியத் தொடங்கிவிட்டன. இவற்றைக்கொண்டேகூட ஓரளவிற்கு மொகலாயர் ஆட்சியின் வரலாற்றை இயற்றமுடியு மாயினும், மேற்கூறிய முஸ்லிம் வரலாற்றாளர்களின் அரிய நூல்களின் உதவிகொண்டு அக் கால வரலாற்றினை மிக விரிவாகவும் கோவைப்படவும் எழுத முடிகின்றது.

பதினெட்டாம் நூற்றாண்டிலிருந்து இந் நிலை இன்னும் சிறிது மாறி நல்ல முறைபில் வரலாறு வரைதற்கான சூழ்நிலை பிறக் கின்றது. ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியார் வாணிக நிலைய மாக மட்டும் இருந்த நிலையிற்கூட ஏராளமான கடிதப் போக்கு வரத்துகளை ஆக்கி அவற்றை நல்ல முறையில் இந்தியாவிலும் இங்கிலாந்திலும் செம்மையாய்ப் பாதுகாத்து வரலாயினர். இங்ஙனம் காலவரையறைப்படி அன்றாடக் கடிதங்களையும், குறிப்புகளையும், பத்திரங்களையும் பத்திரமாக வைத்திருந்தமையே அவர்களுக்கிருந்த வரலாற்றுணர்ச்சியைப் புலப்படுத்தும். 19ஆம் நூற்றாண்டில் இந்தியாவை ஆளத் தொடங்கிய ஐரோப்பியர்கள் முதன்முதலாக முழு அளவு இந்திய வரலாறுகளை இயற்றத் தொடங்கினர். அந் நூற்றாண்டிறுதியில் தொல் பொருள்களைக் கண்டுபிடித்து அவற்றைப் பாதுகாக்கும் முயற்சியையும் அவர்கள் மேற்கொள்ளவே, பண்டைய இந்திய வரலாற்றை முறைப்படி நவீன-விஞ்ஞான ரீதியில் எழுதும் மரபு உருவாயிற்று. இருபதாம் நூற்றாண்டில் நாம் காணும் இந்திய வரலாற்றிலக்கியங்களுக் கெல்லாம் 19ஆம் நூற்றாண்டில்தான் அடிப்படையிடப்பட்டது.

இடைக்காலத்திலேயே, அதாவது கி பி. பதினோராம் நூற் றாண்டிலிருந்து 17ஆம் நூற்றாண்டுவரை பல ஐரோப்பியப் பயணிகள் இந்தியாவிற்கு வந்து சென்று குறிப்புகளைவிட்டுச் சென்றுள்ளனர். மார்க்கோபோலோ, நிகோலோ கான்டி, நிகிடின், அப்துர்ரஸாக், மான்ஸெராட் பாதிரியார், பெர்னியர், டாவர்னியர் முதலியோரையும் ஸர் தாமஸ்ரோ, ஹாக்கின்ஸ், துபுவா முதலியோரையும் குறிப்பிடுதல் வேண்டும்.

இந்தியக் கலை ஆராய்ச்சியை 18ஆம் நூற்றாண்டு ஆங்கிலேயர்கள் மேற்கொண்டனர். இந்தியவியற் கலைஞர் என்று அவர்களை யழைப்பர். வாரன் ஹேஸ்டிங்ஸ், ஸர்வில்லியம் ஜோன்ஸ், பிரின்ஸெப், வில்கின்ஸ் என்போரை இந்நிலையில் சிறப்பாகக் குறிப்பிடுதல் வேண்டும். அவர்கள் பண்டைய இந்திய இலக்கியங்களில் சிறந்தவற்றை ஆங்கிலத்தில் பெயர்த்து ஐரோப்பிய உலகிற்கு அறிமுகப்படுத்தினர். ஹென்றி கோல்புருக், வில்ஸன், அலெக்ஸாந்தர் ஹாமில்டன், ஃபிரான்ஸ் பாப், மாக்ஸ்முல்லர் என்போர் பண்டைய இந்திய வரலாற்றையும் பண்பாட்டையும் தமது நூல்களால் உலகறியப் பரப்பினர்.

ஜேம்ஸ் பிரின்ஸெப் 1837-ல் பிராமி எழுத்துகளைப் படிக்க உதவியதிலிருந்து இந்திய வரலாறு வரைவியற்குப் புத்துயிர் கிடைத்தது எனலாம்; அதைத் தொடர்ந்து கரோஷ்தி, வட்டெழுத்து முதலிய பழைய எழுத்து முறைகளின் இரகசியங்களும் புலப்படலாயின. ஆனால் நவீனமுறையில் வரலாறு வரையும் மரபு ராபர்ட் ஆர்ம் (Robert Orme) என்பவரால் தொடக்கப் பெற்றது. அவர் ‘1745-லிருந்து ஆங்கிலேயர் இந்தியாவில் மேற்கொண்ட இராணுவ நடவடிக்கைகள்’ என்னும் நூலை இயற்றினர்; அவர் கிளைவின் உடனிகழ் காலத்தவர்; இந்தியாவிலிருந்து அவரை நேரில் அறிந்தவர்; இந்திய அரசியல் வரலாற்றில் மிகக் குழப்பமான ஒரு காலத்தின் வரலாற்றுச் சிக்கல்களை யுள்ளவாறு உணர்தற்கு உதவியவர் என்னும் வகையில் ஆர்மிற்குத் தனிச்சிறப்பு உண்டு. ஆங்கிலேய இந்திய வரலாற்றாளர்களில் அடுத்தபடி (கால வரன்முறைப்படி) முக்கியத்தும் உடையவர் ஜேம்ஸ்மில் (1773—1836) என்பவர். அவர் மகனே புகழ்பெற்ற ஜான் ஸ்டுவர்ட் மில். ஜேம்ஸ் மில் எளிய நிலையிலிருந்து மிகச் சிறந்த நிலைக்குத் தம் முயற்சியால் வந்தவர். அவர் பெந்தம் (Bentham) முதலியோருடைய நண்பராகி அவர்களுடைய பொருளாதார, சமுதாயக் கோட்பாடுகளை மேற்கொண்டார்; அவர் பயன்பாட்டுக் கோட்பாட்டாளர். அவர் இயற்றியது ‘பிரிட்டிஷ் இந்திய வரலாறு’. அந் நூலில் அவர் பண்டைய இந்தியப் பண்பாடு, வரலாறு என்பவற்றில் தமது மிகுதியான அறியாமையைத் தெளிவாகக் காட்டியுள்ளார். பெரும்பாலும் அவர் இந்தியக் கலாசாரத்தை அனுதாபத்துடன் அணுகவில்லை. அவர் நூலின் பெரும்பகுதி இடைக்கால, நவீனகால இந்திய வரலாற்றினைப் பத்தொன்பதாம் நூற்றாண்டு ஆங்கிலேயக் கண்கொண்டு காணப் பயன்படுவதாம். இங்ஙனம் சில குறைபாடுகள் இருப்பினும், மெக்காலே பிரபு போன்றவர்கள் ஜேம்ஸ் மில்லின் நூலை, ‘கிப்பன் நூலியற்றியதற்குப் பிறகு எழுந்த மிகப் பெரிய வரலாற்று நூல்’

என்று புகழ்ந்தனர். இந்துப் பண்பாட்டை அவர் குறைகூறும் முறையை ஏற்றுக்கொள்ளாத வில்ஸனும் அவர் நூலின் அரிய பண்புகளுக்காக அதனைப் போற்றுகின்றூர்.

மவுன்ட் ஸ்டுவர்ட் எல்பின்ஸ்டன் (1779—1859) 1841-ல் ஒரு 'இந்திய வரலாற்'றினை இயற்றினூர். அவர் 'கீழை நாடுகளில் பிரிட்டிஷ் ஆதிக்க எழுச்சி' என்று இன்னொரு நூலையும் இயற்றினூர். எல்பின்ஸ்டன் 1870-ல் பூனாவில் ரெஸிடென்டாக இருந்தவர்; அவர் முதல் பம்பாய் மாகாணக் கவர்னராக அலுவல் பார்த்தார்; மராட்டியர் வரலாற்றினை நன்கு அறிந்தவர். மில்லைப் போல எல்பின்ஸ்டனும் சான்றுகளின்மையால் இந்திய வரலாற்றினை அவரது உடனிகழ் காலக் கண்கொண்டுதான் இயற்ற முடிந்தது. அவரைப் போலவே ஸர் ஜான் மால்கம் 'இந்திய அரசியல் வரலாறு' என்னும் நூலை இயற்றினூர் (1826). 19ஆம் நூற்றூண்டின் முற்பகுதியில் இயற்றப்பட்ட இந்திய வரலாறுகளில் பல இந் நாட்டில் ஆட்சிபுரிந்த ஆங்கிலேயர்களால் இயற்றப் பெற்றன என்பது குறிப்பிடத்தக்கது. பீட்டர் ஆபர் என்பார் 'இந்தியாவில் பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் எழுச்சியும் வளர்ச்சியும்' என்று ஒரு நூலியற்றினூர். இவையேயன்றி 'அஸ்ஸாம் வரலாறு' ஒன்றினை ஹாமில்டனும், 'வங்காள வரலா'ற்றினை மார்ஷ்மனும், 'சீக்கியர் வரலா'ற்றினை கன்னிங்ஹாமும், 'ஒரிஸ்ஸா வரலா'ற்றினை ஸ்டர்லிங்கும், 'மராட்டியர் வரலா'ற்றினைக் கிரான்ட் டஃபும் (Grant Duff), 'இராஸ்தானின் தொல்கதைகள்' என்னும் பொருள்பற்றி டாடு (Tod) என்பாரும் நூலியற்றினர். இவற்றில் கிரான்ட் டஃப், டாடு ஆகியோரின் நூல்கள் மிகப் புகழ்பெற்றவை. இவற்றை ஆதாரமாக வைத்தே பிற்காலத்தில் மராட்டியர், இராஜபுத்ரர்கள் ஆகியோரின் வரலாறுகளைப் பிறர் எழுதினர். கிரான்ட் டஃப், எல்பின்ஸ்டன் காலத்தவர். அவரும் மராட்டியரை மிக நன்றாக அறிந்திருந்தார். தமது நூலை எல்பின்ஸ்டனுக்கே அவர் உரிமை செய்தார். அவர் தமது இலக்கிய நடையைப் பற்றிக் கவலைப்பட்டதே இல்லை. அவரது நூலை எந்த மராட்டிய வரலாற்றூளரும் ஏற்றுக்கொள்ள மாட்டார். ஆயினும், ஸர் தேசாய், யதுநாத சர்க்கார், சென் முதலியோர் பிற்காலத்தில் மராட்டியரைப்பற்றிப் பல நூல்கள் இயற்றியுள்ளனரேனும், கிரான்ட் டஃபின் நூலே ஆதார நூலாக விளங்குகின்றது. கிரான்ட் டஃபும் கன்னிங்ஹாமும் தாங்கள் இயற்றிய நூல்களில் அரசியல் வரலாற்றையே மிகுத்து எழுதினர்; ஆனல் டாடு இராஜபுத்ரர்களது சமுதாய வாழ்க்கையின் பல துறைகளைச் செவ்வனே ஆராய்ந்து, நாட்டுக் கதைகளையும் சேர்த்துச் சுவைபட எழுதினூர்.

ஸர் அலெக்ஸாந்தர் கன்னிங்ஹாம் (1814—1893) என்பார் இந்தியாவில் தொல்பொருள் ஆராய்ச்சிக்கு வித்திட்டவர். அவர் 1833-ல் இந்தியாவிற்கு வந்தார்; சீக்கியப் போர்களில் ஓர் இராணுவப் பொறியியலராகச் சேர்ந்துகொண்டார். 1862-ல் அவர் தொல்பொருள் துறை இயக்குநராக அமர்ந்தார். அவர் நாடு முழுதும் சுற்றி முக்கியமான வரலாற்றுத் தொல்பொருள் சான்றுகளைக் கண்டு அவற்றை மதிப்பீடு செய்து பல நூல்களை இயற்றினர். அவர் தமது வரலாற்று அலுவல்களைப்பற்றிய ஆண்டு அறிக்கைகளை அவ்வப்போது வெளியிட்டார். இந்தியக் கல்வெட்டுகளின் முதல் தொகுதியை அவர் வெளியிட்டார். அதாவது அசோகர் கல்வெட்டுகள். அவர் இந்தியாவின் தொல் புவியியல், பார்ஹூத் ஸ்தூபம், இந்திய சகாப்தங்கள் என்னும் நூல்களை இயற்றினர். ஆர்மிலிருந்து கன்னிங்ஹாம்வரை எழுந்த வரலாற்றுளர்களின் வரைவுகளையும் செயற்பாடுகளையும் நோக்கு வார்க்கு 18, 19ஆம் நூற்றுண்டுகளில் இந்தியாவில் வரலாறு வரைவியல் ஆங்கிலேயர் ஆதரவில் எவ்வளவு உருப்பெற்று முன்னேறி வந்தது என்பது தெள்ளிதிற் புலனும்.

ஸர் அலெக்ஸாந்தரின் சகோதரரான ஜோசப் டேவி கன்னிங் ஹாமும் இந்தியாவிற்கு வந்து இந் நாட்டு அரசியலில் கலந்து, கிழக்கிந்தியக் கம்பெனி நிருவாகத்துறையில் உயர்தர நிலைகளைப் பெற்று விளங்கினர். அவர் பஹவல்புரி, போப்பால் முதலிய சுதேச மன்னர் அவைக்களங்களில் ஆங்கிலேயரின் அரசியல் பிரதிநிதியாக விளங்கினர். அவர் 1849-ல் சீக்கியர் வரலாற்றை இயற்றி வெளியிட்டார். அந் நூலில் அவர் 'இரகசியமானவை' என்று தனிப்படுத்தி வைக்கப்பட்டிருந்த அதிகார பூர்வமான அறிக்கை, குறிப்பு முதலியற்றைப் பயன்படுத்தினர் என்று குற்றஞ் சாட்டப்பட்டு வேலையிலிருந்து நீக்கப்பட்டார். உண்மையில் ஆங்கிலேயக் கம்பெனி நிருவாகிகளுக்குப் பிடித்த மில்லாத சில கசப்பான உண்மைகளையும் அந் நூலில் கூறியுள்ளார் என்பதே அதிகாரிகளுக்கு அவர்மீது சினம் எழக் காரணமாம். அவர் காலத்தில் அவருக்குக் கிடைத்த சான்றுகள் யாவற்றையும் காய்தல், உவத்தல் இன்றிப் பயன்படுத்திப் பொதுமை நோக்கோடு அவர் அந் நூலை இயற்றியுள்ளமை, இன்றைய வரலாறு வரைவியல் தகுதிகளைவைத்துப் பார்த்தால்கூட, போற்றத் தக்கதாம்.

வில்லியம் வில்ஸன் ஹண்டர் இந்திய சிவில் சர்வீஸைச் சேர்ந்தவர். இந்திய வரலாறு வரைவியற்கு அவர் பெருந் தொண்டு புரிந்தார். அவர் 'இந்திய ஆட்சியாளர் வரலாற்று

வரிசை' யொன்றைப் பதிப்பிக்கத் தொடங்கி அவ் வரிசையில் டல்ஹௌஸி, மேயோ என்பாரது வாழ்க்கை, ஆட்சி வரலாறுகளை எழுதினர். அவர் இந்தியாவையும் இந்தியர்களையும்பற்றி நெடிது ஆராய்ந்தார். இந்தியர்களிடம் மதிப்புடையராயினும் அவர் அடிப்படையாக ஓர் ஆங்கிலேயர்; ஆதலால் அவர்கள் இந்தியாவில் பேரரசு நிறுவிய முறையை ஆதரித்தே எழுதியது இயல்பு என்பதை நினைவுகூர்தல் வேண்டும். 'இந்திய மக்கள் வரலாறு' என்றொரு நூலையும் அவர் இயற்றினர். ரிப்பன் பிரபு அவரை 'உயர் கல்வியை நாட்டில் ஆய்ந்து அரசுக்கு ஓர் அறிக்கை தருதற்காக'ப் பணித்தார். அவருடைய தலைமையில் பணியாற்றிய குழுவிற்கு ஹண்டர்குழு என்பது பெயர். அவர் தந்த அறிக்கையின் அடிப்படையில்தான் இன்று இந் நாட்டில் நாம் காணும் உயர்நிலைக் கல்வியின் அமைப்பு நிறுவப்பட்டது. மெக்காலேயின் குறிப்பினை மேற்கொண்டு பென்டிங்கு பிரபு ஆங்கில மொழிக்கு இந்தியக் கல்வியமைப்பில் ஒரு சிறப்பிடம் தந்ததுபோல, ஹண்டர் குழு சிபாரிசு செய்தபடி இந்திய அரசு உயர்நிலைக் கல்வியை அமைத்தது. அவர் ஆரம்பித்துவைத்த தற்கால இந்திய வரலாற்றினைப் பிற்காலத்தில் பி. இ. ராபர்ட்ஸ் என்பர் முற்றுவித்து 'பிரிட்டிஷ் இந்திய வரலாறு' என்னும் பெயரில் வெளியிட்டார். இந்திய ஆட்சியாளர் வரலாற்று வரிசையில் பல அறிஞர்களை நூல்கள் எழுதவைத்த வகையில் அவர் எண்ணிறந்த புது வரலாற்ளர்களை யுருவாக்கிய பெருமை பெற்றார்.

வின்ஸன்ட் ஆர்தர் ஸ்மித் (1843—1920) என்பவர் இந்திய வரலாறு வரைவியல் வரலாற்றில் மிக முக்கியமான இடம் வகிப்பவர். பழைய மரபு வரலாறு வரைவியலைக் கடைப்பிடித்தவர்களில் காலவகையினுனே அவரே இறுதியில் தோன்றியவர் எனலாம். ஜோன்ஸ், வில்கின்ஸ் என்னும் கீழைநாட்டுக் கலாசார ஆதரவாளர் குழாம் 18ஆம் நூற்றாண்டில் தொடக்கிவைத்த மரபு 19ஆம் நூற்றாண்டில் பயன்பாட்டுக் கோட்பாட்டாளர்களால் சீர்திருத்த நோக்கத்தோடு இயற்றப்பட்ட நூல்கள் வாயிலாகப் பரிணமித்து, 1857ஆம் ஆண்டுக் கலகத்திற்குப் பின் பேரரசுக் கோட்பாட்டாளர் கையிலகப்பட்டு, இருபதாம் நூற்றாண்டில் முதல் உலகப்போர் முடியுங்காறும் செல்வாக்கிலிருந்து பிறகு இந்திய வரலாற்றாளர்களது வரைவுகளால் பாதிக்கப்பட்டுச் சில முறைகளில் பேரரசை ஆதரித்தும் பிற சமயங்களில் இந்திய தேசியத்தை ஆதரித்தும் நூல்கள் பிறக்கும் வகையில் வளர்ந்தது. இந்தியக் கலகம் ஆங்கிலேய ஆளுநர் மனத்தில் முக்கியமான மாறுதல்களை ஏற்படுத்திற்று. 18ஆம் நூற்றாண்டில் இந்தியக் கலாசாரத்தை விரும்பிப் போற்றியவர்களும், 19ஆம் நூற்றாண்டின்

முற்பகுதியில் இந்தியப் பண்பாடு, சமுதாயம், நிலையங்கள் ஆகியவற்றைச் சீர்திருத்த விரும்பியவர்களும் பழங்கால மரபினராகி விட்டனர். இந்திய மக்களின் பெரும் பகுதியினர்—அதாவது அவர்களுடைய பிரதிநிதிகளாகத் தம்மைக் கூறிக் கொண்ட கல்விகற்று நூலியற்றும் திறமைபடைத்தவர்கள்—தங்கள் ஆளுநர்களை இயற்கைப் பகைஞர்களாகக் கருதினர். அவர்கள் இந் நாட்டில் புகுந்தமுறை, நோக்கங்கள், ஆட்சியை நிறுவியவகை, ஆட்சி நடத்திய தன்மை யாவற்றையும் கண்டறிந்து எல்லாவற்றிலும் குறைகள் கண்டனர். இது ஒரு புறமாக இந்திய வரலாற்றை எழுதப் புகுந்த ஆங்கிலேயர்கள் இந்தியர்களைக் குறைகண்டு, பேரரசு கொள்கையை ஆதரித்து எழுதினர். இவ்விரு முரண்பாடான நோக்குநிலைகளுமே வரலாற்று நேர்மைக்குப் பகை என்பது கூறுமலே விளங்கும். காய்தல், உவத்தலின்றி இந்திய வரலாற்றினை எழுதுங்காலம் வருதற்கு இம் மரபு பெரிய இடையூறாக இருந்துவந்துள்ளது. இந் நிலையினின்றும் தப்ப விரும்பியோர் தொல்பொருள் ஆராய்ச்சி, மிகப் பண்டைய தொடக்ககால இந்திய வரலாறு என்பவை ஆபத்தில்லாத முயற்சிகள் என்று கருதி அவற்றை மேற்கொண்டனர்.

வின்ஸன்ட் ஸ்மித் இந் நிலையில்—அதாவது 19ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியிலும் இருபதாம் நூற்றுண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்த இந்திய வரலாற்றுளர்களுள்—பேரரசு ஆதரவாளர்கள் குழுவைச் சேர்ந்தவர். ஒருவகையில் பார்த்தால் அம் மரபினை ஒரு சிறந்த கருவியாகப் பயன்படுத்தியவர் என்று கூறலாம். அவர் 1904-ல் 'இந்தியத் தொடக்ககால வரலாறு' இயற்றினுர். அது ஒரு சிறந்த ஆராய்ச்சி நூல். அந் நூல் கி. மு. 600 முதல் முஸ்லிம்கள் இந்தியாவை வென்றது வரையில் உள்ள வரலாற்றைக் கூறுகின்றது; முக்கியமாக மகா அலெக்ஸாந்தரின் இந்தியப் படையெடுப்பைப்பற்றி விரிவான விவரங்களை அது தருகின்றது. ஸ்மித் இந்தியச் சிவில் சர்விஸ்ஸில் சேர்ந்து உயர்நிலையில் பணியாற்றியவர். அவர் 1900-ல் அரசியற் பணியினின்றும் நீங்கி ஓய்வு பெற்றுர். ஓய்வு பெற்ற பிறகு இருபதாண்டு வாழ்ந்திருந்த ஸ்மித் தமது ஓய்வு நாள்களை வரலாற்றுநூல்கள் எழுதும் பணியில் செலவிட்டார். அவர் இயற்றிய நூல்களில் முக்கியமானவை: (1) அசோகர், பௌத்தப் பேரரசர்; (2) மா மொகல் அக்பர், (3) இந்திய, சிங்கள நுண்கலை வரலாறு: (4) இந்தியப் பொருட்காட்சிச் சாலையிலுள்ள காசுகள் பட்டியல்; (5) ஆக்ஸ்ஃபோர்டு இந்திய வரலாறு என்பவை. இவற்றில் இறுதியில் கூறியது முதன்முதல் இயற்றப்பட்ட முழு அளவு இந்திய வரலாறு. இதில் இந்தியாவில் பிரிட்டிஷ்

ஆட்சியைப்பற்றிக் கூறும் பகுதி சர்ச்சைக்கு ஆளாகித் தற்போது பேராசிரியர் ஸ்பியரால் மாற்றி எழுதப்பட்டுள்ளது. ஆயினும், இந்திய வரலாற்றினை முழுமையாக முதன்முதல் எழுதிய வரலாற்றுளர் என்னும் பெருமை அவருடையதே.

இந்திய வரலாறு வரைவியலில் முக்கியமாகப் பண்டைய பகுதிக்குச் சிறந்த முறையில் பணியாற்றியவர்களில் சி. ஜே. ராப்ஸன் (Rapson) என்பாரைக் குறிப்பிட வேண்டும். இவர் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் 1906-ல் வடமொழிப் பேராசிரியராக அமர்ந்தார். அவர் கேம்பிரிட்ஜ் 'இந்திய வரலாறு' முதல் இரண்டு பகுதிகளைப் பதிப்பித்தவர்; ஆரெல் ஸ்டைன் என்பாரோடு சேர்ந்து கரோஷ்டிக் கல்வெட்டுகளைப் பதிப்பித்தார். காசியலிலும் அவர் தொண்டு சிறப்பானது.

ஹென்றி ஹீராஸ் பாதிரியார் (1890—1955) ஸ்பெயின் நாட்டவர். அவர் பம்பாயில் ஒரு கல்லூரியில் வரலாற்றுப் பேராசிரியராக இருந்தார். அவர் இந் நாட்டில் முப்பதாண்டுக் காலம் வரலாற்றுக் கல்வி, ஆராய்ச்சி ஆகியவற்றிற்காக இடையருது உழைத்தவர். அவர் திறம்பட எழுதுவதிலும் சுவைபடச் சொற்பொழிவாற்றுவதிலும் சமர்த்தர். இந்திய வரலாற்றுப் பிரச்சினைகள் பலவற்றைப்பற்றி அவர் நூலியற்றியுள்ளார். பல்லவர், விசயநகரம் என்னும் பொருள்கள்பற்றி அவரெழுதியுள்ள நூல்கள் பெரும் பயனுடையவை. சிந்துவெளி எழுத்தைப் படிக்க அவர் கூறியுள்ள கருத்துகள் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தவை. தொடக்கத் தமிழோடு அவ் வெழுத்துகள் பேசும் மொழி தொடர்புடைத்து என்பது அவர் கருத்து.

வெளி நாடுகளிலிருந்து இந்தியாவிற்கு வந்தோ வாராமலோ இந்திய வரலாறு, கலை முதலியவற்றைப்பற்றி ஆய்ந்தெழுதியுள்ள அறிஞர்களில் சில முக்கியமானவர்களது வாழ்க்கை, வரைவுகளை மேலே கண்டோம்: இனி இந்திய வரலாற்றுளர்களுள் சிறந்த சிலரைப்பற்றி (தற்காலத்தெழுந்துள்ள அறிஞர்கள் நீங்கலாக) சுருக்கமாகக் காண்போம்.

நவீன கால விஞ்ஞான முறை வரலாறு வரைவியலின் தந்தை என்று கூறத்தக்கவர். ஆர். ஜி. பண்டாரகர் (1837—1925) என்பவர். அவர் ஒரு மராட்டிப் பிராமணர். பம்பாயில் உயர் கல்விபெற்று, அங்குக் கீழைநாட்டு மொழிகளில் பேராசிரியராக அமர்ந்தார். அவர் 1893-ல் அலுவலிலிருந்து ஓய்வு பெற்றார். அவர் வடமொழியில் சிறந்த அறிஞர். 1884-ல் அவர் 'தக்காணத்

தின் தொடக்ககால வரலாறு' ஒன்றினை இயற்றினுர். 'வைணவம், சைவம் மற்றும் சிறுசமய அமைப்புகள்' என்னும் நூலை 1913-ல் இயற்றினுர். அவரது கல்வி, ஆராய்ச்சிப் பெருமைக்கு மரியாதை செலுத்தும் வகையில் இங்கிலாந்து, ஜெர்மனி, அமெரிக்கா, ஃபிரான்ஸ் முதலிய வெளிநாடுகளும் பல சவுரவங்களைச் செய்தன. 'பண்டாரகர் கீழை நாட்டு ஆராய்ச்சி நிலையம்' ஒன்று பூனுவில் நிறுவப்பெற்றுள்ளது.

ஜி. எஸ். ஸர் தேசாய் (1865—1959) என்பார் இன்னுமொரு மராட்டியர். அவர் 1888-ல் பட்டப்படிப்பை முடித்துக்கொண்டு 1889—1925 வரை பரோடாவில் கெயிக்வார் அரண்மனையில் மன்னருடைய அந்தரங்கச் செயலாளராக அலுவல் பார்த்து வந்தார். அவர் சிறுவயதில் மாக்கியவல்லியின் 'இளவரசன்' (Prince) என்னும் நூலையும், ஸீலியின் 'இங்கிலாந்தின் வளர்ச்சி' என்னும் நூலையும் மொழிபெயர்த்தார். அவர் பிற்கூறப்பட்ட நூலின் பிரதி யொன்றினை ஸீலி அவர்களுக்கே கையுறையாக அளித்தார் என்பதும் காண்க. மராட்டியில் நூலியற்றும் திறன் அவருக்கு இயல்பாகவே அமைந்துகிடந்தது. 'மராட்டி ரியஸத்' என்னும் மாபெரும் மராட்டியர் வரலாற்று நூலை இயற்றிய பெருமை அவருக்கு உண்டு. பல நூல்கள் சேர்ந்தது ரியஸத். தொடக்கத்திலிருந்து 1848 வரையிலான மராட்டியர் வரலாற்றை அவர் எட்டுத் தொகுதிகளில் இயற்றினுர். 30 ஆண்டுக்காலமாக அவர் செய்த வரலாற்று உழைப்புகளின் விளைவாகத் தோன்றியது இந் நூல். அவரை ரியஸத்கார் என்று உலகு போற்றும் அளவிற்கு அந் நூலின் சிறப்பு அமைந்தது.

ஸர் தேசாய் வங்காளப் பேரறிஞரான ஸர் யதுநாத சர்க்காரின் நெருங்கிய நண்பர். ஸர்க்கார் இயற்றிய 'சிவாஜியும் அவர் உடனிகழ் காலமும்' என்னும் நூல் அதன் புறநோக்குக் காரணமாகப் பூனுவிலிருந்த மராட்டியர்களுக்கு ஆத்திர மூட்டியிருந்தது. ஆதலால் ஸர் தேசாய்க்கு ஸர்க்காரிடமிருந்த அன்பும் நட்பும் அவர்களுக்குப் பிடிக்கவில்லை. ஆதலால் 'ருமால்' என்னும் மராட்டியர் அரசக்குறிப்புகளையும் பத்திரங்களையும் பதிப்பிப்பதற்கு ஸர் தேசாய் நியமிக்கப்பட்டபோது பூனு மராட்டியர்கள் அந் நியமனத்தை எதிர்த்தனர். ஆயினும், இதனுலெல்லாம் அம் மாபெரும் வரலாற்ருளரின் ஆராய்ச்சி முயற்சிகள் தளரவில்லை, தடைப்படவில்லை. 'பூனு ரெஸிடென்ஸி கடிதப் போக்குவரத்துகள்' 15 பகுதிகளாக ஸர் தேசாய், ஸர்க்கார் கூட்டு முயற்சிகளால் பதிப்பிக்கப்பட்டன. மொத்தத்தில் மராட்டியர் வரலாற்ருேடு தொடர்புள்ள சான்று நூல்கள்

அவர்களால் அறுபத்திரண்டு பகுதிகளாகப் பதிப்பிக்கப்பெற்றன. அவர் கடைசியில் ஆங்கிலத்தில் மராட்டியர் வரலாற்றினை எழுதினார். எண்பதாவது வயதில் அவர் வரலாற்றுப் பேருண்மை யொன்றினைக் கண்டார். 'இதுவரை வரலாற்றில் இனியது, நல்லது என்பதையே எடுத்துக்கூற வேண்டும் என்று எண்ணியிருந் தேன்; இப்போது உணர்ந்தேன்—வரலாற்று முழு உண்மையையும் கூற வேண்டியது வரலாற்றாளனது கடமை என்பதை' என்று அவர் கூறியுள்ளார்.

ஸர் யதுநாத ஸர்க்கார் (1870—1958) ஒரு வங்காளி வரலாற்றாளர். சிலர் அவரை இந்தியாவில் தோன்றிய வரலாற் றாளர் யாவருள்ளும் மிகச் சிறந்தவர் என்று கருதுவர். ஸர்க்கார் மொகலாயர் வரலாற்றிற்குச் செய்த தொண்டினை மராட்டியர் வரலாற்றிற்கு ஸர் தேசாய் செய்த தொண்டிலும் சிறந்ததாகக் கருதப்படல் வேண்டும். அவர் கல்லூரியில் ஆங்கில இலக்கியத் தினைச் சிறப்புப் பாடமாகக்கொண்டு பயின்றவர். அவர் ஆசிரிய வாழ்க்கை ஒரு கல்லூரியில் ஆங்கில விரிவுரையாளராகத் தொடங்கிற்றாயினும், கி.பி. 1901-ல் 'அவுரங்கசீப் காலத்து இந்தியா' என்னும் ஆராய்ச்சிக் கட்டுரையை எழுதியதி லிருந்து வரலாற்று ஆராய்ச்சியில் அவர் மனம் சென்றது; அதுவும், பெரும்பாலும் மொகலாயர் வரலாற்றாராய்ச்சியில். 1926-ல் அவர் அலுவலிலிருந்து ஓய்வு பெற்றுக்கொண்டார். அவர் கடைசியில் மேற்கொண்ட பொதுப்பணி கல்கத்தாப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் அலுவலேயாம். இரண்டாண்டுகள் கழித்து அதே பதவி அவருக்கு மறுபடியும் அளிக்கப்பட்டதாயினும் அவர் அதனை நிராகரித்துவிட்டார். 1929-ல் அவருக்கு 'ஸர்' பட்டம் அளிக்கப்பட்டது. யதுநாத ஸர்க்கார் ஆங்கிலம், வட மொழி, பாரசீகம், மராட்டி முதலிய மொழிகளில் வல்லுநர்; இன்னும் வேறுபல மொழிகளையும் அவர் கற்று வைத்திருந்தார். அவர் வங்காளிச் செவ்விலக்கியம் எழுத வல்லவர்.

(1) 'அவுரங்கசீபின் வரலாறு' ஐந்து பாகங்களில்; (2) மேற் கூறிய நூலின் சுருக்கம் இவையிரண்டையும் ஸர்க்கர் இயற்றினார். ஆகவே, வரலாற்றை வெறுத்த பேரரசர் வாழ்க்கையையும் செயற் பாடுகளையும் இந்திய வரலாற்றாளர்களில் தலைசிறந்தவர் இயற்றி வைத்தார். மொகலாயர் ஆட்சிவரலாறு, சிவாஜியும் அவர் உடனிகழ் காலமும், இந்திய இராணுவ வரலாறு என்னும் நூல்களையும் அவர் இயற்றினார். ஸர்க்காருக்கு வரலாற்றைப் பற்றியும் வரலாறு வரைவியலைப்பற்றியும் உண்மைக் கருத்துகள் பல இருந்தன. அவற்றை அச்சமின்றிக் கூறும் இயல்பினர் அவர்.

எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் (1871—1953) கும்பகோணத்திற்கருகே சாக்கோட்டை என்னும் ஊரில் பிறந்தார். அவர் இளவயதில் தந்தையை இழந்துவிட்டார். பெங்களூரில் கல்வி பயின்றார்; கல்லூரியில் இயற்பியல் முதலிய விஞ்ஞானப் பாடங்களை விருப்பப் பாடமாகப் படித்தார். ஆசிரியர்த் தொழிலை மேற்கொண்டபோது ஆங்கில இலக்கிய ஆசிரியராக ஒரு கல்லூரியில் அமர்ந்தார். தனியராக அவர் வரலாறு கற்று எம். ஏ. பட்டம் பெற்றார். 'உடையார்கள் ஆட்சியில் மைசூர்' என்னும் சிறு நூலே அவர் முதன்முதலில் இயற்றிய வரலாற்று நூல். ஹுல்ஷ், வெங்கய்யா முதலிய தொல் எழுத்தாளர்கள் (கல்வெட்டு ஆய்வாளர்கள்) அவரது நண்பர்கள் ஆயினர். கி. பி. 1914ல் சென்னைப் பல்கலைக்கழகம் இந்திய வரலாற்றுப் பேராசிரியர் பதவியை நிறுவிற்று. அந் நிலையில் முதல் பேராசிரியராக நியமிக்கப் பட்டவர் கிருஷ்ணசாமி ஐயங்கார்தாம். அப் பொறுப்பினை அவர் 1929 வரை ஏற்றுத் திறம்பட நடாத்தினார். பேரறிஞரான பி. டி. ஸ்ரீனிவாஸ ஐயங்கார் அவரோடு உடன் பேராசிரியராக இருந்தார். அவர் பேராசிரியர் பதவி வகித்தகாலத்தில் ஆர். சத்தியநாத ஐயர் (மதுரை நாயக்கர் வரலாறு), ஆர். கோபாலன் (காஞ்சிப் பல்லவர்), சி. வி. நாராயண ஐயர் (சைவத்தின் ஆதிவரலாறு), ரங்கஸாமி சரஸ்வதி (விசயநகர வரலாற்றுச் சான்றுகள்) முதலிய வரலாற்றாளர்கள் உருவாக்கப் பட்டனர். ஐயங்கார் அவர்கள் 'தென் இந்தியாவும் மகம்மதிய படையெடுப்பாளர்களும்' (1921), 'தென் இந்திய வரலாற்றின் தொடக்கம்' (1918), 'வரலாற்று அமைப்பில் மணிமேகலை' (1928) முதலிய நூல்களை இயற்றினார். திருப்பதியின் வரலாற்றை இரு தொகுதிகளாக வெளியிட்டார். விசயநகர வரலாற்றுச் சான்று மூல நூலை வெளியிட்டார்; இதன் அடிப்படையில்தான் பிற்காலத்தில் நீலகண்ட சாஸ்திரியாரும் வெங்கடரமணய்யாவும் 'விசயநகர வரலாற்றிற்கான மேலும் பிற சான்று மூலங்கள்' என்னும் நூலை இயற்றினர். சங்க இலக்கியத்தை ஆய்ந்து தொடக்க காலத் தமிழ் வரலாற்றை எழுதும் மரபினை அவர் தொடக்கிவைத்தார்; பல்லவர், பாண்டியர், சோழர் என்பார் வரலாறுகளின் வரையறைகளை நிறுவினார்; செந்தமிழில் வரலாற்றுக் கட்டுரைகளை இயற்றிச் 'செந்தமி'ழில் வெளியிட்டார். கனகசபையார், சுந்தரம் பிள்ளை முதலியோரைப் போலத் தமிழ் வரலாற்றிற்கு அடிப்படையிட்ட சான்றோரில் கிருஷ்ணசாமி ஐயங்காரும் ஒருவர்.

கிருஷ்ணசாமி ஐயங்காரை யடுத்து 1929-ல் சென்னைப் பல்கலைக் கழகத்துப் பேராசிரியராக அமர்ந்த வரலாற்றாளர் க. அ. நீலகண்ட சாஸ்திரியார். அவர் தென் இந்தியாவிற்குச் செய்துள்ள

தொண்டு ஈடு இணையற்றது. இந்திய வரலாறு வரைவியல் வரலாற்றில் யதுநாத சர்க்காருக்கு இணையான சிறப்புப்பெயர் அவருக்கு உண்டு. அவர் கி. பி. 1929-லிருந்து 1945 வரை பேராசிரியர் பதவி வகித்தார். அவர் இயற்றிய நூல்கள் மிகப்பல. அவற்றின் பட்டியல் ஈண்டுத் தேவையில்லை; ஆனால் 'சோழர்கள்', 'பாண்டியர் அரசு', 'தென் இந்திய வரலாறு', 'நந்தர்களும் மௌரியர்களும்', 'தென் இந்தியாவைப்பற்றிப் புறத்தார் குறிப்புகள்', 'இந்திய வரலாறு', 'தென் இந்தியாவில் சமய வளர்ச்சி', 'ஸ்ரீ விஜய வரலாற்றுக் குறிப்புகள்' என்பவை முக்கிய மானவை. அவர் சிறந்த இலக்கிய நடையில் தமது நூல்களை எழுதும் மரபினர். அவர் தமக்கு உண்மை என்று பட்டதை அச்சமின்றி எழுதும் தகையர். அவரால் உருவாக்கப்பெற்ற வரலாற்றுளர்களில் 'பல்லவர் ஆட்சி, சமுதாய வரலா'ற்றை எழுதிய ஸி. மீனாக்ஷியம்மையாரையும், 'ஆந்திரரின் தொடக்க கால வரலாறு' இயற்றிய கோபாலாச்சாரியாரையும் குறிப்பிட வேண்டும். இந் நூற்றாண்டின் முற்பகுதியில் திருவனந்தபுரத்தி லிருந்த கே. வி. ரங்கஸாமி ஐயங்கார், திருச்சிராப்பள்ளியில் பேராசிரியராயிருந்த கார்ட்டி பாதிரியார், புதுவையில் இருந்த ஷுவோ துப்ரேல் என்போர் பிற முக்கியமான வரலாற்றுளர்கள்.

ஸர்தார் கே. எம். பணிக்கர் என்பார் (1895—1963) கேரள நாட்டினர்; சென்னையில் கிறிஸ்துவக் கல்லூரியிலும், இங்கி லாந்தில் ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகத்திலும் பயின்றவர்; சட்டப்படிப்பையும் படித்தார். தொடக்கத்தில் அலிகாரில் ஆசிரியர் தொழில் நடத்தியவர். பிற்காலத்தில், பத்திராதிபர், அரசியலர், பல்கலைக்கழகத் துணைவேந்தர் முதலிய பல அலுவல்களை மேற்கொண்டு திறம்படச் செயலாற்றியவர். அவர் ஆங்கிலத்திலும் மலையாளத்திலும் செம்மையாக எழுத வல்லவர். காலத்திற்கேற்ற கருத்துகளை அமைத்துக்கொண்டு செயற்படும் தகையர். அவரோடு செயலாற்றிய பலரோடு அவர் கருத்து வேறுபட்டார். 'இந்திய சுதேசி அரசுகள்' என்று அவர் எழுதிய நூல் சிறப்புடையது. அஃதோடு தொடர்பு பட 'பிரிட்டிஷ் மேலாதிக்கமும் இந்திய சுதேசி அரசுகளும்' என்று இன்னொரு நூலையும் இயற்றினார். 'இந்திய வரலாற்றுக் கண்ணோட்டம்' என்று 1947-ல் அவரியற்றிய நூல் ஜனரஞ்சகமானது. 'ஆசியாவும் மேலையர் ஆதிக்கமும்' என்று 1959-ல் அவர் இயற்றிய நூல் புகழ்பெற்றது. ஆசிய தேசியத்தின் நோக்கி லிருந்து எழுதப்பட்டது. வரலாற்றோடு தொடர்புடைய நூல்கள் மிகப் பல அவரியற்றினார். 'ஸர்தார்' என்னும் பட்டம் அவருக்குப் பிகானீர் மகாராஜாவால் அளிக்கப்பட்டது.

டி. டி. கோசாம்பி ஓர் அரிய, அபூர்வமான அறிஞர். அவர் ஒரு மார்க்ஸியர். காரல்மார்க்கிஸ் வரலாற்றிற்கும் அதன் பரிணா மத்திற்கும் தரும் விளக்கங்களை மிகச் சில மாறுதல்களோடு அவர் ஏற்றுக்கொண்டு இந்திய வரலாற்றை விளக்குகின்றார். அவர் கணி தம், தத்துவம், காசியல், தொல்பொருளியல், ஆதி வரலாறு முதலிய துறைகளில் செம்மையாகப் பயின்று சிறப்பாகக் கருத்துக் கொடை ஈந்தவர். 'இந்திய வரலாற்றுக் கல்விக்கோர் முன்னுரை', 'பண்டைய இந்தியாவின் பண்பாடு நாகரிகம் என்பவற்றின் விளக்கம்', இந்திய வரலாற்றில் 'கதையும் உண்மையும்' என்னும் நூல்கள் அவர் இயற்றியவற்றில் சிறப்பானவை, புகழ்பெற்றவை. பழையமரபைச் சேர்ந்த வரலாற்றுளர்களால் ஏற்றுக்கொள்ள முடியாத சில கருத்துகளையும் விளக்கங்களையும் அவர் ஆங்காங்குக் கூறுவாராயினும், அவரது கல்விப் பெருமையும் கருத்துச் செம்மையும் போற்றத் தக்கவை. உலகப் புகழ்பெற்ற அவ் வரலாற்றுளர் போலியை வெறுத்தவர்; உண்மை காண விழைந் தவர், இந் நோக்கங்களுக் கேற்ப நூலியற்றயவர்.

ஆர். ஸி. மஜும்தார் (பி. 1888) ஒரு வங்காளி அறிஞர். வங்கம் ஈன்ற பல பெரிய சிறந்த வரலாற்றுளர்களில் ஸர்க்காருக்கு நிகராகவைத்து எண்ணுதற்குரிய பெருமை வாய்ந்தவர். நமது நல்லூழ் காரணமாக இன்றும் நம்மிடையே வாழ்கின்றார். அவர் வரலாற்றுப் பேராசிரியராகவும், டாக்காப் பல்கலைக்கழகத்தில் துணைவேந்தராகவும் செயல் ஆற்றியுள்ளார். 'பண்டைய இந்தியாவில் குழு வாழ்வியல்', 'வங்காள வரலாறு' என்னும் நூல் களைத் தொடக்ககாலத்தே இயற்றினார். பாரதீய வித்யா பவனத்தார் மேற்பார்வையில் வெளிவந்த பதினொரு தொகுதி இந்திய வரலாற்றின் பொதுப் பதிப்பாளராக இருந்ததோடு அவர் அந் நூலில் பல பகுதிகளைத் தாமேயும் வரைந்துள்ளார். இந்தியாவின் பண்டைய வரலாறு, இடைக்கால வரலாறு, நவீனகால வரலாறு என்னும் மூன்று துறையிலும் பேரறிஞராக விளங்கியதோடு, வெளிநாட்டு வரலாறுகளை வரைதலிலும் சிறந்து விளங்குபவர் அவர். தென் கிழக்கு ஆசிய வரலாற்றினைத் திறம்பட இயற்றியுள்ளார். ஸர்க்காரைப் போல மஜும்தாரும் வரலாற்றுளர் கடைப்பிடிக்கவேண்டிய உயர் கோட்பாடுகளை அவ் வப்போது வற்புறுத்தி வந்துள்ளார். இந்திய சுதந்திர இயக்கத் தைப்பற்றித் தம் கருத்துகளை அச்சமின்றி எழுதிவைத்துள்ளார்,

மேற்கூறிய சில மிக முக்கியமான வரலாற்றுளர்களைத் தவிர எண்ணிறந்த பிறரும் இந்திய வரலாறு வரைவியல் துறையில் ஈடுபட்டுச் செயலாற்றியுள்ளனர். அவர்களில் பலர் இந்தியர்; சிலர் வெளிநாட்டினர். பல இந்தியர்களில் சிலரே சிறப்புடையர். ஸி. எச். ஃபிலிப்ஸ், ஏ. எல். பாஷம், டொர்ரெட், ஸ்பியர், பாலாட்சட் முதலிய அறிஞர்கள் இந்தியவரலாறு வரைவியலை நவீனப்படுத்துதற்குப் பேருதவி புரிந்துள்ளனர். அவர்களுடைய நல்லுதாரணத்தைப் பின்பற்றிப் பல இளைய இந்திய வரலாற்றுளர்கள் பல அரிய புதிய துறைகளில் வரலாற்று நூல்கள் இயற்றி வருகின்றனர்.

# 19. அமெரிக்கா

கொலம்பஸ் கண்டுபிடித்த புது உலகமாகிய அமெரிக்கா அன்றையிலிருந்து ஏறத்தாழ நான்கு நூற்றாண்டு வயதான ஒரு புவிப்பரப்பாயினும், அச் சொல் பெரும்பாலும் அமெரிக்க ஐக்கிய நாடுகளையே, வரலாறு வரைவியல் நிலையில் குறிப்பதாகக் கொள்வோமாயின், அது இரண்டு நூற்றாண்டு வயதானதாகவே கொள்ள வேண்டிவரும். அமெரிக்கக் கண்டத்தில், இதுவரையில் தோன்றியுள்ள வரலாற்று அறிஞர்களில் மிகப் பெரும்பாலோர் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் பிறந்து வாழ்ந்தவர்களே. அவர்களிற் பெரும்பாலோர் தேசிய வரலாறு இயற்றுவதிலும், அண்மைக் காலத்தில் ஊர்கள், கிராமங்கள் முதலிய தலவரலாறுகள் இயற்றுவதிலும் அக்கறை காட்டி வந்துள்ளனரேயன்றி வரலாற்றுக் கோட்பாடுகளை உருவாக்குவதில் மிக அண்மைக்காலம் வரையில் அதிக அக்கறை காட்டவில்லை. இரு நூற்றாண்டுக்கால அரசியல், பொருளாதார, சமுதாய வரலாற்றை மட்டும் கொண்ட அந் நாளில் வரலாற்றுச் சான்றுகள் முற்றிலும் கிடைத்ததால் அமெரிக்க வரலாற்றை மிக விரிவாகவும், ஏற்றுக்கொள்ளத்தக்க முறையிலும் எழுதி வெளியிடப் பல அறிஞர்களால் முடிந்தது. அவர்களுடைய வரலாற்றுச் சான்றுகளைமட்டும் தொகுத்துப் பல தொகுதிகளாக வெளியிட்டுள்ளனர். அவர்களுக்கு அரசியல் கலையிலும், பொது நிருவாகத் துறையைப்பற்றி ஆராய்ச்சி செய்வதிலும், பல புதுக் கொள்கைகளை நிறுவுவதிலும் உள்ள அக்கறை வரலாற்றுத் துறையில் உண்டா என்பது சற்று ஐயத்திற்கு இடமானதே. ஆயினும், சென்ற இரு நூற்றாண்டுக்கால அளவில் பல சிறந்த வரலாற்றாளர்களை அமெரிக்கா உருவாக்கியுள்ளது. அவர்களில் ஹென்றி ஆடம்ஸ் (1838—1918) போன்ற சிலர் வரலாற்றுக் கோட்பாடுகளைப்பற்றி ஆய்தலிலும் ஈடுபட்டனர். ஹென்றி ஆடம்ஸ் அமெரிக்க அரசியல்வாதியான சார்லஸ் ஃபிரான்ஸிஸ் ஆடம்ஸ் (1807—1886) என்பாரின் மகன்; சார்லஸ் ஃபிரான்ஸிஸ் அமெரிக்கக் குடியரசு தலைவராயிருந்த ஜான் குவின்ஸி ஆடம்ஸ் (1735—1826) என்பாரின் மகன். ஆதலால், ஹென்றி ஆடம்ஸ் சிறந்த வமிசத்தில் பிறந்தவர் என்பது விளங்கும். அவர் 'வரலாற்றுப் புள்ளிவிவரங்களை, இயற்பியல் சாத்திரங் காணும்

வெப்பவிசையியல் இரண்டாம் விதி போன்ற இயற்கைச் சட்டங்களுக்கு உட்படுத்தி ஆய்தல் நல்லது' என்று கருதினர். இவ்வாறு அமெரிக்கரில் மிகச் சிலரே பத்தொன்பதாம் நூற்றுண்டிலும் இந் நூற்றுண்டுத் தொடக்ககாலத்திலும் வரலாற்றுப் பொருண்மையைப்பற்றி ஆய்ந்தனர். அவர்களுடைய வரலாற்றுக் கோட்பாடுகள் பெரும்பாலும் ஐரோப்பிய அறிஞர்கள் கருத்துகளால் செல்வாக்குப் பெற்றவை; ஹெகல், காம்ட், ஹெர்பர்ட் ஸ்பென்ஸர், ராங்கே போன்ற ஐரோப்பிய அறிஞர்களின் கருத்துகள் அமெரிக்காவில் அவ்வக் காலத்தில் பெரிதும் போற்றப்பட்டன. இக் காலத்து அமெரிக்க வரலாறு ஆய்வுகள் புள்ளிவிவரங்களை வைத்தும், புள்ளியியல் முறைகளை மேற்கொண்டும், தேவையானல் கணக்குப்பொறிகளைப் பயன்படுத்தியும் வரலாற்று முடிவுகளைக் காண முயல்கின்றது.

வரலாற்றுச் சான்றுகளைத் தேடிக் கண்டுபிடித்துத் தொகுத்து வைப்பதில் ஐரோப்பிய வரலாற்றுளர்கள் மேற்கொண்டுள்ள அளவு முயற்சிகள் அமெரிக்க அறிஞர்களால் மேற்கொள்ளப்படவில்லை; ஏனெனில், அத்துணை முயற்சியில்லாமலே அவர்களுக்கு வேண்டிய சான்றுகள் எளிதில் கிடைத்துவிட்டன. அவர்களுடைய வரலாறு தொடங்கிய காலத்திலிருந்தே சான்றுகளும் உடன் தொகுத்து வைக்கப்பட்டமையின், அமெரிக்க வரலாறு வரைவியலின் தன்மையே வேறுபட்டுள்ளது. அவர்களுடைய பண்டைய அல்லது தொல்வரலாறு என்பது அமெரிக்கக் குடியேற்றங்கள் ஏற்பட்ட காலத்தைச் சேர்ந்ததே. பிறகெல்லாம் எழுதியிட்ட சான்றுகளால் விளக்கப்பட்ட வரலாறே அவர்களுடையது. 19ஆம் நூற்றுண்டில் பீட்டர் ஃபோர்ஸ் (Peter Fore) என்பார் கொலம்பஸ் காலத்திலிருந்து ஹாமில்ட்டன் காலம் வரையுள்ள அமெரிக்க வரலாற்றிற்குத் தேவையான ஆதாரங்களையும் சான்றுகளையும் தொகுத்து அமெரிக்காவின் முதல் வரலாற்றுச் சான்றுச் சுவடியகத்தைத் தொடக்கிவைத்தார்; நாளடைவில் பன்னுட்டு அரசியல் கடிதப் போக்குவரத்துகளின் தொடர்பு மிகுவதாயிற்று. பல ஆசிரியர்கள் சேர்ந்து கூட்டாக ஒரு நூலை ஆக்கி வெளியிடும் வெற்றிகரமான முயற்சிகளில் அமெரிக்கர் முன்னணியில் இன்றும் நிற்கின்றனர்.

ஜார்ஜ் பாங்கிராஃப்ட் (George Bancroft, 1800—1891) என்பார் அமெரிக்கர்களில் முதன்முதல் அவர்கள் நாட்டு வரலாற்று முழுமையைச் செம்மையாக எழுதியவர். அவர் நூல் வெளிவந்ததும், அமெரிக்க வரலாறு வரைவியல் ஐரோப்பியர்கள் சாதனைக்குக் குறைவில்லாத நிலையை எட்டியது. அவரை ஒரு

பெரிய தேசிய வரலாற்ருளர் என்று கூறலாம். அவர் ஒரு சீரிய தேசியவாதி; ஹார்வார்டு பல்கலைக்கழகத்தில் பயின்று, ஐரோப்பாவில் உள்ள பல நாடுகளையும் சுற்றி அங்கிருந்த ஹெகல், கெத்தெ (Goethe) போன்ற அறிஞர்களை நேரில் அறியும் வாய்ப்பும் பெற்ற பாங்கிராஃப்ட் 'பொது மக்கள் குரலே ஆண்டவன் குரல்' என்னும் கொள்கையைத் தம் நாட்டு வரலாறு வாயிலாக நிறுவ முற்பட்டார். அவர் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வரலாற்றினைப் பத்துப் பாகங்களில் வெளியிட்டார். மக்களாட்சி நோக்கிலிருந்து காணுங்கால் அதுவே மிகச் சிறந்த வரலாற்று நூல் என்று ராங்கே கூறினுர். வான்ஹால்ஸ்ட் என்பார் 'இனிவரும் அமெரிக்க வரலாற்ருளர் யாவரும் பாங்கிராஃப்டின் தோளின் மீதுதான் நிற்கவேண்டும்' என்று கூறி பாங்கிராஃப்ட் இயற்றிய நூலின் ஆதாரத்தன்மையை வற்புறுத்தினுர். ஆனுல், ஆங்கிலேயத் தத்துவரான கார்லைல் அந் நூலாசிரியர் கையாண்ட அறப்போதனை நோக்கைக் கண்டித்தார். 1882-ல் பாங்கிராஃப்ட் தமது நூலை மேலும் விரிவாக்கி அமெரிக்க ஆதாரச் சட்டத்தைப்பற்றிய இரண்டு பகுதிகளையும் சேர்த்தார். அவர் கணிதப்படி 'வாஷிங்டன் அப்பழுக்கற்ற முழுச் சிறப்பாளர்; அமெரிக்கப் பிரஜையினிடம் பண்பாட்டுச் சீர்மையும், வலுவும், நெளிவும் காணப்படும்; 'மன்னரின்றிப் பிரபுக்களின்றி ஒரு புது சமுதாயம் அமெரிக்காவில் உருவாகியுள்ளது. அவர்கள் வேறு எந்தக் குடியரசு மக்களையும்விட உண்மையான சமயப்பற்றுடையர்; மிகுந்த கல்வியுடையர்; சிறந்த நடத்தையுடையர்; தூய உள்ளம் படைத்தவர்கள்' என்றெல்லாம் அவர் நூலில் அமெரிக்கரைப் புகழ்ந்தார்.

ஈதிவ்வாருகப் பால்ஃபிரீ (Palfrey) என்பார் 'புது இங்கிலாந்தின் வரலாறு' என்னுமொரு நூலை இயற்றினுர்; அவரும் தமது நூலில் ஆய்வு மனப்பான்மையை முற்றிலும் கைவிட்டு அமெரிக்கக் குடியேற்ற மக்களை வரம்பின்றிப் புகழ்ந்தார். ஹில்ட்ரெத் என்னும் மற்ருெரு வரலாற்ருளர் 'அமெரிக்க ஐக்கிய நாடுகள் வரலாறு' ஒன்றினை இயற்றி அதில் பாங்கிராஃப்டின் கண்மூடித்தனமான தேசியத் தற்புகழ்ச்சியைக் கண்டித்துச் சற்று நேர்மையோடு வேருெரு நூலை ஆக்கித்தந்தார். அதில் அவர் '1789-க்கு முற்பட்ட அமெரிக்க வரலாறு வெற்றுக் கதையுலகைச் சார்ந்தது' என்று கருதினுர். தேசபக்திக் கதைகளை யூடுருவவைக்கும் வரலாறுகளை அவர் நம்பவில்லை.

அமெரிக்கக் கண்டத்தில் வாழ்ந்துவந்த ஆதிக்குடிகள் காலத்தில் தொடங்கி அமெரிக்க ஐக்கிய நாடுகள் நிறுவப்பெறும்

வரையுள்ள அமெரிக்க வரலாற்றினை ஜஸ்டின் வின்ஸர் என்பவர் இயற்றினார். அது 'அமெரிக்கத் தொடருரை மற்றும் ஆய்வு வரலாறு' (The Narrative and Critical History of America) எனப் பட்டது. 'அமெரிக்க வரலாற்றுக்குத் தேவையான சான்றுகளை யெல்லாம் சேர்த்துவைத்த பெருமை ஹியூபர்ட் ஹோ பாங்கிராஃப்ட் (Hubert Howe Bancroft) என்பாரைச் சேரும்; அமெரிக்க வரலாறியற்றிய ஜார்ஜ் பாங்கிராஃப்ட் இவரினின்றும் வேறு என்பது காண்டல்வேண்டும். இவ்வாறு மிகுதியாகத் தொகுத்து வைக்கப்பட்ட சான்றுகளை ஆதாரமாகக்கொண்டு 'பசிஃபிக் நாடுகளின் வரலாறு' (History of the Pacific States) என்னும் நூல் முப்பத்து நான்கு பாகங்களில் இயற்றப்பெற்றது. இந் நூலில் ஏராளமான செய்திகள் இருப்பினும் இது சீரிய வரலாற்றிலக்கியத்தில் சேராது. ஹென்றி ஆடம்ஸ் என்பார் இயற்றிய 'ஜெபர்ஸன், மாடிஸன் ஆகியோர் ஆட்சிக் காலத்து அமெரிக்க ஐக்கிய நாட்டு வரலாறு' என்னும் அரிய நூலில் (ஒன்பது பாகங்கள்) அவ் விரு அரசியலாளர்களின் பண்பாடு, செயற்பாடுகளைப்பற்றி அவர் உரைத்துள்ளமை மிகச் சிறந்த வரலாறு வரைவிற்கு ஓர் உதாரணமாம். ஜேம்ஸ் ஃபோர்டு ரோட்ஸ் என்பார் '1850ஆம் ஆண்டு ஒப்பந்தம் தொடங்கி ஐக்கிய நாடுகளின் வரலாறு' என்னும் ஒரு நூலை யியற்றினார். அந் நூலில் அடிமை நிலை விடுதலை இயக்கங்களின் தொடக்க வரலாறு கூறப்படுகின்றது. அவர் அடிமை நிலை யொழிக்கப் பட்டதைப் போற்றுகின்றாராயினும், அந் நிலையைப் போற்றி யவர்களைத் தூற்றினாரல்லர்.

ரிப்வான் விங்கிலை ஆங்கில இலக்கியத்திற்கு ஆக்கித்தந்த புகழ்பெற்ற வாஷிங்டன் இர்விங் என்பாரும் ஒரு வரலாற்றாளரே. அவர் கொலம்பஸின் வாழ்க்கை வரலாற்றை இயற்றினார். அந் நாடுகண்டவரின் வாழ்க்கை வரலாறு முதன்முதலாகச் சீரிய முறையில் அவரால்தாம் எழுதப்பெற்றது. அவரியற்றிய 'கிரனடாவை வென்ற வரலாற்றுக் குறிப்புகள்' என்னும் நூல் தாம் இயற்றிய நூல்கள் யாவற்றுள்ளும் மிகச் சிறந்தது என்று அவரே கருதினார். அந் நூலில் மூர்களுடைய நாடான கிரனடாவை ஸ்பானியர்கள் வென்ற வரலாற்றை விரித்துரைத்தார். அவர் வரலாற்றாளர் என்னும் முறையில் பெரும் புகழ் படைத்த வரல்லராயினும், அமெரிக்க இலக்கியத்தின் தந்தை என்னும் புகழ் அவர்பால் நிலைத்து நிற்கும் என்பதில் ஐயமின்று. அமெரிக்காவைக் கண்டுபிடித்து ஸ்பானியர்களுக்குக் கொலம்பஸ் அறிவித்தது போல, ஸ்பானியர் வரலாற்றை ஆய்ந்தறிந்து அமெரிக்கர்களுக்கு அறிவித்தவர் வாஷிங்டன் இர்விங். அவர்

மெக்ஸிகோவை ஸ்பானியர்கள் வென்ற வரலாற்றையும் எழுத வேண்டும் என்று விரும்பினராயினும், பிரெஸ் காட் என்னும் வரலாற்றுளர் அப் பொருள்பற்றி நூலியற்றிவருகிறார் என்று கேள்வியுற்றதும் அம் முயற்சியைக் கைவிட்டார். அவ்வாறு அவர் செய்தது போற்றத்தக்கதே.

வில்லியம் பிரெஸ்காட் (William H. Prescott, 1796—1859) என்பார் 'மெக்ஸிகோவை வென்ற வரலாறு' 'பெருவை வென்ற வரலாறு' என்னும் இரு அரிய நூல்களை இயற்றியவர். ஃபிரூடு, மாட்லி போன்ற பெருவரலாற்றுளர்கள் இயற்றிய நூல்களைப் போல இலக்கியத் தகுதியில் சிறந்து விளங்குவனவாம் இந் நூல் கள். அவர் ஹார்வார்டிலிருந்தபோது ஒரு கண்பார்வையை இழந்துவிட்டார்; மற்றொரு கண்ணும் சீர் கெட்டுவிட்டது. அப் போதிலிருந்து நூல்களையும் சுவடிகளையும் படிப்பது கடினமாகி விட்டது; ஆயினும் அவருக்கு வரலாற்றில் இருந்த ஆர்வம் குன்ற வில்லை. 'பர்டினண்டு மற்றும் இஸபெல்லா ஆட்சி வரலாறு' என்னும் நூலை இயற்ற விரும்பி அதற்குத் தேவையான சான்று களைச் சேகரிக்கலானார்; அதற்கான ஒரு நூல்நிலையத்தையே தொகுத்தார். ஆயினும், அந் நூலை இயற்றுதற்கு ஆயத்தகாலமே பத்தாண்டுகளுக்கு மேலாயின. சான்று நூல்களை யெல்லாம் பிறர் படிக்கக் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டிய நிலையில் அவர் இருந்தார். அவரது இலக்கிய நடை மிகவும் சிறந்து விளங் கிற்றாதலின், அவரது நூல்களை வரலாறு கற்க விரும்புவோரே யன்றிப் பிறரும் விரும்பிப் படிக்கலாயினர்.

அந் நூல் ஒரு செந்நூல் என்று உடனடியாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. அந் நூலில் பெர்டினண்டு காலத்திற்கு முற்பட்ட ஸ்பானிய வரலாற்றில் தொடங்கி, கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்த வரலாற்றைத் தொட்டு, ரோமன் கதோலிக சமய நீதிசபையான இங்குவிஸிஷனின் செய்திகளைக் கூறி விரிவாகச் செல்லுகின்றது அந் நூல். வெளியான உடனேயே அந் நூல் பெரும் புகழ் பெற்றது. ஹாலண்டு பிரபு, 'கிப்பனது ரோமானிய வரலாற்று நூல் வெளிவந்த பிறகு இதுவே மிகச் சிறந்ததும் முக்கியமானதும் ஆகிய நூல்' என்று புகழ்ந்தார். அது பல மொழிகளில் பெயர்க்கப்பட்டுப் பன்னாட்டுப் புகழ்படைத்தது. அதன் முக்கியமான சிறப்பு யாதெனில் அது இயற்றி வெளியிடப்பட்டபின் அது எத்தகைய திருத்தமும் வேண் டாதவாறு பூரணச் சிறப்போடு விளங்குகின்றது என்பதே. அந்தப் பொருள்பற்றி எழுதப்பெற்ற சிறந்த நூல்கள் யாவற்றுள்ளும் அது தலைசிறந்து விளங்குகின்றது. கூச் (Gooch)

என்னும் அறிஞர் அந் நூலைப்பற்றியும் அதன் ஆசிரியரைப் பற்றியும் கூறுவதாவது: 'அவர் வரலாற்றை எடுத்துக்கூறும் திறமையைப் பெருமளவில் பெற்றிருந்தார்; தமது கலைத்திறன் முற்றிலும் ஒளிவிடுதற்கு வாய்ப்பளிக்கும் பொருள்களாகத் தெரிந்தெடுத்து அவற்றின் வரலாற்றை எழுதும் திறமையுடையர். அவர் வரலாற்றுத் தத்துவங்களிலோ, சமுக இயக்கங்களைப்பற்றிய வரலாறுகளிலோ பெரிதும் ஈடுபட்டவரல்லர்; ஆயினும் குரோட், மெக்காலே, கார்லைல், ஃபிரூடு, பாங்கிராஃப்ட், மாட்லி என்பவர்கள், தாங்கள் எழுதிய வரலாறுகளைத் தமது அரசியல் கருத்துகளையோ சமயக் கோட்பாடுகளையோ வெளிப்படுத்தற்கு ஒரு சாதனமாகக் கொண்டதுபோல இவர் எத்தகைய விளம்பரத்திற்காகவும் தமது வரலாற்றினைப் பயன்படுத்தவில்லை. யாரையும் எதனையும் மிகையாகப் புகழ்தலும் கட்சிச் சார்புகளும் அவர் நூலில் காணக் கிடையா. பொதுவாழ்க்கையினின்றும் விலகிநின்றவர் அவர்; அறப் போதகராகவோ தீர்க்கதரிசியாகவோ விளங்க அவர் விரும்பவில்லை.'

மெக்ஸிகோவையும் பெருவையும் ஸ்பானியர் வென்று கொண்ட வரலாற்றினைப் பிரெஸ்காட் எழுதிவந்தபோது, மாட்லி (1814—1877) என்பார் 'டச்சுக் குடியரசின் எழுச்சி வரலா'ற்றினை வரைந்துவந்தார். அவர் ஜெர்மானிய அரசியலரான பிஸ்மார்க்குடன் சாலை மாணவர். இந் நூலை இவரை எழுதுமாறு தூண்டியவர் பிரெஸ்காட்டே. அந் நூலை இயற்றுதற்கு ஐரோப்பிய நாடுகள் பலவற்றிற்குச் சென்று சான்றுகளை ஆராய்ந்தார். அவற்றின் முடிவாக அவர் வெளியிட்ட நூல் பிரெஸ்காட்டின் நூலைவிடச் சிறந்த செந்நூலாக அமைந்தது. கார்லைல், ஃபிரூடு என்பார் காட்டிய நெறியில் வழி தவருது பின்பற்றிய சான்ருேர் என்று இவரைப் புகழ்வர். அவர் எடுத்துக்கொண்ட பொருளுக்குத் தக்க தன்மையும் மனப்பான்மையும் அவரிடம் காணப்பட்டன; அதாவது அவர் சுதந்திர உணர்ச்சியைப் போற்றியவர். இஃதுண்மையே யாயினும், வரலாற்று நூல் ஒன்றினை யியற்றுங்கால் தமது கோட்பாடுகளுக்கு எதிரான கருத்துகளைக் கொண்டவர்களையும், தாம் விரும்பாத செயல்களில் ஈடுபட்டவர்களையும் குறைகூறிப் பழிக்கும் இயல்பு, எப் பண்பிலும் மிகைப்பற்றுக் கொண்டவர்களிடம் காணப்பெறும். இது மாட்லியிடமும் இருந்தது. ஆதலால் அவரால் இண்டாம் ஃபிலிப் (ஸ்பானிய மன்னர்), ஆல்வா பிரபு என்பாரை இகழ்ந்துரைத்தும், 'வாய்வாளாமை' வில்லியம் என்னும் டச்சுக்காரரை உயர்த்திக் கூறியும் எழுதிச்செல்வதைத் தவிர்த்துக்கொள்ள முடியவில்லை.

'டச்சுக் குடியரசின் எழுச்சி'யைத் தொடர்ந்து 'ஐக்கிய நெதர்லாந்து வரலாறு' என்னும் வரலாற்று நூலையும் மாட்லி வரைந்தார். 'ஜான் பார்னவெல்ட்டின் வாழ்க்கையும் முடிவும்' என்னும் இன்னொரு நூலையும் அவர் இயற்றினர். இவ் வெல்லா நூல்களிலும் அவரது சுதந்திர உணர்ச்சி நன்கு காணப்படும். அவரது மொழிச் சிறப்பாலும், தூய உணர்ச்சிகளாலும் அவர் இயற்றிய வரலாற்று நூல்கள் யாவையும் வரலாற்றுச் சிறப்புப் பெற்றுள்ளன.

பார்க்மன் (1823—1893) என்னும் ஆசிரியர், வடஅமெரிக்காவில், அதிலும் குறிப்பாகக் கனடாவில் ஆங்கிலேயர்க்கும் ஃபிரெஞ்சுக்காரர்களுக்குமிடையே நிகழ்ந்த போர்களின் வரலாறுகளை வரைந்தார். அவர் பாஸ்ட்டன் நகரில் பிறந்து, ஹார்வார்டு பல்கலைக்கழகத்தில் பயின்று சிறந்தவர். 'லூகான் டிரெயில்', பான்டியாக் சூழ்ச்சி', 'புது உலகில் ஃபிரெஞ்சு முன்னேடிகள்', 'அரை நூற்றுண்டுப் போர்' என்பன அவர் நூல்களிற் சிறந்தவை. ஹார்ட் போன்ற சில திறனாய்வாளர்கள் பார்க்மனை அமெரிக்க வரலாற்றுளர் யாவருள்ளும் மிகச் சிறந்தவர் என்று போற்றினராயினும், அவர் புகழ் மெல்ல மெல்லத் தான் வளர்ந்தது. பார்க்மனை டாஸிடஸ் என்னும் ரோமானிய வரலாற்றுளரோடு ஒப்பிட்டுப் புகழ்ந்தார் கோல்டுவின் என்பார். அவர் நூல்களில், கனடாவில் குவிபக் போரில் ஃபிரெஞ்சுக் காரரான மால்கமிற்கும் ஆங்கிலேயரான வுஃபிற்கும் (Wofe) இடையே நிகழ்ந்த போரைப்பற்றிய வர்ணனை புகழ்பெற்றது.

பார்க்மனைத் தொடர்ந்து மஹான் (1840—1914) என்னும் வரலாற்றுளர் 'வரலாற்றில் கடலாதிக்கத்தின் செல்வாக்கு' (1660—1783) என்னும் பொருள்பற்றி அரியதொரு நூலை இயற்றினர். வரலாற்றில் இது ஒரு முக்கியமான பொருள். அதீனியர்கள் இன்றைக்கு 25 நூற்றுண்டுகட்கு முன்பு கடலாதிக்கத்தில் திளைத்து ஸலாமிஸ் போரில் வெற்றிகண்ட நாளிலிருந்து கடலாதிக்கத்தின் அடிப்படையில் பிரிட்டிஷ் பேரரசு நிறுவப்பட்ட காலம் வரையிலும் கடலாதிக்கம் உலக வரலாற்றுப் போக்கினைப் பெரிதும் பாதித்து வந்துள்ளது என்பது தெளிவு. இவ் வரலாற்றினை இவர் எழுதியதால் இவருக்கு உலக வரலாற்றுளரிடை நிரந்தரமான இடம் கிடைத்துவிட்டது. நவீனகாலக் குடியேற்ற இயக்கங்களும் பேரரசு நிறுவுகையும் கடலாதிக்கத்தால் பிறந்தவை என்னும் பேருண்மையை இவர் நினைவூட்டினர்.

மேற்கூறிய வரலாற்றுளர்களைத் தொடர்ந்து காரல் பெக்கர், ஸி.ஏ. பியர்டு, வான் ஹால்ஸ்ட், பர்கஸ், ஹென்றி ஆடம்ஸ் முதலி

யோரையும் குறிக்கவேண்டும். கார்ல் பெக்கர் என்பார் வரலாற்றில் நிகழ்ச்சிகளுக்கு வரலாற்ருளன்தான் பொருள் தருகிருனேயன்றி, தனித்துத் தாமே பொருள்தரும் தன்மை அவற்றிற்கு இல்லே என்பார். பத்தொன்பதாம் நூற்ருண்டு அமெரிக்க வரலாற்ருளர்களில் பலர் ராங்கே முதலாகிய ஜெர்மானியத் தத்துவர்களின் செல்வாக்கிற்காளாகி அவர்கள் கொள்கைகளே அமெரிக்காவில் பரப்பினர். ஜெர்மானியரது வரலாற்றுப் பாட முறையின் செல்வாக்கால் எழுந்த 'ஸெமிஞர்' அல்லது 'கலந்தாய்வு வகுப்புமுறை' அமெரிக்காவில் பிரபலமாயிற்று. அமெரிக்காவில் பலவித வசதிகள் காரணமாக ஏனைய அறிவுத்துறைக் கல்விகளேப் போல வரலாற்றுக் கல்வியும் சிறந்தோங்குகின்றது.

# 20. முறையியல்: ஆய்வுரை

## 1. முறையியல்

வரலாறு வரைவியல் வரலாற்றினை எங்ஙனம் வரைதல் என்னும் பிரச்சினையில் இயல்பாகவே ஈடுபடும். வரலாற்று ஆராய்ச்சியின் தன்மை யாது? அதனை எவ்வாறு மேற்கொள்ள வேண்டும்? அதனைத் தொடங்கும் அமயத்திலிருந்து முடிக்குங் காறும் எத்தனை கட்டங்கள் உள்ளன? அவற்றை எவ்வாறு கடத்தல் வேண்டும்? என்னும் வினாக்களுக்கு விடை காண்டல் வேண்டும்.

எந்தத் துறையிலும் ஆராய்ச்சி எதற்காக மேற்கொள்ளப் படவேண்டும் என்னும் கேள்வியைக் கேட்காமலே ஆராய்ச்சியி லீடு படும் மாணவர்கள் அச் செயலை மேற்கொள்ளுகின்றனர். ஆயினும், அக் கேள்வி கேட்கப்படவேண்டியதே. முதற்கண், ஆராய்ச்சிப் பட்டம் ஒன்று இருந்தால்தான் கல்வித்துறையில் உயர்நிலை ஆசிரியர் பதவிகள் கிடைக்கும் என்று உதாரண முகத் தான் அறிந்துள்ள இளைஞர்கள் தாங்களும் ஆராய்ச்சிப் பட்டங் களைப் பெற்று வாழ்க்கையில் முன்னேற விழைதலில் தவறொன்று மில்லை. ஆயினும், ஆராய்ச்சிக்கு உரிய காரணமாக இதனைக் கூற முடியாது. சிலர் தங்களுக்கு நிரந்தரமாக நல்ல ஊதியத்தில் ஒரு வேலை கிடைக்கும் வரையில் ஆராய்ச்சி செய்யும் மாணவர் களுக்கு அளிக்கப்படும் சிறு உதவித்தொகையை பெற்றுக்கொண்டு ஜீவிதம் செய்யலாம் என்னும் எண்ணத்தோடு ஆராய்ச்சி மாணவர்களாக விரும்புவதுண்டு. ஆனால், இத்தகைய சில்லறை நோக்கங்களோடு வரலாற்று ஆராய்ச்சியிற் புகுவார் உண்மையில் ஆராய்ச்சியில் உளமார ஈடுபடமாட்டார்களாதலால் அவர்களை விடுத்து ஆராய்ச்சியின் உண்மை நோக்கத்தோடு அதில் ஈடுபடு வாரது பிரச்சினைகளைமட்டும் காண்போம்.

ஆராய்ச்சி என்பது அறிவுத் துறையின் எல்லையை அகற்றுவது (அதாவது அகலப்படுத்துவது) என்பது; ஏற்கெனவே ஓர் அறி வியல் துறையில் முன்னோர்கள் செய்துள்ள சாதனைகளின் எல்லையை விரிவுபடுத்தி அத் துறையில் மேலும் மேலும் புதுக் கருத்துகளைப் புகுத்துதல். இது இருவகைப் படலாம்; (1) இதுவரை அறிஞர்

அறியாத புதுக் கருத்துகளைத் தெரிவிக்கலாம்; அல்லது (2) முன்பே பலரும் அறிந்துள்ள கருத்துகளை வைத்துப் புது முடிவுகளுக்கு வரலாம். இவ் விருவகை முயற்சிகளுமே ஆராய்ச்சி எனப்படும். வரலாறு சம்பந்தப்பட்ட வரையில் புது விவரங்கள் (தனியன்கள்) கண்டுபிடிக்கப்பட்டு வரலாற்று முடிவுகள் மாறலாம்; அல்லது முன்பேயுள்ள தனியன்களை வைத்துப் பழைய முடிவுகளுக்குப் புது விளக்கம் தரலாம். இவ் விருவகை முயற்சிகளுமே வரலாற்றுராய்ச்சியின்பாற்படும்.

வரலாற்றுராய்ச்சியாளர் தமது ஆராய்ச்சியைத் தொடங்கு முன் எப் பொருள்பற்றித் தாம் ஆராயவேண்டும் என்பதை நிருணயித்துக்கொள்ள வேண்டும். இது 'பொருள் தேர்வு' எனப்படும். ஆராய்ச்சியாளன், பொதுவாக ஒரு காரணமுமின்றி எந்தப் பொருளையும் எடுத்து ஆராய விரும்பமாட்டான். முதற்கண் அப் பொருள்பற்றி அடிப்படையாகவேனும் அவன் சிறிது அறிந்திருக்க வேண்டும்; இல்லையெனில் அதில் அவனுக்கு அக்கறை ஏற்படாது. மற்று, ஏதேனும் ஒரு சிறப்பான காரணம்பற்றியும் ஆராய்ச்சிப் பொருளைத் தேர்ந்துகொள்ளலாம். உதாரணமாக, ஓர் இந்தியர் இந்திய வரலாறுபற்றியும் ஒரு பௌத்தர் பௌத்த சமய வரலாறுபற்றியும் ஆராய விரும்புவது இயற்கை. தவிர, முன்னையோர் ஆராய்ச்சிகள் முற்றுப் பெறாத நிலையில் இருப்பின் அவற்றை முற்றுவிக்க முயல்வது இயல்பே; அன்றியும் வரலாற்றுத் தத்துவங்கள் காலம் செல்லச்செல்ல மாறக்கூடு மாதலின், விளக்கங்களும் நோக்கு நிலைகளும்கூட மாறும். இவற்றிற்கேற்ப முன்பே ஆராயப்பட்ட பொருள்பற்றிப் புது ஆராய்ச்சிகள் செய்தலும் கூடும், விரும்பத் தக்கதுமாம். ஆராய்ச்சி செய்யப்புகும் மாணவன் தனது ஆராய்ச்சியை மேற்பார்ப்பாரோடு (வழி காட்டியோடு) கலந்து ஆலோசித்து எப் பொருள்பற்றி ஆராயவேண்டும் என்று நிருணயித்துக்கொள்வது நல்லது. வழிகாட்டிகள் அனுபவமும் அறிவும் ஆற்றலும் மிக்கவர்களாக இருப்பர் என்று கொள்ளவேண்டுமாதலின், அவர்களுடைய அறிவுரை மிகவும் பயனுடைத்தாயிருக்கும். தான் தேர்ந்துகொள்ள விரும்பும் பொருள்பற்றி முன்பே யாரேனும் ஆராய்ந்துவிட்டனரா, அதில் ஆராய்ச்சிக்கு இன்னும் இடம் இருக்கிறதா, அவ் வாராய்ச்சி நடத்துதற்குத் தேவையான வரலாற்றுச் சான்றுகள் உளவா, அத்தகைய ஆராய்ச்சி செய்தற்கு வேண்டிய தகுதியும் உளப்பாங்கும் தன்னிடத்து உளவா என்பன போன்ற ஆராய்ச்சிகளை முதன்முதல் செய்துகொள்ள வேண்டும். இக் கேள்விகட்கெல்லாம் தக்க திருப்திகரமான விடைகள் கிடைப்பின், ஆராய்ச்சியை மேற்கொள்ளலாம்.

ஆராய்ச்சி மாணவன் தனது வழிகாட்டியை முற்றிலுமோ மிகுதியாகவோ நம்பியிருக்கக் கூடாது. வழிப்போக்கன் ஒருவனுக்கு வழிகாட்டி யொருவன் கிடைப்பினும், அவனிடம் திக்கும் திசையும் இலக்கும் கேட்டறியலாமேயன்றி அவன் தன்னைத் தோளேற்றிச் செல்வான் என்று எதிர்பார்க்கக்கூடாது. தானே தான் நடந்துசெல்ல வேண்டும், ஏனெனில், இலக்கையடையும் பயனும் அவனுடையதுதான். வழிகாட்டியின் அலுவல், மாணவனுக்கு முறையியலைக் கற்பித்து எடுத்துக்கொண்ட பொருளின் எல்லைகளை நிருணயித்து, அவ்வப்போது அவ் வாராய்ச்சியால் எழும் பிரச்சினைகளை விவாதித்து ஆராய்ச்சியாளனுக்கு உதவுவது தான். ஏனைய ஆராய்ச்சி அலுவல்கள் முற்றிலும் மாணவனால் செய்யப்படத்தக்கவை.

பொருள் தேர்வு ஆனபிறகு, தான் எடுத்துக்கொண்ட பொருளுக்கு எல்லை வகுக்கவேண்டும். காலம், இடம், இயல்பு என்பவற்றை நிருணயித்துக் கொள்ளவேண்டும். உதாரணமாக, சென்னை நகரசபை வரலாற்றினை ஆராய விரும்பும் மாணவன் காலத்தை வரையறுத்துக் கொள்ளவேண்டும். இந்தியக் குழு (Corporate institutions) வரலாற்றை ஆராய்வான் இடத்தை (அதாவது தமிழ் நாட்டுக் குழு வரலாறு, வங்காளக் குழு வரலாறு அன்றிப் பிறிதா என்பதை) நிருணயித்துக்கொள்ள வேண்டும். இன்றேல் ஆராய்ச்சி முடிவு பெறாது, பயன் பெறாது.

இவ்வாறு ஆய்பொருள்பற்றிய தீர்மானங்களைச் செய்து கொண்டபின், அவ் வாராய்ச்சிக்குத் தேவையான சான்றுகள், மூலங்களைச் சேர்க்கவேண்டும். எடுத்துக்கொண்ட பொருளுக்குப் பொருத்தமான மூலச் சான்றுகளைத் தேடிச் சேகரிக்கும் அலுவலுக்குச் சான்றியல் என்பது பெயர்.

வரலாற்றுச் சான்றுகள், மூலங்கள் பொதுவாக இருவகைப் படும்: (1) ஆதார நிலைச் சான்றுகள், (2) இரண்டாம் நிலைச் சான்றுகள்; சில மூன்றாம் நிலைச் சான்று எனவும் படும். ஆதாரச் சான்றுகள் வரலாற்றுத் தனியன் நிகழ்காலத்தாதல் வேண்டும், அன்றி வரலாற்றுத் தனியனோடு நேரிடைத் தொடர்புடையோர் எழுதியிட்ட குறிப்புகளாதல் வேண்டும். இரண்டாம் நிலைச் சான்றுகள் ஆதார நிலைச் சான்றுகளைப் பயன்படுத்திப் பிற்காலத்தாரால் அல்லது பிறரால் இயற்றப்படுவது. நீதிமன்றத்தில் சாட்சி கூறுவார் இருவகைப் படுதல்போல், வரலாற்றுச் சான்றுகளும் இருவகைப்படும்; நீதிமன்றச் சாட்சிகள் காட்சி யளவையால் கூறுவோர் என்றும், கேள்வியாற் கூறுவோர் என்றும் இரு

வகைப் படுவர். இவர்களில் பிந்தியவர்களைவிட முந்தியவர்கள் அதிமாக நம்பத்தக்கவர்கள். அதே வகையில் பிற்காலச் சான்று களைவிட உடனிகழ்காலச் சான்றுகள் அதிகமாக நம்பிக்கைக்கு உரியவை. இவ் விரண்டாம் நிலைச் சான்றைப் பயன்படுத்தி யெழு தப்படும் நூல்களைச் சான்றுகள் என்று கூற வேண்டுமாயின் மூன்றும் நிலைச் சான்றுகள் என்றே கூற வேண்டும். ஆய்வா ளர்கள் முதனிலை ஆதாரச் சான்றுகளைத் துப்புரவாக ஆய்தல் வேண்டும்; அதே பொருளைப்பற்றி வேறு சிலரும் அச் சான்றுகளைப் பயன்படுத்தியிருப்பினும் அம் மூலங்களை மறுபடியும் சரிபார்த் தற்காக ஆராய்தல் வேண்டும். இரண்டாம்நிலைச் சான்றுகளை வைத்து எழுதப்படும் நூல்கள் மூன்றும் நிலைச் சான்றுகளாம். இப் பாகுபாடு தவிர வெளிநாட்டுச் சான்றுகள், உள்நாட்டுச் சான்றுகள் எனவும் சான்றுகள் இருவகைப் படும்.

சான்றுகள் பெரும்பாலும் கீழ்க்காணும் வகையின: (1) தொல்பொருள் சான்றுகள்; (2) மானுடவியற் சான்றுகள்; (3) காசியல்; (4) தொல்லெழுத்துக் கலை; (5) இலக்கியங்கள்; —இவை இருவகைப்படும்; நேரிடையான வரலாற்று நூல்கள்; மறைமுக வரலாற்றிலக்கியம் என; (6) கல்வெட்டுகள், செப்புப் பட்டயங் கள்; (7) வெளியார் விட்டுச் செல்லும் குறிப்புகள்; (8) அரசு கடிதப் போக்குவரத்துகள்; (9) சுவடியகத்தே தொகுக்கப்பட்டிருக் கும் அறிக்கைகள் முதலியன. வரலாற்றில் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொருவகைச் சான்றுகள் மிகுந்திருக்கும்; மிகப் பயன்படுவனவு மாம். மிகப் பண்டைக் காலத்து வரலாற்றினை யறியத் தொல் பொருள் சான்றுகளே பயன்படுவன. இடைக்கால—முக்கியமாக இந்திய வரலாற்று இடைக்கால—வரலாற்றை மிகுதியாக விளக்கப் பயன்படுவன கல்வெட்டுகளும் சாசனங்களும். நவீனகால வரலாற்றை யறிதற்கு நாட் குறிப்புகள், தனியார் கடிதங்கள், அரச கடிதங்கள், சுவடியகக் குறிப்புகள், வரலாற்று நூல்கள் முதலியன பயன்படும். இச் சான்றுகளைப் பயன்படுத்தும் முறையும் அவற்றின் தன்மைக்கேற்ப வேறுபடும்.

சான்று மூலங்கள் தக்கவையா அல்லவா என்று ஆராய்தல் வேண்டும். இத்தகைய ஆராய்ச்சியே ஒரு கலை—அதாவது விஞ்ஞான முறையில் மேற்கொள்ளவேண்டிய கலை. வரலாற்றுச் சான்றுகள் புரட்டாகவும் போலியாகவும் இருத்தலும் கூடுமாத லின் அவை தக்கவையா என்று விதிமுறைகளுக்கேற்ப ஆராய்தல் வேண்டும். இவ்வாறு ஆராய்தற்குச் சான்று மதிப்பீடு என்பது பெயர். மதிப்பீடு இருவகைப்படும்: (1) புறமதிப்பீடு, (2) அக மதிப்பீடு. இவ் விருவகை மதிப்பீடுகளின் நோக்கமும் தொல்

